உ

கணபதி துணை.

# பத்துப்பாட்டு மூலமும்

மதுரையாசிரியர் பாரத்துவாசி

நச்சினார்க்கினியருரையும்.

---

இவை

சென்னை

பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பண்டிதராகிய

உத்தமதானபுரம்

## வே. சாமிநாதையரால்

பரிசோதித்து,

பலவகை ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன்

---

சென்னை

கமர்ஷியல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றன.

1918.



இரண்டாம் பதிப்பு ]  [ விலை ரூபா. 4-8-0

# இப்புத்தகத்திலடங்கியவை

பக்கம்.

# இடம் விளங்காத மேற்கோள் முதலியவற்றின் அகராதி.

---

**எண்கள் - பக்க எண்கள்.**



---

உ

கணபதி துணை.

# இரண்டாம் பதிப்பின்

# முகவுரை.

---

"பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே யிருந்து வைகை யேட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளரு கின்றாள்"

பத்துப்பாட்டு, பாட்டெனவும் வழங்கும்; (தொல். செய். சூ. ருo-பேர்.) இவற்றுள், ஆற்றுப்படைகளாகவுள்ளவை ஐந்து; அவற்றுள் திருமுருகாற்றுப்படையானது திருமுறைகளிற் பதினோராந் திருமுறைப்பிரபந்த வரிசையிற்சேர்க்கப் பெற்றுள்ளது; இது புலவராற்றுப்படையெனவும் கூறப்படும்.

ஆற்றுப்படையென்பது, ஒருவர் ஒருகொடையாளியின்பால் தாம்பெற்ற பெருஞ்செல்வத்தை எதிர்வந்த வறியோர்க்கு அறிவுறுத்தி அவரும் அங்கேசென்று தாம் பெற்றவையெல்லாம் பெறுமாறு வழிப்படுத்தல்; ஆறு-வழி; படை-படுத்தல். ஒவ்வொருவரும் இங்ஙனங்கூறுதற்கு உரியோராயினும், கூத்தர்முதலியோரே எதிர்வந்த வறியவர்களாகிய கூத்தர்முதலியவர்களுக்குக்கூறி அவர்களை வழிப்படுத்தியதாகச் செய்யுள் செய்தல் மரபு; தொல்காப்பியப்புறத்திணையியலில், ௩௬-ஆம் சூத்திரத்திலுள்ள, "கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும், ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப் பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச், சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்" என்பது இதற்குவிதி; 'ஆடன்மாந்தரும் பாடற்பாணரும் கருவிப் பொருநரும் இவருட் பெண்பாலாராகிய விறலியுமென்னும் நாற்பாலாரும் தாம்பெற்ற பெருஞ்செல்வத்தை எதிர்வந்த வறியோர்க்கு அறிவுறுத்தி அவரும் ஆண்டுச்சென்று தாம் பெற்றவையெல்லாம் பெறுமாறு கூறிய கூறுபாடும்' என்பது இதன்பொருள். இங்ஙனம் இயறறப் பெற்றவைகள் கூத்தராற்றுப்படை, பாணராற்றுப்படை, பொருநராற்றுப்படை, விறலியாற்றுப்படை எனப்பலவுள்ளன. பத்துப்பாட்டிலன்றி, பதிற்றுப் பத்து, புறநானூறு, புறப்பொருள்வெண்பாமாலைமுதலியவற்றிலும் பிற்காலத்து நூல்களாகிய கலம்பகங்களிலும் இவ்வாற்றுப்படைச்செய்யுட்கள் காணப்படுகின்றன. இவை தனிச்செய்யுளாகவே ஆக்கப்படும்.

பெரும்பாணிருக்கையும்" (மதுரை. ௩சஉ; சிலப். ரு: ௩எ) என்பவாதலால், 'பெரும்பாணரென ஒருவகையினருளர்; அவரை ஆற்றுப்படுத்தியது பெரும்பாணாற்றுப்படை' எனவுங் கூறுவதுமுண்டு.

"ஆசிரியப் பாட்டி னளவிற் கெல்லை, ஆயிர மாகு மிழிபு மூன் றடியே" (தொல். செய்.) என்பதனுரையில், "ஆசிரியப்பாட்டின் அளவிற்கு எல்லையாவது சுருங்கினது மூன்றடி; பெருமை ஆயிர மடியாக, இடைப்பட்டன எல்லா அடியானும் வரப்பெறும் எ-று. சுருங்கினபாட்டிற்கு உதாரணம் மேற் காட்டப்பட்டது; பெரிய பாட்டுப் பத்துப்பாட்டுள்ளும் சிலப்பதிகாரத்துள்ளும் மணிமேகலை யுள்ளும் கண்டுகொள்க; 'ஆசிரிய நடைத்தே' என்றதனால் வஞ்சிப் பாவிற்கும் ஆயிரமடி பெருமையாக்கொள்ளப்படும்" என இளம் பூரணரும், "ஆசிரியப்பாவின் பெருக்கத்திற்கு எல்லை ஆயிரமாகும்; சுருக்கத்திற்கு எல்லை மூன்றடியாகும் எ-று. உ-ம்; 'நீலமேனி... முறையே' இது சுருக்கத்திற்கெல்லை: கூத்தராற்றுப்படை தலையள விற்கு எல்லை; மதுரைக்காஞ்சியும் பட்டினப்பாலையுமொழிந்த பாட் டேழும்......இடையளவிற்கு எல்லை; பாட்டினெல்லையென்னாது அளவென்றதனால், அதனியற்றாகிய வஞ்சிக்கும் இவ்வாறே கொள்க...* பட்டினப்பாலை இடையளவிற்கெல்லை; மதுரைக்காஞ்சி தலையளவிற்கெல்லை" என நச்சினார்க்கினியரும் எழுதியிருப்பவை இங்கே அறியற்பாலன.

பட்டினப்பாலை வஞ்சிநெடும்பாட்டென்றுங் கூறப்படும்; இப் புத்தகத்தின் ௫௮௧-ஆம் பக்கம்பார்க்க.

1889-ஆம் வருடத்தில், இந்நூலும் உரையும் முதன்முறை பதிப்பிக்கப்பெற்று நிறைவேறின; பின்பு, திருநெல்வேலியைச் சார்ந்த களக்காடென்னும் ஊரிலிருந்த ஸ்ரீமத் சாமிநாததேசிகரவர்கள் உதவிய கையெழுத்துமூலப்பிரதியாலும், நாளடைவிற் கிடைத்த சில உரைப்பிரதிகளாலும், பலவகையான ஆராய்ச்சிகளாலும் இவை சில சில திருத்தங்களையடைந்தன; முன்பு விளங் காமலிருந்தவற்றுட் சில சில விளங்கின.

அவற்றுடன், உரையாசிரியர்களால் இப்பாட்டுக்களிலிருந்து மேற்கோள்களாகஎடுத்தாளப்பட்டிருக்கும் பகுதிகளையும்இடங்களை யும் ஞாபகத்துக்குவந்த அளவு விளக்கியும், ஒத்த பகுதிகளைச் சங்கநூல்களிலிருந்தும் பிற்காலத்து நூல்களிலிருந்தும் மூல அடி யெண்களுடன் ஆங்காங்கு எடுத்துக்காட்டியும், திருமுருகாற்றுப் படைக்குமட்டும் வேறுரையொன்று கிடைத்தமையால் அதிற் கண்ட விசேடமான வேறுபாடுள்ள பகுதிகளை அதனுரையில் அங்கங்கே கீழ்க்குறிப்பாகப் புலப்படுத்தியும், மூலத்திற்குரிய அடியெண்களை உரைப்பகுதியில் உரிய இடங்களில் அமைத்தும்; உரையிலுள்ள அருஞ்சொற்களுக்குப்பொருளும் விளக்கமும் எழு

* பத்துப்பாட்டினுள், ௨,௬,௯-ஆம் பாட்டுக்களில வஞ்சியடிகள் வந் திருப்பினும் ௨-வது பாட்டில் அவ்வடிகள் சிலவாகவே வந்திருத்தல் பற்றி அது கூறப்பட்டிலது போலும்.

பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ
விசும்பா றாக விரைசெலன் முன்னி
யுலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீ
ரலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே யதாஅன்று

[௩.—திருவாவினன்குடி.]

சீரை தைஇய வுடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வாலரை முடியினர்
மாசற விமைக்கு முருவினர் மானி
னுரிவை தைஇய வூன்கெடு மார்பி
னென்பெழுந் தியங்கு மியாக்கையர் நன்பகல்
பலவுடன் கழிந்த வுண்டிய ரிகலொடு
செற்ற நீக்கிய மனத்தின ரியாவதுங்
கற்றோ ரறியா வறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சிய ரிடும்பை
யாவது மறியா வியல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புகப்
புகைமுகந் தன்ன மாசி றூவுடை
முகைவா யவிழ்ந்த தகைசூ ழாகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவி
னல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவல ரின்னரம் புளர

வக. 2900); "கோல மார்முர சிடியுமிழ் தழங்கென முழங்க" (சீவக. 2392); இடியார் பணை துவைப்ப" (பு-வெ உழிஞை 27.)

122. "மணிநிற மஞ்ஞை யோங்கிய புட்கொடி" (பரி. 17); "பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய" (அகநா. 149); "மணிமயி லுயரிய மாறா வென்றிப், பிணிமுக வூர்தி யொண்செய் யோனும்" (புறநா. 56.)

125. "வரைவயிறு கிழித்த நிழறிகழ் நெடுவேற், றிகழ்பூண் முருகன் றீம்புன லலைவாய்", "திருமணி விளக்கி னலைவாயச் செருமிகுசேய்" (அகநா. 57, 266); "வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி, னெடுவே ணிலைஇய காமர் வியன்றுறை" (புறநா. 55)

127. புரையென்பது மரபுபற்றிவருமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; (தொல். உவம. சூ. 17. இள)

138. "புகைவிரிந் தன்ன பொங்குதுகில்" (புறநா. 398)

140 - 41: "குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பு" (மலை. 23)

நோயின் றியன்ற யாக்கையர் மாவி
னவிர்தளிர் புரையு மேனிய ரவிர்தொறும்
பொன்னுரை கடுக்குந் திதலைய ரின்னகைப்
பருமந் தாங்கிய பணிந்தேந் தல்குன்
மாசின் மகளிரொடு மறுவின்றி விளங்கக்
கடுவொ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்
றழலென வுயிர்க்கு மஞ்சுவரு கடுந்திறற்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு
வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோ
ளுமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண்
மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனு
நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
தீரிரண் டேந்திய மருப்பி னெழினடைத்
தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை
யெருத்த மேறிய திருக்கிளர் செல்வனு
நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
வுலகங் காக்கு மொன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவருந் தலைவ ராக
வேமுறு ஞாலந் தன்னிற் றோன்றித்
தாமரை பயந்த தாவி லூழி
நான்முக வொருவற் சுட்டிக் காண்வரப்

---

143-4. "தேமா மேனிச் சில்வளை யாயம்" (சிறுபாண். 176)

145. கடுக்குமென்பது உருவுவமத்தின்கண் வருமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; (தொல். உவம. சூ. 16. பேர்; இ - வி. சூ 642 - உரை)

150-51. "பூவைப்பூ மேனியான் பாம்புண் பறவைக் கொடி" (பு - வெ. பாடாண். 39)

151 - 2. "ஊர்தி வால்வெள் ளேறே சிறந்த, சீர்கெழு கொடியு மவ்வே றென்ப" (புறநா. 1.)

153 - 4. "எண்ணார் மும்மதி லெய்த விமையா முக்கண்...... ..பிஞ்ஞக னே" (தே. திருக்கள்ளில், 3), "இமையாத முக்கண் மூவரிற் பெற்றவர்" (திருச்சிற். 14)

164 - 5. "நான்முக வொருவற் பயந்த பல்லிதழ்த், தாமரைப் பொகுட் டின்" (பெரும்பாண். 403 - 4)

பகலிற் றோன்று மிகலில் காட்சி
நால்வே றியற்கைப் பதினொரு மூவரொ
டொன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்
மீன்பூத் தன்ன தோன்றலர் மீன்சேர்பு
வளிகிளர்ந் தன்ன செலவினர் வளியிடைத்
தீயெழுந் தன்ன திறலினர் தீப்பட
வுருமிடித் தன்ன குரலினர் விழுமிய
வுறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மா
ரந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்
தாவில் கொள்கை மடந்தையொடு சின்னா
ளாவி னன்குடி யசைதலு முரிய னதாஅன்

[ச.—திருவேரகம்.]

றிருமூன் றெய்திய வியல்பினின் வழாஅ
திருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
யறுநான் கிரட்டி யிளமை நல்லியாண்
டாறினிற் கழிப்பிய வறனவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்
திருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
வொன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர வுடீஇ
யுச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்
தாறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி
நாவியன் மருங்கி னவிலப் பாடி
விரையுறு நறுமல ரேந்திப் பெரிதுவந்
தேரகத் துறைதலு முரிய னதாஅன்று

---

169. “மீன்பூத்தன்னவான்கலம்”

170 - 71. “வளித்தலைஇயதீயும்” (புறநா. 2)

175. “தாவில்கொள்கைத் தந்தொழில்” (முருகு. 89)

177. “அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்” (தொல். புறத். 20)

181 - 2. “அந்தண ருருங்கட னிறுக்கு முத்தீ”, “ஒன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர், முத்தீ” (புறநா. 2,367)

185 “அட்டானானே குட்டுவன், உச்சிக்கூப்பிய கையினரென்றாற் போல்வன கடைச்சங்கத்திற்கு ஆயினசொற்கள் இக்காலத்திற்கு ஆகாவாயின” (தொல். செய். சூ. 80. ந). வினைக்குறிப்புமுற்று வினையெச்சமாயிற்றென்பதற்கு இவ்வடி மேற்கோள்; (நன் - வி. சூ. 351.)

[௫.—குன்றுதோறாடல்.]

பைங்கொடி நறைக்கா யிடையிடுபு வேல
னம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளந் தொடுத்த கண்ணிய
னறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கட் டேறற்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை யயர
விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
யிணைத்த கோதை யணைத்த கூந்தன்
முடித்த குல்லை யிலையுடை நறும்பூச்
செங்கான் மராஅத்த வாலிண ரிடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகா ழல்குற் றிளைப்ப வுடீஇ

---

193. "நறுஞ்சாந் தணிந்த கேழ்கிள ரகலம்" (அகநா. 26)

195. "திருந்தமைவிளைந்த தேக்கட் டேறல்" (மலை. 522), "தூம்பகம் பழுனிய தீம்பிழி" (பதிற். 81), "அம்பணைவிளைந்த தேக்கட்டேறல்" (அகநா. 368), "வாங்கமைப்பழுனியதேறல்" (புறநா. 129)

196 - 7. "தொண்டகப் பறைச்சீர் பெண்டிரொடு விரைஇ, மறுகிற் றூங்குஞ் சிறுகுடிப் பாக்கத்து" (அகநா. 118)

198 - 200. "தண்கயத் தமன்ற வொண்பூங் குவளை, யரும்பலைத் தியற்றிய சுரும்பார்கண்ணி, பின்னுப் புறந்தாழக் கொன்னே சூட்டி" (அகநா. 180), "கூருகிர் விடுத்தோர் கோல மாலை" (சீவக. 1466)

199. "குண்டுசுனைபூத்த வண்டுபடுகண்ணி, நூலாக்கலிங்கம் வாலரைக் கொளீஇயென்பன, பூத்த பூவான் இயன்றகண்ணி நூலாதநூலான் இயன்ற கலிங்கமென ஒற்றுமைநயம்பற்றிச் செயப்படு பொருண்மேல் நின்றன" (தொல். வினை. சூ. 37. ந.) இவ்வடி, பெயரெச்சம் செய்வதாதி அறுபொருட் பெயரன்றிப் பிறபெயரெஞ்சுகின்றதற்கு மேற்கோள்; (நன் - வி. சூ. 340) "நுண்டுகில், குண்டு ......... கண்ணி என்றாற்போல ஒற்றுமை நயம்பற்றி, நுண்ணிய நூலாற் செய்த துகிலென்று கொள்க" (தக்கை. 217 - உரை)

200. "இணைப்புறுபிணையல்" (முருகு. 30)

202. "செங்கான் மராஅத்து" (நற். 148; ஐங்குறு. 381), "மராஅத்து வாஅன் மெல்லிணர்" (அகநா. 127; ஐங்குறு. 383.)

203. "சுரும்புணவிரிந்த பெருந்தண் கோதை" (அகநா. 131)

மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன் சிவந்த வாடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடியன் னெடியன் றொடியணி தோள
னரம்பார்த் தன்ன வின்குரற் றொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன்
மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையி னியல வேந்தி

205 "பீலிமஞ்ஞையினியலி" (பெரும்பாண் 331), "நன்மாமயிலின் மென்மெல இயலி" (மது 608), "அணிமயிலன்ன வசைநடைக்கொடிச்சியை" (ஐங்குறு 258), "மணிமயிற்றொழில்" (பரி), "வருநல மயிலன்ன மடநடை மலைமகள" (தே இடைமருது,), "மயிலெனப் போந்து" (திருச்சிற் 224), "நடைமயிலே" (பிர 42), "மயில் மகளிர" "கண்டன்ன" (இ-கோ சூ 86, 117 - உரை)

206 "பவழத் தன்ன மேனித் திகழொளிக், குன்றியேய்க்கு முடுக்கை சேவலங் கொடியோன" (குறுந் கடவுள), "உடையு மொலியலுஞ் செய்யை உருவமுருவத்தீ யொத்தி" (பரி 19)

207 (முருகு 31 - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க), "ஒண்பூம் பிண்டி யொருகாது செரீஇ" (குறிஞ் 119)

208 "கச்சினன் கழலினன் றேந்தார் மார்பினன" (அகநா 76)

209 "வல்லானென்னும் வினைக்குறிப்புமுற்று வினையெச்சமாய் நின்றது, என்னை? திருமுருகாற்றுப்படையுள், குழலன் கோட்டன் குறும்பல்லியத்தனெனப்பதற்குக் குழலையூதிக் கோட்டைக் குறித்துப் பல்லியத்தை ஒலிப்பித் தென முற்றுவினையை எச்சமாக நச்சினார்க்கினியர் கூறியவுரையிற் கண்டு கொள்க" (தஞ்சை 8 - உரை)

210 - 11 "சேவலங்கொடியோன் காப்ப" (குறுந் கடவுள்) "சேவற் கொடியன் றொடியணிதோளன் எனத் தொடர் மொழியீற்றின் விகுதி பொருந்தியது" (இ - கோ சூ 117 - உரை)

212 "நரம்புமீ திறவா துடன்புணர்ந் தொன்றிக், கடவ தறிந்த வின்குரல் விறலியர்" (மலை 535 - 6), "நரம்பார்த் தன்ன தீங்கிளவியளே" (ஐங்குறு. 185)

215 உறழெனபது மெய்யுவமவுருபாயவருமெனபதற்கு இவ்வடி மேற் கோள், (தொல். உவம. சூ. 15. பேர)

மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே யதாஅன்று

[சு.—பழமுதிர்சோலை.]

சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
யூரூர் கொண்ட சீர்கெழு விழவினு
மார்வல ரேத்த மேவரு நிலையினும்
வேலன் றைஇய வெறியயர் களனுங்
காடுங் காவுங் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்புஞ்
சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு

214-6. "மைந்த, ரெல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து" (புறநா. 24.)

217. "குன்றுதொறு .. .. .. பண்பேயெனத் தொறுவென்பது தான் சார்ந்த மொழிப்பொருட்குப் பன்மையும் இடமாதலும் உணர்த்திநிற்கும்" (தொல். இடை. சூ. 48. சே. ந; இ - வி. சூ. 279 - உரை)

208 - 17. "முருகாற்றுப்படையுள், கச்சினன்கழலினன்......... பண்பே யென்புழி வந்த வினையெச்ச வினைக்குறிப்புமுற்றுக்கள் ஆக்கம்பெற்றுப் பொருளுணர்த்துங்கால், கச்சைக்கட்டிக் கழலையணிந்து கண்ணியைச்சூடிக் குழலையூதிக் கோட்டைக்குறித்துப் பல்லியங்களையெழுப்பித் தகரைப்பின்னிட்டு மயிலையேறிக் கொடியை யுயர்த்து வளர்ந்து தோளிலே தொடியையணிந்து துகிலையுடுத்து ஏந்தித் தழீஇத்தலைக்கைகொடுத்து ஆடலும் அவற்கு நிலைநின்ற பண்பெனச் செய்தெனெச்சப்பொருளை உணர்த்தி நின்றவாறு காண்க" (தொல். எச்ச. சூ. 63. ந.)

218. "மறிக்குர லறுத்துத் தினைப்பிரப் பிரீஇ" (குறுந். 263), "உருவச் செந்தினை குருதியொடு தூஉய்" (அகநா. 22)

219. வாரணக்கொடி :( முருகு. 38,227). கோழியை வாரணமென்றற்கு இவ்வடிமேற்கோள் ; (தொல். மரபு. சூ. 68 - உரை)

222. "வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்" (குறுந். 53) "களநன் கிழைத்து" (அகநா. 22), "வெறியயர் வெங்களத்து வேன்மகன்" (நாலடி. இளமை. 6), "வேலனார் வந்து வெறியாடும் வெங்களத்து" (சில. குன்ற.)

224. "துறைமிசை நினதிரு திருவடி தொடுநர்" (சில. குன்ற.) "துறைமிசை - நீர்த்துறையில்; நீர்த்துறையில் நின் திருவடியைச் சூளுறுமவரென்க ; யாறுங் குளனுமென்றாராகலின்" (ஷை ஷை அரும்பத.)

225. கடம்பு முருகக்கடவுளுக்கு இடம் : "கடம்பமர் நெடுவேள்" (பெரும்பாண். 75); "கடம்பமர்ந்து.........கடம்பம ரணிநிலை" (பரி. 19), "செல்வக்

மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினு
மாண்டலைக் கொடியொடு மண்ணணி யமைவர
நெய்யோ டையவி யப்பி யைதுரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண்கொ ளுருவி னிரண்டுட னுடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் ளரிசி
சில்பலிச் செய்து பல்பிரப் பிரீஇச்
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற வறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பி னன்னகர் வாழ்த்தி
நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி
யிமிழிசை யருவியொ டின்னியங் கறங்க
வுருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்
முருகிய நிறுத்து முரணின ருட்க
முருகாற்றுப் படுத்த வுருகெழு வியனக
ராடுகளஞ் சிலம்பப் பாடிப் பலவுடன்

---

கடம்பமர்ந்தான்" (ஐந் - ஐம். 1); "செவ்வேள்........மராஅத்தண் சாயை நின்றணங்கும்" (தஞ்சை. 132); "கடம்பமர் மன்றற் றொங்கற் கந்தனைச் சிந்தை செய்வாம்" (திருவால. கடவுள். 18)

228. நெய்யோ டையவி யப்பி: "ஐயவி யப்பிய நெய்யணி நெடுநிலை" (நெடு. 86); "நெய்யோ டிமைக்கு மையவித் திரள்காழ்" (நற். 370); "ஐயவி யப்பிய நெய்யணி முச்சி" (மணி. 3. 134)

229. "குடந்தம் பட்டுச் சூழ்போந்து குழைந்து வழுத்தி" (கூர்ம. தக்கன்வேள்வி. 52.)

233. "குருதிச்செந்தினைபரப்பி" (முருகு. 242)

232-3. "மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி" (பெரும்பாண். 143); "விடையும் வீழ்மின்" (புறநா. 262)

234. "அறிதல் வேண்டுமெனப் பல்பிரப் பிரீஇ" (அகநா. 242)

232-4. "பலிகொடுத் துருவச் செந்தினை குருதியொடு தூஉய்" (அகநா. 22); "கொழுவி டைக்கறை விராவிய பலிக்குறை நிரப்பி, வழுவில் பல்பிரப் பிரீஇவெறியாட்டயர் மன்றத்து" (தணிகை. நாடு. 46)

245. "வெறியயர் வியன்களம் பொலிய வேத்தி" (அகநா. 242.)

கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி
யோடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
வாண்டாண் டுறைதலு மறிந்த வாறே
யாண்டாண் டாயினு மாக காண்டக
முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்திக்
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
மைவரு ளொருவ னங்கை யேற்ப
வறுவர் பயந்த வாறமர் செல்வ
வால்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமகண் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ

---

236-45. “களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி, வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத், துருவச் செந்தினை குருதியொடு தூஉய், முருகாற்றுப் படுத்த வுருகெழு நடுநாள்” (அகநா. 22.)

247. பிணிமுகம் - முருகக்கடவுளின் ஊர்தியாகிய யானை: “சேயுயர் பிணிமுக மூர்ந்து” (பரி. 5); “பிணிமுக வூர்தி யொண்செய் யோனும்” (புறநா. 56.); “பிணிமுக மஞ்ஞை செருமுகத் தேந்திய, பூவிரி திருமுகத் தொருவே லவற்கு” (கல். 7. மயிலேறும்.)

246-7. “தசும்புசீ ரின்னியங் கறங்கக் கைதொழு, துருகெழு சிறப்பின் முருகு மனைத்தரீஇக், கடம்புங் களிறும் பாடி” (அகநா. 138)

248. வேண்டுநர் வேண்டியாங் கெய்தல்: “வேண்டிய வேண்டியாங் கெய்தலால்” (குறள், 265); “வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டாய்”, “மனத்திருந்த கருத்தறிந்து முடிப்பாய் நீயே” (தே. மறைசை. ஐயாறு)

251. “முகனமர்ந் தின்சொலனாக” (குறள், 92) ‘முகமலர்ந் தேத்தி’ என்றும் பாடம்.

253. “நிவந்தோங் கிமயத்து நீலப் பைஞ்சுனை” (பரி. 5.)

256. ஆல்கெழு கடவுட் புதல்வ: “ஆலமர் செல்வ னணிசால் பெருவிறல்” (கலி. 81); “ஆலமர் செல்வன் புதல்வன்” (சில. குன்ற.) “ஆலமர் செல்வன் மகன்” (மணி. 3. 144).

257. மலைமகண்மகனே: “மலைமகண் மகனே” (சில. குன்ற.) “மலைமகண் மகனே மாற்றோர் கூற்றே யென்றற்றொடக்கத்தன காரணக்குறியாக் கந் தொடர்ந்தன” (நன் - வி. சூ. 275)

258. கொற்றவை சிறுவ: “சேய் பயந்த மாமோட்டுத், துணங்கையஞ் செல்விக்கு” (பெரும்பாண். 158 - 9)

இழையணி சிறப்பிற் பழையோள் குழவி
வானோர் வணங்குவிற் றானைத் தலைவ
மாலை மார்ப நூலறி புலவ
செருவி லொருவ பொருவிறன் மள்ள
அந்தணர் வெறுக்கை யறிந்தோர் சொன்மலை
மங்கையர் கணவ மைந்த ரேறே
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவ ரேறே
அரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக
நசையுநர்க் கார்த்து மிசைபே ராள
அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்
மண்டமர் கடந்தநின் வென்றா டகலத்துப்
பரிசிலர்த் தாங்கு முருகெழு நெடுவேள்
பெரியோ ரேத்தும் பெரும்பெய ரியவுள்
சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி
போர்மிகு பொருந குரிசி லெனப்பல
யானறி யளவையி னேத்தி யானாது
நின்னளந் தறிதன் மன்னுயிர்க் கருமையி
னின்னடி யுள்ளி வந்தனெ னின்னொடு
புரையுந ரில்லாப் புலமை யோயெனக்

---

261. புலவ: "புலமையோய்" (முருகு. 280)

267. "விண்பொரு நெடுவரைப் பரிதியின்" (முருகு. 299). குறிஞ்சிக் கிழவ: "குறிஞ்சிக் கிழவனென் றோதுங் குவலயமே" (கந்தரலங்காரம், 5.)

269. பெரும்பெயர்: "பெரும்பெய ரியவுள்" (முருகு. 274); "பெரும் பெயர்ப் பிரமன்" (சீவக. 207), "பெரும்பெயர்க் கடவுளிற் கண்டு" (சிவ-போ. சிறப்பு.), "பெரும்பெய ரேபெய ராக வந்த, வொருவாய்மை தன்னை நினையினு முன்ன முருகுவதே" (பஞ்சாக்கர. 5)

271. அலந்து, இடுக்கண்பட்டென்பதற்கு இவ்வடி மேற்கோள்; (தஞ்சை. 352 - உரை)

272. "மண்டமர் பலகடந்து" (கலி. 1.)

275. "சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேற், சீர்மிகு முருகன்" (அகநா. 59)

279 - 80. நின்னொடு புரையுந ரில்லாப் புலமையோய்: "நின்னுவார் பிற ரின்றி நீயே யானாய்" (தே. தனித்திருத்தாண்டகம், 7.)

குறித்தது மொழியா வளவையிற் குறித்துடன்
வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
யளியன் றானே முதுவா யிரவலன்
வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென
வினியவு நல்லவு நனிபல வேத்தித்
தெய்வஞ் சான்ற திறல்விளங் குருவின்
வான்றோய் நிவப்பிற் றான்வந் தெய்தி
யணங்குசா லுயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி
யஞ்ச லோம்புமதி யறிவனின் வரவென
வன்புடை நன்மொழி யளைஇ விளிவின்
றிருணிற முந்நீர் வளைஇய வுலகத்
தொருநீ யாகித் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசி னல்குமதி பலவுடன்

---

281. "நீசில மொழியா வளவை" (சிறுபாண். 235)

283. "சாறயர் களத்தின் வீறுபெறத் தோன்றி" (சில. 6. 162)

282 - 3. "சாறுகொண்ட களம்போல, வேறுவேறு பொலிவு தோன்ற" (புறநா. 22).

284. "முதுவா யிரவல" (சிறுபாண். 40.), "செல்லு முதுவா யிரவல" (பதிற். 66.)

290. "பூவந்த வுண்கண் பொறுக்கென்று - மேவித்தன், மூவா விளநலங் காட்டி" (சில. 9. 34 - 5.); "அறுமுகமில்லை" என்றற் றொடக்கத்திற்கு இவ்வடி உதாரணமாகக் காட்டப்பெற்றது; (ஷெ. குன்ற. அரும்பத)

292. அன்புடை நன்மொழி: "ஈரநன்மொழி", "ஆர்வ நன்மொழி" (சிறுபாண். 93, 99)

294. 'ஒருநீயாக' என்றும் பாடம்.

294 - 5. இவ்வடிகள், "இன்மை யுரைத்தார்க் கதுநிறைக்க லாற்றாக் கால், தன்மெய் துறப்பான் மலை" என்பதற்கு மேற்கோள்; (கலி. 43 - உரை.)

63 - 295. "முருகாற்றுப்படையுள், புலம்பிரிந் துறையும் சேவடி யெனக் கந்தழிகூறி நின்னெஞ்சத்து இன்னசை வாய்ப்பப் பெறுதியெனவும் கூறி அவனுறையுமிடங்களுங்கூறி ஆண்டுச் சென்றால் அவன் விழுமிய பெறலரும் பரிசில் நல்குமெனவுங்கூறி ஆண்டுத் தான் பெற்ற பெருவளம் அவனும் பெறக் கூறியவாறு காண்க. இதனைப் புலவராற்றுப் படையென்று உய்த்துணர்ந்து பெயர்கூறுவார்க்கு முருகாற்றுப்படையென்னும் பெயரன்றி அப்பெயர் வழங்காமையான் மறுக்க. இனி, முருகாற்றுப்படையென்பதற்கு முருகன்பால் வீடுபெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை ஆற்றுப்படுத்ததென்பது பொருளாகக்கொள்க" (தொல். புறத். சூ. 36. ந.)

வேறுபஃ றுகிலி னுடங்கி யகில்சுமந்
தார முழுமுத லுருட்டி வேரற்
பூவுடை யலங்குசினை புலம்ப வேர்கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியிற் றொடுத்த
தண்கம ழலரிறால் சிதைய நன்பல
வாசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமல ருதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுத
லிரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறங் கிளரப் பொன்கொழியா
வாழை முழுமுத றுமியத் தாழை
யிளநீர் விழுக்குலை யுதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை யிரியக் கேழலொ
டிரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன
குரூஉமயி ரியாக்கைக் குடாவடி யுளியம்
பெருங்கல் விடரளைச் செறியக் கருங்கோட்
டாமா நல்லேறு சிலைப்பச் சேணின்
றிழுமென விழிதரு மருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

---

296. அருவிக்குத் துகில் உவமை: "அறுவைத், தூவிரி கடுப்ப துவன்றி மீமிசைத், தண்பல விழிதரு மருவி" (புறநா. 154)

297. ஆரமுழுமுதல் : "வாழை முழுமுதல்" (முருகு. 307)

300. அலர்தல் - பரத்தலென்பதற்கு இவ்வடி மேற்கோள்; (தஞ்சை. 269 - உரை)

304 - 5. "யானை, முத்துடை மருப்பின்" (மலை. 517 - 8)

309. "கறிக் கருந்துண ருகுப்ப" (திருவிளை. நாடு. 35)

310. முருகு. 205 - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

312 - 3. "இரும்பனை வெளிற்றின் புனசா யெனமலி மயிரி னாக்கைக், கரும்பெருங் கரடி" (விநாயக. நாடு. 26.)

315. சிலைத்தல், இசைப்பொருளை உணர்த்துமென்பதற்கு இவ்வடி மேற்கோள் (தொல். உரி. சூ. 62 - சே. ந; இ - வி. சூ. 285 - உரை)

316. "இழுமென்று வந்தீங் கிழியு மலையருவி" (சில. குன்ற.), "இழுமெ னோசையி னிழிதரு மருவி" (ஆனைக்கா. நாடு. 14), "வெள்ளருவி யிழுமெ னோசையும்" (தணிகை. நாடு. 46)

317. மலைகிழவோனே : "ஒளிறிலங் கருவிய மலைகிழ வோனே" (பெரும்பாண். 500), "நிலைபெறு தணிகை மலைகிழ வோனே" (தணிகை பு. 417.) பெயரிடத்து னகர வீற்றயலகரம் ஓகாரமாமென்பதற்கு இவ்வடி மேற்கோள் (இ. வி. சூ. 326 - உரை; நன் - வி. சூ. 353.)

## இதன்பொருள்.

### க.—திருப்பரங்குன்றம்.

1. உலகமென்பதுமுதற் கணவன் (6) என்னுந்துணையும் ஒருதொடர்.

1. உலகம் உவப்ப— சிவான்மாக்கள் உவப்ப,

உலகமென்பது பலபொருளொருசொல்லாய் நிலத்தையும் உயிர்களையும் ஒழுக்கத்தையும் உணர்த்தினிற்குமேனும் ஈண்டு உவப்பவென்றதனான், மண்ணிடத்துவாழும் சிவான்மாக்களை உணர்த்திற்று.

[வலனேர்பு திரிதரு :] ஏர்பு வலன் திரிதரு— எழுந்து †மகாமேருவை வலமாகத்திரிதலைச்செய்யும்,

2. ‡பலர் புகழ் ஞாயிறு— எல்லாச்சமயத்தாரும் புகழும் ஞாயிற்றை,

கடற் கண்டாங்கு - கடலிடத்தே கண்டாற்போல,

இது வினையெச்சவுவமம்; §“ விரவியும் வரூஉ மரபின வென்ப ” என்பதனால் தொழிலுவமமும் வண்ணவுவமமும் பற்றிவந்தது; என்னை? ஞாயிறு இருளைக்கெடுக்குமாறுபோலத் தன்னை மனத்தால் நோக்குவார்க்கு மாயையைக் கெடுத்தலிற் றொழிலுவமமும், தன்னைக் கட்புலனால் நோக்குவார்க்குக் ¶கடலிற் பசுமையும் ஞாயிற்றின் செம்மையும்போல மயிலிற் பசுமையும் திருமேனிச் செம்மையும் தோன்றலின் வண்ணவுவமமும் கொள்ளக்கிடந்தமை காண்க.

3. [ஓவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி : ]

||ஓ அற இமைக்கும் அவிர் ஒளி— இருவகையிற்றிரியங்களும் தாம் செல்லுதற்குரிய பொருள்கண்மேற் சென்றுதங்குதல் இல்லையாக இமைத்துப் பார்த்தற்குக் காரணமாகும், விளங்குகின்ற ஒளி,

ஓ என்பது ஓரெழுத்தொருமொழியாகிய தொழிற்பெயர். இமைத்தல் - கண்களின் இதழ்களிரண்டினையும் குவித்தல்; அது **“ நுதல இமையா நாட்டம் ” என்பதனானுணர்க.

சேண் விளங்கு ஒளி—கட்புலனால்நோக்குவார் கண்ணிடங்களெல்லாவற்றினும் சென்றுவிளங்குகின்ற ஒளியினையும்,

---

( ) இந்த இயைபிலிசைக்குறிக்குட்பட்ட எண்ணும், இப்படியே பின்னர் ஆங்காங்குப் பதிப்பிக்கப்படும் எண்களும் தத்தம் முன்புள்ள மொழிகளையேனும், அம்மொழிகளைப் பொருளாகப் பெற்ற மொழிகளையேனுமுடைய மூலத்தின் வரியைப் புலப்படுத்தும்.

† “ஞாயிறுபோற்றுதும் ......... மேருவலந்திரிதலான்” (சில. மங்கல)

‡ “பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதை” (சிவ - போ. சிறப்பு.)

§ தொல்காப்பியம், உவமவியல், 2.

¶ “மாக்கட னிவந்தெழுதரு, செஞ்ஞா யிற்றுக் கவினை” (புறநா. 4), “உததியிடை கடவுமரகதவருண குலதுரக வுபலளித கனகரத சதகோடி சூரியர்கள், உதயமென வதிகவித கலபகக மயிலின்மிசை யுகமுடிவி னிருளகல வொருசோதி வீசுவதும்” (திருவகுப்பு, ஸ்ரீபாத.)

|| ஓவற - ஒழிவற. இமைக்கும் - விட்டுவிளங்கும். அவிர்தல் - பாடஞ்செய்தல் (மேவுரை.)

** அகநானூறு, கடவுள்வாழ்த்து.

உவப்ப எழுந்து திரியும் ஞாயிற்றைக் கடற்கண்டாங்கு அவிர்கின்ற ஒளியெனத் தொழிலுவமம் கொள்ளுங்கால் வினைமுடிக்க. இனி உவப்ப எழுந்து திரியுஞாயிற்றைக் கடற்கண்டாங்குச் சேஎண்விளங்கொளியென வண்ணவுவமங் கொள்ளுங்கால் வினைமுடிக்க.

4. உறுநர் தாங்கிய *மதன் உடை நோன் றாள்—தன்னைச்சேர்ந்தவர்கள் தீவினையைப்போக்கி அவரைத்தாங்கிய, அறியாமையை உடைத்தற்குக் காரணமாகிய வலியினையுடைய தாளினையும்,

5. செறுநர் தேய்த்த †செல் உறழ் தட கை — அழித்தற்குரியாரை அழித்த இடியையொருபட்ட பெருமையினையுடைய கையினையும்,

6. மறு இல் கற்பின் வாள் நுதல் கணவன்—மறக்கற்பில்லாத ‡அறக்கற்பினையும் ஒளிபொருந்திய நுதலினையுமுடைய இந்திரன்மகள் தெய்வயானையார் கணவன் ;

இப்பெயரை முற்கூறினர், படைத்தற்குங் காத்தற்கும் உரிமைதோன்ற.

கணவனென்பது ஈண்டு முருகனென்னுந் துணையாய்நின்றது.

ஒளியினையும் (3), தாளினையும் (4), கையினையும் (5) உடைய கணவனென முடிக்க.

7. கார்கோளென்பதுமுதல் மார்பினன் (11) என்னுந்துணையும் ஒரு தொடர்.

7 கார்கோள் முகந்த கமஞ்சூல் மா மழை—கடலிலே முகந்ததனாலுண்டாகிய நிறைவினையுடைத்தாகிய சூலினையுடைய பெருமையையுடைய மழை,

கார் முகக்கப்படுதலிற் கடல் கார்கோளென்று பெயர்பெற்றது ; ஆகுபெயர்.

8. §வாள் போழ் விசும்பில் வள் உறை சிதறி—திங்களும் ஞாயிறும் இருளை நீக்கும் ஆகாயத்தே பெருமையையுடைய துளியை முற்படச்சிதறி,

வாள், ஆகுபெயர்.

9. தலைப்பெயல் ¶தலைஇய தண் நறு கானத்து — கார்காலத்து முதற்பெயலைச் சொரிந்த தண்ணிய நறிய காட்டிடத்து,

10. இருள் பட||பொதுளிய பராரை மராத்து — இருட்சியுண்டாகத் தழைத்த பரிய அடியினையுடைய **செங்கடம்பினது,

பராரை, பண்புத்தொகைச்சந்திமுடிபு வேற்றுமையென்றுணர்க.

11. ††உருள் பூ தண் தார் புரளும் மார்பினன்— தேருருள்போலும் பூவாற்செய்யப்பட்ட குளிர்ந்த மாலையசையும் மார்பினையுடையவன் ;

---

* மதனுடை - அழகுடைய (வேறுரை)

† செல்உறழ் - மேகத்தையொத்த (வேறுரை)

‡ அருட்கற்பென்றும் பிரதிவேறுபாடுண்டு.

§ வாள் போழ்-திங்களும் ஞாயிறும் அளவிடப்பட்டாற்போன்ற (வேறுரை.)

¶ தலைஇய - தழைத்த (வேறுரை)

|| பொதுளிய - நெருங்கிய (வேறுரை)

** வெண்கடம்பினதென்றும் பிரதிவேறுபாடுண்டு.

†† உருள்பூ - தேருருள்போன்ற வட்டப்பூ (வேறுரை.)

உருள்பூ உவமத்தொகையாகலின் உருள்பூ உருட்பூவென உறழ்ச்சிமுடிபெய் தும்; இனி உருளும்பூ உருண்டபூவென வினைத்தொகையுமாம்.

மழை சிதறித் தலைஇய கானத்து மராஅத்துத் தார் புரளும் மார்பினனென முடிக்க.

இது போகத்திற்குரிய தார்; இதனை முற்கூறினர், வாளுதல்கணவன் (6) என்றதனைநோக்கி.

12. மால்வரை என்பதுமுதற் சென்னியன் (44) என்னுந்துணையும் ஒருதொடர்.

12. மால் வரை நிவந்த சேண் உயர் வெற்பில்—பெருமையையுடைய மூங்கில்வளர்ந்த தேவருலகளவாகச் செல்லவுயர்ந்த மலையில்,

வரைகளை யுடைமையின், வரையாயிற்று; இஃது ஆகுபெயர்;* "பெரிய வரைவயிரங் கொண்டு" என்றார் பிறரும். இனித் திருமால்போலும் குவடுகளோங்கிய வெற்பென்றுமாம்; †"மாயோ னன்ன மால்வரைக் கவாஅன்" என்றார் பிறரும்.

13. கிண்கிணி ‡கவைஇய ஒள் செஞ்சீறடி—சிறுசதங்கைசூழ்ந்த ஒள்ளிதாகிய சிவந்த சிறிய அடியினையும்,

14. கணை கால்—திரண்ட காலினையும்,

வாங்கிய நுசுப்பின்—வளைந்து நுடங்கிய இடையினையும்,

பணை தோள்—பெருமையையுடைய தோளினையும்,

மூங்கில்போலும் தோளென்றுமாம்.

15. கோபத்து அன்ன தோயா பூ துகில் — இந்திரகோபத்தையொத்த நிறம்பிடியாத இயல்பான சிவப்பாகிய பூத்தொழிலினையுடைய துகிலினையும்,

தெய்வத்தின் ஆணையால் தானே சிவந்திருத்தலின், தோயாத்துகிலென்றார்.

16. பல் காசு நிரைத்த சில் காழ் அல்குல் — பலமணிகள்கோத்த எழுவடமாகிய மேகலையையணிந்த அல்குலினையும்,

அஃது, §" எண்கோவை காஞ்சி யெழுகோவை மேகலை - பண்கொள் கலாபம் பதினாறு - கண்கொள் - பருமம் பதினெட்டு முப்பத் திரண்டு - விரிசிகை யென் றுணரற் பாற்று" ¶என்பதனானுணர்க.

17. கை புனைந்து இயற்றா கவின் பெறு ||வனப்பின்—ஒருவர் கையாற் சிறப்பித்துப் பிறப்பியாத அழகைத் தமக்கு இயல்பாகப்பெறுகின்ற அழகினையும்,

---

* இஃது "அரியவரைகீண்டு" என்னும் வெண்பாவிலுள்ளது.

† நற்றிணை, 32.

‡ கவைஇய - கட்டிய (வேறுரை)

§ " எண்கோவை மேகலை காஞ்சி யிருகோவை, பண்கொள் கலாபமிரு பத்தொன்று - கண்கொள் - பருமம் பதினென்கு முப்பத் திரண்டு - விரிசிகை யென் றுணரற் பாற்று" எனவும் பாடம்.

¶ இந்தச்செய்யுளின்பொருண்முறை திவாகரம், பிங்கலம், சூடாமணி என்பவற்றிலும், இதன் பாடபேதச்செய்யுளின்பொருண்முறை "எண்ணிரண்டிரட்டி" (திருவிளை. திருமண. 158) என்னும் செய்யுளிலும் காணப்படுகின்றன.

|| வனப்பு - இளமைநிறம் (வேறுரை)

என்றது : மாளிகைமகளிர்க்குத் தாயர்பலரும் கைசெய்து பிறப்பிக்கும் அழகன்றி இவர் தெய்வத்தன்மையான் இயல்பாகப்பெற்ற அழகினையுடைய ரென்றவாறு.

18. *நாவலொடு பெயரிய பொலம் புனை அவிர் இழை—சாம்பூநதமென்று நாவலோடடுத்துப் பெயர்பெற்ற பொன்னால் திருமித்து விளங்குகின்ற பூணினையும்,

பொலம், †"பொன்னென் கிளவி" என்பதனான்முடிக்க.

19. சேண் இகந்து விளங்கும் செயிர் தீர் மேனி—சேய்நிலத்தைக் கடந்து விளங்குகின்ற குற்றந்தீர்ந்த நிறத்தினையுமுடைய சூரரமகளிர் (41) என்க.

20. துணையோர் ஆய்ந்த இணை ஈர் ஓதி—ஆயத்தார் நன்றென்று ஆராய்ந்த கடையொத்த நெய்ப்பினையுடைய மயிரிலே,

21-2. [செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு, பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளி :] செங்கால் வெட்சி சிறு இதழ் இடை பைந்தாள் குவளை தூ இதழ் கிள்ளி இடுபு—சிவந்தகாலையுடைய வெட்சியுடைய சிறிய பூக்களை விடுபூவாகத் தூவி அதற்குநடுவே பசுத்த தண்டினையுடைய குவளையினது தூய இதழ்களைக் கிள்ளியிட்டு,

23. தெய்வுத்தியொடு ‡வலம்புரி வயின் வைத்து—சீதேவியென்னும் தலைக்கோலத்துடனே வலம்புரிவடிவாகச் செய்த தலைக்கோலத்தையும் வைத்தற்குரிய இடத்தே வைத்து,

24-5. §திலகம் தைஇய தேம் கமழ் திரு நுதல் மகரப்பகுவாய் தாழ மண்ணுறுத்து—திலகமிட்ட மணநாறுகின்ற அழகினையுடைய நெற்றியின்கண்ணே சுறவினது அங்காந்த வாயாகப்பண்ணின தலைக்கோலம் தங்கப்பண்ணி,

மகரப்பகுவாய், ஆகுபெயர். மண்ணுறுத்தலை, ¶"ஆவுதி மண்ணி" என்றாற் போலக்கொள்க. இனி மண்ணுறுத்துத் துவாமுடித்தவென மேலேகூட்டி, மூவி முடித்தவென்றுமாம்.

26-7. துவர முடித்த துகள் அறும் முச்சி பெரு தண் சண்பகம் செரீஇ—வேண்டுவனகூட்டி முற்றமுடித்த குற்றமறுகின்ற கொண்டையிலே பெரிய குளிர்ந்த சண்பகப்பூவைச் செருகி,

27-8. கரு தகடு ||உளை பூ மருதின் ஒள் இணர் அட்டி—கரிய புறவிதழினையும் மேலில் துய்யினையுமுடைய பூக்களையுடைய மருதினது ஒள்ளிய பூங்கொத்துக்களை அதன் மேலேயிட்டு,

இது முதலாகிய பொருட்கேற்ற அடையடுத்துநின்றது.

* நாவற்பழத்துச்சாறுபட்டுப் பேதமானபொன்னால் (வேறுரை.)

† தொல்காப்பியம், புள்ளிமயங்கியல், 61.

‡ வலம்புரி-வலம்புரிச்சங்கின்றமுத்தின்மாலை,நந்தியாவட்டப்பூ(வேறுரை.)

§ பொட்டு ஊன்றின (வேறுரை.)

¶ மதுரைக்காஞ்சி, 494.

|| உளைப்பூ - விரிந்தபூ (வேறுரை). "உளைப்பூ மருதத்து" (ஐங். 7)

29-30. இணை கவின்று எழுதரு கீழ்நீர் செவ்வரும்பு இணைப்பு உறு பிணையல் வளைஇ—பச்சென்ற அரும்புகளினின்றும் மேலேபோந்து அழகுபெற்றுத் தோன்றுகின்ற நீர்க்கீழ் நின்ற சிவந்த அரும்பைக் கட்டுதலுறுகின்ற மாலையை வளையவைத்து,

கவினென்னும் பண்படியாகக் கவின்றென்னுந் தொழில் பிறந்தது. கீழ்நீர், நீர்க்கீழென்னும் இலக்கணத்தோடு பொருந்திய மரூஉ.

அது மிகச்சிவத்தலின் ஒப்பனைக்குக் கொள்வர்.

30-32. [துணைத்தக, வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர், நுண்பூ ணாகந் திளைப்ப:] வள் காது துணை தக நிறைந்த பிண்டி ஒள் தளிர் நுண் பூண் ஆகம் திளைப்ப—வளவிய காதிலே தம்மில் ஒத்தற்குப் பொருந்த இட்டு நிறைந்த பிண்டியினது ஒள்ளிய தளிர் நுண்ணிய பூணையுடைய மார்பிடத்தே அசையாநிற்க,

32-5. திண் காழ் நறு குறடு உரிஞ்சிய பூ கேழ் தேய்வை தே கமழ் மருதுஇணர் கடுப்ப கோங்கின் குவி முகிழ் இளமுலை கொட்டி—திண்ணிய வயிரத்தையுடைய நறிய சந்தனத்தையுரைத்த பொலிவினையுடைய நிறத்தை யுடைத்தாகிய குழம்பை மணநாறுகின்ற மருதம்பூவை அப்பினாலொப்பக் கோங்கினது குவிந்த அரும்பையொத்த இளமுலையிலே யப்பி,

மருதிணர், நிறத்திற்குவமம்.

35-6. விரி மலர் வேங்கை நுண் தாது அப்பி—அவ்வீரம்புலர்வதற்கு முன்னே விரிந்த மலரையுடைய வேங்கைப்பூவினது நுண்ணிய தாதையும் அதன் மேலே அப்பி,

36-7. [காண்வர, வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியா·] வெள்ளில் குறு முறி கிள்ளுபு காண் வர *தெறியா—விளவினது சிறிய தளிரைக்கிள்ளி அழகு வர ஒருவர்மேல் ஒருவர் தெறித்துத் தப்பாமற் பட்டபொழுது,

38-9. [கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி, வாழிய பெரிதென் றேத்தி:] வென்று அடு விறல் கோழி ஓங்கிய கொடி பெரிது வாழிய என்று எத்தி—வஞ்சியாது எதிர்நின்று அடுகின்ற வெற்றியையுடைய கோழிமேலாய் நின்றகொடி நெடுங்காலம் வாழ்வதாகவென்று வாழ்த்தி,

39-41. [பலருடன், சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச், சூரர மகளி ராடுஞ் சோலை:] சூர் அரமகளிர் †பலருடன் சீர் திகழ் சிலம்பகம் சிலம்ப பாடி ஆடும் சோலை — கொடுமையையுடைய தெய்வமகளிர்பலருங்கூடிச சீர்மை விளங்குகின்ற மலையிடமெல்லாம் ஆரவாரிக்கப் பாடி ஆடும் சோலையினையுடைய,

42. ‡மந்தியும் அறியா மரன் பயில் அடுக்கத்து—மரமேறுதற்றொழிலிற் சிறப்புடைய மந்திகளும் மரங்களினீட்டத்தால் ஏறியறியாத மரநெருங்கின பக்க மலையிடத்து நின்ற,

உம்மை, சிறப்பும்மை.

---

* பிள்ளையார் சீபாதங்களை உள்ளித்தெறித்து (வேறுரை.)

† பலவுடன் - பலதோத்திரங்களினாலே (வேறுரை.)

‡ மந்தி - அருக்கன் (வேறுரை.)

43-4. கரும்பும் மூசா சுடர் பூ காந்தள் பெரு தண் *கண்ணி மிலைந்த. சென்னியன்—தான் விரும்புதலிற் சுரும்பினமும் மொய்யாத நெருப்புப்போலும் பூவினையுடைய செங்காந்தளினது பெரிய குளிர்ந்த கண்ணியைச் சூடிய திருமுடியையுடையவன் ;

அடியினையும் (13) காலினையும் நுசுப்பினையும் தோளினையும் (14) துகிலினையும் (15) அல்குலினையும் (16) வனப்பினையும் (17) இழையினையும் (18) மேனியினையும் (19) உடைய சூரரமகளிர் (41) பலருங்கூடி (39) இடையிட்டு (21) வைத்துத் (23) தாழப்பண்ணிச் (25) செரீஇ (27) இணரட்டி (28) விளைஇத் (30) திளையாநிற்கக் (32) கொட்டி (35) அப்பித் (36) தெறித்து (37) ஏத்திப் (39) பாடி (40) ஆடுஞ்சோலையையுடைய (41) வெற்பில் (12) அடுக்கத்துக் (42) காந்தட் கண்ணிச் [illegible]னியனென முடிக்க.

இதனான் அடையாளப்பூக் கூறினார். இது †"வெறியாட் டயர்ந்த காந்தளும்" என்பதனானுணர்க.

"‡ அகன்றுபொருள் கிடப்பினு மணுகிய நிலையினு, மியன்றுபொருண் முடியத் தந்தன ருணர்த்தன், மாட்டெனமொழிப பாட்டியல் வழக்கின்" என்னும் §மாட்டிலக்கணத்தான் இப்பாட்டுக்கள்பத்துஞ் செய்தார்களாதலின் இவ்வாறே மாட்டிமுடித்தல் யாண்டும் வருமென்றுணர்க.

45. பார் என்பதுமுதற் சேய் (61) என்னுந்துணையும் ஒருதொடர்.

45. || பார் முதிர் பனி கடல் கலங்க உள் புக்கு—பாராகிய நிலம் முற்றுப்பெற்ற குளிர்ச்சியையுடைய கடல் தன் நிலைகுலையும்படி உள்ளேசென்று,

பார் - பாறை; மண்ணிடத்தே முதிர்ந்த கடலென்றுமாம்.

46. சூர் முதல் தடிந்த சுடர் இலை நெடு வேல்—சூரபன்மாவாகிய தலைவனைக்கொன்ற எரிகின்ற இலைத்தொழிலையுடைய நெடிய வேலாலே,

47. உலறிய கதுப்பின்—காய்ந்த மயிரினையும்,

பிறழ் பல்—நிரை ஒவ்வாத பல்லினையும்,

பேழ் வாய்—பெருமையையுடைய வாயினையும்,

48. சுழல் விழி பசு கண்—கோபத்தாற் சுழலும் விழியையுடைய பசிய கண்ணினையும்,

¶ சூர்த்த நோக்கின்—கொடுமைசெய்த பார்வையினையும்,

---

* 'கண்ணி - சூடும்பூவென்றும் வழங்கும்; (சீவக. 208 - ந.)

† தொல்காப்பியம், புறத்திணையியல், 5. ‡ தொல். செய்யுளியல், 211

§ "அகன்றுவந்தமாட்டு முருகாற்றுப்படை முதலியவற்றுட்காண்க; மொழிமாற்றுவது கேட்டோர் கூட்டியுணருமாற்றான் ஈரடிக்கண்ணே வருவதென்றும், மாட்டென்னுமுறுப்பாவது இரண்டிறந்த பலவடிக்கண்ணும் பல செய்யுட்டொடரின்கண்ணும அகன்றும் அணுகியும் வருமென்றுமுணர்க" (தொல் எச்ச. சூ. 13 - ந.)

|| "பாரிரும் பௌவத்தி னுள்புக்குப் பண்டொருநாட், சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே" (சில. குன்ற)

¶ சூர்த்தம் - நடுக்கம் (பிங்கலம்)

49 - 50. * கழல் கண் கூகையொடு கடு பாம்பு தூங்க பெரு முலை அலைக்கும் காதின்—பிதுங்கிய கண்ணையுடைய கூகையோடே கடிய பாம்பு தூங்குகையினாலே பெரிய முலையை வருத்துகின்ற காதினையும்,

பிணர் மோட்டு—சருச்சரையையுடைய பெரிய உடலினையும்,

மோடு - வயிறுமாம்.

51. உரு கெழு செலவின்—கண்டார் உட்குதல் பொருந்தும் நடையினையுமுடைய,

அஞ்சுவரு பேய்மகள் — கண்டார்க்கு அச்சந்தோன்றுகின்ற பேயாகிய மகள்,

52-3. குருதி ஆடிய கூர் உகிர் கொடு விரல் கண் தொட்டு உண்ட கழி முடை கரு தலை — உதிரத்தையளைந்த கூரிய உகிரினையுடைய கொடியவிரலாலே கண்களைத் தோண்டி உண்ணப்பட்ட மிக்க முடைநாற்றத்தையுடைய கரிய தலையை,

இனி, தொட்டென்பதனை வினையெச்சமாக்காது தொழிற்பெயராக்கிக் கண் தோண்டுதலுண்டவென்று கூறுதலுமாம்.

54. ஒள் தொடி தட கையின் ஏந்தி—ஒள்ளிய தொடியினையுடைய பெருமையையுடைய கையிலே எடுத்து,

54-5. வெரு வர வென்று அடு விறற்களம் பாடி— அவுணர்க்கு அச்சந் தோன்ற வஞ்சியாது எதிர்நின்று கொல்கின்ற வெற்றிக்களத்தைப் பாடி,

தோள் பெயரா—தோளையசைத்து,

56. நிணம் தின் வாயள்—நிணத்தைத் தின்கின்ற வாயினையுடையளாய்,

வாயள், வினையெச்சமுற்று.

† துணங்கை தூங்க—துணங்கைக்கூத்தாட,

‡ "பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத், துடக்கிய நடையது துணங்கையாகும்."

கருப்பு (47) முதலியவற்றையுடைய பேய்மகள் (51) தலையை (53) ஏந்தி (54) வாயளாய்ப் (56) பாடி (55) தூங்கவென முடிக்க.

57. § இரு பேர உருவின் ஒரு பேர் யாக்கை — மக்கள்வடிவும் விலங்கின் வடிவுமாகிய || இரண்டு பெரிய வடிவினையுடைய ஒன்றுகிய பெரிய உடல்,

---

* கழல்கண் - கழன்று விழுவதுபோலும் கண். கடும்பாம்பு - கோபத்தையுடைய பாம்பு. (வேறுரை)

† சிங்கிக் கூத்து. (வேறுரை)

‡ "முடக்கிய விருகை பழுப்புடை யொற்றத் - துடக்கிய நடையது துணங்கை யாகும்" (திவா. பிங்கல.) எனவும் பாடம்.

§ இரு பேர் உரு - சூரனென்றும் பதுமனென்றும் இரண்டுபேரையுடைய வடிவம். (வேறுரை)

|| இரண்டு பெரிய வடிவினையுடைய ஒன்றுகிய பெரிய வுடலென்றது, முகம் குதிரைமுகமும், உடல் மக்களுடலுமாகிய சூரபன்மாவினது உடலத்தை. இதனைக் கல்தடுமோகனையில், "வண்டேது சாந்தம்" என்னும் மருதக்கலியில் "ஈரணிக் கேற்ற வொடியாப் படிவத்துச், சூர்" என்பதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையானுணர்க.

58. *அறு வேறு வகையின் அஞ்சுவர மண்டி*—ஆறாகிய வேறுபட்ட கூற்றாலே அச்சந்தோன்ற மிக்குச்சென்று,

என்றதனுன், இறைவன் உமையை வதுவை செய்துகொண்டநாளிலே இந்திரன் சென்று நீ புணர்ச்சிதவிரவேண்டுமென்று வேண்டிக்கொள்ள அவனும் அதற்கு உடம்பட்டு அது தப்பாருகிப் புணர்ச்சிதவிர்ந்து கருப்பத்தை இந்திரன்கையிற் கொடுப்ப அதனை இருடிகளுணர்ந்து அவன்பக்கனின்றும் வாங்கித் தமக்குத்தரித்தல்அரிதாகையினுலே இறையவன்கூறாகிய முத்தீக்கட்பெய்து அதனைத் தம்மனைவியர்கையிற் கொடுப்ப அருந்ததியொழிந்த அறுவரும் வாங்கிக்கொண்டு விழுங்கிச் சூன்முதிர்ந்து சரவணப்பொய்கையிற் *பதுமப்பாயலிலே பயந்தாராக, ஆறுகூருகி வளர்கின்றகாலத்து இந்திரன் தான் இருடிகளுக்குக் கொடுத்தலையை மறந்து ஆண்டுவந்து வச்சிரத்தான் எறிய அவ்வாறுவடிவும் ஒன்ருய் அவனுடனே பொருது அவனைக்கெடுத்துப் பின் சூரபன்மாவைக் கொல்லுதற்கு அவ்வடிவம் ஆறாகிய வேறுபட்ட கூற்ருலே மண்டிச்சென்றதென்று புராணங்கூறிற்று. இதனைப் †"பாயிரும் பனிக்கடல்" என்னும் பரிபாடற்பாட்டானுணர்க. இவ்வாறன்றி வேறு வேறு புராணங் கூறுவாருமுளர்.

இனி அவனுடல் அற்று வேறுவேருய் வகையாலென்றுமாம்.

59. *அவுணர் நல் வலம் அடங்க*—அவனையொழிந்த அவுணருடைய நல்லவெற்றி இல்லையாம்படி,

அடங்க என்றது, "களமடங்க" என்ருற்போலக் கொள்க.

59-60. ‡ *கவிழ் இணர் மா முதல் தடிந்த*—கீழ்நோக்கின பூங்கொத்துக் களையுடைய மாமரத்தை வெட்டின,

என்றது அவுணரெல்லாருந் தம்முடனே எதிர்ந்தார்வலியிலே பாதி தங்கள்வலியிலே கூடும்படி மந்திரங்கொண்டிருந்து சாதித்தலொரு §மாவைவெட்டினனென்றவாறு.

*மறு இல் கொற்றத்து*—குற்றமில்லாத வெற்றியினையும்,

61. *எய்யா நல் இசை* — ஒருவராலும் அறிந்தறியவொண்ணுத நல்ல புகழினையுமுடைய,

*செவேல் சேஎய்*—செய்ய வேலையுடைய சேய்,

எக்காலமும் போர்செய்தலிற் செவ்வேலென்ருர். செய்யவனென்பது சேயென விகாரத்தால் நீண்டதென்றுமாம்.

---

* "பயந்தோரென்ப பதுமத்துப்பாயல்" (பரி - 5.)

† செய்யுள், 5.

‡ மாயையினுலே கீழ்நோக்கிப் பூத்த மாவாய் நிற்கும் சூரபன்மனை முதலோடேதடிந்த. (வேறுரை)

§ "மாக்கடன் முன்னி, அணங்குடை யவுண ரேமம் புணர்க்குஞ், சூருடை முழுமுத றடிந்த பேரிசைக், கடுஞ்சின விறல்வேள்" என்பதும், 'சூர்வன்மாத் தனக்கு அரணுகவுடைய மாவின்முதல்' என்னும் உரையும் இங்கே அறியற்பாலன; (பதிற். 11); "சூர் நிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்" (பரி. 18), "உயிர்புகுஞ்சட்டகம்" (கலி.) என்பவற்றையும்பார்க்க.

கடல் கலங்க உள் புக்குச் (45) சூர்முதலின்(46)ஒருபேரியாக்கை (57) அறு வேறுவகையின் அஞ்சுவர மண்டிச்சென்று (58) பேய்மகள் (51) துணங்கை தூங்கும் படியாக (56) அச்சூர்முதல் தடிந்த வேலானே (46) பின்னும் அவுணர் நல்வலமடங்க (59) மாமுதல் தடிந்த கொற்றத்தினையும் (60) நல்லிசையினையு முடைய சேயென முடிக்க.

கண்வன் (6) மார்பினன் (11) சென்னியனாகிய (44) சேயென ஒரு பொருள் குறித்த வேறுபெயராய் நின்றன.

62-3. [சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு, நலம்புரி கொள்கைப் புலம் பிரிந் துறையும் :]

* புலம் பிரிந்து உறையும் அடி—மெய்ஞ்ஞானத்தான் அறிதலைக் கைவிட்டுத் தங்கும் திருவடி,

திருவடியே வீடாயிருக்குமென்றார்; அது †"தென்னன் பெருந்துறை யான், காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித், தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேனகாட்டி" என்பதனானும் பிறரும் திருவடியைக் கூறுமாற் றானு முணர்க

சேவடி படரும் நலம் புரி கொள்கை செம்மல் உள்ளமொடு—அத்திருவடியிற் செல்லுதற்குக் காரணமான நல்வினைகளைப் பலபிறப்புக்களிலும் விரும்பி நிகழ்த்தின கோட்பாட்டானே தலைமையினையுடைத்தாகிய உள்ளத்தோடே,

64. செலவு நீ நயந்தனை ஆயின்—செல்லுஞ்செலவை நீ விரும்பியேவிட்டாயாயின்,

64-6. [பலவுட, னன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப, வின்னே பெறுதிநீ முன்னிய வினையே:] நீ முன்னியவினை பலவுடன் நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப இன்னே பெறுதி—நீ முற்பிறப்பிற் கருதிச்செய்த நல்வினையாலே வீடுபெறுவார்க்கு உரியனவாகக்கூறிய நற்குணங்கள் பலவுஞ்சேர நன்றாகிய நெஞ்சத்திலுண்டாகிய இனிய வீடுபேற்றைத் தப்பாமல் இப்பொழுதே பெறுவை;

67. செரு புகன்று எடுத்த சேண் உயர் நெடு கொடி— போரைவென்று விரும்பிக் கட்டின சேய்நிலத்தே சென்றுயர்ந்த நெடிய கொடிக்கு அருகே,

68. வரி புனை பந்தொடு பாவை தூங்க—நூலால் வரிந்துபுனையப்பட்ட பந்தும் பாவையும் அறுப்பாரின்மையின் தூங்கியேவிடும்படி,

என்றது: ‡ பகைவரை மகளிராக்கி அவர் கொண்டுவிளையாடுதற்குத் தூக்கின வென்றவாறு.

69. பொருநர் தேய்த்த போர் அரு வாயில்—பொருவாரை இல்லையாக்குகையினாலே எக்காலமும் போர்த்தொழிலரிதாகிய வாயிலினையும்,

70. திரு வீற்றிருந்த தீது தீர் நியமத்து—திருமகள் வருத்தமின்றியிருந்த குற்றந்தீர்ந்த அங்காடித்தெருவினையும்,

* 'தேசத்தைவிட்டு' (வேறுரை) † திருவாசகம், திருவம்மானை, 6.

‡ பதிற். 53—ஆம். செய்யுளின் 6-ஆம் அடிமுதலியவற்றையும் அவற்றின் உரையையும், தணிகைப்புராணம், சீபரிபூரணநாமப்படலம், 52-ஆம் செய்யுளையும் பார்க்க.

71. மாடம் மலி மறுகில் கூடல் குடவயின்—மாடங்கள்மிக்க வீதித் தெருக்களையு முடைய மதுரையின் மேற்றிசையிடத்து,

அம் சிறை வண்டின் அரி கணம் (76)—அழகினையுடைத்தாகிய சிறகை யுடைய வண்டினுடைய அழகினையுடைய திரள்,

72. இரு சேறு அகல் வயல் விரிந்து வாய் அவிழ்ந்த—கரிய சேற்றி னையுடைய அகன்ற வயலிலே முறுக்குநெகிழ்ந்து பின்பு தாதும் அல்லியும் தோன்றமலர்ந்த,

73. முள் தாள் தாமரை துஞ்சி—முள்ளையுடைத்தாகிய தாளையுடைய தாமரைப்பூவிலே இராப்பொழுது துயில்கொண்டு,

73-4. வைகறை கள் கமழ் நெய்தல் ஊதி—விடியற்காலத்தே தேன் நாறு கின்ற நெய்தற்பூவை யூதி,

எல் பட—ஞாயிறு தோன்றின காலத்தே,

75-7. [கண்போன் மலர்ந்த காமர் சுனைமல, ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங், குன்றமர்ந் துறைதலு முரியன்.]

அஞ்சிறை வண்டி னரிக்கணமென்பது முன்னேகூட்டிற்று.

கண் போல் மலர்ந்த காமர் சுனை மலர் ஒலிக்கும் குன்று அமர்ந்து உறைத லும் உரியன்—*கண்ணையொக்க விரிந்த விருப்பமருவின சுனைப்பூக்களிலே சென்று ஆரவாரிக்குந் திருப்பரங்குன்றிலே நெஞ்சமர்ந்திருத்தலுமுரியன்;

உம்மை, எதிரதுதழீஇய எச்சவும்மை.

கூடற்குடவயிற் குன்று; வண்டின் அரிக்கணம் துஞ்சி ஊதி ஒலிக்குங் குன்று.

அதாஅன்று—அதுவன்றி,

அதாஅன்றென அகரமிட்டெழுக. இதனை †"அன்றுவரு காலை" என்ப தனானும், ‡"இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி" என்பதனுள் "தோன்றியன் றுங்கின்" என்பதனானு முடிக்க.

உ.—திருச்சீரலைவாய்.

78. வைந்நுதி யென்பது முதல் அலைவாய்ச்சேறல் (125) என்னுந்துணை யும் ஒரு தொடர்.

78. வை நுதி பொருத வடு ஆழ் வரி நுதல்—கூர்மையையுடைத்தாகிய தோட்டி வெட்டின வடுவழுந்தின புகரையுடைய மத்தகத்தே,

வைந்நுதி, ஆகுபெயர்.

79. வாடா மாலை ஓடையொடு துயல்வர—பொன்னரிமாலை பட்டத்தோ டசைந்து அசைய,

80 §படும் மணி இரட்டும் மருங்கின்—தாழ்கின்ற மணி மாறியொலிக் கின்ற பக்கத்தினையும்,

---

* "நீலங் கண்ணெனமலர்ந்த சுனையும்" (அகநா. 38.)
† தொல்காப்பியம், உயிர்மயங்கியல், கூ
‡ ,, ,, ஙௌ.
§ ஓசைமணி. (வேறுரை)

கடு நடை—கடிய நடையினையும்,

81. கூற்றத்து அன்ன மாற்றரு மொய்ம்பின்—கூற்றுவனையொத்த பிறரால் தடுத்தற்கரிய வலியினையுமுடைய,

82. *கால் கிளர்ந்தன்ன வேழம் மேல்கொண்டு—ஒடுங்காற் காற்றெழுந்தாலொத்த களிற்றை யேறி,

மருங்கு (80) முதலியவற்றையுடைய வேழத்தை நுதலிலே மாலை பட்டத்தோடே யசைய எறியெனமுடிக்க.

83-4. ஐ வேறு உருவின் செய் வினை முற்றிய முடியொடு விளங்கிய முரண் மிகு திருமணி—ஐந்தாகிய வேறுபட்ட வடிவினையுடைய (முடிக்குச்) செய்யுந் தொழிலெல்லாம் முற்றுப்பெற்ற முடியோடேகூடி விளங்கிய ஒன்றற்கொன்று மாறுபாடுமிகும் அழகினையுடைய மணி,

ஐவேறுருவு: "தாம முகுடம் பதுமங் கிம்புரி, கோடகமிவைமுடிக் கைவேறுருவே"

85. மின் உறழ் இமைப்பின் சென்னி பொற்ப—மின்னோடே மாறுபடுகின்ற விளக்கத்தோடே முடியிலே பொலிவுபெற,

86. நகை தாழ்பு துயல்வரூஉம் வகை அமை பொலங்குழை—ஒளி தங்கி அசையும் தொழிற்கூறமைந்த பொன்னாற்செய்த மகரக்குழை,

87-8. சேண் விளங்கு இயற்கை வாள் மதி கவைஇ அகலா மீனின் அவிர்வன இமைப்ப—சேய்நிலத்தேசென்று விளங்கும் இயல்பினையுடைய ஒளியையுடைய மதியைசசூழ்ந்து நீங்காத மீன்கள்போல விளங்குவனவாய் ஒளியைக்கால,

மீன் - உரோகிணிமுதலியன; வியாழமும் வெள்ளியுமாம்.

89. தா இல் கொள்கை தம் தொழில் முடிமார்—வருத்தமில்லாத விரதங்களையுடைய தவத்தொழிலை முடிப்பாருடைய,

90. மனன் நேர்பு எழுதரு †வாள் நிறம் முகன்—மனத்திலே பொருந்தித் தோன்றுகின்ற ஒளியையுடைய நிறத்தையுடைய முகங்களிலே,

பொற்ப (85) இமைப்ப (88) எழுதருமுகனென்க.

முகனென்றது ஆறற்கும் பொது.

91-2. [மாயிருண் ஞால மறுவின்றி விளங்கப், பல்கதிர் விரிந்தன் றொருமுகம்:] ஒருமுகம் மா இருள் ஞாலம் மறு இன்றி விளங்க பல்கதிர் விரிந்தன்று - ஒருமுகம் பெருமையை யுடைத்தாகிய இருட்சியையுடைய உலகம் குற்றமின்றாய் விளங்கும்படி பலகிரணங்களையும் தோற்றுவித்தது;

ஒருமுகமென்று முன்னே கூட்டிப் பொருள்கொள்க.

92-4. ஒருமுகம் ‡ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகி காதலின் உவந்து வரம் கொடுத்தன்று—ஒருமுகம் தன்மேல் அன்புசெய்தவர்கள் துதிக்க அதற்குப் பொருந்தி அவர்க்கு இனிதாகநடந்து அவர்மேற்சென்ற காதலாலே மகிழ்ந்து வேண்டும்பொருள்களை முடித்துக் கொடுத்தது.

---

* "கால் கிளர்ந்தன்னவூர்தி" (பதிற். "இருங்கண்யானை")

† ஒளி விடுகின்ற ஆறுதிருமுகங்களை யுடையவன்; அந்தத்திருமுகங்களனுடைய படிவஞ்சொல்லின். (வேறுரை)

‡ ஏழையர் இரந்துதுதிக்க. (வேறுரை)

94-6. ஒருமுகம் மந்திர விதியின் *மரபுளி வழாஅ அந்தணர் வேள்வி யோர்க்கும்—ஒருமுகம் மந்திரத்தையுடைய வேதத்திற்கூறிய முறைமையிடத்துத் தப்பாத அந்தணருடைய யாகங்களில் தீங்குவாராதபடி நினையாநிற்கும்;

அந்தத்தைத் அணவுவார் அந்தணர்; என்றது, வேதாந்தத்தையே நோக்குவா ரென்றவாறு.

96-8. [ஒருமுக, மெஞ்சிய பொருள்களை †எமுறநாடிக், திங்கள்போலத் திசைவிளக் கும்மே:] ஒருமுகம் எஞ்சிய பொருள்களை நாடி எம் உற திங்கள் போல திசை விளக்கும்—ஒருமுகம் ஈண்டு வழங்காத வேதங்களினும் நூல்களி னுமுள்ள பொருள்களை ஆராய்ந்து இருடிகள் எமுறும்படி உணர்த்தித் திங்கள் போலத் திசைகளெல்லாம் விளக்குவிக்கும்;

எமம்-இரட்சை. கலைநிறைதலிற் றிங்கள் உவமையாயிற்று.

98-100. [ஒருமுகஞ், செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக், கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே:] ஒருமுகம் செல் சமம் முருக்கி கறுவு கொள் நெஞ்சமொடு செறுநர் தேய்த்து ‡களம் வேட்டன்று—ஒருமுகம் திருவுள் ளத்துச் செல்கின்ற நடுவுநிலைமையைக் கெடுத்து இவர்களைக் கொல்லவேண்டு மென்று கறுவுதல் கொண்ட திருவுள்ளத்தோடே செறப்படும் அசுரர்முதலியோ ரைப் பொன்றக் கெடுத்துக் களவேள்வியை வேட்டது;

சமம்-நடுவுநிலைமை; அதனைக் கெடுத்தலாவது, தேவரையும் அசுரரையும் ஒப்பக்கருதாது தேவரைக்காத்து அசுரரையழித்தல்.

100-102. [ஒருமுகங், குறவர் மடமகள் கொடிபோ னுசுப்பின், §மடவ ல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே;]

ஒருமுகம் குறவர் மடமகள் ||கொடி போல் நுசுப்பின் வள்ளியொடு நகை யமர்ந்தன்று—ஒருமுகம் குறவருடைய மடப்பத்தையுடையமகளாகிய வல்லி பாலும் இடையினையுடைய வள்ளியுடனே மகிழ்ச்சியைப் பொருந்திற்று;

மடவரல் நகையெனக் கூட்டித் தனக்கு ஓரறியாமைதோன்றுந் தன்மை யுடைத்தாகிய நகையென்று கூறுக.

அவளொடு ¶நகையமர்தலின் அறியாமை கூறினார். காமநுகர்ச்சி யில்லாத இறைவன் இங்ஙனம் நகையமர்ந்தான்; உலகில் இல்வாழ்க்கை நடத்தற்கென் றுணர்க. அது **"தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்" என்பதனுட் "பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர், விண்பாலி யோகெய்தி வீடு வர்காண் சாழலோ" என்பதனுனுணர்க.

* மரபுளி: உளி, மூன்றுருபாதன் பொருள்படுவதோரிடைச்சொல். அந் தணர் - அழகிய தட்பத்தினையுடையார். ஓர்க்கும் - திருவுள்ளத்து அடைக்கும். (வேறுரை)

† எமுறநாடி - இரக்கைபொருந்த ஆராய்ந்து; எமம் கடைக்குறைபட் டது. (வேறுரை)

‡ போர்க்களத்தை விரும்பாநிற்கும். (வேறுரை)

§ கற்பின் வரலாற்றினையுடைய வள்ளிநாய்ச்சியார். (வேறுரை)

|| வல்லிசாதக்கொடி. (வேறுரை)

¶ 'நகையமர்தல் இன்றி யமையாமை' எனவும் பிரதி வேறுபாடுண்டு.

** திருவாசகம், திருச்சாழல், ௧.

கடு நடை—கடிய நடையினையும்,

81. கூற்றத்து அன்ன மாற்றரு மொய்ம்பின்—கூற்றுவனையொத்த பிற ரால் தடுத்தற்கரிய வலியினையுமுடைய,

82. *கால் கிளர்ந்தன்ன வேழம் மேல்கொண்டு—ஓடுங்காற் காற்றெழுந் தாலொத்த களிற்றை யேறி,

மருங்கு (80) முதலியவற்றையுடைய வேழத்தை நுதலிலே மாலை பட்ட த்தோடே யசைய எறியெனமுடிக்க.

83-4. ஐ வேறு உருவின் செய் வினை முற்றிய முடியொடு விளங்கிய முர ண் மிகு திருமணி—ஐந்தாகிய வேறுபட்ட வடிவினையுடைய (முடிக்குச) செய் யுந் தொழிலெல்லாம் முற்றுப்பெற்ற முடியோடேகூடி விளங்கிய ஒன்றற்கொ ன்று மாறுபாடுமிகும் அழகினையுடைய மணி,

ஐவேறுருவு: "தாம முகுடம் பதுமங் கிம்புரி, கோடக மிவைமுடிக் கைவே றுருவே"

85. மின் உறழ் இமைப்பின் சென்னி பொற்ப—மின்னோடே மாறுபடு கின்ற விளக்கத்தோடே முடியிலே பொலிவுபெற,

86 நகை தாழ்பு துயல்வரூஉம் வகை அமை பொலங்குழை—ஒளி தங்கி அசையும் தொழிற்கூறமைந்த பொன்னாற்செய்த மகரக்குழை,

87-8. சேண் விளங்கு இயற்கை வாள் மதி கவைஇ அகலா மீனின் அவிர் வன இமைப்ப—சேய்நிலத்தேசென்று விளங்கும் இயல்பினையுடைய ஒளியையு டைய மதியைச்சூழ்ந்து நீங்காத மீன்கள்போல விளங்குவனவாய் ஒளியைக்கால,

மீன் - உரோகிணிமுதலியன; வியாழமும் வெள்ளியுமாம்.

89. தா இல் கொள்கை தம் தொழில் முடிமார்—வருத்தமில்லாத விரதங் களையுடைய தவத்தொழிலை முடிப்பாருடைய,

90. மனன் ஏர்பு எழுதரு †வாள் நிறம் முகன்—மனத்திலே பொருந்தித் தோன்றுகின்ற ஒளியையுடைய நிறத்தையுடைய முகங்களிலே,

பொற்ப (85) இமைப்ப (88) எழுதருமுகனென்க.

முகனென்றது ஆறற்கும் பொது.

91-2. [மாயிருண் ஞால மறுவின்றி விளங்கப், பல்கதிர் விரிந்தன் றொரு முகம்] ஒருமுகம் மா இருள் ஞாலம் மறு இன்றி விளங்க பல்கதிர் விரிந்தன்று - ஒருமுகம் பெருமையை யுடைத்தாகிய இருட்சியையுடைய உலகம் குற்றமின் றிய் விளங்குமபடி பலகிரணங்களையும் தோற்றுவித்தது;

ஒருமுகமென்று முன்னே கூட்டிப் பொருள்கொள்க.

92-4. ஒருமுகம் ‡ஆர்வலர் எத்த அமர்ந்து இனிது ஒழுகி காதலின் உவந்து வரம் கொடுத்தன்று—ஒருமுகம் தன்மேல் அன்புசெய்தவர்கள் துதிக்க அதற்குப் பொருந்தி அவர்க்கு இனிதாகநடந்து அவர்மேற்சென்ற காதலாலே மகிழ்ந்து வேண்டும்பொருள்களை முடித்துக் கொடுத்தது.

---

* "கால் கிளர்ந்தன்னவூர்தி" (பதிற். "இருங்கண்யானை")

† ஒளி விடுகின்ற ஆறுதிருமுகங்களை யுடையவன்; அந்தத்திருமுகங்களி னுடைய படிவஞ்சொல்லின். (வேறுரை)

‡ எழையர் இரந்துதுதிக்க. (வேறுரை)

94-6. ஒருமுகம் மந்திர விதியின் *மரபுளி வழாஅ அந்தணர் வேள்வி ஓர்க்கும்—ஒருமுகம் மந்திரத்தையுடைய வேதத்திற்கூறிய முறைமையிடத்துத் தப்பாத அந்தணருடைய யாகங்களில் தீங்குவாராதபடி நினையாநிற்கும்;

அந்தத்தை அணைவுவார் அந்தணர்; என்றது, வேதாந்தத்தையே நோக்குவார் என்றவாறு.

96-8. [ஒருமுக, மெஞ்சிய பொருள்களை †ஏமுறநாடித், திங்கள்போலத் திசைவிளக் கும்மே:] ஒருமுகம் எஞ்சிய பொருள்களை நாடி ஏம் உற திங்கள் போல திசை விளக்கும்—ஒருமுகம் ஈண்டு வழங்காத வேதங்களிலும் நூல்களி லுமுள்ள பொருள்களை ஆராய்ந்து இருடிகள் ஏமுறும்படி உணர்த்தித் திங்கள் போலத் திசைகளெல்லாம் விளக்குவிக்கும்;

ஏமம்-இரட்சை. கலைநிறைதலிற் றிங்கள் உவமையாயிற்று.

98-100. [ஒருமுகஞ், செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக், கறுவுகொ ளெஞ்சமொடு களம்வேட் டன்றே:] ஒருமுகம் செல் சமம் முருக்கி கறுவு கொள் நெஞ்சமொடு செறுநர் தேய்த்து ‡களம் வேட்டன்று—ஒருமுகம் திருவுள் ளத்துச் செல்கின்ற நடுவுநிலைமையைக் கெடுத்து இவர்களைக் கொல்லவேண்டு மென்று கறுவுதல் கொண்ட திருவுள்ளத்தோடே செறப்படும் அசுரர்முதலியோ ரைப் பொன்றக் கெடுத்துக் களவேள்வியை வேட்டது;

சமம்-நடுவுநிலைமை; அதனைக் கெடுத்தலாவது, தேவரையும் அசுரரையும் ஒப்பக்கருதாது தேவரைக்காத்து அசுரரையழித்தல்.

100-102. [ஒருமுகங், குறவர் மடமகள் கொடிபோ னுசுப்பின், §மடவ ரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே;]

ஒருமுகம் குறவர் மடமகள் ||கொடி போல் நுசுப்பின் வள்ளியொடு நகை அமர்ந்தன்று—ஒருமுகம் குறவருடைய மடப்பத்தையுடையமகளாகிய வல்லி போலும் இடையினையுடைய வள்ளியுடனே மகிழ்ச்சியைப் பொருந்திற்று;

மடவரல் நகையெனக் கூட்டித் தனக்கு ஓரறியாமைதோன்றுந் தன்மை யுடைத்தாகிய நகையென்று கூறுக.

அவளொடு ¶நகையமர்தலின் அறியாமை கூறினர். காமநுகர்ச்சி யில்லாத இறைவன் இங்ஙனம் நகையமர்ந்தான்; உலகில் இல்வாழ்க்கை நடத்தற்கென் றுணர்க. அது **"தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்" என்பதனுட் "பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர், விண்பாலி யோகெய்தி வீடு வர்காண் சாழலோ" என்பதனானுணர்க.

---

* மரபுளி: உளி, மூன்றுருபுதன் பொருள்படுவதோரிடைச்சொல். அந் தணர் - அழகிய தட்பத்தினையுடையார். ஓர்க்கும் - திருவுள்ளத்து அடைக்கும். (வேறுரை)

† ஏமுறநாடி - இரக்கைபொருந்த ஆராய்ந்து; ஏமம் கடைக்குறைபட் டது. (வேறுரை)

‡ போர்க்களத்தை விரும்பாநிற்கும். (வேறுரை)

§ கற்பின் வரலாற்றினையுடைய வள்ளிநாய்ச்சியார். (வேறுரை)

|| வல்லிசாதக்கொடி. (வேறுரை)

¶ 'நகையமர்தல் இன்றி யமையாமை' எனவும் பிரதி வேறுபாடுண்டு.

** திருவாசகம், திருச்சாழல், ௧.

விரிந்தன்று (92) கொடுத்தன்று (94) வேட்டன்று (100) நகையமர்ந்தன்று (102) ஓர்க்கும் ((96) விளக்கும் (98) என்பன முற்றுச்சொல்.

102-3. [ஆங்கம் மூவிரு முகனு முறைநவின் றொழுகலின்:]

அ மூவிரு முகனும்—அவ்வாறுமுகமும்,

ஆங்கு முறை நவின்று ஒழுகலின்—அத்தொழில்களிடத்துச் செய்யும் முறைமைகளைப் பயின்று நடத்துகையினாலே அம்முகங்களுக்குப் பொருந்த,

104-6. [ஆரந் தாழ்ந்த வம்பகட்டு *மார்பிற், செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு, வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்:]

ஆரம் தாழ்ந்த அம் பகட்டு மார்பின் செம்பொறி வாங்கியதோள்—பொன்னாற்செய்த ஆரந் தங்கிய அழகையுடைத்தாகிய பெருமையையுடைய மார்பிற் கிடக்கின்ற உத்தம இலக்கணமாகிய சிவந்த மூன்றுவரியினையும் தன்னிடத்தே வந்து விழும்படி வாங்கிக்கொண்ட தோள்,

வாங்கிய வென்றார், அவ்வரி தோளளவும் வந்துகிடந்தமை தோன்ற; †"வரையகன் மார்பிடை வரியு மூன்றுள" என்றார் பிறரும்.

மொய்ம்பின் வண்புகழ் நிறைந்து— தம்முடைய வலியினாலே பெரிய புகழ் நிறையப்பட்டு,

சுடர் விடுபு வசிந்து வாங்குதோள்—சுடரையுடைய படைக்கலங்களை யெறிந்து பகைவர்மார்பைப் பிளந்து அவற்றை வாங்குதோள்,

சுடரையுடைய படைக்கலங்களைச் சுடரென்றார்; அஃது ஆகுபெயர்.

நிமிர் தோள்—பெருகுதோள்,

நிறைந்து நிமிர்தோளென்க.

வசிந்தென்பது பிளந்தென்னும் பொருட்டாதலின், செய்வதன் றொழிற்குஞ் செய்விப்பதன் றொழிற்கும் பொது. அசுரர்முதலியோரை அழிக்குங்காலத்துப் பன்னிருகையினும் படைக்கலமேந்துவனென்றுணர்க; அஃது அறுவேறுவகையினஞ்சுவர மண்டி (58) என்றதனானுணர்க.

இனி மொய்ம்பினையுடைத்தாய் ஒளிவிட்டு நிறைந்து வளையவேண்டுமிடம் வளைந்து நிமிரவேண்டுமிடம் நிமிருந் தோளென்று முரைப்பர். இதற்குவசிந்தென்பதனைத் தொடியொடுகொட்ப (114) மணியிரட்ட (115) என மேலே கூட்டுக. வசிந்து - பகைவர்மார்பைப்பிளந்தென்க. வசிந்தென்பதற்குப் படைக்கலங்களால் வடுப்பட்டென்று பொருளுரைத்தல் இறைவனாதலிற் பொருந்தாது.

இனி, அவை போர்செய்யாக்காலத்து இங்ஙனமிருக்குமென்று அவற்றின் இயல்பு கூறுகின்றார்.

அத்தோள்களில் ஒருகை யென்க.

107. [விண்செலன் மரபி னையர்க் கேந்திய தொருகை] ஒருகை ‡விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது—ஒருகை எக்காலமும் ஆகாயத்தே இயங்குதல் முறைமையினையுடைய தெய்வவிருடிகளுக்குப் பாதுகாவலாக வெடுத்தது;

---

* மார்பிலே சீதேவியைக் கைக்கொண்ட வலி, ஒளிவிட்டு வளவியபுகழ் நிறைந்து வளர்ந்து நீண்டுநிமிர்ந்ததோள்கள். (வேறுரை)

† சீவகசிந்தாமணி, 1462

‡ ஆகாயத்திலே இயக்கத்தை முறைமையாகவுடைய தேவர்க்கு.(வேறுரை) "சுடரொடு திரிதரு முனிவரு மமரரும்" (சில. வேட்டுவ)

108. [உக்கஞ் சேர்த்திய தொருகை:] ஒருகை உக்கம் சேர்த்தியது— ஏந்தியகைக்கு இணைந்தகை மருங்கிலேவைத்தது;

என்றது: ஞாயிற்றின்வெம்மையைப் பல்லுயிரும் பொறுத்தலாற்றாவென் றுகருதித் தமதருளினாற் சுடரொடுதிரிந்து அவ்வெம்மையைப்பொறுக்கின்ற முனிவரைப்பாதுகாக்கவே உலகத்தைத்தாங்கிக் காத்ததாயிற்று. இதனானே இக்கை மாயிருண்ஞாலமறுவின்றி விளங்கப் பல்கதிர்விரிந்த முகத்திற்கு ஏற்ற தொழில்செய்ததாயிற்று. இது, *"நிலமிசை வாழ்ந ரலமர றீரத், தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக், காலுண வாகச் சுடரொடு கொட்கு, மவிர்சடை முனிவரு மருள" என்ற புறப்பாட்டானுணர்க.

மனமும் முகமும் கையும் ஒருதொழிலைச்செய்தலின், ஏனைக்கை தொழி லின்றி மருங்கிலே கிடந்தது.

109-110. [நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய தொரு கை, யங்குசங் கடாவவொருகை] ஒருகை அங்குசம் கடாவ ஒருகை நலம் பெறு †கலிங்கத்து குறங்கின்மிசை அசைஇயது—ஒருகை தோட்டியைச் செலுத்தா நிற்க மற்றைக்கை செம்மை நிறம்பெற்ற ஆடையையுடைத்தாகிய துடையின் மேலே கிடந்தது;

இஃது யானையேறுவார்க்கு இயல்பென்று கூறினார். தன்னை வழிபடுவாரி டத்து வருங்கால் யானைமேல்வந்து அருள்செய்தல் இயல்பாகலின், இக்கைகள் காதலினுவந்து வரங்கொடுத்த முகத்திற்கு ஏற்றவாறுணர்க.

110-11. இருகை ‡ஐ இரு வட்டமொடு எஃகு §வலம் திரிப்ப—இர ண்டுகைகள் வியப்பையும் கருமையையுமுடைய பரிசையுடனே வேலையும் வலமாகச் சுழற்ற,

இதனானே, அசுரர்வந்து வேள்வியைக் கெடாமல் அவரை ஓட்டுதற்கு இவற்றைச் சுழற்றுதலில் வேள்வியோர்க்குமுகத்திற்கு இக்கைகள் ஏற்றவா றுணர்க.

111-3. ஒருகை ||மார்பொடுவிளங்க ஒருகை ¶தாரொடு பொலிய—முனி வர்க்குத் தத்துவங்களைக்கூறி உரையிறந்தபொருளை உணர்த்துங் காலத்து ஒருகை மார்போடே விளங்காநிற்க, ஒருகை மார்பின்மாலை தாழ்ந்ததனோடே சேர்ந்து அழகுபெற,

என்றது: இறைவன் மோனமுத்திரையத்தனாய்த் தானேயிருந்து காட்ட அமைந்தசும்புள் நீர்நிறைந்தாற்போல ஆனந்தமயமானவொளி மாணாக்கர்க்கு

* செய்யுள், சஙு. † புடைவை (வேறுரை)

‡ ஐந்தாகிய பெருத்த பரிசை; பத்துத் திருமுகத்தினையுடைய கேடகமெ னினுமமையும். (வேறுரை)

§ வெற்றிபெறச் சுழற்ற. (வேறுரை)

|| மார்பினிடத்தே மௌனமந்திரத்தைப் பேணுநிற்க. (வேறுரை.)

¶ தார் - மார்பிலுள்ளமாலை; "வண்ண மார்பிற் றருங் கொன்றை" (புற நா. கடவுள்.)

நிறைதலின், அதற்குரிய மோனமுத்திரைகூறிற்று ; *" தன்னை யுன்னி யென்னை யாக்கிய போழ்தே பூனைவ ஞயினேன் " என்பதனுனுணர்க.

இக்கைகள் எஞ்சியபொருள்களை விளக்குமுகத்திற்கு ஏற்றவாறுணர்க.

113-5. [ஒருகை, கீழ்வீழ் †தொடியொடு மீமிசைக் கொட்ப வொருகை, பாடின் படுமணி யிரட்ட :] ஒருகை தொடியொடு மீமிசை கொட்ப கீழ் வீழ் ஒருகை பாடு இன் படு மணி இரட்ட—ஒருகை தொடியொடு மேலே சுழன்று களவேள்விக்கு முத்திரைகொடுப்பக் கீழேவீழ்ந்த மற்றைக்கை ஓசையினிதாகிய ஒலிக்கின்றமணியை மாறியொலிக்கப்பண்ண,

இக்கை களவேள்வி வேட்கின்ற முகத்திற்கு ஏற்றவாறுணர்க.

115-7. ஒருகை ‡நீல் நிற விசும்பின் மலி துளி பொழிய ஒருகை வான் அரமகளிர்க்கு வதுவை சூட்ட—ஒருகை நீலநிறத்தையுடைய மேகத்தாலே மிக்க மழையைப் பெய்வியாநிற்க, ஒருகை தெய்வமகளிர்க்கு மணமாலையைச் சூட்ட,

என்றது : வள்ளியொடு நகையமர்ந்தமுகம் உலகிற்கு இல்வாழ்க்கை நிகழ்த்துவித்ததாகலின், அவ்வில்வாழ்க்கை நிகழ்த்துதற்கு மழையைப் பெய்வித்தது ஒருகை ; ஒருகை இல்வாழ்க்கை நிகழ்த்தற்பொருட்டு மணமாலையைச் சூட்டிற்றென்றவாறு.

117-8. ஆங்கு அ பன்னிருகையும் பால் பட இயற்றி—அப்படியே அந்தப்பன்னிரண்டுகையும் முகத்தின் பகுதியிலே படும்படி தொழில்செய்து,

முகங்களில் ஒருமுகம் ஓர்க்கும் (96) ஒருமுகம் விளக்கும் (98) ஒருமுகம் வேட்டன்று (100) ஒருமுகம் அமர்ந்தன்று (102) ஒருமுகம் விரிந்தன்று (92) ஒருமுகம் கொடுத்தன்று (94) அம்மூவிருமுகனும் அத்தொழில்களிடத்துச்செய்யும் முறைமைகளைப் பயின்றுநடத்துகையினுலே (103) அம்முகங்களுக்குப்பொருந்தத் தோள்களில் (106) இருகை (110) திரிப்ப (111)ஒருகை விளங்க (112) ஒருகை பொலிய (113) ஒருகை கொட்ப (114) ஒருகை இரட்ட (115) ஒருகை பொழிய (116) ஒருகை சூட்ட (117) ஒருகை ஐயர்க்கேந்தியது (107) ஒருகை உக்கஞ் சேர்த்தியது (108) ஒருகை கடாவ (110) ஒருகை அசைந்தது (109) அப்படியே பன்னிருகையும் முகத்தின்பகுதியிலே படும்படி தொழில்செய்தென இச்சொல்முடிபுக்கேற்பக் கைகளையும் முகங்களையும் மாட்டாக முடிக்க. திரிப்பவென்பதுமுதலிய நிகழ்காலச் செயவெனெச்சங்கள் ஏந்தியது சேர்த்தியதென முற்றுவினைகொண்டு முடிந்தன.

119. அந்தரம் பல்லியம் கறங்க—ஆகாயத்தினது துந்துமி ஒலிப்ப,

119-20. திண் §காழ் ||வயிர் எழுந்து இசைப்ப—திண்ணிய வயிரத்தையுடைய கொம்பு மிக்கொலிப்ப,

---

* (கலி. 43 - மேற்)

† பாராவளையோடே. (வேறுபா.) [(மலை. 1.)

‡ " நீனிறவிசும்பின் " (பெரும்பாண் 135), " இருணிறவிசும்பின் "

§ கரிய கொம்பு. (வேறுபா.)

|| " வயிரும் விளைபு மார்ப " (முல்லை..92.)

வால் வளை ஞரல—வெள்ளிய சங்கு முழங்க,

121. உரம் தலை கொண்ட *உரும் இடி முரசமொடு—வலியைத் தன்னிடத்தேகொண்ட உருமேற்றினது இடிப்புப்போலும் ஓசையையுடைய முரசுடனே,

122. பல் பொறி மஞ்ஞை வெல் கொடி அகவ—பலபீலியையுடைய மயில் அவுணரையின்றலே வென்றெடுத்த கொடியிலேயிருந்து ஒலியாநிற்க,

பொறி, ஆகுபெயர்.

123. விசும்பு ஆறாக—ஆகாயமே வழியாக,

விரை செலல் முன்னி—விரைந்த செலவினை மேற்கொண்டு,

124. [உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீர் :] ஓங்கு உலகம் புகழ்ந்த உயர் †விழுச்சீர்—நன்மையோங்கும் நன்மக்கள் புகழ்ந்த உயரும் சீரினையுடைய புகழினையுடைய,

125. அலைவாய் சேறலும் நிலைஇய பண்பு—நாமனூரலைவா யென்னும் திருப்பதியேறஎழுந்தருளுதலும் அவற்கு நிலைபெற்றகுணம் ;

குன்றமர்ந்துறைதலுமுரியன் ; அதாஅன்று (77) வேழமேல்கொண்டு (82) இயற்றிக் (118) கறங்க (119) இசைப்ப ஞரல (120) அகவ (122) முன்னி (123) அலைவாய்ச்சேறலும் நிலைஇயபண் பென முடிக்க.

அதாஅன்று—அதுவன்றி,

திருவாவினன்குடி.

126. சீரை தைஇய வென்பதுமுதல் முனிவர் முற்புக (137) என்னுந் துணையுமொருதொடர்.

சீரை ‡தைஇய உடுக்கையர்—மரவுரியை உடையாகச்செய்த உடையினையுடையர்,

இதற்குக் கற்றோய்த்தல் முதலியன செய்த உடுக்கையரென்பாருமுளர்.

126-7. சீரொடு வலம்புரி புரையும் வால் §நரை முடியினர்—அழகோடு வடிவாலும் நிறத்தாலும் வலம்புரிச்சங்கினை யொக்கும் வெள்ளிய நரைமுடியினையுடையர்,

128. மாசு அற இமைக்கும் உருவினர்—எக்காலத்தும் நீராடுதலின் அழுக்கற விளங்கும் வடிவினையுடையர்,

128-30. மானின் உரிவை தைஇய ஊன் கெடு மார்பின் என்பு எழுந்து இயங்கும் யாக்கையர்—இருட்டிஞ்சினம் போர்த்த விரதங்களால் விட்ட பட்டினியால் தசைகெடுகின்ற மார்பினெலும்புகள் கோவைதோன்றி உலவும் உடம்பினை யுடையார்,

தைஇய மார்பென்க.

---

* "உருமினிடிமுரசார்ப்ப" (புற)

† விழுமிய அழகு (வேறுரை)

‡ தைத்த (வேறுரை)

§ நரைக்கொண்டையினை யுடையார். (வேறுரை)

130-31. நன்பகல் பல உடீஇ கழிந்த உண்டியர்—எப்பொருளுநுகர்தற்கு நன்றாகிய பகற்பொழுதுகள் பலவும் சேரக்கழிந்த உணவினையுடையர்,

இது மாதோபவாசங்கூறிற்று.

131-2. இகலொடு செற்றம் நீக்கிய மனத்தினர்—மாறுபாட்டோடே நெடுங்கால நிற்கும் செற்றத்தினையும் போக்கிய மனத்தினை யுடையர்,

பகைமை நெடுங்காலம் நிகழ்வது செற்றம்.

132-3. [யாவதுங், கற்றோ ரறியா வறிவினர்] *கற்றோர் யாவதும் அறியா அறிவினர்—பலவற்றையும் கற்றோர் சிறிதும் அறியப்படாத இயல்பான அறிவினையுடையர்,

133-4. கற்றோர்க்கு தாம் வரம்பு ஆகிய தலைமையர்—பலவற்றையும் கற்றோர்க்குத் தாம் எல்லையாகிய தலைமையையுடையர்,

என்றது கல்வியைக் கரைகண்டா ரென்றவாறு.

134-5. காமமொடு கடு சினம் கடிந்த †காட்சியர்—ஆசையோடே கடிய சினத்தையும் போக்கின அறிவினையுடையர்,

கோபத்தின்பின்னுகச் சிறிதுபொழுது நிற்பது சினம்.

135-6. இடும்பை யாவதும் அறியா இயல்பினர்—தவத்தான் மெய்வருத்தம் உளவேனும் மனத்தான் வருத்தம் சிறிதுமறியப்படாத இயல்பினையுடையர்,

மே வர—திருவுள்ளம் பொருந்துதல் வர,

137. ‡துனி இல் காட்சி முனிவர் முன் புக— ஒருவருடனும் வெறுப்பில்லாத நல்ல அறிவினையுடைய முனிவர் முன்னே செல்ல,

உடுக்கையர் முடியினர் உருவினர் யாக்கையர் உண்டியர் மனத்தினர் அறிவினர் தலைமையர் காட்சியர் இயல்பினராகிய முனிவர் மேவர முற்புகவென முடிக்க.

138. புகைமுகந்தன்ன என்பதுமுதல் மேவலர் (142) என்னுந்துணையும் பாடுவாரைக் கூறிற்று.

138. §புகை முகந்தன்ன மாசு இல் தூ உடை—புகையை முகந்தாலொத்த தெய்வத்தன்மையால் அழுக்கேறாத தூய உடையினையும்,

139. முகை வாய் அவிழ்ந்த தகை சூழ் ஆகத்து - ||முகை வாய்நெகிழ்ந்த மாலை சூழ்ந்த மார்பினையும்,

கட்டுதலிற் றகையென்றார், மாலையை ; ஆகுபெயர்.

---

* யாவதும் கற்றோர்—எவ்வகைப்பட்ட பொருளினையும் கற்று வல்லுநர். (வேறுரை)

† தோற்றத்தினை யுடையார். (வேறுரை)

‡ துயரமில்லாத தோற்றம். (வேறுரை)

§ புகையைக் கையாலே முகந்தாற்போன்று நொய்யவாய. (வேறுரை)

|| மொட்டுப்பூக் கிண்கிணிவாய்க் கொண்ட. (வேறுரை)

140-41. செவி சேர்பு வைத்த செய்வு உறு திவவின் நல் யாழ் நவின்ற - ருச் செவியாலே சுருதியையளந்து நரம்பைக்கட்டின சுற்றுதலுறும் வார்க் டுளையுடைய நன்றாகிய யாழின் இசையிலே பயின்ற,

141-2. *நயன் உடை நெஞ்சின் †மென்மொழி மேவலர் இன் நரம்பு ளர - ஈரமுடைய நெஞ்சாலே எக்காலமும் மெல்லிய வார்த்தை சொல்லு ம்பொருந்திய கந்தருவர் இனியநரம்பை வாசிக்க,

நவின்ற நயனெனக்.

143. நோயின்றென்பது முதல் மகளிர் (147) என்னுந்துணையும் பாடு மகளிரைக் கூறிற்று.

143. நோய் இன்று இயன்ற யாக்கையர் - மக்களுக்குரியநோய் இல்லை யாக நிருமித்த உடம்பினையுடையராய்,

143-4. மாவின் அவிர் தளிர் புரையும் மேனியர் - மாவினது விளங்கு கின்ற தளிரையொக்கும் நிறத்தினையுடையராய்,

144-5. அவிர்தொறும் பொன் உரை கடுக்கும் திதலையர் - விளங்குந் தோறும் பொன்னுரை விளங்கினாற்போலும் தித்தியினையுடையராய்,

145-7. இன நகை ‡பருமம் தாங்கிய பணிந்து ஏந்து அல்குல் §மாசு இல் மகளிரொடு - கட்டினிய ஒளியினையுடைய பதினெண்கோவையாகிய மேகலை யணிந்த தாழவேண்டியவிடம் தாழ்ந்து உயரவேண்டியவிடம் உயர்ந்த அல்குலை யுடைய குற்றமில்லாத கந்தருவமகளிரோடே,

மறு இன்றி விளங்க - குற்றமின்றாய் விளங்காநிற்க,

உடையினையும் (138) ஆகத்தினையுமுடைய (139) மென்மொழிமேவலர் (142) யாகசை (143) முதலியவற்றையுடையராய், மாசில்லாத மகளிரோடே மறுவின்றி விளங்க (147) இன்னரம்புளர (142) வென முடிக்க.

148. கடுவோடு ஒடுங்கிய தூம்பு உடை வால் எயிறு - நஞ்சுடனே உறைக் குள்ளே கிடந்த துளையினையுடைய வெள்ளிய எயிற்றினையும்,

மிடற்றின் நஞ்சு தன்னிடத்தேதோன்றுதலின் ‘கடுவோடு’ என்றார். எயிறு காளி, காளாத்திரி, யமன், யமதூதியென நானகாம்.

149. அழலென உயிர்க்கும் அஞ்சு வரு கடு திறல் - நெருப்பென்னும் படி நெட்டுயிர்ப்புக்கொள்ளும கண்டார்க்கு அச்சந்தோன்றும் கடிய வலியினையு முடைய,

150. பாம்பு பட புடைக்கும் - பாம்பு படும்படி அடிக்கும்

150-51. பல் வரி கொடு சிறை புள் அணி நீள் கொடி செல்வனும் - பல வரியினையுடைத்தாகிய வளைந்த சிறகினையுடைய கருடனையணிந்த நீண்ட கொடி யினையுடைய திருமாலும்,

* எஃகுச் செவி - மூவகைச் செவியிலும் தலையான கூரிய செவி; “எஃகு நுண் செவிகள் வீழ” (சீவக. 2718)

† மெத்தென்ற சொற்சேர்ந்தோராகிய வித்தியாதரர் (வேறுரை)

‡ அரைப்பட்டிகை. (வேறுரை)

§ தெய்வக்குறத்திகளோடே, (வேறுரை)

151-4. [வெள்ளேறு, வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோ, ளுமை யமர்ந்து விளங்கு மிமையா முக்கண், மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனும்:]

*வலம் வயின் வெள்ளேறு உயரிய செல்வன் - வெற்றிக்களத்தே வெள்ளிய ஏற்றினை வெற்றிக்கொடியாக எடுத்த உருத்திரன்,

உமை அமர்ந்து விளங்கும் செல்வன் - இறைவி ஒருபாகத்தே பொருந்தி விளங்கும் செல்வன்,

பலர் புகழ் திணி தோள் - பலரும் புகழ்கின்ற திக்கென்ற தோளினையும்,

இமையா முக்கண் செல்வன் - இதழ் குவியாத மூன்றுகண்ணினையுமுடைய செல்வன்,

மூ எயில் முருக்கிய முரண் மிகு செல்வனும் - முப்புரத்தையெரித்த மாறுபாடு மிக்க செல்வனும்,

155. நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து - நூற்றைப்பத்தாகவடுக்கிய கண்ணினையும்,

என்றது ஆயிரங்கண்ணென்றவாறு.

155 - 6. நூறு பல் வேள்வி முற்றிய வென்று அடு கொற்றத்து — நூறென்னும் எண்ணுகிய பலவேள்விகளை வேட்டுமுடித்ததனாற்பெற்ற பகைவரை வென்றுகொல்கின்ற வெற்றியினையும்,

157. [ஈரிரண் டேந்திய மருப்பின்:] ஏந்திய ஈரிரண்டு மருப்பின் - தலைகள் ஏந்தியிருக்கின்ற நாலாகிய கொம்பினையும்,

எழில் நடை - அழகினையுடைய நடையினையும்,

158. தாழ் பெரு †தட கை - நிலத்தே கிடக்கின்ற பெரிய வளைவினையுடைய கையினையுமுடைய,

158-9. உயர்த்த யானை எருத்தம் ஏறிய திரு கிளர் செல்வனும் - எல்லாராலும் உயர்த்துச் சொல்லப்படுகின்ற யானையினது புறக்கழுத்திலே ஏறிய திருமகள் விளங்கும் இந்திரனும்,

உயர்ந்த உயர்த்தவென விகாரமுமாம்.

நாட்டத்தினையும் (155) கொற்றத்தினையுமுடைய (156) செல்வனென்க.

மருப்பு (157) முதலியவற்றையுடைய யானையென்க.

160-61. நால் பெரு தெய்வத்து நல் நகர் நிலைஇய உலகம் காக்கும் ஒன்று புரி கொள்கை - நான்காகிய பெரிய தெய்வத்தையுடைய நன்றாகிய ஊர்கள் நிலைபெற்ற உலகத்தைக் காக்கும் ஒருதொழிலையே விரும்பிய கோட்பாட்டையுடைய செல்வன் (151) என முன்னேகூட்டித் திருமாலுக்கு அடையாக்குக.

---

* வலவயின உயரிய - வெற்றியினால் ஏறிய (வேறுரை.)

† "தடவென்கிளவி கோட்டமுஞ் செய்யும்" (தொல். உரி. 25)

*நாற்பெருந்தெய்வமாவன : இந்திரன், யமன், வருணன், சோமனென்னுந் தெய்வங்கள்.

162. பலர் புகழ் மூவரும் தலைவராக—பலரும் புகழ்கின்ற அயன் அரி அரனென்னு மூவரும் தத்தமக்குரிய தொழில்களை முன்புபோலே நிகழ்த்தித் தலைவராகவேண்டி,

என்றது : பிள்ளையார் அயனைச்சபித்தலின், அயன் படைத்தற்றொழிலைத் தவிரவே ஏனையிருவர்க்கும் காத்தற்றொழிலும் அழித்தற்றொழிலும் இன்றாமாகலின் மூவரும் தத்தமக்குரிய தொழில்களைப்பெற்றுத் தலைவராகவென்றார்.

[163-5. ஏமுறு ஞாலந் தன்னிற் றோன்றித், தாமரை பயந்த தாவி லூழி, நான்முக வொருவற் சுட்டி]

ஞாலந்தன்னில் தோன்றி †ஏம் உறு நான்முக ஒருவன் சுட்டி—பிள்ளையார் சபித்தலாலே மண்ணிடத்தே தோன்றி மயக்கமுறுகின்ற நான்குமுகத்தையுடைய அயனைப் பழையநிலையிலே நிறுத்தக் கருதி,

தாமரை பயந்த ஊழி தா இல் ஒருவன்—திருமாலுடைய திருவுந்தித்தாமரை பெற்ற ஊழிகடோறும் தன் படைத்தற்றொழிலில் வருத்தமில்லாத ஒருவன் (165)

இனித் தாமரையென்னும் எண்ணைத்தந்த அழிவில்லாத ஊழிக்காலத்தையுடைய அயனுமாம்.

பயந்த ஒருவனென்க.

சாபமென்றது : பிள்ளையார் அசுரரையழித்துத் தேவரைக் காத்ததற்கு இந்திரன்மகள் தெய்வயானையாரை அவர்க்குக் கொடுத்தவிடத்தே, பிள்ளையார் தம் கையில் வேலைநோக்கி, “நமக்கு எல்லாந்தந்தது இவ்வேல்” என்ன, அருகிருந்த அயன் “இவ்வேலிற்கு இந்நிலை என்னால் வந்ததன்றோ” என்றானாக, “நங் கையில் வேலுக்கு நீ கொடுப்பதொரு சத்தியுண்டோ” என்று கோபித்து, “இங்ஙனங் கூறிய நீ மண்ணிடைச்செல்வாய்” என்ற சாபத்தை.

காண் வர—அழகு தோன்ற,

166. பகலில் தோன்றும் இகல் இல் காட்சி—ஒருபொருள் பலவாமாறு பகுத்துக்காண்டற்கண் வேறுபடத் தோன்றும் தம்முள் மாறுபாடில்லாத அறிவினையுடைய,

167. ‡நால் வேறு இயற்கை பதினொரு மூவரொடு—நான்காகிய வேறுபட்ட இயல்பினையுடைய முப்பத்துமூவரும்,

என்றது : ஆதித்தன், உருத்திரன், வசு, மருத்துவனென்னும் ஒரோவோர் பொருள்கள் பலவாகப் பகுக்குங்காற் பன்னிருவர் பதினொருவர் எண்மர் இருவராகப் பகுக்க நான்குகூறாய் முப்பத்துமூவராயினாரென்றவாறு; பதினொருவரா

* நாற்பெருந் தெய்வம் - அந்தணர் தெய்வம், அரயர்தெய்வம், வசியர் தெய்வம், சூத்திரர் தெய்வம்; என்பதைச் சிலப்பதிகாரத்தும் கண்டுகொள்க. (வேறுரை)

† “ஏமுறுகடுந்திண்டேர்” (கலி. 27)

‡ நால் வேறு இயற்கை - சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் (வேறுரை)

கிய மூவரென்க. அவர் ஆதித்தர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், வசுக்கள் எண்மரும், மருத்துவர் இருவருமாம்.

ஒடு, எண்ணொடு.

168. ஒன்பதிற்று இரட்டி உயர் நிலை பெறீஇயர்—பதினெண் வகையாகிய உயர்ந்த நிலையைப் பெற்றவரும்,

என்றது, பதினெண்கணங்களை. அவர்: தேவரும், அசுரரும், தைத்தியரும், கருடரும், கின்னரரும், கிம்புருடரும், இயக்கரும், விஞ்சையரும், இராக்கதரும், கந்தருவரும், சித்தரும், சாரணரும், பூதரும், பைசாசகணமும், தாராகணமும், நாகரும், ஆகாயவாசிகளும், போகபூமியோருமெனவிவர்; இதற்குப் *பிறவாறுமுரைப்பர். பெறீஇயர், தொழிற்பெயர்.

169. மீன் பூத்தன்ன தோன்றலர் - உடுக்கள் பொலிவுபெற்றுத் தோன்றினாலொத்த தோற்றத்தையுடையராய்,

169-70. மீன் சேர்பு வளி கிளர்ந்தன்ன செலவினர் - மீன்களுலாவுகின்றவிடத்தைச்சேர்ந்து காற்று எழுந்தாலொத்த செலவினை யுடையராய்,

170-71. வளி இடை தீ எழுந்தன்ன திறலினர் —†காற்றிடத்தே நெருப்பெழுந்தாலொத்த வலியினையுடைராய்,

171-2. தீ பட உரும் இடித்தன்ன குரலினர் - நெருப்புப்பிறக்க உருமேறு இடித்தாற் போன்ற குரலினையுடையராய்,

இவை வினையெச்சமுற்று.

172-3. [விழுமிய, வுறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மார்:] தம் விழுமிய பெறுமுறை குறை உறு மருங்கில் கொண்மார் - தம்முடைய சீரிய படைத்தல் காத்தல் அழித்தலென்னுந் தொழில்களைப் பண்டுபோலப் பெறுமுறைமையினைக் குறைவேண்டி நின்று பெறுங்கூற்றாலே முடித்துக்கோடற்கு,

174. அந்தரம் கொட்பினர் - ஆகாயத்தே சுழற்சியினையுடையராய்,

[வந்துடன் காண:] உடன் வந்து காண—சேரவந்து காணும்படியாக,

175. தா இல் கொள்கை மடந்தையொடு—வருத்தமில்லாத அருட்கற்பினையுடைய தெய்வயானையாருடன்,

175-6. [சின்னாள், ஆவினன்குடி யசைதலும் உரியன்] ஆவினன்குடி சின்னாள் அசைதலும் உரியன் -ஆவினன்குடியென்னும் ஊரிலே சிலநாள் இருத்தலுமுரியன் ;

பலர்புகழ்மூவரும் தலைவராகவேண்டி (162) அதற்குக் குறைபாடுண்டாக்கின நான்முகவொருவனைக்கருதி (165) ஒன்றுபுரிகொள்கைப் (161) புள்ளணி நீள்கொடிச்செல்வனும் (151) முரண்மிகு செல்வனும் (154) யானையெருத்தமேறிய செல்வனும் (159) முப்பத்துமூவரும் (167) பதினெண்கணங்களும் (168) தோன்றலர் (169) செலவினர் (170) திறலினர் (171) குரலினர்

* பிறவாறுரைத்தல், புறநானூறு, கடவுள்வாழ்த்தின் உரையிலும், சிலப்பதிகாரம், 5: 176 - ஆம் அடியுரையிலும், நிகண்டுகளிலும் காணலாகும்.

† "கான் முளையெரி நிகழ்ந்தன்ன நிறையருஞ் சீற்றம்" (பதிற். "இருங்கண்.")

(172) கொட்பினராய் உடன்வந்து (174) தம் (173) விழுமிய (172) பெருமுறை குறையுறுமருங்கின் முடித்துக் கோடற்கு (173) மென்மொழிமேவலர் இன்னரம்புளர (142) முனிவர் (137) மேவர (166) முற்புகக் (137) காணத் (174) தான் ஆவினன்குடியிலே காண்வர (165) அசைதலுமுரியனென முடிக்க.

கந்தருவர் பாட்டான் முனிவுதீர்ப்பார்.

முனிவர் தம்மை மறுமையைபற்றி முன்னேசென்றார்.

இனிச் சித்தன்வாழ்வென்று சொல்லுகின்றவூர் முற்காலத்து ஆவினன் குடியென்று பெயர்பெற்றதென்றுமாம். அது "நல்லம்பர் நல்ல குடியுடைத்துச் சித்தன் வாழ் - வில்லந் தொறுமூன் றெரியுடைத்து - நல்லரவப், பாட்டுடைத்துச் சோமனு வழிவந்த பாண்டியனின் - ஞட்டுடைத்து நல்ல தமிழ்" என்று ஔவையார் கூறியதனுனுணர்க; *சித்தனென்பது பிள்ளையாருக்குத் திருநாமம்.

அதாஅன்று—அதுவன்றி,

௬.—திருவேரகம்.

177. இரு மூன்று எய்திய இயல்பினின் வழாஅது—†ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றலென்னும் ஆறாகிய நன்மைபொருந்திய இலக்கணத்தில் வழுவாமல்,

வழாமல், வழுவாமலெனத் திரிக்க.

178. இருவர் சுட்டிய பல் வேறு தொல் குடி—தாயும் தந்தையுமாகிய இருவர் குலத்தையும் உலகத்தார் நன்றென்றுமதித்த பலவாய் வேறுபட்ட பழையகுடியிற் பிறந்த இருபிறப்பாளர் (182)

குடி - ‡ கௌண்டினர், காசிபர் என்றாற்போல்வன.

179 - 80. [அறுநான் கிரட்டி யிளமை நல்லியாண், டாறினிற் கழிப்பிய:] அறுநான்கு இரட்டி ஆண்டு நல்லிளமை ஆறினில் கழிப்பிய—இருபத்துநான்கின் இரட்டியாகிய நாற்பத்தெட்டியாண்டு நல்லிளமையை வேதங்கூறிய நெறியிலே போக்கிய இருபிறப்பாளர் (182),

இவர் பிரமசரியங்காத்த அந்தணர்.

அறன் நவில் கொள்கை—அறத்தை எப்பொழுதும் கூறுகின்ற கோட்பாட்டினையும்,

181. மூன்று வகை குறித்த முத்தீ செல்வத்து—நாற்சதுரமும் முச்சதுரமும் வில்வடிவுமாகிய §மூன்றுவகையைக் கருதின ஆகவனீயம் தக்கிணாக்கினி காருகபத்தியம் என்னும் மூன்று தீயானுண்டாகிய செல்வத்தினையுமுடைய,

---

* இது முருகக்கடவுள் ஆயிரநாமத்துள் ஒன்று.

† "ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்க, லீத லேற்றலென் றாறுபுரிந் தொழுகு, மறம்புரி யந்தணர்" (பதிற். 24.)

‡ குண்டலரென்றும் பிரதிபேதமுண்டு.

§ இவற்றுட் பின்னைய இரண்டன் வகையும் இக்காலத்து வழங்குவனவற் றிற்கு வேறுபட்டிருத்தலின், இம்மூன்று வகையும் சாகாபேதமாக இருத்தல் வேண்டுமெனக் கூறுகின்றனர்.

182. இருபிறப்பாளர்—உபநயனத்துக்கு முன்பு ஒருபிறப்பும் பின்பு ஒரு பிறப்புமாகிய இருபிறப்பினையுமுடைய அந்தணர்,

பொழுது அறிந்து நுவல—தாங்கள் வழிபடுங்காலமறிந்து தோத்திரங்களைக் கூற,

183. ஒன்பது கொண்ட மூன்று புரி நுண் ஞாண்—மூன்றுற்கொண்டு முப்புரியாக்குதலின், ஒன்பதாகியநூலைத் தன்னிடத்தே கொண்ட ஒருபுரி மூன்றாகிய நுண்ணிய பூணுநூலையும்,

ஞாணினையும் (183) கொள்கையினையும் (180) செல்வத்தினையுமுடைய (181) இருபிறப்பாளரென்க.

184. புலரா காழகம் புலர உடீஇ—நீராடுங்கால் தோய்க்கப்பட்ட கலிங்கம் உடம்பிலே கிடந்துபுலர உடுத்து,

என்றது, ஈரத்துடனேயிருந்து வழிபடுதல் கூறிற்று.

185. உச்சி கூப்பிய கையினர் தன் புகழ்ந்து—தலைமேலே வைத்த கையினையுடையராய்த் தன்னைத் துதித்து,

186. ஆறெழுத்து அடக்கிய அரு மறை கேள்வி—ஆறெழுத்தினைத் தன்னிடத்தே அடக்கியிருக்கின்ற கேட்டற்கரிய, மறையா உச்சரிக்கப்படும் மந்திரத்தை,

அது, *"நமோகுமாராய" என்பதாம்.

187. நா இயல் மருங்கில் நவில பாடி—நாப் புடைபெயரும் அளவிலே பயில உச்சரித்து,

188. விரை உறு நறு மலர் ஏந்தி—மணமிக்க நறிய பூவை எடுத்து,

188-9. பெரிது உவந்து ஏரகத்து உறைதலும் உரியன்—பெரிது மகிழ்ந்து ஏரகமென்கின்றவூரிலே இருத்தலுமுரியன்;

இருபிறப்பாளர் (182) புலரவுடீஇத் (184) தற்புகழ்ந்து (185) நறுமலரேந்திக் (188) கூப்பியகையராய் (185) நவிலப்பாடிப் (187) பொழுதறிந்து நுவல (182) அதற்குப் பெரிதுமகிழ்ந்து (188) ஏரகத்துறைதலும் உரியனெனமுடிக்க.

ஏரகம் - மலைநாட்டகத்தொரு திருப்பதி.

அதா அன்று—அதுவன்றி,

## ரு—குன்றுதோறாடல்.

190. பைங்கொடி—பச்சிலைக்கொடியாலே,

எல்லாவற்றினும் பசுத்திருத்தலிற் பச்சிலையென்று பெயர்பெற்றது; பச்சிலையென்றது கினைவினைமுதன்மேலேற்றிப் பைங்கொடி யென்றார்.

நறை காய் - நறுநாற்றத்தையுடையகாயை,

அது சாதிக்காய்

இடை இடுபு—நடுவேயிட்டு,

வேலன்—படிமத்தான்,

---

* 'நமக்குமாராய' என்றும் பிரதிபேதமுண்டு.

191. அம் பொறி புட்டில்—அழகினையுடைத்தாகிய பொறித்தலையுடைய தக்கோலமென்னும் முதலின்காய்,

அது புட்டில்போறலிற் புட்டிலென்றார்.

விரைஇ—கலந்து,

* குளவியொடு—காட்டுமல்லிகையுடனே,

192. †வெள் கூதாளம் தொடுத்த கண்ணியன் - வெண்டாளியையும் கட்டின கண்ணியையுடையனாய்,

193. நறு சாந்து அணிந்த கேழ் கிளர் மார்பின்—நறிய சந்தனத்தைப் பூசிய நிறம்விளங்கும் மார்பினையுடைய வேலன் (190),

வேலன் பைங்கொடியாலே (190) புட்டில்விரைஇ (191) நறைக்காய் இடையிடுபு (190) குளவியொடு (191) கூதாளத்தையுங் கட்டிய கண்ணியனாய் (192),

கண்ணியன், வினையெச்சவினைக்குறிப்புமுற்று.

194. கொடு தொழில் வல் வில் கொலைஇய கானவர்—கொடிய தொழிலையுடைய வலியவில்லாற் கொல்லுதலைச்செய்த குறவர்,

'குலைஇய' என்றபாடத்திற்கு வில்லைவளைத்த கானவரென்க. எனவே கோறல் பெற்றாம்.

195. நீடு அமை விளைந்த தேன் கள் தேறல்—நெடுகின மூங்கிலிலே யிருந்து முற்றின தேனாற்செய்த கட்டெளிவை,

196. குன்றகம் சிறுகுடி கிளையுடன் மகிழ்ந்து—மலையிடத்துச் சிறிய ஊரிலே இருக்கின்ற சுற்றத்தோடே உண்டுமகிழ்ந்து,

197. ‡ தொண்டகம் சிறு பறை குரவை அயர — அந்நிலத்துக்குரிய தொண்டகமாகிய சிறுபறையினது தாளத்திற்குக் குரவையாட.

கானவர் தேறலைமகிழ்ந்து குரவையாடவென்க.

198 - 9. [விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற், §குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி:]

விரல் உளர்ப்பு அவிழ்ந்த வேறுபடு நறு கான் கண்ணி—விரலத்தலைப்பாலே வலிய அலர்த்தஅலர்ந்த பூவாகலின் வேறுபடுகின்ற நறியமணத்தினையுடைய தலையிற்சூடும் மாலையினையும்,

குண்டு சுனை பூத்த வண்டு படு கண்ணி—அதுதான் ஆழ்ந்த சுனையிற்பூத்த பூவாற்செய்த வண்டுவீழ்கின்ற கண்ணி.

இஃது ஒற்றுமை நயம்பற்றிச் செயப்படுபொருண்மேல் நின்றது.

'கார்க் குண்டுசுனை' என்று பாடமாயின், கரிய ஆழ்ந்த சுனையென்க.

200. இணைத்த கோதை—இதழ்பறித்துக்கட்டின மாலையினையும்,

---

* தாளியொடு (வேறுரை.)

† வெள்ளைக் கூதாளப்பூவையும். (வேறுரை.)

‡ "தொண்டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்" (சிலப். குன்ற.)

§ "குண்டுசுனைக் குவளையொடு" (குறுந். 59.)

அணைத்த கூந்தல் - சேர்த்தின கூந்தலினையும்,
201. முடித்த குல்லை—இலையைத் தலையிலே யணிந்த கஞ்சங்குல்லையினை

இலை உடை நறு பூ—இலையையுடைய நறிய பூங்கொத்துக்களையும்,
202 - 3. செ கால் மரா அத்த வால் இணர் இடை இடுபு சுரும்பு உண
த்த பெரு தண் மா தழை—செவ்விய காலினையுடைய மராத்திடத்தனவா
வெள்ளிய கொத்துக்களை நடுவேவைத்துச் சுரும்பு தேனை யுண்ணும்படி
த்த பெரிய குளிர்ந்த அழகினையுடைய தழையை,
குல்லையையும் பூவையும் வாலிணர் இடையிட்டுத் தொடுத்த தழையென்க,
204. [திருந்துகா ழல்குற் றிளைப்ப வுடீஇ] காழ் திருந்து அல்குல் திளைப்ப
—வடங்கள் திருந்தும் அல்குலிடத்தே அசையும்படி உடுத்து,
அல்குற்றிளைப்பவென்னும் வல்லொற்று விகாரமாயிற்று,
205. [மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு:]
மயில் கண்டன்ன மகளிரொடு—சாயலுண்டமையான் மயிலைக் கண்டாற்
ன்ற மகளிரொடு,
மடநடை மகளிர்—மடப்பம்பொருந்திய ஒழுக்கத்தினையுமுடைய மகளிர்.
தழையை யுடுத்து மயில்கண்டன்ன மகளிரென்க.
உடுத்தென்னும் வினையெச்சம் அன்னவென்னும் பெயரெச்சமாகிய உவம
போடு முடிந்தது.
கண்ணியினையும் கோதையினையும் சேர்த்தின கூந்தலினையும் மடநடையி
முடைய மகளிரென்க.
இம்மகளிர் தன்னைச சேவிக்கு மகளிர்.
206. செய்யன்—சிவந்தவன்,
206 - 7. சிவந்த ஆடையன் செ அரை செயலை தண் தளிர் துயல்வரும்
னன்—சிவந்த ஆடையுடுத்துச் சிவந்த அரையினையுடைய அசோகிற்
ர்ந்த தளிர் அசையுங்காது பொருந்தி,
208. கச்சினன் கழலினன் செச்சை கண்ணியன்—கசசைக் கட்டிக்
யணிந்து வெட்சிமாலையைச சூடி,
209. குழலன் கோட்டன் குறு பல்லியத்தன் — குழலையூதிக் கொம்
குறித்துச் சிறிய பல்லியங்களை எழுப்பி,
210-11. தகரன் மஞ்ஞையன் புகர் இல் சேவலங்கொடியன்—கிடா
பின்னிட்டு மயிலையேறிக் குற்றமில்லாத கோழிக்கொடியை உயர்த்து,
நெடியன்—தான் வேண்டிய வடிவுகோடலிற் பிள்ளையாயிராது நெடுக
ந்து,
தொடி அணி தோளன்—தோளிலே தொடியையணிந்து,
212. நரம்பு ஆர்த்தன்ன இன் குரல் தொகுதியொடு—நரம்பு ஆரவாரித்தா
த்த இனிய மிடற்றையுடைய பாடுமகளிரோடே,
இவர்கள் தன்னைச் சேவித்துப்பாடுமகளிர்.

3 - 4. [குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன், மருங்கிற் கட்டிய பு துகிலினன்:]
நம்மில் கட்டிய குறும்பொறி கொண்ட—இடையிலே இறுகக் கட்டிய தத்தின்மேலே உடுப்பதாக உட்கொண்டு,
ன் சேர்பு நறு தண் சாயல் துகிலினன்—நாணவிட்டமையால் நிலத்தைப் தி நறிய குளிர்ந்த மென்மையை உடைத்தாகிய துகிலினையுடுத்து,
5-6. [முழவுறழ் தடக்கையி னியல வேந்தி, மென்றோட் பல்பிணை தழீ பத்தந்து:]
ல் தோள் பல் பிணை இயல—மெல்லிய தோளினையுடைய பலவாகிய ணையோடும் மகளிர் குரவையாடி அசைய,
வர்கள் மெய்தீண்டி விளையாடுதற்குரிய மகளிர்.
ழவு உறழ் தட கையின் தழீஇ எந்தி தலைத்தந்து—தன்னுடைய முழ த்த பெருமையையுடைய கையினாலே அவர்கள்கையினைத் தழீஇ எடுத் ண்டு முதற்கைகொடுத்து,
7. [குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே:] குன்றுதொறு ஆடலும் ற பண்பு—மலைதொறுஞ்சென்று விளையாடுதலும் தனக்கு நிலைநி ஈம்;
ணியன் ஆடையனென்பனமுதலியன வினையெச்ச வினைக்குறிப்பு ''முன்னத்தி னுணருங் கிளவியு முளவே'' என்னுஞ் சூத்திரவிதியால் னைச்சப்பொருளை உணர்த்தின.
வர் (194) குரவையயர (197) அதனைக்கண்டு மென்றோட் பல்பிணை ரவையாடியசைய (215) அதனைப்பொருதே செய்யன் (206) வேலன் தாடுத்த கண்ணியைச்சூடி (192) உடுத்துப் (206) பொருந்திக் (207) ணிந்து சூடி (208) ஊதிக் குறித்து எழுப்பிப் (209) பின்னிட்டு எறி யர்த்து வளர்ந்து கொடியையணிந்து (211) துகிலையுடுத்துத் (214) புடனே (212) மகளிரோடே (205) மலைகடொறுஞ் சென்று (217) தழீ எந்தித் (215) தலைத்தந்து (216) ஆடலும் நின்றதன்பண்பென வினை

ரவை யென்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் வென் ய்தக் கூறு மியல்பிற் றாகும்'' எனவரும்.
ஈஅன்று—அதுவன்றி,

ரு.—பழமுதிர்சோலை.

சிறுதினை மலரொடு விரைஇ மறி அறுத்து—சிறிய தினையரிசி களோடே கலந்து பிரப்பரிசியாகவைத்து மறியையறுத்து,

வாரணக்கொடியொடு வயின் பட நிறீஇ—கோழிக்கொடியோடே பவிடத்[illegible]கிற்கும்படி நிறுத்தி,

------

தொல்காப்பியம், எச்சவியல், 63.

அணைத்த கூந்தல் - சேர்த்தின கூந்தலினையும்,

201. முடித்த குல்லை—இலையைத் தலையிலே யணிந்த கஞ்சங்குல்லையினை யும்,

இலை உடை நறு பூ—இலையையுடைய நறிய பூங்கொத்துக்களையும்,

202 - 3. செ கால் மரா அத்த வால் இணர் இடை இடுபு சுரும்பு உண தொடுத்த பெரு தண் மா தழை—செவ்விய காலினையுடைய மராத்திடத்தனவாகிய வெள்ளிய கொத்துக்களை நடுவேவைத்துச் சுரும்பு தேனை யுண்ணும்படி தொடுத்த பெரிய குளிர்ந்த அழகினையுடைய தழையை,

குல்லையையும் பூவையும் வாலிணர் இடையிட்டுத் தொடுத்த தழையென்க,

204. [திருந்துகா ழல்கு றிளைப்ப வுடீஇ:] காழ் திருந்து அல்குல் திளைப்ப உடீஇ—வடங்கள் திருந்தும் அல்குலிடத்தே அசையும்படி உடுத்து,

அல்குற்றிளைப்பவென்னும் வல்லொற்று விகாரமாயிற்று,

205. [மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு:]

• மயில் கண்டன்ன மகளிரொடு—சாயலுண்டமையான் மயிலைக் கண்டாற் போன்ற மகளிரொடு,

மடநடை மகளிர்—மடப்பம்பொருந்திய ஒழுக்கத்தினையுமுடைய மகளிர்.

தழையை யுடுத்து மயில்கண்டன்ன மகளிரென்க.

உடுத்தென்னும் வினையெச்சம் அன்னவென்னும் பெயரெச்சமாகிய உவம உருபோடு முடிந்தது.

கண்ணியினையும் கோதையினையும் சேர்த்தின கூந்தலினையும் மடநடையினையுமுடைய மகளிரென்க.

இம்மகளிர் தன்னைச் சேவிக்கு மகளிர்.

206. செய்யன்—சிவந்தவன்,

206 - 7. சிவந்த ஆடையன் செ அரை செயலை தண் தளிர் துயல்வரும் காதினன்—சிவந்த ஆடையுடுத்துச் சிவந்த அரையினையுடைய அசோகிற் குளிர்ந்த தளிர் அசையுங்காது பொருந்தி,

208. கச்சினன் கழலினன் செச்சை கண்ணியன்—கச்சைக் கட்டிக் கழலையணிந்து வெட்சிமாலையைச் சூடி,

209. குழலன் கோட்டன் குறு பல்லியத்தன் — குழலையூதிக் கொம்பைக்குறித்துச் சிறிய பல்லியங்களை எழுப்பி,

210-11. தகரன் மஞ்ஞையன் புகர் இல் சேவலங்கொடியன்—இடாயைப் பின்னிட்டு மயிலையேறிக் குற்றமில்லாத கோழிக்கொடியை உயர்த்து,

நெடியன்—தான் வேண்டிய வடிவுகோடலிற் பிள்ளையாயிராது நெடுக வளர்ந்து,

தொடி அணி தோளன்—தோளிலே தொடியையணிந்து,

212. நரம்பு ஆர்த்தன்ன இன் குரல் தொகுதியொடு—நரம்பு ஆரவாரித்தாலொத்த இனிய மிடற்றையுடைய பாடுமகளிரோடே,

இவர்கள் தன்னைச் சேவித்துப்பாடுமகளிர்.

213-4. [குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல், மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்:]

மருங்கில் கட்டிய குறும்பொறி கொண்ட—இடையிலே இறுகக் கட்டிய உதரபந்தத்தின்மேலே உடுப்பதாக உட்கொண்ட,

நிலன் நேர்பு நறு தண் சாயல் துகிலினன்—நாலவிட்டமையால் நிலத்தைப் பொருந்தி நறிய குளிர்ந்த மென்மையை உடைத்தாகிய துகிலையுடுத்து,

215-6. [முழவுறழ் தடக்கையி னியல வேந்தி, மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து:]

மெல் தோள் பல் பிணை இயல—மெல்லிய தோளினையுடைய பலவாகிய மான்பிணைபோலும் மகளிர் குரவையாடி அசைய,

இவர்கள் மெய்தீண்டி விளையாடுதற்குரிய மகளிர்.

முழவு உறழ் தட கையின் தழீஇ ஏந்தி தலைத்தந்து—தன்னுடைய முழவையொத்த பெருமையையுடைய கையினாலே அவர்கள்கையினைத் தழீஇ எடுத்துக்கொண்டு முதற்கைகொடுத்து,

217. [குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே:] குன்றுதொறு ஆடலும் தன் நின்ற பண்பு—மலைகடொறுஞ்சென்று விளையாடுதலும் தனக்கு நிலைநின்ற குணம்;

கண்ணியன் ஆடையனென்பனமுதலியன வினையெச்ச வினைக்குறிப்பு முற்று; *"முன்னத்தி னுணருங் கிளவியு முளவே" என்னுஞ் சூத்திரவிதியால் செய்தெனெச்சப்பொருளை உணர்த்தின.

கானவர் (194) குரவையயர (197) அதனைக்கண்டு மென்றோட் பல்பிணை (216) குரவையாடியசைய (215) அதனைப்பொருதே செய்யன் (206) வேலன் (190) தொடுத்த கண்ணியைச்சூடி (192) உடுத்துப் (206) பொருந்திக் (207) கட்டி அணிந்து சூடி (208) ஊதிக் குறித்து எழுப்பிப் (209) பின்னிட்டு எறி (210) உயர்த்து வளர்ந்து தொடியையணிந்து (211) துகிலையுடுத்துத் (214) தொகுதியுடனே (212) மகளிரோடே (205) மலைகடொறுஞ் சென்று (217) தழீஇ (216) ஏந்தித் (215) தலைத்தந்து (216) ஆடலும் நின்றதன்பண்பென வினை முடிக்க.

"குரவை யென்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் வென்றியு, மெய்தக் கூறு மியல்பிற் றாகும்" எனவரும்.

அதா அன்று—அதுவன்றி,

## ௬.—பழமுதிர்சோலை.

218. சிறுதினை மலரொடு விரைஇ மறி அறுத்து—சிறிய தினையரிசியைப் பூக்களோடே கலந்து பிரப்பரிசியாகவைத்து மறியையறுத்து,

219. வாரணக்கொடியொடு வயின் பட நிறீஇ—கோழிக்கொடியோடே தான் அவ்விடத்[illegible] நிற்கும்படி நிறுத்தி,

---

* தொல்காப்பியம், எச்சவியல், 63.

220. *ஊர் ஊர் கொண்ட சீர் கெழு விழவினும்—ஊர்தோறும் ஊர்தோறும் எடுத்துக்கொண்ட தலைமைபொருந்தின விழாவின்கண்ணும்,

221. ஆர்வலர் ஏத்த மே வரு நிலையினும்—தன்மேல் அன்புடையார் ஏத்துதலாலே தன்மனம் பொருந்துதல் வருகின்ற இடத்திலும்,

222. வேலன் தைஇய வெறி அயர் களனும்—படிமத்தான இழைத்த வெறியாடுகளத்தினும்,

பிள்ளையார்வேலைத் தனக்கு அடையாளமாகக் கொண்டு திரிதலின், வேலனென்றார்; இது †"வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்" எனப் புறத்திற்கும் கூறியது.

223. காடும் காவும் கவின் பெறு துருத்தியும்—காட்டினும்பொழிலினும் அழகுபெறுகின்ற ஆற்றிடைக்குறையினும்,

224. யாறும் குளனும்—ஆறுகளினும் குளங்களினும்,

வேறு பல் வைப்பும்—முற்கூறிய ஊர்களன்றி வேறுபட்ட பலவாகிய ஊர்களினும்,

225. சதுக்கமும்—நாற்சந்தியினும்,

சந்தியும்—முச்சந்தியினும் ஐஞ்சந்தியினும்,

புது பூ கடம்பும்—புதிய பூக்களையுடைய கடம்பினும்,

226. ‡மன்றமும்—ஊர்க்குநடுவாய் எல்லாருமிருக்கும் மரத்தடியினும்,

பொதியிலும்—அம்பலத்தினும்,

§கந்து உடை நிலையினும்—ஆதீண்டு குற்றியையுடைய இடத்தினும்,

227. [மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர] மாண் தலை கொடியொடு உரு கெழு வியனகர் (214) அமைவர மண்ணி—மாட்சிமைப்பட்ட தலைமையினையுடைய கோழிக்கொடியோடே உருகெழு வியனகரை அமைவரப் பண்ணி,

ஒடு, வேறுவினை யொடு.

இனி, 'ஆண்டலைக்கொடி' என்று பாடமாயின், பேய்முதலியன பலியை நுகராமல் தலை ஆண்மகன்றலையும், உடல் புள்ளின்வடிவுமாக எழுதின கொடியென்க.

228. நெய்யோடு ஐயவி அப்பி - நெய்யோடே வெண்சிறு கடுகையும் அப்பி,

|| ஐது உரைத்து—தான் வழிபடுதற்குரிய மந்திரத்தைத் தோன்றாமல் உச்சரித்து,

---

* அடுக்கு, பன்மை. (வேறுரை.)

† தொல்காப்பியம், புறத்திணையியல், 5.

‡ "மன்றும் பொதியிலு மாமயில் சேர்" (தஞ்சை. 34).

§ யானைக் தறியிடத்திலும்; பசுமுதலானவை உரிஞ்சுதறி யெனினுமமையும். (வேறுரை).

|| சிறிது மந்திரங்களையுமோதி (வேறுரை.)

229. குடந்தம்பட்டு—வழிபட்டு,

வணக்கம் பட்டென்றும் உரைப்பர்; குடவென்பது தடவென்பதுபோல வளைவு உணர்த்துவதோர் உரிச்சொல்லாதலின், அதனடியாகப் பிறந்த பெயரும். *

கொழு மலர் சிதறி — அழகியமலர்களைத் தூவி,

230. முரண் கொள் உருவின் இரண்டு உடன் உடீஇ—தம்மிற் பகைத்தல்கொண்ட வடிவினையுடைய இரண்டு அறுவையை உள்ளொன்றும் புறமொன்றுமாக உடுத்து,

231. செ நூல் யாத்து—சிவந்தநூலைக் கையிலே காப்புக்கட்டி,

நூலொழுக்கி எல்லைப்படுத்தெனறுமாம்.

வெள் பொரி சிதறி—வெள்ளிய பொரியைத்தூவி,

232. மத வலி நிலைஇய மா தாள் †கொழு விடை—மிகுதியையுடைய வலி நிலைபெற்ற பெருமையையுடைத்தாகிய காலையுடைய கொழுவிய கிடாயினது,

233. குருதியொடு விரைஇய தூ வெள் அரிசி—உதிரத்தோடே பிசைந்த தூய வெள்ளரிசியை,

234. சில் பலி செய்து—சிறுபலியாக இட்டு,

பல் பிரப்பு இரீஇ—பலபிரப்பும் வைத்து,

இனிப் பிரப்புக்கூடையென்பாருமுளர்.

235. ‡ சிறு பசுமஞ்சளொடு நறு விரை தெளித்து—சிறிய பசுமஞ்சளோடே நறிய சந்தனமுதலியவற்றையும் தெளித்து,

இனிச் சிறுபசுமஞ்சள் மஞ்சளில் ஒரு சாதிவிசேடமுமாம்.

விரை, ஆகுபெயர்.

236 - 7. [பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை, துணையற வறுத்துத் தூங்க நாற்றி:]

பெரு தண் கணவீரம் மாலை—பெரிய குளிர்ந்த செவ்வலரிமாலையையும்,

நறு தண் மாலை—ஒழிந்த நறிய குளிர்ந்த மாலைகளையும்,

அறுத்து—தலையொக்க அறுத்து,

§துணை அற தூங்க நாற்றி — தமக்கு ஒப்பில்லாதபடி அசையத்தூக்கி,

இனித் தம்மில் இணையொத்த அறுப்பாக அறுத்தென்றுமாம்.

---

* இதன்பின்னே, குடந்தமாவது: "நால்விரன் முடக்கிப் பெருவிர னிறுகி - நெஞ்சிடை வைப்பது குடந்த மாகும்" என்பது ஒரு பிரதியிலுள்ளது.

† யானைத்திரள். (வேறுரை.)

‡ காட்டு மஞ்சள். (வேறுரை.)

§ துணை உற அறுத்து - இணையொக்க நறுக்கி, தூங்கநாற்றி - அசைதரப் பங்கோயிலாகத் தூக்கி. (வேறுரை.)

238. நளி மலை சிலம்பில் நல் நகர் வாழ்த்தி - செறிந்த மலைப்பக்கத்தி லுள்ள நல்ல ஊர்களைப் *பசியும் பிணியும் பகையும் நீங்குகவென்று வாழ்த்தி,

நகர் - பிள்ளையார்கோயிலென்றுமாம்.

239. †நறு புகை எடுத்து—நறிய தூபங்கொடுத்து,

குறிஞ்சி பாடி – அந்நிலத்திற்கு அடைத்த குறிஞ்சிப்பண்ணைப் பாடி,

240. இமிழ் இசை அருவியோடு இன் இயம் கறங்க - முழங்குகின்ற ஓசையினையுடைய அருவியோடே இனிய பல்லியங்களும் ஒலியாநிற்க,

241-2. உருவம் பல் பூ தூஉய் வெருவர ‡குருதி செந்தினை பரப்பி— சிவந்த நிறத்தினையுடைய பலபூக்களையும் தூவி அச்சம்வரும்படி உதிரமளைந்த சிவந்த தினையினையும் பரப்பி,

242 - 4. குறமகள் §முருகு இயம் நிறுத்து முரணினர் உட்க ||முருகு ஆற்றுப்படுத்த உரு கெழு வியன் நகர்—குறச்சாதியாகிய மகள் முருகனுவக்கும் வாச்சியங்களை வாசிக்கப்பண்ணித் தெய்வமின்றென்பார் அஞ்சும்படியாகப் பிள்ளையார் வரும்படி வழிப்படுத்தின அச்சம் பொருந்தின அகற்சியையுடைய நகரின்கண்ணே,

¶"வேலன் வெறியாட் டயர்ந்த" என்புழிச் சிறுபான்மை ஏனையோரும் ஆடுவாரென்றலின், குறமகள் வெறியாட்டுக் கூறினர்.

குறமகள் (242) மண்ணி (227) அப்பி உரைத்துப் (228) பட்டுச் சிதறி உடீஇ யாத்துச் சிதறிச் செய்து இரீஇத் தெளித்து நாற்றி வாழ்த்தி எடுத்துப் பாடிக் கறங்காநிற்கத் தூஉய்ப் பரப்பி நிறுத்து ஆற்றுப்படுத்த நகரென வினைமுடிக்க.

சாந்திசெய்ய ஆற்றுப்படுத்தாள்.

245. ஆடு களம் சிலம்ப பாடி—அவ்வெறியாடுகின்ற களம் ஆரவாரிப்ப அதற்கு ஏற்பனவற்றைப் பாடி,

245 - 6. [பலவுடன் ＄கோடுவாய் வைத்து:] கோடு பல உடன் வாய் வைத்து – கொம்புகள் பலவற்றையும் சேரவூதி,

கொடு மணி இயக்கி —கொடிய மணியையும் ஒலிப்பித்து,

247. ஓடா பூட்கை **பிணிமுகம் வாழ்த்தி—கெடாத வலியினையுடைய பிணிமுகமென்னும் பட்டத்தினையுடைய யானையை வாழ்த்தி,

---

* "பசியும் பிணியும் பகையு நீங்கி, வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி" (சிலப். 5 : 72 - 3 ; மணி. 1 : 70 - 71.)

† "குறிஞ்சிபாடுமி னறும்புகை யெடுமின்" (சிலப. குன்ற.)

‡ உதிரம் போன்ற செந்தினை (வேறுரை.)

§ முருகியம் - துடி; தொண்டகப்பறை யெனினு மமையும். (வேறுரை.)

|| பிள்ளையாரைத் தம்வழிப்படுத்தின. (வேறுரை.)

¶ தொல்காப்பியம், புறத்திணையியல், 5.

＄ "கோடுவாய் வைம்மின் கொடுமணி யியக்குமின்" (சிலப. குன்ற.)

** பிணிமுகமென்பது பிள்ளையார் பவனிவரும் யானை. (வேறுரை.)

பிணிமுகம் - மயிலுமாம்.

248. வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட—காரியங்களை விரும்புவோர் தாங்கள் விரும்பினகாரியங்களை விரும்பினாற்போலப் பெற்றுநின்று வழிபட,

நகரிலே (244) பாடி வைத்து இயக்கி வாழ்த்தி வழிபட உறைதலுமுரியன் (183) என்க.

விழவின்கண்ணும் (220) நிலையின்கண்ணும் (221) கந்துடைநிலையின்கண்ணும் (226) உறைதலுமுரியன் (183) என்க.

249. ஆண்டு ஆண்டு உறைதலும்—களனும் (222) காடும் காவும் துருத்தியும் யாறும் குளனும் வைப்பும் சதுக்கமும் சந்தியும் கடம்பும் மன்றமும் பொதியிலுமாகிய அவ்வவ்விடங்களிலே உறைதலுமுரியனென்க.

அறிந்தவாறே - யான் அறிந்தபடியே கூறினேன்;

250. ஆண்டு ஆண்டு ஆயினும் ஆக—யான் முற்கூறிய அவ்வவ்விடங்களிலேயாயினுமாக, பிறவிடங்களிலேயாயினுமாக,

உம்மை, ஐயவும்மை.

250-51. [காண்டக, முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்தி:] முந்து கண்டுழி காண் தக முகன் அமர்ந்து ஏத்தி—முற்பட நீ கண்டபொழுது அழகு தக்கிருக்கும்படி முகம்விரும்பித் துதித்து,

முகனமர்ந்தென்றார், அவன் தெய்வத்தன்மையைக் கண்டபொழுது அச்சம்பிறவாது நிற்கவேண்டுமென்றற்கு.

252. கை தொழூஉ பரவி—முன்னர்க் கையைத் தலைமேலேவைத்து வாழ்த்தி,

கால் உற வணங்கி—பின்னர்த் திருவடி தலையிலேயுறும்படி தண்டனிட்டு,

253. நெடு பெரு சிமயத்து *நீலம் பைஞ்சுனை—நெடிய பெரிய இமவானுச்சியில் தருப்பைவளர்ந்த பசிய சுனையிடத்தே,

நீலமென்றார், அதினின்ற நீலநிறத்தையுடைய தருப்பையை. அஃது ஆகுபெயர்; என்றது சரவணப் பொய்கையென்றவாறு.

254. ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப—விசும்பும் வளியும் தீயும் நீரும் நிலனுமாகிய ஐவருள் தீத் தன் அங்கையிலே ஏற்ப,

சதாசிவனும் மயேச்சுரனும் உருத்திரனும் அரியும் அயனும் பூதங்கட்குத் தெய்வமாதலின், ஐவரென்றார்; ஐவருளொருவனென்றது உருத்திரன் தெய்வமாகிய தீயை

அவன் அங்கையேற்பவென்றது இறைவனிடத்தினின்றும் இந்திரன் வாங்கிய கருப்பத்தினை முனிவர் வாங்கித் தமக்குத் தரிக்கலாகாமையின் இறைவன் கூறிய முத்தீக்குண்டத்திட்டதனைக் கூறிற்று.

---

* நீலோற்பல முதலாவுள்ள பூக்கள் மிடைந்து கிடக்கின்ற சரவணப் பொய்கையில். ([illegible].)

238. நளி மலை சிலம்பில் நல் நகர் வாழ்த்தி - செறிந்த மலை யுள்ள நல்ல ஊர்களெல்லாம் *பசியும் பிணியும் பகையும் நீங்குகவென்று வ நகர் - பிள்ளையார்கோயிலென்றுமாம்.

239. †நறு புகை எடுத்து—நறிய தூபங்கொடுத்து,

குறிஞ்சி பாடி - அந்நிலத்திற்கு அடைத்த குறிஞ்சிப்பண்ணைப் ப

240. இமிழ் இசை அருவியோடு இன் இயம் கறங்க - முழ ஓசையினையுடைய அருவியோடே இனிய பல்லியங்களும் ஒலியாநிற்க,

241-2. உருவம் பல் பூ தூஉய் வெருவர ‡குருதி செந்தினை சிவந்த நிறத்தினையுடைய பலபூக்களையும் தூவி அச்சம்வரும்படி உ சிவந்த தினையினையும் பரப்பி,

242 - 4. குறமகள் §முருகு இயம் நிறுத்து முரணினர் உட்க ஆற்றுப்படுத்த உரு கெழு வியன் நகர்—குறச்சாதியாகிய மகள் முரு வாச்சியங்களை வாசிக்கப்பண்ணித் தெய்வமின்றென்பார் அஞ்சும்படிய ளையார் வரும்படி வழிப்படுத்தின அச்சம் பொருந்தின அகற்சியையு ரின்கண்ணே,

¶"வேலன் வெறியாட் டயர்ந்த" என்புழிச் சிறுபான்மை ஏனை ஆடுவாரென்றலின், குறமகள் வெறியாட்டுக் கூறினார்.

குறமகள் (242) மண்ணி (227) அப்பி உரைத்துப் (228) பட் உடீஇ யாத்துச் சிதறிச் செய்து இரீஇத் தெளித்து நாற்றி வாழ்த்தி பாடிக் கறங்காநிற்கத் தூஉய்ப் பரப்பி நிறுத்து ஆற்றுப்படுத்த நகரெ முடிக்க.

சாந்திசெய்ய ஆற்றுப்படுத்தாள்.

245. ஆடு களம் சிலம்ப பாடி—அவ்வெறியாடுகின்ற களம் அதற்கு ஏற்பனவற்றைப் பாடி,

245 - 6. [பலவுடன் ※கோடுவாய் வைத்து:] கோடு பல உடன் த்து - கொம்புகள் பலவற்றையும் சேரவூதி,

கொடு மணி இயக்கி —கொடிய மணியையும் ஒலிப்பித்து,

247. ஓடா பூட்கை **பிணிமுகம் வாழ்த்தி—கெடாத வலியி பிணிமுகமென்னும் பட்டத்தினையுடைய யானையை வாழ்த்தி,

---

* "பசியும் பிணியும் பகையு நீங்கி, வசியும் வளனுஞ் சுரக்கென (சிலப். 5 : 72 - 3 ; மணி. 1 : 70 - 71.)

† "குறிஞ்சிபாடுமி னறும்புகை யெடுமின்" (சிலப. குன்ற.)

‡ உதிரம் போன்ற செந்தினை (வேறுரை.)

§ முருகியம் - துடி; தொண்டகப்பறை யெனினு மமையும். (

|| பிள்ளையாரைத் தம்வழிப்படுத்தின. (வேறுரை.)

¶ தொல்காப்பியம், புறத்திணையியல், 5.

※ "கோடுவாய் வைம்மின் கொடுமணி யியக்குமின்" (சிலப. (

** பிணிமுகமென்பது பிள்ளையார் பவனிவரும் யானை. (வேறு

பிணிமுகம் - மயிலுமாம்.

248. வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட—காரியங்களை வி ரும்புவோர் தாங்கள் விரும்பினகாரியங்களை விரும்பினாற்போலப் பெற்றாரின் வழிபட,

நகரிலே (244) பாடி வைத்து இயக்கி வாழ்த்தி வழிபட உறைதலுமுரிய (189) என்க.

விழவின்கண்ணும் (220) கிலையின்கண்ணும் (221) கந்துடைநிலையின்க ணும் (226) உறைதலுமுரியன் (189) என்க.

249. ஆண்டு ஆண்டு உறைதலும்—களனும் (222) காடும் காவும் துருத் யும் யாறும் குளனும் வைப்பும் சதுக்கமும் சந்தியும் கடம்பும் மன்றமும் பொ யிலுமாகிய அவ்வவ்விடங்களிலே உறைதலுமுரியனென்க.

அறிந்தவாறே - யான் அறிந்தபடியே கூறினேன்;

250. ஆண்டு ஆண்டு ஆயினும் ஆக—யான் முற்கூறிய அவ்வவ்விடங் களிலேயாயினுமாக, பிறவிடங்களிலே யாயினுமாக,

உம்மை, ஐயவும்மை.

250 - 51. [காண்டக, முந்து நீ கண்டுழி முகனமர்ந் தேத்தி:] முந்து கண்டுழி காண் தக முகன் அமர்ந்து ஏத்தி—முற்பட நீ கண்டபொழுது அழ குக்கிருக்கும்படி முகம்விரும்பித் துதித்து,

முகனமர்ந்தென்றார், அவன் தெய்வத்தன்மையைக் கண்டபொழுது அ ம்பிறவாது நிற்கவேண்டுமென்றற்கு.

252. கை தொழூஉ பரவி—முன்னர்க் கையைத் தலைமேலேவைத்து வ ழ்த்தி,

கால் உற வணங்கி—பின்னர்த் திருவடி தலையிலேயுறும்படி தண்டனிட்

253. நெடு பெரு சிமயத்து *நீலம் பைஞ்சுனை—நெடிய பெரிய இமய ுச்சியில் தருப்பைவளர்ந்த பசிய சுனையிடத்தே,

நீலமென்றார், அநினின்ற நீலநிறத்தையுடைய தருப்பையை. அஃது ஆ பெயர்; என்றது சரவணப் பொய்கையென்றவாறு.

254. ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப—விசும்பும் வளியும் தீயும் நீரு நிலனுமாகிய ஐவருள் தீத் தன்அங்கையிலே ஏற்ப,

சதாசிவனும் மயேச்சுரனும் உருத்திரனும் அரியும் அயனும் பூதங்கட்கு தெய்வமாகலின், ஐவரென்றார்; ஐவருளொருவனென்றது உருத்திரன் தெய் மாகிய தீயை.

அவன் அங்கையேற்பவென்றது : இறைவனிடத்தினின்றும் இந்திர வாங்கிய கருப்பத்தினை முனிவர் வாங்கித் தமக்குத் தரிக்கலாகாமையின் இறை வன்கூறிய முத்தீக்கண்ட்டகத்திட்டதனைக் கூறிற்று.

---

* நீலோற்பல முதலாவள்ள பூக்கள் மிடைந்து கிடக்கின்ற சரவண பொய்கையில். (கேவுறுசா.)

238. நளி மலை சிலம்பில் நல் நகர் வாழ்த்தி - செறிந்த மலைப்பக்கத்தி லுள்ள நல்ல ஊர்களெல்லாம் *பசியும் பிணியும் பகையும் நீங்குகவென்று வாழ்த்தி,

நகர் - பிள்ளையார்கோயிலென்றுமாம்.

239. †நறு புகை எடுத்து—நறிய தூபங்கொடுத்து,

குறிஞ்சி பாடி – அந்நிலத்திற்கு அடைத்த குறிஞ்சிப்பண்ணைப் பாடி,

240. இமிழ் இசை அருவியோடு இன் இயம் கறங்க - முழங்குகின்ற ஓசையினையுடைய அருவியோடே இனிய பல்லியங்களும் ஒலியாநிற்க,

241-2. உருவம் பல் பூ தூஉய் வெருவர ‡குருதி செந்தினை பரப்பி— சிவந்த நிறத்தினையுடைய பலபூக்களையும் தூவி அச்சம்வரும்படி உதிரமளைந்த சிவந்த தினையினையும் பரப்பி,

242 - 4. குறமகள் §முருகு இயம் நிறுத்து முரணினர் உட்க ||முருகு ஆற்றுப்படுத்த உரு கெழு வியன் நகர்—குறச்சாதியாகிய மகள் முருகனுவக்கும் வாச்சியங்களை வாசிக்கப்பண்ணித் தெய்வமின்றென்பார் அஞ்சும்படியாகப் பிள்ளையார் வரும்படி வழிப்படுத்தின அச்சம் பொருந்தின அகற்சியையுடைய நகரின்கண்ணே,

¶"வேலன் வெறியாட் டயர்ந்த" என்புழிச் சிறுபான்மை ஏனையோரும ஆடுவாரென்றலின், குறமகள் வெறியாட்டுக் கூறினர்.

குறமகள் (242) மண்ணி (227) அப்பி உரைத்துப் (228) பட்டுச் சிதறி உடீஇ யாத்துச் சிதறிச் செய்து இரீஇத் தெளித்து நாற்றி வாழ்த்தி எடுத்துப் பாடிக் கறங்காநிற்கத் தூஉய்ப் பரப்பி நிறுத்து ஆற்றுப்படுத்த நகரென வினை முடிக்க.

சாந்திசெய்ய ஆற்றுப்படுத்தாள்.

245. ஆடு களம் சிலம்ப பாடி—அவ்வெறியாடுகின்ற களம் ஆரவாரிப்ப அதற்கு ஏற்பனவற்றைப் பாடி,

245 - 6. [பலவுடன் ‡‡கோடுவாய் வைத்து:] கோடு பல உடன் வாய் வைத்து – கொம்புகள் பலவற்றையும் சேரவூதி,

கொடு மணி இயக்கி —கொடிய மணியையும் ஒலிப்பித்து,

247. ஓடா பூட்கை **பிணிமுகம் வாழ்த்தி – கெடாத வலியினையுடைய பிணிமுகமென்னும் பட்டத்தினையுடைய யானையை வாழ்த்தி,

---

* "பசியும் பிணியும் பகையு நீங்கி, வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி" (சிலப். 5 : 72 - 3 ; மணி. 1 : 70 - 71.)

† "குறிஞ்சிபாடுமி னறும்புகை யெடுமின்" (சிலப. குன்ற.)

‡ உதிரம் போன்ற செந்தினை (வேறுரை.)

§ முருகியம் - துடி; தொண்டகப்பறை யெனினு மமையும். (வேறுரை.)

|| பிள்ளையாரைத் தம்வழிப்படுத்தின. (வேறுரை.)

¶ தொல்காப்பியம், புறத்திணையியல், ௫.

‡‡ "கோடுவாய் வைம்மின் கொடுமணி யியக்குமின்" (சிலப. குன்ற.)

** பிணிமுகமென்பது பிள்ளையார் பவனிவரும் யானை. (வேறுரை.)

பிணிமுகம் - மயிலுமாம்.

248. வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட—காரியங்களை விரு ம்பினோர் தாங்கள் விரும்பினகாரியங்களை விரும்பினாற்போலப் பெற்றுநின்று வழிபட,

நகரிலே (244) பாடி வைத்து இயக்கி வாழ்த்தி வழிபட உறைதலுமுரியன் (189) என்க.

விழவின்கண்ணும் (220) நிலையின்கண்ணும் (221) கந்துடைநிலையின்கண்ணு ம் (226) உறைதலுமுரியன் (189) என்க.

249. ஆண்டு ஆண்டு உறைதலும்—களனும் (222) காடும் காவும் துருத்தி யும் யாறும் குளனும் வைப்பும் சதுக்கமும் சந்தியும் கடம்பும் மன்றமும் பொதி யிலுமாகிய அவ்வவ்விடங்களிலே உறைதலுமுரியனென்க.

அறிந்தவாறே - யான் அறிந்தபடியே கூறினேன்;

250 ஆண்டு ஆண்டு ஆயினும் ஆக—யான் முற்கூறிய அவ்வவ்விடங்க ளிலேயாயினுமாக, பிறவிடங்களிலே யாயினுமாக,

உம்மை, ஐயவும்மை.

250 - 51 [காண்டக, முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்தி:] முந்து நீ கண்டுழி காண் தக முகன் அமர்ந்து ஏத்தி—முற்பட நீ கண்டபொழுது அழகு சிறக்கும்படி முகம்விரும்பித் துதித்து,

முகனமர்ந்தென்றார், அவன் தெய்வத்தன்மையைக் கண்டபொழுது அச்ச ம்பிறவாது நிற்கவேண்டுமென்றற்கு.

252. கை தொழூஉ பரவி—முன்னர்க் கையைத் தலைமேலேவைத்து வா ழ்த்தி,

கால் உற வணங்கி—பின்னர்த் திருவடி தலையிலேயுறும்படி தண்டனிட்டு,

253. நெடு பெரு இமயத்து *நீலம் பைஞ்சுனை—நெடிய பெரிய இமவா னுச்சியில் தருப்பைவளர்ந்த பசிய சுனையிடத்தே,

நீலமென்றார், அதினின்ற நீலநிறத்தையுடைய தருப்பையை. அஃது ஆகு பெயர்; என்றது சரவணப் பொய்கையென்றவாறு.

254 ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப—விசும்பும் வளியும் தீயும் நீரும் நிலனுமாகிய ஐவருள் தீத் தன்அங்கையிலே ஏற்ப,

சதாசிவனும் மயேச்சுரனும் உருத்திரனும் அரியும் அயனும் பூதங்கட்குத் தெய்வமாகலின், ஐவரென்றார்; ஐவருளொருவனென்றது உருத்திரன் தெய்வ மாகிய தீயை

அவன் அங்கையேற்பவென்றது : இறைவனிடத்தினின்றும் இந்திரன் வாங்கிய கருப்பத்தினை முனிவர் வாங்கித் தமக்குத் தரிக்கலாகாமையின் இறை வன் கூறுகிய முத்தீக்கண்டத்திட்டதனைக் கூறிற்று.

* நீலோற்பல முதலாவுள்ள பூக்கள் மிடைந்து கிடக்கின்ற சரவணப் பொய்கையில். (வேறுரை)

255. அறுவர் பயந்த ஆறு அமர் செல்வ — அருந்ததியொழிந்த அறுவ ராலே பெறப்பட்ட ஆறுவடிவுபொருந்திய செல்வ,

என்றது: *அங்ஙனம் அங்கியின்கணிட்டுச் சத்திகுறைந்த கருப்பத்தை முனிவரெழுவரும் வாங்கித் தம்மனைவியர்க்குக்கொடுப்ப அருந்ததியொழிந்தோர் விழுங்கிச் சூன்முதிர்ந்து, சரவணப்பொய்கையிற் பதுமப்பாயலிலே பெற ஆறு வடிவாக வளர்ந்தமை கூறிற்று.

ஏற்கையினாலே அறுவராற் பைஞ்சுனையிலே பயக்கப்பட்ட செல்வவென்க; இது பரிபாடலிற் †"பாயிரும் பனிக்கடல்" என்னும் பாட்டானுணர்க.

256. ஆல் கெழு கடவுள் புதல்வ — கல்லாலின் கீழிருந்த கடவுளினு டைய புதல்வ,

கடவுளரென உயர்திணையாய் நில்லாது கடவுளென்பது தெய்வமென்னும் பொருட்டாய் அஃறிணைமுடிபுகொள்ளும் உயர்திணையாய் நிற்றலின், அஃறி ணைப்பாற் பட்டு ‡"உணரக்கூறிய" என்னும் புறனடையான் முடிந்தது.

256-7. §மால் வரை மலை மகள் மகனே — பெருமையையுடைய மலையா கிய மலையரையன் மகளுடைய மகனே,

வரை - மூங்கிலுமாம்.

மாற்றோர் கூற்றே — பகைவர்க்குக் கூற்றுவனே,

258. [வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ :]

வெற்றி கொற்றவை சிறுவ — வெற்றியை உலகத்திற்குக் கொடுக்கும் வனதுர்க்கையினுடைய புதல்வ,

வெல் போர் கொற்றவை — தான் வெல்லும்போரைச் செய்யுங் கொற் றவை,

என்றது : மகிடனைச் செற்றதனை.

259. இழை அணி சிறப்பிற் பழையோள் குழவி — பூணணிந்த தலைமை யினையுடைய காடுகாளுடைய குழவி,

காடுகிழாளென்பது இக்காலத்துக் காடுகாளென மருவிற்று. அவளும் இறைவனுடைய சத்தியாகலின், அவளுடைய குழவியென்றார்.

260. [வானோர் வணங்குவிற் றானைத் தலைவ:]

வானோர் தானை தலைவ—தேவர்கள் படைத்தலைவ,

என்றது: தேவசேனாபதி என்றதாம்.

வணங்கு வில்—வளையும் வில்லையும்,

வில்லையும், தேவராகிய தானையையுமுடைய தலைவவென்க.

261. மாலை மார்ப—இன்பத்திற்குரிய மாலையணிந்த மார்ப,

---

* 58 - ஆம் அடியின் விசேடவுரையாலும் இது விளங்குகின்றது.

† பாட்டு, 5 ‡ தொல்காப்பியம். புள்ளிமயங்கியல், 110.

§ மால்போலும் வரையினையுடைய மலையனரயன் திருமகளார் மகனே. (வேறுரை)

நூல் அறி புலவ—எல்லா நூல்களையும் அறியும் புலவ,
புலவன் - அறிவுடையவன்.

262. செருவில் ஒருவ—போர்த்தொழிலில் ஒருவனாகி நிற்பாய்,
பொரு விறல் மள்ள—பொருகின்ற வெற்றியினையுடைய மள்ள,
மள்ளன் - இளமைப்பருவத்தோன்.

263. அந்தணர் வெறுக்கை—அந்தணருடைய செல்வமாயிருப்பாய்,
அறிந்தோர் சொல் மலே—சான்றோர் புகழ்ந்து சொல்லப்படும் சொற்களின் ஈட்டமாயிருப்பாய்,

264. மங்கையர் கணவ—தெய்வயானையாரும், வள்ளிநாய்ச்சியாருமாகிய மகளிர்க்குக் கணவ,
மைந்தர் ஏறே—வீரர்க்கு இடபமே,

265. வேல் கெழு தட கை சால் பெரு செல்வ—வேல்பொருந்தின பெருமையையுடைய கையானமைந்த பெரிய செல்வ,
என்றது: வேல் வெற்றியாற்பெற்ற அச்செல்வத்தை.

266-7. [குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து, விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ:]
குன்றம் கொன்ற குன்றா கொற்றத்த கிழவ—குருகாற் பெயர்பெற்ற மலையைப்பிளந்த குறையாத வெற்றியையுடைய கிழவ,
விண் பொரு நெடுவரை குறிஞ்சி கிழவ—தேவருலகைத் தீண்டும் நெடிய மலையையுடைய குறிஞ்சிநிலத்துக்கு உரிமையுடையாய்,
அதற்கு உரியனாதல் *"சேயோன் மேய மைவரை யுலகமும்" என்பதனாலுணர்க.

268. பலர் புகழ் நல் மொழி புலவர் ஏறே—பலரும் புகழ்ந்துசொல்லும் நன்றாகிய சொற்களையுடைய பரசமயத்தினுள்ளார்க்கு ஏற்றின்றன்மையையுடையவனே,
என்றது: கல்விமதத்தையுடைய யானைபோல்வார்க்குச் சிங்கவேறு போல்வாயென்றதாம்.

269. [அரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக.] பெறல் அரு மரபின் பெரும்பெயர் முருக—பிறர்க்குப் பெறலரிய முறைமையினையுடைய பெரும் பொருளையுடைய முருக,
பெயர் - பொருள். †"பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய" எனவும், ‡"சொற்பெயர் நாட்டம்" எனவும் வரும். பெரும்பொருளென்றது - வீட்டினை.

270. [நசையுநர்க் கார்த்து மிசைபே ராள:] நசையுநர்க்கு ஆர்த்தும் பேர் இசை ஆள—அவ்வீட்டைப் பெறவேண்டுமென்று நச்சிவந்தார்க்கு அதனை நுகர்விக்கும் பெரியபுகழை ஆளுதலையுடையாய்,
பேரிசையென்று மாறுக.

---

* தொல்காப்பியம், அகத்திணையியல், 5.
† பதிற்றுப்பத்து, 90. ‡ பதிற்றுப்பத்து, 21.

271-2. [அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய், மண்டமர் கடந்த நின் வென்று டகலத்து:]

அலந்தோர்க்கு அளிக்கும் சேஎய்—பிறரால் இடுக்கட்பட்டு வந்தோர்க்கு அருள்பண்ணும் சேய்,

மண்டு அமர் கடந்த வென்று ஆடு நின் அகலத்து பொலம் பூண் சேஎய்—மிக்குச்செல்கின்ற போர்களைமுடித்த வென்றடுகின்ற நினதுமார்பிடத்தே பொன்னாற்செய்த பேரணிகலன்களையணிந்த சேயென்க.

273. பரிசிலர் தாங்கும் உரு கெழு நெடு வேள்—இரந்துவந்தோரை வேண்டுவன கொடுத்துப் பாதுகாக்கும் உட்குதல் பொருந்திய நெடியவேளே,

274. பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள்—தேவரும் முனிவரும் ஏத்தும் பெரிய திருநாமத்தையுடைய தலைவனே,

இயவுள்-கடவுளுமாம்.

275-6. [சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி, போர்மிகு:] போர் மிகு மொய்ம்பின் சூர் மருங்கு அறுத்த மதவலி—போர்த்தொழிலிலே மிகுகின்ற மொய்ம்பாலே சூரபன்மாவின்குலத்தை இல்லையாக்கின மதவலியென்னும் பெயரையுடையாய்,

பொருந—உவமிக்கப்படுவாய்,

பொருவப்படுமவன், பொருநனென நின்றது.

குரிசில்—தலைவன்,

276-7. [எனப்பல, யானறி யளவையி னேத்தி யானாது] என யான் அறி அளவையின் ஆனாது பல ஏத்தி—என்று யானறிந்து நினக்குக்கூறிய அவ்வாலே நீயும் அமையாதே பலவற்றையும் கூறிப் புகழ்ந்து,

278. நின் அளந்து அறிதல் மன் உயிர்க்கு அருமையின்—நின் தன்மையெல்லாம் முற்ற அளவிட்டறிதல் பல்லுயிர்க்கும் அரிதாகையினாலே,

279. நின் அடி உள்ளி வந்தனென்—நின் திருவடியைப் பெறவேண்டுமென்று நினைந்துவந்தேன்;

279-80. நின்னொடு புரையுநர் இல்லா புலமையோய்—நின்னோடு ஒப்பாரில்லாத மெய்ஞ்ஞானத்தை உடையோய்,

280-81. என குறித்தது மொழியா அளவையில்—என்றுசொல்லி கருதிய வீடுபேற்றினை விண்ணப்பஞ் செய்வதற்கு முன்னே,

முந்துநீகண்டுழி முகனமர்ந்து (251) மகனே கூற்றே (257) குழு (259) வெறுக்கை குன்மலையாயிருப்பாய் (263) மைந்தரேறே (264) புலவரேறே (268) சேஎய் (271) வேஎள் (273) இயவுளே (274) மதவலி (27 புலமையோய் (280) என்றுமுன்னர் எதிர்முகமாக்கி எத்தி (251) யென மைவிளியல்லாதனவற்றை முன்னர்க்கூட்டிமுடிக்க. அங்ஙனம் எதிர்முகமா யேத்திப் பின்னர்ப்பரவி வணங்கிச் (252) செல்வ (255) புதல்வ (256) சிற (258) தலைவ (260) மார்ப புலவ (261) ஒருவ மள்ள (262) கணவ (26 செல்வ (265) இழைவ (267) முருக (269) இசைபேராள (270) பொரு

76) என்று அண்மையாகவிளித்து, மன்னுயிர்க்கருமையின் (278) யானறி வளவையினேத்தி (277) நின்னடியுள்ளிவந்தனென் (279) என்று நீ குறித்தது மொழியாவளவையினென முடிக்.

281-2. [குறித்துடன், வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்:] வேறு பல் உருவில் குறு பல் கூளியர் உடன் குறித்து—வேறுவேறாகிய பலவடிவினை ய சிறிய பலராகிய சேவித்துநிற்பார் சேரக்கருதி,

*"நின், கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர்" என்றார் பிறரும்.

283. சாறு அயர் களத்து வீறு பெற தோன்றி—விழாவெடுத்தகளத்தே யாங்கள் பொலிவுபெறத் தோன்றி,

284. [அளியன் றானே முதுவா யிரவலன்:] முது வாய் இரவலன் தான் அளியன்—அறிவுமுதிர்ந்த வாய்மையையுடைய புலவன்றான் அளிக்கத்தக்கான்.

285-6. [வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென, வினியவு நல்லவு நனிபல வேத்தி:] பெரும நின் வள் புகழ் நயந்து இனியவும் நல்லவும் நனி பல ஏத்தி வந்தோன் என—பெரும, நினது வளவிய புகழினைக்கூற விரும்பிக் கேட்டோர்க்கு இனியனவும் உறுதிபயப்பனவுமாக மிக்க பலவற்றை வாழ்த்தி வந்தோனென்றுகூற,

கூளியர் (282) குறித்துத் (281) தோன்றி (283) அளியன் (284) பெரும நின் வண்புகழைக் கூறநயந்து (285) இனியவும் நல்லவுமாக ஏத்தி (286) வந்தோன் (285) என்று கூறவென முடிக்க.

287. தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின்—தெய்வத்தன்மையமைந்த வலிவிளங்கும் வடிவினையும்,

288. வான் தோய் நிவப்பின் தான் வந்து எய்தி—வானைத்தீண்டும் வளர்ச்சியினையுமுடைய தான் அவையை வந்தணுகி,

289. அணங்கு சால் உயர் நிலை தழீஇ—வருத்தமமைந்த தெய்வத்தன்மையை உள்ளடக்கிக்கொண்டு,

289-90. [பண்டைத்தன், மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி:] மணம் கமழ் தெய்வத்து பண்டை தன் இளநலம் காட்டி—மணம் நாறுகின்ற தெய்வத் தன்மையையுடைய முன்புண்டாகிய தன் இளையவடிவைக்காட்டி,

291. [அஞ்சல் ஓம்புமதி யறிவனின் வரவெனா:] நின் வரவு அறிவல் அஞ்சல் ஓம்புமதி என—நீ வீடுபெற நினைத்துவந்த வரவை யான் முன்னேயறிவேன்; அது நினக்கு எய்துதலரிதென்று அஞ்சுதலைப் பரிகரியென்று,

292. அன்புடை நன்மொழி அளைஇ—நின்மேல் அன்புடைத்தாகிய நல்ல வார்த்தைகளைப் பலகாலும் அருளிச்செய்து,

292-4. [விளிவின்று, இருணிற முந்நீர் வளைஇய வுலகத், தொருநீ யாகித் தோன்ற:] இருள் நிற முந்நீர் வளைஇய உலகத்து ஒருநீயாகி விளிவு இன்று தோன்ற—இருண்ட நிறத்தையுடைய கடல் சூழ்ந்த உலகத்திடத்தே நீ ஒருவனுமே பிறர்க்கு வீடளித்தற்கு உரியையாய்க் கேடின்றித் தோன்றும்படி,

* புறநானூறு, 23.

294-5. விழுமிய பெறல் அரு பரிசில் நல்குமதி—சீரிய பிறரால் பெறுதற்கரிய வீடுபேற்றினைத் தருவன்;

*"இகுமுஞ் சின்னு மேனை யிடத்தொடுந், தகுநிலை யுடைய வென்மனார் புலவர்" என்றதனானுதல் †"அவ்வச் சொல்லிற்கு" என்னும் புறனடையதனானு தல் மதி படர்க்கைக்கண் வருதல் கொள்க.

இனி மதிபலவுடனெனக் கூட்டி, அறிவுகள்பலவுடனே பரிசில் நல்குமென்று கூறுவாருமுளர்.

295.6. [பலவுடன், வேறுபஃறுகிலி னுடங்கி:] வேறு பல் துகிலின் பல உடன் நுடங்கி—வேறுபட்ட பலவாகிய துகிற்கொடிகளைப்போலத் தாம் பலவும் கூடவசைந்து,

296.7. அகில் சுமந்து ஆரம் முழு முதல் உருட்டி—அகிலை மேற்கொண்டு சந்தனமாகிய பெரிய மரத்தைத் தள்ளி,

297-8. வேரல் பூ உடை அலங்கு சினை புலம்ப வேர் கீண்டு—சிறுமூங்கிலினது பூவுடைத்தான அசைகின்ற கொம்பு தனிப்ப வேரைப்பிளந்து,

299-300. விண் பொரு நெடு வரை பரிதியின் தொடுத்த தண் கமழ் அலர் இறால் சிதைய—தேவருலகத்தைத் தீண்டுகின்ற நெடிய மலையிடத்தே ஞாயிற்றின் மண்டிலத்தைப்போல வைக்கப்பட்ட தண்ணியவாய் மணக்கின்ற விரிந்த தேன்கூடு கெட,

300.301. நல் பல ஆசினி முது சுளை கலாவ—நன்றாகிய பல ஆசினிகளினுடைய முற்றிய சுளை தன்னிடத்தே கலக்க,

301-2. மீ மிசை நாக நறு மலர் உதிர—மலையினுச்சியிலுண்டான சுரபுன்னையின் நறிய மலர்கள் உதிர,

302-3. ஊகமொடு மா முக முசு கலை பனிப்ப—கருங்குரங்கோடே கரிய முகத்தையுடைய முசுக்கலைகளும் நடுங்க,

‡"கலையென் காட்சி யுழைக்கு முரித்தே." §"நிலையிற் றப்பெயர் முசுவின் கண்ணும்" என்றார்.

303-4. பூ நுதல் இரு பிடி குளிர்ப்ப வீசி—புகரையணிந்த மத்தகத்தையுடைய பெரிய பிடி குளிரும்படி வீசி,

304-5. பெரு களிறு முத்து உடை வான் கோடு தழீஇ—பெரிய களிற்றினுடைய முத்தையுடையவாகிய வெள்ளிய கொம்புகளை உள்ளடக்கி,

305-6. [தத்துற்று, நன்பொன் மணிநிறங் கிளர:] நல் பொன் மணி நிறம் கிளர தத்துற்று—நல்ல பொன்னும் மணியும் நிறம்விளங்கும்படி மேலே கொண்டு குதித்து,

தத்துற்று - தத்துதலையுற்று.

---

* தொல்காப்பியம், இடைச்சொல்லியல், 27.

† " " 47.

‡ " மரபியல், 45.

§ " " 46.

முரியன்; (189) களனும் (222) காடு (223) முதலியன ஆண்டாண்டுறைதலும் (249) உரியன்; (189) நகரிலே (214) பாடி (245) வைத்து இயக்கி (246) வாழ்த்தி (247) வழிபட (248) உறைதலுமுரியன்; (189) இஃதியானறிந்தபடியே கூறினேன் (249); இனி ஆண்டாண்டாயினுமாக, பிறவிடங்களிலே யாயினுமாக (250) முந்துநீகண்டுழிமுகனமர்ந்து முன்னர் எதிர்முகமாக்கி ஏத்திப் (251) பரவி வணங்கிப் (252) பின்னர் அன்மையாகவிளித்து யானறியளவையினேத்தி (277) நின்னடி யுள்ளி வந்தேனென்று (279) நீ குறித்தது மொழிவதற்குமுன்னே (281) கூளியர் (282) குறித்துத் (281) தோன்றிப் (283) பெரும (285) இரவலன் நீ அளிக்கத்தக்கான் (284) வந்தோனென்றுகூற (285) மலைகிழவோனாகிய (317) குரிசிலும் (276) தான்வந்தெய்தித் (288) தழீஇக் (289) காட்டி (290) அஞ்சலோம்புமதியென்று (291) அன்புடை நன்மொழி யளைஇ (292) ஒருநீயாகித்தோன்றும்படி (294) பெறலரும்பரிசில் நல்குவனென (295) வீடு பெறக் கருதிய இரவலனைநோக்கி வீடுபெற்றானொருவன் ஆற்றுப்படுத்ததாக வினைமுடிக்க.

இது புறத்திணையியலுள் *"தாவினல்லிசை" என்னுஞ் சூத்திரத்துள் "ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப், பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச், சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்" என்பதனால் முற்கூறிய கருவியைப் பெற்றானொருவன் அதனைப் பெறாதானொருவனுக்குப் பெறுமாறு கூறி அவனை வழிப்படுத்துக் கூறுவானென்பது பற்றிச் செய்யுள் செய்தாராயிற்று.

கந்தழியாவது ஒருபற்றுமற்று அருவாய்த் தானேநிற்கும் தத்துவங்கடந்த பொருள்: அது †"சார்பினுற் றோன்றாது தானருவாய் ** மைதீர் சுடர்" என்பதாம்: இதனை ‡"உற்றவாக்கையி னுறுபொருணறுமலரெழுதரு நாற்றம்போற்-பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்" என அதனை உணர்ந்தோர் கூறியவாற்றானுணர்க.

முருகாற்றுப்படையென்றதற்கு வீடுபெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடுபெற்றானொருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்ததென்று பொருள் கூறுக.

குமரவேளை மதுரைக் கணக்காயனார்மகனார் நக்கீரனார்பாடிய திருமுருகாற்றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.

---

* தொல்காப்பியம், புறத்திணையியல், 36.

† வெண்பா. "சார்பினுற் றோன்றாது தானருவா யெப்பொருட்குஞ் சார்பெனநின் றெஞ்ஞான்று மின்பந் தகைத்தரோ - வாய்மொழியால் மெய்யாக் கணத்தா லறிவிறந்த - தூய்மையதா மைதீர் சுடர்." (தொல். புறத்திணை சூ. 33 - ந. மேற்.)

‡ திருவாசகம், அதிசயப்பத்து, 9.

# வேலுமயிலுந் துணை.



அடியிலுள்ள பாடல்கள், பத்துப்பாட்டும் சேர்ந்துள்ள பழைய ஏட்டுப்பிரதிகளிலல்லாமல் திருமுருகாற்றுப்படைமட்டுமுள்ள புதிய ஏட்டுப்பிரதிகளிலும் அச்சுப் பிரதிகளிலும் இருந்தமையால் தனியே பதிப்பிக்கப்பெற்றன; திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் 44 - ஆம் திருவிளையாடல் 27 - ஆம் திருவிருத்தம் முதலியவற்றை நோக்குங்கால், "குன்றமெறிந்தாய்" என்னும் வெண்பா அந்நூலாசிரியர் காலத்தே வழங்கிவந்ததாகத் தெரிகின்றது.

## நேரிசைவெண்பா.

1. குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய்—என்று
மிளையா யழகியா யேறூர்ந்தா னேறே
யுளையாயென் னுள்ளத் துறை.

2. குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவு
மன்றங் கமரிடர் தீர்த்ததுவு—மின்றென்னைக்
கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவு
மெய்விடா வீரன்கை வேல்.

3. வீரவே றாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வே டிருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றுந்
துளைத்தவே லுண்டே துணை.

4. இன்ன மொருகா லெனதிடும்பைக் குன்றுக்குங்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும்.

5. உன்னை யொழிய வொருவரையு நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே.

அ

6. அஞ்சு முகந்தோன்றி னாறு முகந்தோன்றும்
வெஞ்சமரி லஞ்சலென வேறோன்று—நெஞ்சி
லொருகா னினைக்கி லிருகாலுந் தோன்று
முருகாவென் றோதுவார் முன்.

7. முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே—யொருகைமுகன்
றம்பியே நின்னுடைய தண்டைக்கா லெப்பொழுது
நம்பியே கைதொழுவே னான்.

8. காக்கக் கடவியநீ காவா திருந்தக்கா
லார்க்குப் பரமா மறுமுகவா—பூக்குங்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
விடங்கா ணிரங்கா யினி.

9. பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதங்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காம
லாசையா னெஞ்சே யணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல்.

10. நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினான்—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த வெல்லாந் தரும்.

---

8. 'கடனனீ' 'பயங்கா ணறுமுகவா' 'குமரா கதிர்வேலா' எனவும் பாடம்.

# இரண்டாவது

# பொருநராற்றுப்படை.



அறாஅ யாண ரகன்றலைப் பேரூர்ச்
சாறுகழி வழிநாட் சோறுநசை யுறாது
வேறுபுலம் முன்னிய விரகறி பொருந
குளப்புவழி யன்ன கவடுபடு பத்தல்
விளக்கழ லுருவின் விசியுறு பச்சை
யெய்யா விளஞ்சூற் செய்யோ ளவ்வயிற்
றைதுமயி ரொழுகிய தோற்றம் போலப்
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை
யளைவா ழலவன் கண்கண் டன்ன
துளைவாய் தூர்ந்த துரப்பமை யாணி
யெண்ணாட் டிங்கள் வடிவிற் றாகி
யண்ணா வில்லா வமைவரு வறுவாய்ப்
பாம்பணந் தன்ன வோங்கிரு மருப்பின்
மாயோண் முன்கை யாய்தொடி கடுக்குங்
கண்கூ டிருக்கைத் திண்பிணித் திவவி
னாய்தினை யரிசி யவைய லன்ன
வேய்வை போகிய விரலுளர் நரம்பிற்

---

1-248. பொருநராற்றுப்படைக்கு இந்நூலை மேற்கோளாகக் காட்டுவர்; தொல். புறத்திணையியல், சூ. 36 - ந.)

1-2. "கல்லெனக் கலிங்பெற்ற விழவாற்றுப் படுத்தபிற், புல்லென்ற களம்போலப் புலம்புகொண்டு" (கலி. 5.)

5. "விளக்கழ லுருத்த போலும் விசியுறு போர்வை" (சீவக. 559.) வள்—தோல்; 'விளக்கழ லு......பச்சை' (தல். "வள்ளுறை" மயிலேறு.)

7. 'ஒழுக்கிய' என்றும் பாடம்.

8. "பழையதோர் பொல்லம் பொத்திய" (திருவிளை. விறகு. 13.)

10-11. "கொளத்தகு திவவுத் திங்கட் கோணிரைத் தியைய வாணி" சீவக. 559.)

11. "பிறைபிறந் தன்ன பின்னேந்து கவைக்கடை" (பெரும்பாண். 11.)

12. "விளைவறந் தன்ன விருந்தேக்கு வறுவாய்" (பெரும்பாண். 10.)

14-5. "நெடும்பணைத் திரடோள் மடந்தை முன்கைக், குறுந்தொடி யேய்க்கு மெலிந்துவீங்கு திவவு" (பெரும்பாண். 12-3.)

கேள்வி போகிய நீள்விசித் தொடையல்
மணங்கமழ் மாதரை மண்ணி யன்ன
வணங்குமெய்ந் நின்ற வமைவரு காட்சி
யாறலை கள்வர் படைவிட வருளின்
மாறுதலை பெயர்க்கு மருவின் பாலை
வாரியும் வடித்து முந்தியு முறழ்ந்துந்
சீருடை நன்மொழி நீரொடு சிதறி
யறல்போற் கூந்தற் பிறைபோற் றிருநுதற்
கொலைவிற் புருவத்துக் கொழுங்கடை மழைக்க
ணிலவிதழ் புரையு மின்மொழித் துவர்வாய்ப்
பலவுறு முத்திற் பழிதீர் வெண்பன்
மயிர்குறை கருவி மாண்கடை யன்ன
பூங்குழை யூசற் பொறைசால் காதி
னாணடச் சாய்ந்த நலங்கிள ரெருத்தி
னாடமைப் பணைத்தோ ளரிமயிர் முன்கை
நெடுவரை மிசைஇய காந்தண் மெல்விரற்
கிளிவா யொப்பி னொளிவிடு வள்ளுகி
ரணங்கென வுருத்த சுணங்கணி யாகத்
தீர்க்கிடைப் போகா வேரிள வனமுலை
நீர்ப்பெயர்ச் சுழியி னிறைந்த கொப்பூழ்
முண்டென வுணரா வுயவு நடுவின்

---

19-20. "மைத்தடங்கண் மணமகளிர் கோலம்போல் வனப்பெய்தி" (சிலப். கானல்)

21. 'படையிட' என்றும் பாடம்.

23. "வார்தல் வடித்த லுந்த லுறழ்தல்" (சிலப். கானல்.)

16-24. "ஆய்தினை யளவைய வினையளவா ராய்பாங் கணிபெற வாரியும் வடித்து, மேயுற முறையே யுந்தியு முறழ்ந்து மியைந்தநீ ரோடுநன் மொழிக, டேய்வற வெடுத்துச் சிதறியும் பலகாற் றேறுற ழின்னிசை யெழுப்பி" (இலிங்க. காமதகனப். 24.)

29-30. "மயிரெறி கத்திரிகை யனையவாய்" (சீவக. 168); "மயிரெறி கருவி யன்ன" (கந்த. மாயை. 46); "மயிரெறி கருவி தனதிழி தொழிலை மதித்துமஞ் சிகையுறை தாங்க" (ஆனைக்கா. அகிலாண்ட. 38.)

36. "இடையீர் போகா விளமுலை யாளை." (தே. திருவோத். 2); "ஈர்க் கிடை போகா விளமுலை மாதர்" (திருவா. போற்றி. 34.); "ஈர்க்கிடை புகாவ வடிபரந் தோங்கு மேரிள வனமுலை" (நைடதம். சுயம்வரப். 77.)

வண்டிருப் பன்ன பல்கா ழல்கு
லிரும்பிடித் தடக்கையிற் செறிந்துதிரள் குறங்கிற்
பொருந்துமயி ரொழுகிய திருந்துதாட் கொப்ப
வருந்துநாய் நாவிற் பெருந்தகு சீறடி
யரக்குருக் கன்ன செந்நில னொதுங்கலிற்
பரற்பகை யுழந்த நோயொடு சிவணி
மரற்பழுத் தன்ன மறுகுநீர் மொக்கு
ணன்பக லந்தி நடையிடை விலக்கலிற்
பெடைமயி லுருவிற் பெருந்தகு பாடினி
பாடின பாணிக் கேற்ப நாடொறுங்
களிறு வழங்கதர்க் கானத் தல்கி
யிலையின் மராஅத்த வெவ்வந் தாங்கி
வலைவலந் தன்ன மென்னிழன் மருங்கிற்
காடுறை கடவுட்கடன் கழிப்பிய பின்றைப்
பீடுகெழு திருவிற் பெரும்பெயர் நோன்றாள்
முரசுமுழங்கு தானை மூவருங் கூடி
யரசவை யிருந்த தோற்றம் போலப்
பாடல் பற்றிய பயனுடை யெழாஅற்
கோடியர் தலைவ கொண்ட தறிந

---

39. "பாடுவண் டிருந்தவன்ன பல்கலையகலல்குல்" (சீவக. 1996)

42. "உயங்குநாய் நாவி னல்லெழி லசைஇ, வயங்கிழை யுலறிய வடி" (சிறுபாண். 17-8); "மதந்தபு ஞமலி நாவி னன்ன, துளங்கியல் மெலிந்த கல்பொரு சீறடி" (மலைபடு. 42-3); "முயல்வேட் டெழுந்த முடுகுவிசைக் கதநாய், நன்னாப் புரையுஞ் சீறடி" (நற். 252); "நாய்நாச் சீறடி" (சீவக. 2694); "வருந்துநாய் நாவி னணிகொள் சீறடி", "வருந்துநாய் நாவினன்ன மலரடி" (கூர்ம. இராமன்வனம். 15; ஷை இராமன்வைகுந்த. 28); "வருந்துயினது நாவினை வாட்டித், திருந்து வெண்மை யெழில் சேர்ந்த மலர்த்தாள்" (இலிங்க. அம்பரீடனை. 37.)

43. "அரக்கு விரித்தன்ன செந்நிலம்" (மலைபடு. 507); "அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழி" (அகநா. 14.)

44-5. இஃது இடத்திற்கு ஏற்ற உவமைக்கு மேற்கோள்; (இ-வி. சூ. 639 - உரை.)

47. செய்யுட்கண் பலதொகையும் விராய் வந்து ஒருசொல் நடைய தற்கு இது மேற்கோள். (தொல். எச்ச. சூ. 24 - ந.)

54. "முரசு முழங்கு தானை மூவருள்ளும்" (பெரும்பாண். 33; புறநா. (தொல். உவம. சூ. 33 - பே. ந.)

54-5. முரசடுத்ததற்கு மேற்கோள். (தொல். புறத்திணை. சூ. 31 - ந.)

54-7. இவை சிறப்புப்பற்றிவந்த உவமத்திற்கு மேற்கோள். (தொல். உவம. சூ. 4 - இளம். ந; இ - வி. சூ. 639)

கேள்வி போகிய நீள்விசித் தொடையன்
மணங்கமழ் மாதரை மண்ணி யன்ன
வணங்குமெய்ந் நின்ற வமைவரு காட்சி
யாறலை கள்வர் படைவிட வருளின்
மாறுதலை பெயர்க்கு மருவின் பாலை
வாரியும் வடித்து முந்தியு முறழ்ந்துஞ்
சீருடை நன்மொழி நீரொடு சிதறி
யறல்போற் கூந்தற் பிறைபோற் றிருநுதற்
கொலைவிற் புருவத்துக் கொழுங்கடை மழைக்க
ணிலவிதழ் புரையு மின்மொழித் துவர்வாய்ப்
பலவுறு முத்திற் பழிதீர் வெண்பன்
மயிர்குறை கருவி மாண்கடை யன்ன
பூங்குழை யூசற் பொறைசால் காதி
னாணடச் சாய்ந்த நலங்கிள ரெருத்தி
னாடமைப் பணைத்தோ ளரிமயிர் முன்கை
நெடுவரை மிசைஇய காந்தண் மெல்விரற்
கிளிவா யொப்பி னொளிவிடு வள்ளுகி
ரணங்கென வுருத்த சுணங்கணி யாகத்
தீர்க்கிடைப் போகா வேரிள வனமுலை
நீர்ப்பெயர்ச் சுழியி னிறைந்த கொப்பூழ்
முண்டென வுணரா வுயவு நடுவின்

---

19-20. "மைத்தடங்கண் மணமகளிர் கோலம்போல் வனப்பெய்தி" (சிலப். கானல்)

21. 'படையிட' என்றும் பாடம்.

23. "வார்தல் வடித்த லுந்த லுறழ்தல்" (சிலப. கானல்.)

16-24. "ஆய்தினை யளைய லிளையவா நரம்பாறு கணிபெற வாரியும் வடித்து, மேயுற முறையே யுந்தியு முறழ்ந்து மிசையந்நீ ரோடுநன் மொழிக, டேய்வற வெடுத்துச் சிதறியும் பலகாற் றேனுற ழின்னிசை யெழுப்பி" (இலிங்க. சாரங்கடைக். 24.)

29-30. "மயிர்செறி கத்திரிகை யனையவாய்" (சீவக. 168); "மயிர்செறி கருவி யன்ன" (கந்த. மாயை. 46); "மயிர்செறி கருவி தனையிழி தொழிலை மழித்துமஞ் சிகையுறை தாங்க" (ஆனைக்கா. அகிலாண்ட. 38.)

36. "இடையீர் போகா விளமுலை யாளை." (தே. திருவோத். 2); "ஈர்க் போகா விளமுலை மாதர்" (திருவா. போற்றி. 34.); "ஈர்க்கிடை புகாம லோங்கு மேரிள வனமுலை" (நைடதம். சுயம்வரப். 77.)

வண்டிருப் பன்ன பல்கா ழல்குல்
இரும்பிடித் தடக்கையிற் செறிந்துதிரள் குறங்கிற்
பொருந்துமயி ரொழுகிய திருந்துதாட் கொப்ப
வருந்துநாய் நாவிற் பெருந்தகு சீறடி
யரக்குருக் கன்ன செந்நில னொதுங்கலிற்
பரற்பகை யுழந்த நோயொடு சிவணி
மரற்பழுத் தன்ன மறுகுநீர் மொக்கு
ணன்பக லந்தி நடையிடை விலங்கலிற்
பெடைமயி லுருவிற் பெருந்தகு பாடினி
பாடின பாணிக் கேற்ப நாடொறுங்
களிறு வழங்கதர்க் கானத் தல்கி
யிலையின் மராஅத்த வெவ்வந் தாங்கி
வலைவலந் தன்ன மென்னிழன் மருங்கிற்
காடுறை கடவுட் கடன்கழிப் பிய பின்றைப்
பீடுகெழு திருவிற் பெரும்பெயர் நோன்றாண்
முரசுமுழங்கு தானை மூவருங் கூடி
யரசவை யிருந்த தோற்றம் போலப்
பாடல் பற்றிய பயனுடை யெழாஅற்
கோடியர் தலைவ கொண்ட தறிந

---

39. "பாடுவண்டிருந்தவன்ன பல்கலையகலல்குல்" (சீவக. 1996)

42. "உயங்குநாய் நாவி னல்லெழி லசைஇ, வயங்கிழை யுலறியவடி" (சிறுபாண். 17-8); "மதர்நடு ஞமலி நாவினன்ன, துளங்கியன் மெலிந்த கல்லாரு சீறடி" (மலைபடு. 42-3); "முயல்வேட் டெழுந்த முடுகுவிசைக் கதநாய், நன்னாப்புரையுஞ் சீறடி" (நற். 252); "நாய்நாச் சீறடி" (சீவக. 2691); "வருந்துநாய் நாவி னணிகொள் சீறடி", "வருந்துநாய் நாவினன்ன மலரடி" (கம்ப. இராமன்வனம். 15; ஷை இராமன்வைகுந்த. 28); "வருந்துயினது நாவினை வாட்டித், திருந்து வெண்மை யெழில் சேர்ந்த மலர்த்தாள்" (திருவிளை. அம்பரீடனை. 37.)

43. "அரக்கு விரித்தன்ன செந்நிலம்" (மலைபடு. 507); "அரக்கத்தன்ன செந்நிலப் பெருவழி" (அகநா. 14.)

44-5. இஃது இடத்திற்கு ஏற்ற உவமைக்கு மேற்கோள்; (இ-வி. சூ. 639 - உரை.)

47. செய்யுட்கண் பலதொகையும் விராய் வந்து ஒருசொல் நடையதற்கு இது மேற்கோள். (தொல். எச்ச. சூ. 24 - ந.)

54. "முரசு முழங்கு தானை மூவருள்ளும்" (பெரும்பாண். 33; புறநா. (தொல். கிளவி. சூ. 33 - சே. ந.)

54-5. முரசுடுத்ததற்கு மேற்கோள். (தொல். புறத்திணை. சூ. 31 - ந.)

54-7. இவை சிறப்புப்பற்றிவந்த உவமத்திற்கு மேற்கோள். (தொல். உவம. சூ. 4 - இளம். ந; இ - வி. சூ. 639)

வறியா மையி னெறிதிரிந் தொராஅ
தாற்றெதிர்ப் படுதலு நோற்றதன் பயனே
போற்றிக் கேண்மதி புகழ்மேம் படுந
வாடுபசி யுழந்தநின் னிரும்பே ரொக்கலொடு
நீடுபசி யொராஅல் வேண்டி னீடின்
றெழுமதி வாழி யேழின் கிழவ
பழுமர முள்ளிய பறவையின் யானுமவ
ணிழுமென் சும்மை யிடனுடை வரைப்பி
னசையுநர்த் தடையா நன்பெரு வாயி
லிசையேன் புக்கென் னிடும்பை தீர
வெய்த்த மெய்யே னெய்யே னாகிப்
பைத்த பாம்பின் றுத்தி யேய்ப்பக்
கைக்கச டிருந்தவென் கண்ணகன் றடாரி
யிருசீர்ப் பாணிக் கேற்ப விரிகதிர்
வெள்ளி முளைத்த நள்ளிருள் விடிய
லொன்றியான் பெட்டா வளவையி னொன்றிய
கேளிர் போலக் கேள்கொளல் வேண்டி
வேளாண் வாயில் வேட்பக் கூறிக்

---

59 : மலைபடு. 65 - 6.

61. நன். சூ. 397-மயிலை; நன் - வி. சூ. 398. மேற்.

64. "பழந்தேர் வாழ்க்கைப் பறவைபோல" (மதுரை. 576); "பழுமரந் தேரும் பறவைபோல" (பெரும்பாண். 20); "தாஅவஞ்சிறை நொப் பறை வாவல், பழுமரம் படரும்" (குறுந். 172); "யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன" (புறநா. 173); "மாக்களாற், புட்பயில் பழுமரப் பொலிவிற்று", "பார்கெழு பழுமரப் பறவை" (சீவக. 93, 828); "மரஞ்சேர் பறவையுந், தொக்குட னீண்டிச் சூழ்ந்தன விடாஅ, பழுமரத் தீண்டிய பறவையி னெழூஉம்" (மணி. 14: 24-7); "பாயதொன்மரப் பறவைபோல்" (திருவிளை. திருநகரப். 67.)

66 - 7. 'நசையுநர்க் கடையா......இசையெனப் புக்கு' என்றும் பாடம். "பொருநர்க் காயினும் புலவர்க் காயினு, மருமறை நாவி னந்தணர்க் காயினும் ......அடையாவாயில்" (சிறுபாண். 203-6); "நசையுநர்க் கடையா நன்பெரு வாயில்" (கூர்ம. சூரியன்மரபு. 13; நன். சூ. 457 - மயிலை; நன். வி. சூ. 458. மேற்.)

68. நன். சூ. 451 - மயிலை மேற்.

72. "வெள்ளி முளைத்த விடியல்" (பு - வெ பாடாண். 18)

73. "ஒன்றியான் பெட்டா வளவை யன்றே." (புறநா. 399)

கண்ணிற் காண நண்ணுவழி யிரீஇப்
பருகு வன்ன வருகா நோக்கமோ
டுருகு பவைபோ லென்பு குளிர்கொளீஇ
யீரும் பேனு மிருந்திறை கூடி
வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த
துன்னற் சிதாஅர் துவர நீக்கி
நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்
தரவுரி யன்ன வறுவை நல்கி
மழையென மருளு மகிழ்செய் மாடத்
திழையணி வனப்பி னின்னகை மகளிர்
போக்கில் பொலங்கல நிறையப் பல்கால்
வாக்குபு தரத்தர வருத்தம் வீட
வார வுண்டு பேரஞர் போக்கிச்

---

76. "கண்ணிற் காண நண்ணுவழி யிருந்து" (குறுந். 203)

77. "பருகு வன்ன காத லுள்ளமொடு" (அகநா. 399); "பருகுவான் போல நோக்கும்", "பருகுவனன் போனோக்கி" (பாக. 4: துருவன்பதம். 35; ஷை 10: சகடமுறைத்த. 21); "மலர்த்தடங் கண்ணே வாயாப், பருகுவான் போல நோக்கி" (கூர்ம. திருக்கல்யாண. 61.)

79. 'இமிர்ந்திறைகூடி' என்றும் பாடம்.

80. "தொன்றுபடு துளையொடு பருவிழை போகி" (புறநா. 376.)

81. "துன்னற் சிதாஅர் நீக்கி" (பொருந. 154)

80-81. "அரையது, வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅ ரோம்பி" (புறநா. 69.)

82. 'நோக்குநுழைவேலா' என்றும் பாடம்.

83. "குரவ மெல்லரும் பன்னவெங் கூரெயிற் றரவின், உரிவை யன்னவா னுண்டுகில்" (பாக. 10: கோவியர்துகில். 9); "பாழிவா யரவி னுரிங்க ளாடை" (இலிங்க.- அம்பரீடனை. 56); "பைபயர வுரியி னன்ன நடைப் படாம்" (திருவிளை. திருமண. 147.)

84. "மலையென மழையென மாட மோங்கி" (மலைபடு. 484); "சேறு செய் மாரியி னளிக்குநின் சாறுபடு திருவி னனைமகி ழானே" (பதிற். 65.)

85. "இன்னகை யாயமோ டிருந்தோற் குறுகி" (சிறுபாண். 220.)

84-8. "விளங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய, மணங்கமழ் தேறன் மடுப்ப நாளு, மகிழ்ந்தினி துறைமதி பெரும" (மதுரை. 779-81); "தண் கமழ் தேறல், பொன்செய் புனைகலத் தேந்தி நாளு, மொண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து" (புறநா. 56)

86-8. பகரவுகரம் இறந்தகால வினையெச்சமாக வருமென்பதற்கு இவ் வடிகள் மேற்கோள்; (தொல். வினை. சூ. 31 - ந; இ-வி. சூ. 246)

செருக்கொடு நின்ற காலை மற்றவன்
திருக்கிளர் கோயி லொருசிறைத் தங்கித்
தவஞ்செய் மாக்க டம்முடம் பிடாஅ
த்தன்பய மெய்திய வளவை மான
வாறுசெல் வருத்த மகல நீக்கி
யனந்தர் நடுக்க மல்ல தியாவது
மனங்கவல் பின்றி மாழாந் தெழுந்து
மாலை யன்னதோர் புன்மையுங் காலைக்
கண்டோர் மருளும் வண்டுசூழ் நிலையுங்
கனவென மருண்டவென் னெஞ்சே மாப்ப
வல்லஞர் பொத்திய மனமகிழ் சிறப்பக்
கல்லா விளைஞர் சொல்லிக் காட்டக்
கதுமெனக் கரைந்து வம்மெனக் கூஉ
யதன்முறை கழிப்பிய பின்றைப் பதனறிந்து
துராஅய்த் துற்றிய துருவையம் புழுக்கின்
பராரை வேவை பருகெனத் தண்டிக்
காழிற் சுட்ட கோழூன் கொழுங்குறை
யூழி னூழின் வாய்வெய் தொற்றி
யவையவை முனிகுவ மெனினே சுவைய
வேறுபல் லுருவின் விரகு தந்திரீஇ

---

91-2. "இடம்படு புகழ்ச்சனகர் கோனினிது பேண .....உடம்பெ துறக்கக ருற்றவரை யொத்தார்", "இறைவன் சொல்லெனு மின்மை வருந்தினர் யாரும்......உறையும் விண்ணக முடலொடு மெய்தின ரொத்தார் (கம்ப. கடிமண. 1 ; ஷை மந்திர. 75)

94. "துழந்தடு கள்ளின் றேறலுண் டயர்ந்து, பழஞ்செருக் குற்ற வனந்தர்ப் பாணியும்" (மணி. 7: 71-2) ; "அரிய லார்ந்த வனந்தர்" (தணி- நாடு. 100.)

96. "ஆடரவக் கிண்கிணிக்கா லன்னானோர் சேடனை" (தே. திருநா.)

96-7. "பண்டறி வாரா வுருவோடு" (புறநா. 376.)

98. "கனவிற் கண்டாங்கு வருந்தா திருப்ப, நனவி னல்கியோ னை ரேன்றல்", "கனவென மருள வல்லே நனவி, னல்கி யோனே ரேன்றல்" (புறநா. 356, 387.)

107-8. "ஊனு மூனு முனையி னினிதெனப், பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும், மனவுபு கலந்து மெல்லியது பருகி" (புறநா. 381.)

மண்ணமை முழவின் பண்ணமை சீறியா
ழொண்ணுதல் விறலியர் பாணி தூங்க
மகிழ்ப்பதம் பன்னாட் கழிப்பி யொருநா
ளவிழ்ப்பதங் கொள்கென் றிரப்ப முகிழ்த்தகை
முரவை போகிய முரியா வரிசி
விரலென நிமிர்ந்த நிரலமை புழுக்கல்
பரல்வறைக் கருனை காடியின் மிதப்ப
வயின்ற காலைப் பயின்றினி திருந்து
கொல்லை யுழுகொழு வேய்ப்பப் பல்லே
யெல்லையு மிரவு மூன்றின்று மழுங்கி
யுயிர்ப்பிடம் பெறாஅ தூண்முனிந் தொருநாட்
செயிர்த்தெழு தெவ்வர் திறைதுறை போகிய
செல்வ சேறுமெந் தொல்பதிப் பெயர்ந்தென
மெல்லெனக் கிளந்தன மாக வல்லே
யகறி ரோவெம் மாயம் விட்டெனச்
சிரறிய வன்போற் செயிர்த்த நோக்கமொடு
துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு
பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கெனத்
தன்னறி யளவையிற் றரத்தர யானு
மென்னறி யளவையின் வேண்டுவ முகந்துகொண்
டின்மை தீர வந்தனென் வென்வேல்
லுருவப் பஃறே ரிளையோன் சிறுவன்

113-5. "முரவை போகிய முரிவில்லான் மூரல்பால் வறையல், கருனை" (திருவிளை. குண்டோதரனுக்கு. 14.)

121-2. "செல்வேந் தில்லவெந் தொல்பதிப் பெயர்ந்தென, மெல்லெனக் கூறி விடுப்பின்" (மலைபடு. 567-8.)

125. 'துடிபுரையடிய' என்றும் பாடம். "துடியடிக் கயந்தலை" (கலி.11).

126-7. யானைகொடுக்கப்படுதலைப் புறநானூறு, 129, 130, 131, 135, 151-ஆம் பாட்டுக்கள் முதலியவற்றாலுணர்க; "குன்றுகிய பொன்னும் வேழக் குழாமுங் கொடை புகழ்ந்து, சென்றோர் முகக்கும்" (தஞ்சை. 149.)

129. 'வென்வேல்' என்றும் பாடம்.

119-129. பரிசிலன் யான் போகல் வேண்டுமெனக் கூறி, விடுத்தபின் அவன் தந்த வளனை உயர்த்துக் கூறியதற்கு இது மேற்கோள்;' (தொல். புறத்திணை. சூ. 36 - ந.)

130. 'உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி அழுந்தூர்வேளிடை மகட் கோடலும், அவன் மகனாகிய கரிகாற் பெருவளத்தான் நாங்கூர்வேளிடை மகட் கோடலும்' (தொல். அகத்திணை. சூ. 30 - ந.)

முருகற் சீற்றத் துருகெழு குருசி
றாய்வயிற் றிருந்து தாய மெய்தி
யெய்யாத் தெவ்வ ரேவல் கேட்பச்
செய்யார் தேஎந் தெருமரல் கலிப்பப்
பௌவ மீமிசைப் பகற்கதிர் பரப்பி
வெவ்வெஞ் செல்வன் விசும்புபடர்ந் தாங்குப்
பிறந்துதவழ் கற்றதற் றொட்டுச் சிறந்தநன்
னாடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப
வாளி நன்மா னணங்குடைக் குருளை
மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி
முலைக்கோள் விடாஅ மாத்திரை ஞெரேரெனத்
தலைக்கோள் வேட்டங் களிறட் டாஅங்
கிரும்பனம் போந்தைத் தோடுங் கருஞ்சினை
யரவாய் வேம்பி னங்குழைத் தெரியலு
மோங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த
விருபெரு வேந்தரு மொருகளத் தவிய
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாட்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்
றாணிழன் மருங்கி லணுகுபு குறுகித்
தொழுதுமுன் னிற்குவி ராயிற் பழுதின்
றீற்றா விருப்பிற் போற்றுபு நோக்கிநுந்

---

131. "முருகனன்னசீற்றத்து" (அகநா. 158); "முருகற் சீற்றத் துரு கெழு குருசில்" (புறநா. 16.)

132. "உருகெழுதாய மூழினெய்தி" (பட்டினப். 227.)

137. 'கற்றது தொட்டுஞ் சிறந்த' என்றும் பாடம். "கரியவன்றவழ் கற்றனன்" (பாக. 10 : சகடமுதைத்த. 11.)

141. "அரவாய்க் கடிப்பகை" (மணி. 7 : 73.); "அரவிகரிலை நிம்பத் தார்" (திருவிளை. அன்னக்குழியும். 21.)

147. 'வெண்ணிற்றாக்கிய' என்றும் பாடம்; (புறநா. 66.)

137-48: "முலைமுத றுறந்த வன்றே மூரித்தா ளாளி யானைத், தலைநிலம் புரள வெண்கோ டுண்டதே போன்று தன்கைச், சிலையிடம் பிடித்த ஞான்றே தெவ்வரைச் செகுத்த நம்பி, நிலவுமிழ் குடையி னீழற் றுஞ்சுக வைய மென்பார்." (சீவக. 2554.)

148. "கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்" (சிறுபாண். 65.)

149. 'மருங்கினணுகுபு' என்றும் பாடம்.

151. 'போற்றுவனநோக்கி' என்றும் பாடம்.

கையது கேளா வளவை யொய்யெனப்
பாசி வேரின் மாசொடு குறைந்த
துன்னற் சிதாஅர் நீக்கித் தூய
கொட்டைக் கரைய பட்டுடை நல்கிப்
பெறலருங் கலத்திற் பெட்டாங் குண்கெனப்
பூக்கமழ் தேறல் வாக்குபு தரத்தர
வைகல் வைகல் கைகவி பருகி
யெரியகைந் தன்ன வேடி றாமரை
சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி
நூலின் வலவா நுணங்கரின் மாலை
வாலொளி முத்தமொடு பாடினி யணியக்
கோட்டிற் செய்த கொடிஞ்சி நெடுந்தே
ரூட்டுளை துயல்வர வோரி நுடங்கப்
பால்புரை புரவி நால்குடன் பூட்டிக்
காலி னேழடிப் பின்சென்று கோலின்
றாறுகளைந் தேறென் றேற்றி வீறுபெறு
பேர்யாழ் முறையுளிக் கழிப்பி நீர்வாய்த்
தண்பணை தழீஇய தளரா விருக்கை
நன்பல் லூர நாட்டொடு நன்பல்

152. 'கையதுகொள்ளா' என்றும் பாடம்.

153. 'மாசொடுமிடைந்த' என்றும் பாடம்.

153-4. "பாசியன்ன சிதர்வை" (பெரும்பாண். 468); "முதுநீர்ப்பாசி யன்னவுடை", "பகட்டிலைப்பாசி, வேர்புரை சிதாஅர்" (புறநா. 390, 392.)

159. "எரியகைந்தன்ன தாமரை" (அகநா. 106, 116)

159-62. "ஒள்ளழற் புரிந்த தாமரை, வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே", "அழல்புரிந்த வடர்தாமரை, யைதடர்ந்த நூற்பெய்து, புனைவினைப் பொலிந்த பொலனறுந் தெரியல், பாறுமயி ரிருந்தலை பொலியச் சூடி", "கிள்ளிவளவற் படர்குவையாயின் ..... ஆடும்வண் டிமிரா தாமரை, சூடா யாதலதனினு மிலையே", "பாடினி மாலையணிய, வாடாத் தாமரை சூட்டுவ னினக்கே", 'வாடாமாலை பாடினி யணியப், பாணன் சென்னிக் கேணி பூவா, வெரிமரு டாமரைப் பெருமலர்தயங்க" (புறநா. 11, 29, 69, 319, 364.)

163. "கோட்டினிற்புரி கொடிஞ்சியந்தேர்", "யானைக்கோட்டினிய ற்றுதிண்டேர்" (பாக. 1· தன்மபுத்திரன்அரசு. 18; ஷை 10· திருவவதார. 18.); (தொல். வேற்றுமை. சூ. 17 ந. மேற்.)

165. "நால்கு பண்ணினர் நால்வரு மேறினர்" (சீவக. 1774. மேற்.)

168. 'முறையுளிகழிப்பி' என்றும் பாடம்.

வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை
வெருவரு செலவின் வெகுளி வேழந்
தரவிடைத் தங்கலோ விலனே வரவிடைப்
பெற்றவை பிறர்பிறர்க் கார்த்தித் தெற்றெனச்
செலவுகடைக் கூட்டுதி ராயிற் பலபுலந்து
நில்லா வுலகத்து நிலைமை தூக்கிச்
செல்கென விடுக்குவ னல்ல னொல்லெனத்
திரைபிறழிய விரும்பௌவத்துக்
கரைசூழ்ந்த வகன்கிடக்கை
மாமாவின் வயின்வயினெற்
றூழ்தாழைத் தண்டண்டலைக்
கூடுகெழீஇய குடிவயினாற்
செஞ்சோற்ற பலிமாந்திய
கருங்காக்கை கவவுமுனையின்
மனைநொச்சி நிழலாங்க
ணீற்றி யாமை தன்பார்ப் போம்பவு
மிளையோர் வண்ட லயரவு முதியோ
ரவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவு
முடக்காஞ்சிச் செம்மருதின்
மடக்கண்ண மயிலாலப்
பைம்பாகற் பழந்துணரிய
செஞ்சுளைய கனிமாந்தி
யறைக்கரும்பி னரிநெல்லி

---

172. 'வெருவருஞ்செலவின்' என்றும் பாடம்.

171-2. "நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப், பறையறைந் தல்லது செல்லற்க." (கலி. 56.); "பறைநிறை கொல்யானை", "அறைபறை யானை" (முத்.); "முரசதிர்ந் தானைமுன் னோட முன்பணிந் தன்பர்களேத்த" (தே. ஆரூர்.)

176. 'நிலைமைநோக்கி' என்றும் பாடம். "நில்லாவுலகத்து நிலைமை தூக்கி" (பெரும்பாண். 466.)

180. 'வயின்வயினின்' என்றும் பாடம்.

181. வெண்பாவுரிச்சீரால் தூங்கலோசை பிறந்ததற்கு இவ்வடிமேற்கோள்; (தொல். செய். சூ. 22.)

182. 'கூடு குழீஇய' என்றும் பாடம்.

183-4. கருத்து: குறுந். 210; திருச்சிற் 235.

188. 'பகைமுரண் சொலவும்' என்றும் பாடம்.

191-2. (சிலப். 16 : 24. மேற்.)

வினைக்களம ரிசைபெருக
வறளடும்பி னிவர்பகன்றைத்
தளிர்ப்புன்கின் றாழ்காவி
னனைஞாழலொடு மரங்குழீஇய
வவண்முனையி னகன்றுமாறி
யவிழ்தளவி னகன்றோன்றி
நகுமுல்லை யுகுதேறுவீப்
பொற்கொன்றை மணிக்காயா
நற்புறவி னடைமுனையிற்
சுறவழங்கு மிரும்பௌவத்
திறவருந்திய வினநாரை
பூம்புன்னைச் சினைச்சேப்பி
னோங்குதிரை யொலிவெரீஇத்
தீம்பெண்ணை மடற்சேப்பவுங்
கோட்டெங்கின் குலைவாழைக்
கொழுங்காந்தண் மலர்நாகத்துத்
துடிக்குடிஞைக் குடிப்பாக்கத்
தியாழ்வண்டின் கொளைக்கேற்பக்
கலவம்விரித்த மடமஞ்ஞை
நிலவெக்கர்ப் பலபெயரத்
தேனெய்யொடு கிழங்குமாறியோர்
மீனெய்யொடு நறவுமறுகவுந்
தீங்கரும்போ டவல்வகுத்தோர்
மான்குறையொடு மதுமறுகவுங்
குறிஞ்சி பரதவர் பாட நெய்த
னறும்பூங் கண்ணி குறவர் சூடக்
கானவர் மருதம் பாட வகவர்
நீனிற முல்லைப் பஃறிணை நுவலக்
கானக்கோழி கதிர்குத்த
மனைக்கோழி தினைக்கவர

---

202. 'முனையின்' என்றும் பாடம்.

210. "உருமிடி மகுளியிற் பொருடெரிந் திசைக்குங், கடுங்குரற் குடி ஞைய நெடும்பெருங் குன்றம்" (அகநா. 19); "கடுந்துடி, புலிதுஞ்சு நெடு ரக் குடிஞையோ டிரட்டு மலை" (புறநா. 179.)

213. "நிலவுமணல் வியன்கானல்" (புறநா. 17.)

வரைமந்தி கழிமூழ்கக்
கழிநாரை வரையிறுப்பத்
தண்வைப்பினா னாடுகுழீஇ
மண்மருங்கினான் மறுவின்றி
யொருகுடையா னொன்றுகூறப்
பெரிதாண்ட பெருங்கேண்மை
யறனொடு புணர்ந்த திறனறி செங்கோ
லன்னோன் வாழி வெல்வேற் குருசின்
மன்னர் நடுங்கத் தோன்றிப் பன்மா
ணெல்லை தருநன் பல்கதிர் பரப்பிக்
குல்லை கரியவுங் கோடெரி நைப்பவு
மருவி மாமலை நிழத்தவு மற்றக்
கருவி வானங் கடற்கோண் மறப்பவும்
பெருவற னாகிய பண்பில் காலையு
நறையு நரந்தமு மகிலு மாரமுந்
துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி
நுரைத்தலைக் குரைப்புனல் வரைப்பகம் புகுதொறும்
புனலாடு மகளிர் கதுமெனக் குடையக்
கூனிக் குயத்தின் வாய்நெல் லரிந்து
சூடுகோ டாகப் பிறக்கி நாடொறுங்
குன்றெனக் குவைஇய குன்றாக் குப்பை
கடுந்தெற்று மூடையி னிடங்கெடக் கிடக்குஞ்
சாலி நெல்லின் சிறைகொள் வேலி
யாயிரம் விளையுட் டாகக்
காவிரி புரக்கு நாடுகிழ வோனே.

---

226. 'நாடு கெழீஇ' என்றும் பாடம்.
234. "பரந்துபடு கூரெரி கானலைப்ப, மரந்தீயுற்ற" (நற். 177.)
238. "நறுவீ நாகமு மகிலு மாரமும்" (சிறுபாண். 116.)
242. (சிலப். 16: 30 - மேற்)
241. "குடகாற்றெறிந்த குப்பை வடபாற், செம்பொன் மலையிற் சிறப்பத் தோன்றும்" (பெரும்பாண். 240-41.)
246-7. "வேலியாயிரம் விளைகவின் வயலே" (புறநா. 391; சிலப். 6: 30 - மேற்.); "வாலிதாமுளை யொருபுறம் வளர் செறு வொருசார், பாலி னெல்லொரு சாரொரு சாரரிப் பறம்பு, சாலிவேலை யோர் சாரிவைதலை மயக்குற லால், வேலியாயிரம் விளையு ளென்பது மிதன்மேற்றே" (சீகாழித்-திருநகர். 9.) (தொல். வினை. சூ. 24. ந. மேற்.)
248. (நன். சூ. 182 - மயிலை. மேற்; நன் - வி. சூ. 183 - மேற்)
246-8. (இ - வி. சூ. 102 - மேற்)

## இதன்பொருள்.

1. அறாஅ யாணர் அகல் தலை பேர் ஊர்—இடையறாத செல்வவருவாயினையுடைய அகன்ற இடத்தையுடைய பெரிய ஊர்களிடத்து,

2. சாறு கழி வழி நாள் சோறு நசை உறாது—விழாக்கழிந்த பின்னாளில் ஆண்டுப் பெறுகின்ற சோற்றை விரும்புதல் செய்யாது,

3. வேறு புலம் முன்னிய விரகு அறி பொருந—விழாக்கொண்டாடும் வேற்றுப்புலத்தைக் கருதிய * விரகையறிந்த பொருந,

இஃது அண்மைவிளி.

4. குளப்பு வழி அன்ன கவடு படு பத்தல்—மான்குளம்பழுத்திய இடத்தையொத்த இரண்டருகும்தாழ்ந்து நடுவுயர்ந்த பத்தலினையும்,

5. விளக்கு அழல் உருவின் விசி உறு பச்சை—விளக்கினது எரிகின்ற நிறத்தையுடைய விசித்துப் போர்த்தலுற்ற தோல்,

6. எய்யா இள சூல் செய்யோள் அவயிறு—மிக அறியப்படாத இளைய சூலையுடைய சிவந்த நிறத்தையுடையோளது அழகினையுடைய வயிற்றின்,

செய்யோளென்றார், மயிரொழுங்கு விளங்கித் தோற்றுதற்கு.

7. ஐது மயிர் ஒழுகிய தோற்றம் போல—ஐதாகிய மயிர் ஒழுங்குபடக் கிடந்த தோற்றரவுபோல,

8. பொல்லம் பொத்திய பொதி உறு போர்வை—இரண்டுதலையுங் கூட்டிதைத்த மாத்தைப்பொதிதலுறும் போர்வையினையும்,

9-10. அளை வாழ் அலவன் கண் கண்டன்ன துளை வாய் தூர்ந்த துரப்பு அமை ஆணி—முழையிலே வாழ்கின்ற ஞெண்டின்கண்ணைக் கண்டாலொத்த பத்தலிரண்டுஞ்சேர்த்தற்குத் திறந்த துளைகளின் வாய் மறைதற்குக்காரணமாகிய முடுக்குதலமைந்த ஆணியினையும்,

தோல் நெகிழாமல் முடுக்கின ஆணியென்றுமுரைப்பர்; அன்ன ஆணியென்க.

11-2. எண் நாள் திங்கள் வடிவிற்று ஆகி அண்ணா இல்லா அமை வரு வறுவாய்—உவாவிற்கு எட்டாநாளில் திங்களின்வடிவை உடைத்தாய் உண்ணாக்கில்லாத பொருந்துதல்வந்த வறிய வாயினையும்,

13. பாம்பு அணந்தன்ன ஓங்கு இரு மருப்பின—பாம்பு தலையெடுத்தாலொத்த ஓங்கின கரிய தண்டினையும்,

14. மாயோள் முன்கை ஆய் தொடி கடுக்கும் திவவின (15)—கரிய நிறத்தையுடையோளுடைய முன்கையில் அழகினையுடைய நேர்ந்த தொடியையொக்கும் வார்க்கட்டினையும்,

15. கண்கூடு இருக்கை திண் பிணி திவவு—ஒன்றோடொன்று நெருங்கின இருப்பையுடைத்தாகிய திண்பிணிப்பினையுடைய திவவு.

இது நரம்புதுவக்கப்படுவது.

* விரகு - உபாயம்.

16-8. ஆய் தினை அரிசி அவையல் அன்ன வேய்வை போகிய உரை நரம்பின் கேள்வி போகிய நீள் விசி தொடையல்—அழகினையுடைய யரிசியிற் குத்தலரிசியையொத்த குற்றம்போகிய விரலாலசைக்கும் நரம்பு யுடைய இசைமுற்றுப்பெற்ற நீண்ட விசித்தலையுடைய தொடர்ச்சியினையும்,

19. மணம் கமழ் மாதரை மண்ணி அன்ன காட்சி (20)—[illegible] செய்தமை தோற்றுகின்ற மாதரை ஒப்பித்தாலொத்த அழகினையுமுடைய,

20. அணங்கு மெய் நின்ற அமை வரு காட்சி—* யாழிற்குரியதெய்வம் தன்னிடத்தேநின்ற இலக்கணம் அமைதல்வரும் அழகு.

21. ஆறு அலை கள்வர் படைவிட—வழியைஅலைக்கின்ற கள்வர் கையிற் படைக்கலங்களைக் கைவிடும்படி,

21-2. அருளின் மாறு தலை பெயர்க்கும் மருவு இன் பாலை—அருளின மாறுகிய மறத்தினை அவர்களிடத்துநின்று பெயர்க்கும் மருவுதலினிய பாலையாழை,

பாலை, ஆகுபெயர்.

"கோடே பத்த ராணி நரம்பே, மாடக மெனவரும் வகையின தாகும் என்றதனால் மாடகமொழிந்தன கூறினார்

பத்தலினையும் (4), பொல்லம்பொத்திய (8) பசசையாகிய (5) போர்வையினையும் (8), ஆணியினையும் (11), வறுவாயினையும் (12), மருப்பினை (13), வார்க்கட்டினையும் (15), நரம்பின்றொடர்ச்சியினையும் (18), காட்சி யும் (20) உடைய பாலையாழெனமுடிக்க.

"கொன்றை கருங்காலி குமிழ்முருக்குத தணக்கே" எனபதனால் கோட்டிற்கு மரம் கொன்றையும கருங்காலியுமாம்; குமிழும், முருக்கும், [illegible] பத்தற்குமரம்.

23. வாரியும—நரமபுகளைக் கூடத் தழுவியும,

வடித்தும்—உருவியும்,

உந்தியும்—தெறித்தும்,

உறழ்ந்தும்—ஒன்றைவிட்டு ஒன்றைத்தெறிததும்,

வடித்தல்—நரம்பெறிதலென்றுமுரைப்பர்.

24. சீர் உடை நல் மொழி நீரொடு சிதறி—சீரையுடைத்தாகிய † தே பாணிகளை நீர்மையுடன் பரக்கப்பாடி,

‡ சீரெனவே பாணியும் தூக்கும் உளவாயின.

25. அறல் போல் கூந்தல்—ஆற்றறல்போலும் கூந்தலினையும,

பிறை போல் திரு நுதல்—பிறைபோல அழகினையுடைய § நுதலினையும்

* யாழிற்குரிய தெய்வம் மாதங்கி; (சீவக. 411, 550 - ந.)

† தேவபாணி - தெய்வங்களைத் துதிக்கும்பாட்டு; (சிலப். கடவுடு. 35)

‡ சீர் முதலியவை தாளவிசேடங்கள்; சீர் முடியுங்காலத்தைத் தன்னிடத்தே உடையது; பாணி எடுக்குங்காலத்தைத் தன்னிடத்தே உடையது; தூக்கு நிகழுங் காலத்தைத் தன்னிடத்தே உடையது; (கலி. கடவுள். ந.)

§ நுதல் - நெற்றி.

26. கொலை வில் புருவத்து—கொலைத்தொழிலையுடைய விற்போலும் புருவத்தினையும்,

கொழு கடை மழை கண்—அழகிய கடையினையுடைய குளிர்ச்சியை யுடைய கண்ணினையும்,

27. இலவு இதழ் புரையும் இன் மொழி துவர் வாய்—இலவினது இதழையொக்கும் இனிய சொல்லையுடைய செம்மையுடைத்தாகிய வாயினையும்,

28. பல உறு முத்தின் பழி தீர் வெள் பல்—பலவுஞ்சேர்ந்த முத்துக்கள் போற் குற்றந்தீர்ந்த வெள்ளிய பல்லினையும்,

பலவுறுதலென்றார், ஒருகோவையாயிருத்தலின்; இனிப் பலவிலையுற்ற முத்தென்றுமாம்.

29-30. [மயிர்குறை கருவி மாண்கடை யன்ன, பூங்குழையூசற் பொறை சால் காதின்:]

மயிர் குறை கருவி மாண் கடை அன்ன காதின்—மயிரைவெட்டுகின்ற கத்தரிகையினுடைய மாட்சிமைப்பட்ட குழைச்சையொத்த காதினையும்,

பூ குழை ஊசல் பொறை சால் காது—பொலிவினையுடைய மகரக்குழையினுடைய அசைவினைப் பொறுத்தலமைந்த காது.

31. நாண் அட சாய்ந்த நலம் கிளர் எருத்தின்—நாணம் வருத்தலாற் பிறரைநோக்காதுகவிழ்ந்த நன்மைவிளங்குகின்ற கழுத்தினையும்,

32. ஆடு அமை பணை தோள்—அசைகின்ற மூங்கில்போலும் பெருத்தலையுடைய தோளினையும்,

அரி மயிர் முன்கை—ஐம்மைமயிரினையுடைய முன்கையினையும்,

33. நெடு வரை மிசைஇய காந்தள் மெல் விரல்—நெடிய மலையின் உச்சியிடத்தனவாகிய காந்தள்போலும் மெல்லிதாகிய விரலினையும்,

34. கிளி வாய் ஒப்பின் ஒளி இடு வள் உகிர்—கிளியினது வாயோடு ஒப்பினையுடைய ஒளிவிடுகின்ற பெருமையையுடைத்தாகிய உகிரினையும்,

35. அணங்கு என உருத்த சுணங்கு அணி ஆகத்து முலை(36)—பிறர்க்கு வருத்தமெனத் தோற்றின சுணங்கணிந்த மார்பிடத்து முலையினையும்,

36. ஈர்க்கு இடை போகா ஏர் இள வனம் முலை—ஈர்க்கும் நடுவேபோகாத எழுச்சியையுடைய இளைய அழகினையுடைய முலை.

37. நீர் பெயர் சுழியின் நிறைந்த கொப்பூழ்—நீரிடத்துப் பெயர்தலையுடைய சுழிபோல உத்தமவிலக்கணங்கள் நிறைந்த கொப்பூழினையும்,

38. உண்டென உணரா உயவும் நடுவின்—உண்டென்று பிறருணரப் படாத வருந்துமிடையினையும்,

உயவினென்று பாடமாயின், வருந்துதலையுடையவென்க.

39. வண்டு இருப்பு அன்ன பல் காழ் அல்குல்—பல வண்டினங்களின் இருப்பையொத்த பல மணிகோத்த வடங்களையுடைய * மேகலையணிந்த அல்குலையும்,

* "எண்கோவை மேகலை" (பக். 22.)

காழ், ஆகுபெயர்.

40. இரு பிடி தடகையின் செறிந்து திரள் குறங்கின்—பெரிய பிடியினுடைய பெருமையையுடைய கைபோல ஒழுகவாய்ந்து மெல்லிதாகத் தம்முட் செருங்கி ஒன்றித்திரண்ட * குறங்கினையும்,

41. பொருந்து மயிர் ஒழுகிய திருந்து தாட்கு ஒப்ப — கணைக்காற்கு இலக்கணமென்றற்குப் பொருந்தின மயிர் ஒழுங்குபட்ட வினையிலக்கணங்கள் திருந்தின கணைக்காலுக்குப் பொருந்த,

42. [வருந்துநாய் நாவிற் பெருந்தகு சீறடி :]

வருந்து நாய் நாவின் சிறு அடி—ஓடியிளைத்த நாயினது நாப்போலச் சிறிய அடியினையும்,

41-2. தாட்கு ஒப்ப பெரு தகு அடி—தாளுக்குப்பொருந்தப் பெருமை தக்கிருக்குமடியென்க.

† பெருவென்னுமுதனிலை பெருமையுணர்த்திநின்றது.

43. அரக்கு உருக்கு அன்ன செ நிலன் ஒதுங்கலின்—சாதிலிங்கத்தை உருக்கினதன்மையொத்த செய்யநிலத்தே நடக்கையினாலே,

44. பரல் பகை உழந்த நோயொடு சிவணி—சுக்கான்கல்லாகிய பகையாலே வருந்தின நோயோடேபொருந்தி,

45. மரல் பழுத்தன்ன மறுகு சீர் மொக்குள்—மரற்பழுத்தாற்போன் துளும்புநீரையுடைய கொப்புளம்,

46. நல் பகல் அந்தி நடை இடை விலங்கலின்—நன்றாகிய உச்சிக்காமான சந்தியிலே நடத்தலை நடுவே தவிர்தலாலே,

47. பெடை மயில் உருவின் பெரு தகு பாடினி—பெடைமயிலுருவின், மயில்போலும் சாயலினையுமுடைய கல்விப்பெருமை தக்கிருக்கின்ற பாடினி,

கூந்தலினையும் நுதலினையும் (25) புருவத்தினையும் கண்ணினையும் (26) வாயினையும் (27) பல்லினையும (28) காதினையும் (30) எருத்தினையும் (31) தோளினையும் கையினையும் (32) விரலினையும் (33) உகிரினையும் (34) முலையினையும் (36) கொப்பூழினையும் (37) நடுவினையும் (38) அல்குலினையும் (39) குறங்கினையும் (40) சீறடியினையும் (42) உருவினையுமுடைய பாடினியென்க.

இங்ஙனம் சீறடியுங்கூட்டி எண்ணுக்கால் தலைமுதல் அடியீறின்றாகக் கூறற்றாம்.

48. பாடின பாணிக்கு.ஏற்ப—பாடின தாளத்திற்குப் பொருந்த,

48-9. நாள் தொறும் களிறு வழங்கு அதர் கானத்து அல்கி—நாடோறும் யானையுலாவரும் வழியையுடைய காட்டிடத்தே தங்கி,

---

* குறங்கு - தொடை.

† "கருவார் பொழில்" (தே. பிரமபுரம்), "கருக்கொள் சோலை" (தே. ஆரூர்) என்பவற்றில், கருவென்னுமுதனிலை கருமையையுணர்த்தி நின்றமை காண்க.

50-51. [இலையின் மராஅத்த வெவ்வந் தாங்கி, வலைவலந் தன்ன மெ னிழன் மருங்கின்:]

இலை இல் மராஅத்த வலை வலந்தன்ன மெல் நிழல் மருங்கில் — இலையி லாத மராத்திடத்தனவாகிய வலையை மேலேகட்டினாலொத்த மெல்லியநிழ லிடத்தே,

எவ்வம் தாங்கி — கொப்புளால்வந்த வருத்தந்தாங்கி,

இனி ஞாயிற்றின் வெம்மையால் தனக்குவந்த எவ்வத்தைத்தாங்கி இலை யில்லாத மராமரமெண மராமரத்தின்மேல் ஏற்றுதலுமாம்.

52. காடு உறை கடவுள் கடன் கழிப்பிய பின்றை — காட்டின்கண்ணே தங்குகின்ற தெய்வத்திற்கு மனமகிழ்ச்சியாகச்செய்யும் முறைமைகளைச் செய்து விட்டபின்பு,

பொருந (3), பாடினி (47) செந்நிலனொதுங்கலின் (43) அவளடிகள் (42) பரற்பகையுழந்த நோயொடுசிவணித் (44) தம்மிடத்தேகொண்ட மொக்குளால் (45) தனக்குவந்த வருத்தத்தைத் தாங்கித் (50) தான் நடையைத்தவிர்தலாலே (46) கானத்தின் (49) மென்னிழன் மருங்கிற் (51) றங்கிப் (49) பாலையாழை (22) வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும் (23) வாசித்து, பாடின பாணிக்கேற்பச் (48) சீருடைநன்மொழி நீரொடுசிதறிக் (24) காடுறைகடவுட் கடன் கழிப்பியபின்றையெனமுடிக்க.

கடன்கழித்தல் - நடாரியைவாசித்தல்.

53-4. பீடு கெழு திருவின் பெரு பெயர் நோன் தாள் முரசு முழங்கு தானை மூவரும் கூடி — பெருமைபொருந்தின செல்வத்தையும் பெரிய பெயர்களை யும் வலியையுடைய முயற்சியையும் வெற்றிமுரசுமுழங்கும் படையினையு முடைய சேர சோழபாண்டியர் தம்மிற் பகைமைநீங்கிச் சேர்ந்து,

55. அரசு அவை இருந்த தோற்றம் போல செல்வக்குறைபாடின்றி அரசிருத்தற்குரிய அவையாகவிருந்த தோற்றரவுபோல,

தோற்றம்போல இன்மைதீரவந்தனென் (129) என மேலேகூட்டுக.

இனி அரசவையிருந்த தோற்றம்போல வலிவும் மெலிவும் சமனுமாகப் பாடுதலைப் பற்றியவென்று பாட்டின்மேலேற்றிப் பொருள்கூறின், குலமும் செல்வமும் வீரமுமுதலியவற்றாற் றம்மில்ஒத்தாரை உவமித்தலின், அவர்க் கும் வலிவும் மெலிவும் சமனுமென்னுங்குணங்கள் எய்துமாதலின், அங்ஙனங் கூறல் பொருந்தாமையுணர்க; அன்றியும் பயனே ஈண்டு உவமை யென்று உணர்க.

இனிப் பாட்டு வருத்தநீங்குவாச்சியத்தை யுடைமையின், அரசரோடு உவ மித்தாரென்பாருமுளர்.

56-7. பாடல் பற்றிய பயன் உடை எழாஅல் கோடியர் தலைவ — மிடற் றுப்பாடலைத் தொடங்கியெழுந்திருந்த பயன்களைத் தன்னிடத்தேயுடைத்தாகிய யாழையுடைய கூத்தர்க்குத் தலைவனே,

காழ், ஆகுபெயர்.

40. இரு பிடி தடக் கையின் செறிந்து திரள் குறங்கின்—பெரிய பிடியினுடைய பெருமையையுடைய கைபோல ஒழுகவேர்ந்து மெல்லிதாகத் தம்மில் நெருங்கி ஒன்றித்திரண்ட * குறங்கினையும்,

41. பொருந்து மயிர் ஒழுகிய திருந்து தாட்கு ஒப்ப — கணைக்காற்கு இலக்கணமென்றதற்குப் பொருந்தின மயிர் ஒழுங்குபட்ட ஏனையிலக்கணங்கள் திருந்தின கணைக்காலுக்குப் பொருந்த,

42. [வருந்துநாய் நாவிற் பெருந்தகு சீறடி :]

வருந்து நாய் நாவின் சிறு அடி—ஓடியிளைத்த நாயினது நாப்போலச் சிறிய அடியினையும்,

41-2. தாட்கு ஒப்ப பெரு தகு அடி—தாளுக்குப்பொருந்தப் பெருமை தக்கிருக்குமடியென்க.

† பெருவென்னுமுதனிலை பெருமையுணர்த்திநின்றது.

43. அரக்கு உருக்கு அன்ன செ நிலன் ஒதுங்கலின்—சாதிலிங்கத்தை உருக்கினதன்மையொத்த செய்யநிலத்தே நடக்கையினாலே,

44. பரல் பகை உழந்த நோயொடு சிவணி—சுக்கான்கல்லாகிய பகையாலே வருந்தின நோயோடேபொருந்தி,

45. மரல் பழுத்தன்ன மறுகு நீர் மொக்குள்—மரற்பழுத்தாற்போன்ற துளும்புநீரையுடைய கொப்புளம்,

46. நல் பகல் அந்தி நடை இடை விலங்கலின்—நன்றாகிய உச்சிக்காலமான சந்தியிலே நடத்தலை நடுவே தவிர்தலாலே,

47. பெடை மயில் உருவின் பெரு தகு பாடினி—பெடைமயிலருகுகின்ற மயில்போலும் சாயலினையுமுடைய கல்விப்பெருமை தக்கிருக்கின்ற பாடினி,

கூந்தலினையும் நுதலினையும் (25) புருவத்தினையும் கண்ணினையும் (26) வாயினையும் (27) பல்லினையும் (28) காதினையும் (30) எருத்தினையும் (31) தோளினையும் கையினையும் (32) விரலினையும் (33) உகிரினையும் (34) முலையினையும் (36) கொப்பூழினையும் (37) நுடுவினையும் (38) அல்குலினையும் (39) குறங்கினையும் (40) சீறடியினையும் (42) உருவினையுமுடைய பாடினியென்க.

இங்ஙனம் சீறடியுங்கூட்டி எண்ணுக்கால் தலைமுதல் அடியீறின்றாகக் கூறிற்றாம்.

48. பாடின பாணிக்கு ஏற்ப—பாடின தாளத்திற்குப் பொருந்த,

48-9. நாள் தொறும் களிறு வழங்கு அதர் கானத்து அல்கி—நாடோறும் யானையுலாவரும் வழியையுடைய காட்டிடத்தே தங்கி,

---

* குறங்கு - தொடை.

† "கருவார் பொழில்" (தே. பிரமபுரம்), "கருக்கொள் சோலை" (தே. ஆரூர்) என்பவற்றில், கருவென்னுமுதனிலை கருமையையுணர்த்தி நின்றமை காண்க.

50-51. [இலையின் மராத்த வெவ்வர் தாங்கி, வலைவலந் தன்ன மென் னிழன் மருங்கின்:]

இலை இல் மராத்த வலை வலந்தன்ன மெல் நிழல் மருங்கில்—இலையில் லாத மராத்திடத்தனவாகிய வலையை மேலேகட்டினுலொத்த மெல்லியநிழலி னிடத்தே,

எவ்வம் தாங்கி—கொப்புளால்வந்த வருத்தந்தாங்கி,

இனி ஞாயிற்றின் வெம்மையால் தனக்குவந்த எவ்வத்தைத்தாங்கி இலை யில்லாத மராமரமெனை மராமரத்தின்மேல் ஏற்றுதலுமாம்.

52. காடு உறை கடவுள் கடன் கழிப்பிய பின்றை—காட்டின்கண்ணே தங்குகின்ற தெய்வத்திற்கு மனமகிழ்ச்சியாகச்செய்யும் முறைமைகளைச் செய்து விட்டபின்பு,

பொருந (3), பாடினி (47) செந்நிலனெறுதுங்கலின் (43) அவளடிகள் (42) பரற்பகையுழந்த நோயொடுசிவணித் (44) தம்மிடத்தேகொண்ட மொக்குளால் (45) தனக்குவந்த வருத்தத்தைத் தாங்கித் (50) தான் நடையைத்தவிர்தலாலே (46) கானத்தின் (49) மென்னிழன் மருங்கிற் (51) றங்கிப் (49) பாலையாழை (22) வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும் (23) வாசித்து, பாடின பாணிக்கேற்பச் (48) சீருடைநன்மொழி நீரொடுசிதறிக் (24) காடுறைகடவுட் கடன் கழிப்பியபின்றையெனமுடிக்க.

கடன்கழித்தல் - தடாரியைவாசித்தல்.

53-4. பீடு கெழு திருவின் பெரு பெயர் நோன் தாள் முரசு முழங்கு தானை மூவரும் கூடி—பெருமைபொருந்தின செல்வத்தையும் பெரிய பெயர்களை யும் வலியையுடைய முயற்சியையும் வெற்றிமுரசுமுழங்கும் படையினையு முடைய சேர சோழபாண்டியர் தம்மிற் பகைமைநீங்கிச் சேர்ந்து,

55. அரசு அவை இருந்த தோற்றம் போல செல்வக்குறைபாடின்றி அரசிருத்தற்குரிய அவையாகவிருந்த தோற்றரவுபோல,

தோற்றம்போல இன்மைதீரவந்தனென் (129) என மேலேகூட்டுக.

இனி அரசவையிருந்த தோற்றம்போல வலிவும் மெலிவும் சமனுமாகப் பாடுதலைப் பற்றியவென்று பாட்டின்மேலேற்றிப் பொருள்கூறின், குலமும் செல்வமும் வீரமுமுதலியவற்றாற் றம்மில்ஒத்தாரை உவமித்தலின், அவர்க் கும் வலிவும் மெலிவும் சமனுமென்னுங்குணங்கள் எய்துமாதலின், அங்ஙனங் கூறல் பொருந்தாமையுணர்க; அன்றியும் பயனே ஈண்டு உவமை யென்று உணர்க.

இனிப் பாட்டு திருத்தகிதவாச்சியத்தை யுடைமையின், அரசரோடு உவ மித்தாரென்பாருமுளர்.

56-7. பாடல் பற்றிய பயன் உடை எழாஅல் கோடியர் தலைவ—மிடற் றுப்பாடலைத் தொடங்கியெழுந்திருந்த பயன்களைத் தன்னிடத்தேயுடைத்தாகிய யாழையுடைய கூத்தர்க்குத் தலைவனே,

இவன் போர்க்களம்பாடும் பொருநனுதலானும், *கூத்தரில் இவனிற்சிறந்த கூத்தர் இன்மையானும் இங்ஙனம் கூறினர்.

57. கொண்டது அறிந—பிறர் மனத்துக்கொண்டதனைக் குறிப்பால்அறியவல்லாய்,

58. அறியாமையின் நெறி திரிந்து ஒராஅது—வழியறியாமையினாலே இவ்வழியைத்தப்பி வேறொருவழியிற் போகாதே,

59. ஆறு எதிர் படுதலும் நோற்றதன் பயனே—இவ்வழியிலே என்னைக்கண்டதும் நீ முற்பிறப்பிற்செய்த நல்வினைப்பயன்,

60. [போற்றிக் கேண்மதி புகழ்மேம் படுந:] புகழ் மேம்படுந போற்றி கேண்மதி—புறத்தார்புகழை அரசவைகளிலே மேம்படுத்தவல்லாய், யான்கூறுகின்றவற்றை விரும்பிக்கேட்பாயாக;

61-2. அடு பசி உழந்த நின் இரு பேர் ஒக்கலொடு நீடு பசி ஒராஅல் வேண்டின்—அடுகின்ற பசியாலேவருந்தின நின்னுடைய கரிய பெரியசுற்றத்தோடே தொன்றுதொட்டுவந்தபசி நின்னைக் கைவிடுதல் விரும்புவையாயின்,

62-3. நீடு இன்று எழுமதி—நீட்டித்தலின்றி எழுந்திருப்பாயாக;
வாழி—நீவாழ்வாயாக;

63. ஏழின் கிழவ—குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரமென்னும்நரம்பு ஏழின்கண்ணும் உரிமையுடையாய்,

64. [பழுமர முள்ளிய பறவையின் யானும்:
யானும் பழுமரம் உள்ளியபறவையின்—செல்வமெய்தியயானும் முன்பு பழுத்தமரத்தை நினைத்துச் செல்கின்ற புட்போல.

64-5. அவன் இழுமென் சும்மை இடன் உடை வரைப்பின்—அவனுடைய இழுமென்றொழும் ஓசையினையுடைய அகலமுடைத்தாகிய மதிலில்,

66. நசையுநர் தடையா நல் பெரு வாயில்—நச்சிவந்தார்க்குத் தடையில்லாத நன்றாகிய பெரிய கோபுரவாயிலின் கண்ணே,

67. இசையேன் புக்கு—வாயிலோனுக்குக் கூறுமற்புகுந்து,
என் இடும்பை தீர—என்னுடைய மிடிதீர்தல் காரணமாக,

68. எய்த்த மெய்யேன் எய்யேனாகி—முன்பு இளைத்தஉடம்பையுடைய யான் அவ்வாயிற்குள்ளேசென்ற உவகையாலே பின்பு இளைப்புத்தீர்ந்து,

69-70. பைத்த பாம்பின் துத்தி ஏய்ப்ப கை கசடு இருந்த என் கண் அகல் தடாரி—படம்விரித்த பாம்பினது பொறியையொப்பக் கையினது வடுப்பட்டுக்கிடந்த எனது கண்ணகன்ற உடுக்கையிற் றோற்றுவித்த,

71-3. [இருசீர்ப் பாணிக் கேற்ப விரிகதிர், வெள்ளி முளைத்த நள்ளிருள் விடிய, லொன்றியான் பெட்டா வளவையின்:]
இரு சீர் பாணிக்கு ஏற்ப ஒன்று யான் பெட்டா அளவையின்—இரட்டைத்தாளத்திற்குப் பொருந்த ஒருபாட்டினை யான் பேணிப்பாடுவதற்கு முன்னே,

* 'பொருநரும் ஏர்க்களம்பாடுநரும் போர்க்களம்பாடுநரும் பரணிபாடுநருமெனப் பலராம்' (தொல். புறத்திணை. சூ. 36-ந)

விரி கதிர் வெள்ளி முளைத்த நள் இருள் விடியல்—விரிகின்ற கிரணங்களை யுடைய வெள்ளியெழுந்த செறிந்த இருளையுடைய விடியற்காலத்தே,

73-4. ஒன்றிய கேளிர் போல கேள் கொளல் வேண்டி—முன்பே தன்னோடுபொருந்திய நட்டாரைப்போல என்னுடன் உறவுகொள்ளுதலைவிரும்பி,

75. வேளாண் வாயில் வேட்ப கூறி—தான் உபகரித்தற்கு வழியாகிய இரப்பினையே யான் எப்பொழுதும் விரும்பும்படி உபசாரங்களைக்கூறி,

76. கண்ணில் காண நண்ணு வழி இரீஇ—தன்கண்ணிலேகாணும்படி தனக்குஅண்ணிதானஇடத்திலே என்னைஇருத்தி,

77. பருகு அன்ன அருகா நோக்கமோடு—தன்னைக் கண்ணாற்பருகும் தன்மையையொத்த கெடாத பார்வையாலே,

78. [உருகு பவைபோ லென்பு குளிர்கொளீஇ:] என்பு உருகுபவைபோல் குளிர்கொளீஇ—என்பை உருகும் மெழுகுமுதலியனபோல் நெகிழும்படி குளிர்ச்சியைக்கொளுத்தி,

நோக்கத்தாலே (77) கொளுத்தியென்க.

79. ஈரும் பேனும் இருந்து இறைகூடி—ஈரும்பேனும் கூடியிருந்து அரசாண்டு,

80-81. [வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த, துன்னற் சிதாஅர் துவர நீக்கி:]

வேரொடு நனைந்து வேறு இழை நுழைந்த துன்னல் சிதாஅர் நீக்கி—வேர்ப்பாலேநனைந்து சறுகள் உள்ளேஓடுதற்குக் காரணமாகிய தைத்தற்றொழிலையுடையனவாகிய சீலையை என்னிடத்தினின்றும் போக்கி,

82-3. நோக்கு நுழைகல்லா நுண்மைய பூ கனிந்து அரவு உரி அன்ன அறுவை துவர (81) நல்கி—கண்ணிற்பார்வை இஃது இழைபோனவழியென்று குறித்துப்பார்க்கவாராத நுண்மையையுடையவாய்ப் பூத்தொழில் முற்றுப் பெற்றதன்மையாற் பாம்பினது தோலையொத்த துகிலை மிகநல்கி,

துவரவென்பதனைஇதனோடுகூட்டுக.

84-5. [மழையென மருளும் மகிழ்செய் மாடத், திழையணி வணப்பி னின்னகை மகளிர்:]

இழை அணி வனப்பின் இன் நகை மகளிர்—இழைகளையணிந்த அழகினையுடைய பாட்டாலும்கூத்தாலும்வார்த்தையாலும் அரசனுக்கு இனியமகிழ்ச்சியைச்செய்யுமகளிர்,

இதனை, "இன்னகை யாயமோ டிருந்தோற் குறுகி" (220) என்றார், சிறுபாணாற்றிலும்.

86-7. [போக்கில் பொலங்கல நிறையப் பல்கால், வாக்குபு தரத்தர:]

84-7. மருள் செய்யும் மகிழ் மழையென மாடத்து பல்கால் வாக்குபு—உண்டார் மயங்குதலைச்செய்யுங் கள்ளை மழையென்னும்படி மாடத்திடத்தே பல்காலும் வார்த்து,

மகிழ், ஆகுபெயர்.

86-7. *போக்கு இல் பொலங்கலம் நிறைய தரத்தர*—ஓட்டமற்ற பொன்னாற்செய்த வட்டில்நிறையத் தரத்தர,

87-8. *வருத்தம் வீட ஆர உண்டு பெரு அஞர் போக்கி*—வழிபோன வருத்தம் போம்படி நிறையவுண்டு கள்ளுண்ணப்பெறுகிலேமென்று நெஞ்சிற் கிடந்த பெரிய வருத்தத்தையும்போக்கி,

89. *செருக்கொடு நின்ற காலை*—மகிழ்ச்சியுடனே நான்நின்ற அக் காலத்தே,

89-90. *மற்று அவன் திரு கிளர் கோயில் ஒருசிறை தங்கி*—இங்ஙனம் மிடிதீர்ந்தபின்பு அவனுடைய செல்வம்விளங்குகின்ற கோயிலில் ஒருபக்கத்தே கிடந்து,

அவனைச் சேவித்துநிற்கின்ற நங்குலத்திலுள்ள மகளிர் (85) பொலங்கல நிறைய (86) மகிழை (84) வார்த்துத் தரத்தர (87) உண்டு போக்கிக் (88) கோயிலில் ஒருசிறைத் தங்கியென முடிக்க.

91-2. *தவம் செய் மாக்கள் தம் உடம்பு இடாஅது அதன் பயம் எய்திய அளவை மான*—மிக்க தவத்தைச்செய்கின்ற மாக்கள் தம்முடைய தவஞ்செய்த உடம்பைப் போகடாதேயிருந்து அத்தவத்தாற்பெறும் பயனைப்பெற்ற தன்மையையொப்ப,

மக்களென்னாது மாக்களென்றார், வீடுபேறு குறியாது செல்வத்தைக் குறித்தலின்.

93. *ஆறு செல் வருத்தம் அகல நீக்கி*—வழிபோனவருத்தத்தை என்னிடத்துச் சிறிதும் நில்லாமற்போக்கி,

94-5. [*அனந்தர் நடுக்க மல்ல தியாவது, மனங்கவல் பின்றி மாழாந் தெழுந்து*:]

*அனந்தர் நடுக்கம் அல்லது மனம் கவல்பு யாவதும் இன்றி எழுந்து*—கள்ளின் செருக்காலுண்டான மெய்ந்நடுக்கமல்லது வேறுமனக்கவற்சி சிறிதுமின்றித் துயிலுணர்ந்து,

கவல்பு, கவற்சியெனப் பெயராய் நின்றது.

96. *மாலை அன்னதோர் புன்மையும்*—யான் அவனைக் காண்பதற்கு முன்னாளின் மாலைக்காலத்தில் என்னிடத்தில்நின்ற சொல்லிற்கெட்டாத மிடியையும்,

அன்னது, நெஞ்சறிசுட்டு.

96-7. *காலை கண்டோர் மருளும் வண்டு சூழ் நிலையும் மாழாந்து* (95)—அவனைக்கண்டமற்றைநாட்காலத்தில் என்னைக்கண்டவர் நெருநல்வந்தவனல்லனென்று மருளுதற்குக் காரணமான வண்டுகள் இடையறாதுமொய்க்கின்ற தன்மையையும் யான்கண்டுமயங்கி,

மாழாந்தென்பதனை இதனொடு கூட்டுக.

பல நறுநாற்றங்களும் தானுடைமையின், வண்டுசூழ்நிலையென்றான்.

98. *கனவு என மருண்ட என் நெஞ்சு ஏமாப்ப*—இது கனவாயிருக்குமென்று கலங்கிய என்னுடையநெஞ்சு நனவென்று துணிய,

99. வல் அனுர் பொத்திய மனம் மகிழ் சிறப்ப—வலிய மிடியாலுண்டா கிய வருத்தம் பொதிந்த கூட்டத்தார் மனம் மகிழ்ச்சி மிக,

100. கல்லா இளைஞர் சொல்லி காட்ட—அவற்குரியபுகழ்களைத் தாங் கள் முற்றக்கற்று என்பின்னின்ற இளையவர் அவற்றைச் சொல்லிக்காட்ட, கல்லாவென்பது, செய்யாவென்னுமெச்சம். இனித் தத்தம் சிறுதொழி லன்றி வேறொன்றுங்கல்லாத இளைஞர் பொருநல்வர்தவன் இவனென்று அரச னுக்குச் சொல்லிக்காட்ட வென்றுமாம். என்றது - இவன்வேறுபாடுகூறிற்றும்.

101. கதுமென கரைந்து வம்மென கூஉய்—அதுகேட்டு அவர்களைக் கடுகவழைத்துவாருமென்று வாயிலோர்க்குக்கூறி யாங்கள்சென்றபின் தான் அணுகவாருமென்று அழைக்கையினாலே,

*" ஏனோருந் தம்மென " என்புழித் தம்மென்பது தாருமெனநின்றாற் போல வம்மென்பது வாருமென்னும் பொருட்டாய்நின்றது.

102. அதன் முறை கழிப்பிய பின்றை—அக்காட்சியிடத்துச் செய்யும் முறைமைகளை யாங்கள் செய்து முடித்தபின்பு,

பதன் அறிந்து—காலமறிந்து,

103-4. துராஅய் துற்றிய துருவை அம் புழுக்கின் பராரை வேவை பருகு என தண்டி—அறுகம்புல்லாற்றிரித்த பழுதையைத்தின்ற செம்மறிக் கடாயினது அழகினையுடைய புழுக்கினதிற் பரிய மேற்குறங்கு நெகிழவெந் ததனை விழுங்கென்று பலகாலலைத்து,

105-6. [காழிற் சுட்ட கோழூன் கொழுங்குறை, யூழி னூழின் வாய்வெய் தொற்றி:] காழின் கொழு ஊன் சுட்ட கொழு குறை வெய்து வாய் ஊழின் ஊழின் ஒற்றி—இருப்பு நாராசத்தே கொழுத்த இறைச்சிகளைக் கோத்துச் சுட்ட கொழுவிய பெரியதசைகளின் வெம்மையை வாயிடத்தே இடத்தினும் வலத்தினும் சேர்த்தி ஆற்றித்தின்று,

107. அவை அவை முனிகுவம் எனினே—புழுக்கின இறைச்சியையும் சுட்டிறைச்சியையும் யாங்கள் இனி வேண்டேமென்கையினாலே,

107-8. சுவைய வேறு பல் உருவின் விரகு தந்து இரீஇ—இனிமையுடை யவாய் வெவ்வேறாகிய பலவடிவினையுடைய †பண்ணியாரங் கொண்டுவந்து அவற்றைத் தின்னும்படி எங்களையிருத்தி,

உபாயங்களாற் பண்ணுதலின், விரகென்றார்; ஆகுபெயர்.

109-10. [மண்ணமை முழவின் பண்ணமை சிறியாழ், ஒண்ணுதல் விற லியர் பாணி தூங்க:] பண் அமை சிறு யாழ் ஒள் நுதல் விறலியர் மண் அமை முழவின் பாணி தூங்க - பண்குறைவற்ற சிறிய யாழையுடைய ஒள்ளிய நுதலி னையுடைய ‡விறல்படப் பாடியாடுவார் மார்ச்சனையமைந்த முழவினது தாளத் திற்கு ஆடும்படி,

* மதுரைக்காஞ்சி, 747.
† பண்ணிகார மென்றும் பிரதிபேத முண்டு.
‡ விறலை வடநூலார் சத்துவமென்பர்.

111. மகிழ் பதம் பல் நாள் கழிப்பி—மகிழ்ச்சியையுடைய கள்ளுண்டலிலே பலநாள் போக்கி,

இனிப் பதம், காலமுமாம்.

111-2. ஒருநாள் அவிழ் பதம் கொள்க என்று இரப்ப—ஒருநாள் சோறாகியஉணவையும் கொள்வாயாகவென்று வேண்டிக்கொள்கையினாலே,

112-4. முகிழ் தகை முரவை போகிய முரியா அரிசி விரலென நிமிர்ந்த நிரல் அமை புழுக்கல்—முல்லைமுகையின் தகைமையினையுடைய வரியற்ற இடைமுறியாத அரிசி விரலென்னும்படி நெடுகின ஒன்றோடொன்றுசேராத சோற்றையும்,

பழுத்தவரிசியை ஆக்கினமைதோன்ற நிரலமை புழுக்கலென்றார்.

115-6. பால் வறை கருனை *காடியின் மிதப்ப அயின்ற காலை—பாலைப் பொரித்ததனோடேகூட்டிய பொரிக்கறிகளையும் கழுத்திடத்தேவந்து நிரம்பும்படி விழுங்கினகாலத்தே,

இனிக் காடியைப் புளிங்கறியாக்கிப் புளிங்கறியோடே நிரம்ப விழுங்கின காலையென்றுமுரைப்பர்.

116. பயின்று இனிது இருந்து—அவனைவிடாதே இனிதாகவிருந்து,

117-8. [கொல்லை யுழுகொழு வேய்ப்பப் பல்லே, யெல்லையு மிரவு மூன் றின்று மழுங்கி:] பல்லே கொல்லை உழு கொழு எய்ப்ப எல்லையும் இரவும் ஊன் தின்று மழுங்கி—எம்முடையபற்கள் கொல்லைநிலத்தேயுழுத †கொழுவை யொப்பப் பகலும்இரவும் இறைச்சியைத்தின்று முனைமழுங்கி,

119. உயிர்ப்ப இடம் பெறாஅது ஊண் முனிந்து—இளைப்பாற இடம் பெறாதே இவ்வுணவுகளை வெறுத்து,

முற்கூறியனவெல்லாம் உண்டற்றொழிற்கு உரிமையுடைமையின், ஊண் முனிந்தென்றார்.

119-22. [ஒருநாட், செயிர்த்தெழு தெவ்வர் திறைதுறை போகிய, செல்வ சேறுமெந் தொல்பதிப் பெயர்ந்தென, மெல்லெனக் கிளந்தன மாக:]

செயிர்த்து எழு தெவ்வர் திறை துறை போகிய செல்வ—குற்றத்தைச் செய்தெழுந்த பகைவரைத் திறைகொள்ளும் கூறுபாடுகளெல்லாம் முடியப் போன செல்வா,

பெயர்ந்து எம் தொல் பதி சேறும் என மெல்லென ஒருநாள் கிளந்தனமாக—இனி மீண்டு எம்முடைய பழைய ஊரிடத்தே செல்வேமென்று மெத்தென ஒருநாளிலே சொன்னேமாக,

தொல்பதியென்றார், இதுவும் தமக்குப்பதியென்பது தோன்ற.

122-4. [வல்லே, யகறி ரோவெம் மாயம் விட்டெனச், சிறிய வன்போற் செயிர்த்த நோக்கமொடு:] சிறியவன்போல் செயிர்த்த நோக்கமொடு எம் ஆயம்

* காடி கழுத்தென்பதை, ' காடியிழந்துகவந்தமதாய் " என்பதனானு முணர்க; (கந்த. சூரபன்மன்வதை. 136)

† " முரம்புழுவார் நாஞ்சிற்கொழுவெனத்தேய்ந்து " (தொல்லைப்பு. கவுற் சன. 28.)

விட்டு வல்லே அகறிரோ என—அதுகேட்டுக் கோபித்தான்போல எமக்குவருத் தந்தைச் செய்த பார்வையுடனே எம்மிரனைக் கைவிட்டு விரைந்துபோகின்றீ ரோவெனச் சொல்லி,

125-6. [துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு, பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கென ]

பிடி புணர் வேழம அடி துடி அன்ன தூங்கு நடை குழவியொடு கொள்க என—பிடியொடுபுணர்ந்தகளிறுகளைத், தம்அடிகள் *துடியின்கண்ணை யொத்து அசைந்த நடையினையுடைய கன்றுகளுடனே கைக்கொள்வாயாக வென்று சொல்லி,

127. [தன்னறி யளவையிற் றரத்தர] பெட்டவை (126) தன் அறி அளவையில் தரத்தர—பின்னும் தான்விரும்பியிருந்த ஊர்திகள் ஆடைகள் அணி கலங்கள் முதலியவற்றைத் தான் அறிந்த அளவாலே மேன்மேலேதர,

127-8. யானும் என் அறி அளவையின் வேண்டுவ முகந்துகொண்டு—யானும் என்னுடைய குறைகளை யானறிந்த அளவாலே வேண்டுவனவற்றை வாரிக்கொண்டு,

129. இன்மை தீர வந்தனென்—மிடி எக்காலமும் இல்லையாம்படி வந் தேன்;

யானும் அவன் (64) வரைப்பின் (65) வாயிற்கண்ணே (66) புக்கு என் இடும்பைதீர்தல் காரணமாக (67) எய்யேனாகி (68) விடியற்காலத்தே (72) ஒன்று யான்பெட்டாஅளவையிற் (73) கொளல்வேண்டிக் (74) கூறி (75) இருத்தி (76) நோக்கத்தாலே (77) குளிர்கொளுத்திச் (78) சிதார்நீக்கித் துவர (81) கலிங் (83) மகளிர் (85) மகிழ்தை (84) வார்த்துத்தரத்தர (87) உண்டுபோக்கி (88) பின்றைகாலைத் (89) தங்கி (90) நீக்கி (93) எழுந்து (95) ஏமாப்பச் (98) சொல் (100) கூவுகையினாலே (101) கழிப்பிய பின்றைத் (102) தண்டி (104) ஒற்றி (106) வேண்டேமென்கையினாலே (107) இரீஇத் (108) தூங்கக் (110) கழிப்பி (111) இரப்ப (112) அயின்றகாலத்திலே இருந்து (116) மழுங்கி (118) முனிந்து (119) சேறுமென (121) ஒருநாட் (119) கிளர்ந்தனமாக (122) அகறிரோவெனச் சொல்லித் (123) தரத்தர யானும் (127) தவஞ்செய்மாக்கள் (91) அதன் பயமெய்திய அளவைமான (92) வேண்டுவ முகந்துகொண்டு (128) வாசவையிருந்து தோற்றப்போல (55) இன்மைதீர வந்தனெனென வினைமுடிக்க.

129-30. வெல் வேல் உருவம் பல் தேர் இளையோன் சிறுவன்—வென்ற வேலினையுடைய அழகினையுடைய பலதேரினையுடைய இளஞ்சேட்சென்னி யுடைய புதல்வன்,

வென்ற வேற்புதல்வன்.

131. முருகன் சீற்றத்து உரு கெழு குருசில்—முருகனது சீற்றம்போலும் சீற்றத்தையுடைய உட்குதல்பொருந்திய தலைவன்,

132. தாய் வயிற்று இருந்து தாயம் எய்தி பிறந்து (137)—தாயுடைய வயிற்றிலேயிருந்து அரசவுரிமையைப்பெற்றுப் பிறந்து,

* துடி - உடுக்கை.

தான் பிறக்கின்றகாலத்துப் பிறவாதே நல்லமுகூர்த்தம் வருமளவும் தாயுடைய வயிற்றிலேயிருந்து பிறக்கையினாலே அரசவுரிமையைப்பெற்றுப் பிறந்தென்றார்.

133. எய்யா தெவ்வர் ஏவல் கேட்ப—முன்பு தன்வலியறியாத பகைவர் பின்பு தன்வலியினையறிந்து ஏவினதொழிலைச் செய்ய,

134. செய்யார் தேஎம் தெருமரல் கலிப்ப—ஏவல்செய்யாத பகைவர்தேசம் மனக்கவற்சி பெருக,

135-6. [பௌவ மீமிசைப் பகற்கதிர் பரப்பி, வெவ்வெஞ் செல்வன் விசும்புபடர்ந் தாங்கு] வெவ்வெஞ்செல்வன் பௌவம் மீமிசை பகல் கதிர் பரப்பி விசும்பு படர்ந்தாங்கு — வெம்மையையுடைய * எல்லாரும்விரும்பப்படும் இளஞாயிறு கடலின்மீதே பகற்பொழுதைச்செய்யுங் கிரணங்களைப்பரப்பிப் பின்னர் விசும்பிலே மெத்தெனச்சென்றாற்போல,

137 [பிறந்துதவழ் கற்றதற் றொட்டு:]

தவழ் கற்றதன் றொட்டு—தவழ்தலைக் கற்றநாள் தொடங்கி,

பிறந்து, முன்னேகூட்டிற்று.

137—40. [சிறந்தநன், னாடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப, வாளி நன்மா னணங் குடைக் குருளை, மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி:]

மீளி மொய்ம்பின் மிகு வலி செருக்கி—கூற்றுவனுடைய வலியிற்காட்டில் மிகுகின்றவலியாலே கலித்து,

செல்வன் விசும்புபடர்ந்தாங்குத் (136) தவழ்கற்றதற்றொட்டு (137) மிகுகின்றவலியெனக.

இவன் பின்பு அரசாட்சிபெற்றானாதலின், தவழ்கற்றதற்றொட்டு நாடுசெகிற் கொண்டானென்றல் பொருந்தாமையுணர்க.

சிறந்த நல் நாடு செகில் கொண்டு நாள் தொறும் வளர்ப்ப—ஏனையோர் நாட்டிற்சிறந்த நன்னாட்டைத் தோளிலேவைத்துக்கொண்டு நாடோறும் வளர்த்தல்காரணமாக,

தோள்வலியாலே பகைவென்று நாடுகாத்தமைபற்றி, நாடுசெகிற்கொண்டானென்றார்

141. [முலைக்கோள் விடாஅ மாத்திரை:] ஆளி நல் மான் அணங்கு உடை குருளை (139) முலை கோள் விடாஅ மாத்திரை — ஆளியாகிய நல்ல மானினது வருத்துதலையுடைய குருளை முலையையுண்டலைக் கைவிடாத இளைய பருவத்தே,

யாளியை ஆளியென்றார், †“கடிசொ லில்லை” என்பதனான். ‡“நாயே பன்றி” என்னுஞ் சூத்திரத்து ‘ஆயுங்காலை’ என்பதனாற் குருளையென்பது முடித்தாம்.

141. ஞெரேரென—கடுக,

---

* “வெம்புஞ்சுடரிற்சுடருந் திருமூர்த்தி” (சீவக. 2.)

† தொல்காப்பியம், எச்சவியல், 56.

‡ ” மரபியல், 8.

142. தலை கோள் வேழம் களிறு அட்டாங்கு—முற்பட இரையைக் கோடற்குக்காரணமான வேட்டையிலே களிற்றைக் கொன்றாற்போல,

143. இரு பனம்போந்தை தோடும்—கரிய பனங்குருத்தில் அலர்ந்த வெளிய கத்து ஓலையும்,

*"தோடே மடலே" என்னுஞ் சூத்திரத்துப் 'பிறவும்' என்றதனாற் போந்தை முடித்தாம். அதனிடத்தினின்றும் போந்ததனாற் போந்தையென்றார். 'இரும்பனைக் கொண்டு கடைகழுமிய வடங்குசிறை வலனகலத்து" என்றார் பிறரும்.

143-4. [கருஞ்சினை, யரவாய் வேம்பி னங்குழைத் தெரியலும்.] கருஞ்சினை வேம்பின் அரம் வாய் அம் குழை தெரியலும்—கரிய கொம்பினையுடைய வேம்பினுடைய வாளரத்தின் வாய்போலும் விளிம்பினையுடைய அழகிய தளிராற்செய்த மாலையும்,

145-6. ஓங்கு இரு சென்னி மேம்பட மிலைந்த இரு பெரு வேந்தரும் ஒருகளத்து அவிய—உறிய மாலைகளில் மேலாதற்குக் காரணமான பெரியதலையிலே வினைபோர்க்கும் அடையாளப்பூக்களிற் சிறப்ப அவற்றைச்சூடிய சேரனும் பாண்டியனும் ஒருகளத்தே படும்படி,

147-8. வெண்ணி தாக்கிய வெருவரு நோன் தாள் கண் ஆர் கண்ணி கரிகால் வளவன்—†வெண்ணியென்கின்ற ஊரிடத்தேபொருத அச்சந்தோன்றுகின்ற வலியையுடைய முயற்சியினையும் கண்ணுக்கு அழகுநிறைந்த ஆத்திமாலையினையுமுடைய கரிகாற்சோழன்,

‡"முச்சக் கரமும்" என்னுங் கவியானே கரிகாலாதலுணர்க.

தாயமெய்திப் (132) பிறந்து (137) மிகுவலிசெருக்கி, (140) தெவ்வர் வல் கேட்பச் (133) செய்யார்தேஎம் தெருமரல்கலிப்ப (134) நாடுசெகிற்கொண்டு நாடொறும் வளர்த்தல்காரணமாகக் (138) குருளை (139) களிறட்டாங்கு (142) இருபெரு வேந்தரும் அவிய (146) தாக்கிய (147) கரிகால்வளவனென முடிக்க.

149-50. [தாணிழன் மருங்கி லணுகுபு குறுகி, தொழுது:] நிழல் மருங்கில் தாள் அணுகுபு குறுகி தொழுது—அருளாற் றன்னிடத்திலே யுடைய திருவடிகளை அணணிதாக நின்றுசேர்ந்து வணங்கி,

150. முன் நிற்குவிராயின்—நம்முடைய வறுமைதோன்ற முன்னேநிற்பீராயின்,

150-51. [பழுதின், றீற்றா விருப்பிற் போற்றுபு நோக்கி.] ஈற்று ஆ விருப்பின் பழுதின்று போற்றுபு நோக்கி—ஈற்றுத்தொழிலையுடைய பசு, தனது கன்றுக்குப் பால்சுரந்து கொடுக்கவேண்டுமென்னும் விருப்பம்போல நும்மிடத்து நிற்கின்ற மிடிஇல்லாம்படி பேணிப்பார்த்து,

* தொல்காப்பியம், மரபியல், 86.

† 'வெண்ணில்' என்றும் பிரதிபேதமுண்டு.

‡ இக்கவியைப் பொருநராற்றுப்படை உரையின்இறுதியிற் காண்க.

தான் பிறக்கின்றகாலத்துப் பிறவாதே நல்லமுகூர்த்தம் வருமளவும் த டைய வயிற்றிலேயிருந்து பிறக்கையினாலே அரசவுரிமையைப்பெற்றுப் பி தென்றார்.

133. எய்யா தெவ்வர் ஏவல் கேட்ப—முன்பு தன்வலியறியாத பகை பின்பு தன்வலியினையறிந்து ஏவின தொழிலைச் செய்ய,

134. செய்யார் தேஎம் தெருமரல் கலிப்ப—ஏவல்செய்யாத பகைவர்தே மனக்கவற்சி பெருக,

135-6. [பௌவ மீமிசைப் பகற்கதிர் பரப்பி, வெவ்வெஞ் செல் விசும்புபடர்ந் தாங்கு:] வெவ்வெஞ்செல்வன் பௌவம் மீமிசை பகல் கதிர் பர விசும்பு படர்ந்தாங்கு — வெம்மையையுடைய * எல்லாரும்விரும்பப்படும் ஞாயிறு கடலின்மீதே பகற்பொழுதைச்செய்யுங் கிரணங்களைப்பரப்பிப் பின் விசும்பிலே மெத்தெனச்சென்றாற்போல,

137. [பிறந்துதவழ் கற்றதற் றொட்டு:]
தவழ் கற்றதன் தொட்டு—தவழ்தலைக் கற்றநாள் தொடங்கி,
பிறந்து, முன்னேகூட்டிற்று.

137—40. [சிறந்தநன், நாடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப, வ நன்மா னணங் குடைக் குருளை, மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி:]
மீளி மொய்ம்பின் மிகு வலி செருக்கி—கூற்றுவனுடைய வலியிற்காட் மிகுகின்றவலியாலே கலித்து,

செல்வன் விசும்புபடர்ந்தாங்குத் (136) தவழ்கற்றதற்றொட்டு (137) கின்றவலியெனக.

இவன் பின்பு அரசாட்சிபெற்றானாதலின், தவழ்கற்றதற்றொட்டு நாடுசெ கொண்டானென்றல் பொருந்தாமையுணர்க.

சிறந்த நல் நாடு செகில் கொண்டு நாள் தொறும் வளர்ப்ப—எல்லா நாட்டிற்சிறந்த நல்ல நாட்டை தோளிலேவைத்துக்கொண்டு நாடோறும் நல்காநிற்க,

தோள்வலியாலே பகைவென்று நாடுகாத்தமைபற்றி, நாடுசெகிற்கொ டென்றார்

141. [முலைக்கோள் விடாஅ மாத்திரை:] ஆளி நல் மான் அ உடை குருளை (139) முலை கோள் விடாஅ மாத்திரை — ஆளியாகிய மானினது வருத்துதலையுடைய குருளை முலையையுண்டலைக் கைவிடாத பருவத்தே,

யாளியை ஆளியென்றார், †"கடிசொ லில்லை" என்பதனான்.
பன்றி" என்னுஞ் சூத்திரத்து 'ஆயுங்காலை' என்பதனாற் குருளையெ முடித்தாம்.

141. ஞெரேரென—கடுக,

* "வெம்புஞ்சுடரிற்சுடருந்திருமூர்த்தி" (சீவக. 2.)
† தொல்காப்பியம், எசசவியல், 56.
‡ " மரபியல், 8.

142. தலை கோள் வேழம் களிறு அட்டாங்கு—முற்பட இரையைக் கோடற்குக்காரணமான வேட்டையிலே களிற்றைக் கொன்றாற்போல,

143. இரு பனம்போந்தை தோடும்—கரிய பனங்குருத்தில் அலர்ந்த வலப்பக்கத்து ஓலையும்,

*"தோடே மடலே" என்னுஞ் சூத்திரத்துப் 'பிறவும்' என்றதனாற் போந்தை முடித்தாம். அதனிடத்தினின்றும் போந்ததனாற் போந்தையென்றார். "இரும்பனைக் கொண்டு கடைகழுமிய் வடங்குசிறை வலனகலத்து" என்றார் பிறரும்.

143-4. [கருஞ்சினை, யரவாய் வேம்பி னங்குழைத் தெரியலும்:] கரு சினை வேம்பின் அரம் வாய் அம் குழை தெரியலும்—கரிய கொம்பினையுடைய வேம்பினுடைய வாளரத்தின் வாய்போலும் விளிம்பினையுடைய அழகிய தளிராற்செய்த மாலையும்,

145-6. ஓங்கு இரு சென்னி மேம்பட மிலைந்த இரு பெரு வேந்தரும் ஒருகளத்து அவிய—உறிய மாலைகளில் மேலாதற்குக காரணமான பெரியதலையிலே வினைபோர்சூடும் அடையாளப்பூக்களிற் சிறப்ப அவற்றைச்சூடிய சேரனும் பாண்டியனும் ஒருகளத்தே படும்படி,

147-8. வெண்ணி தாக்கிய வெரு வரு நோன் தாள் கண ஆர் கண்ணி கரிகால் வளவன்—†வெண்ணியென்கின்ற ஊரிடத்தேபொருத அச்சந்தோன்று கின்ற வலியையுடைய முயற்சியினையும் கண்ணுக்கு அழகுநிறைந்த ஆத்திமாலையினையுமுடைய கரிகாற்சோழன்,

‡"முச்சக் கரமும்" என்னுங் கவியானே கரிகாலாதலுணர்க.

தாயமெய்திப் (132) பிறந்து (137) மிகுவலிசெருக்கி (140) தெவ்வர் வல் கேட்பச் (133) செய்யார்தேஎம் தெருமரல்கலிப்ப (134) நாடுசெகிற்கொண்டு நாடொறும் வளர்ந்தல்காரணமாகக் (138) குருளை (139) களிறட்டாங்கு 142) இருபெரு வேந்தருட் அவிய (146) தாக்கிய (147) கரிகால்வளவனென முடிக்க.

149-50. [தாணிழன் மருங்கி லணுகுபு குறுகி, தொழுது:] நிழல் மருங்கில் தாள் அணுகுபு குறுகி தொழுது—அருளைத் தன்னிடத்திலே யுடைய திருவடிகளை அண்ணிதாக நின்றுசேர்ந்து வணங்கி,

150. முன் நிற்குவிராயின் - நும்முடைய வறுமைதோன்ற முன்னேநிற்பீராயின்,

150-51. [பழுதின், றீற்ற விருப்பிற் போற்றுபு நோக்கி.] ஈற்று ஆ விருப்பின் பழுதின்று போற்றுபு நோக்கி—ஈற்றுத்தொழிலையுடைய பசு தனது கன்றுக்குப் பால்சுரந்து கொடுக்கவேண்டுமென்னும் விருப்பம்போல நும்மிடத்து நிற்கின்ற மிடியின்றும்படி பேணிப்பார்த்து,

* தொல்காப்பியம், மரபியல், 86.

† 'வெண்ணில்' என்றும் பிரதிபேதமுண்டு.

‡ இக்கவியைப் பொருநராற்றுப்படை உரையின்இறுதியிற் காண்க.

தான் பிறக்கின்றகாலத்தும் பிறவாதே நல்லமுகூர்த்தம் வருமளவும் தாயுடைய வயிற்றிலேயிருந்து பிறக்கையினாலே அரசவுரிமையைப்பெற்றுப் பிறந்தென்றார்.

133. எய்யா தெவ்வர் ஏவல் கேட்ப—முன்பு தன்வலியறியாத பகைவர் பின்பு தன்வலியினையறிந்து ஏவினதொழிலைச் செய்ய,

134. செய்யார் தேஎம் தெருமரல் கலிப்ப—ஏவல்செய்யாத பகைவர்தேசம் மனக்கவற்சி பெருக,

135-6. [பௌவ மீமிசைப் பகற்கதிர் பரப்பி, வெவ்வெஞ் செல்வன் விசும்புபடர்ந் தாங்கு:] வெவ்வெஞ்செல்வன் பௌவம் மீமிசை பகல் கதிர் பரப்பி விசும்பு படர்ந்தாங்கு — வெம்மையையுடைய * எல்லாரும்விரும்பப்படும் இளஞாயிறு கடலின்மீதே பகற்பொழுதைச்செய்யுங் கிரணங்களைப்பரப்பிப் பின்னர் விசும்பிலே மெத்தெனச்சென்றாற்போல,

137. [பிறந்துதவழ் கற்றதற் றொட்டு:]

தவழ் கற்றதன் தொட்டு—தவழ்தலைக் கற்றநாள் தொடங்கி,

பிறந்து, முன்னேகூட்டிற்று.

137—40. [சிறந்தநன், னாடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப, வாளி நன்மா னணங்குடைக் குருளை, மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி:]

மீளி மொய்ம்பின் மிகு வலி செருக்கி—கூற்றுவனுடைய வலியிற்காட்டில் மிகுகின்றவலியாலே கலித்து,

செல்வன் விசும்புபடர்ந்தாங்குத் (136) தவழ்கற்றதற்றொட்டு (137) மிகுகின்றவலியென்க.

இவன் பின்பு அரசாட்சிபெற்றானாதலின், தவழ்கற்றதற்றொட்டு நாடுசெகிற் கொண்டானென்றல் பொருந்தாமையுணர்க.

சிறந்த நல் நாடு செகில் கொண்டு நாள் தொறும் வளர்ப்ப—ஏனையநாட்டிற்சிறந்த நன்னாட்டைத் தோளிலேவைத்துக்கொண்டு நாடோறும் வளர்த்தல்காரணமாக,

தோள்வலியாலே பகைவென்று நாடுகாத்தமைபற்றி, நாடுசெகிற்கொண்டென்றார்.

141. [முலைக்கோள் விடாஅ மாத்திரை:] ஆளி நல் மான் அணங்கு உடை குருளை (139) முலை கோள் விடாஅ மாத்திரை — ஆளியாகிய நல்ல மானினது வருத்துதலையுடைய குருளை முலையையுண்டலைக் கைவிடாத இளைய பருவத்தே,

யாளியை ஆளியென்றார், †"கடிசொ லில்லை" என்பதனான். ‡"நாயே பன்றி" என்னுஞ் சூத்திரத்து 'ஆயுங்காலை' என்பதனாற் குருளையென்பது முடித்தாம்.

141. ஞெரேரென—கடுக,

* "வெம்புஞ்சுடரிற்சுடருந்திருமூர்த்தி" (சீவக. 2.)
† தொல்காப்பியம், எச்சவியல், 56.
‡ " மரபியல், 8.

142. தலை கோள் வேழம் களிறு அட்டாங்கு—முற்பட இரையைக் கோடற்குக்காரணமான வேட்டையிலே களிற்றைக் கொன்றாற்போல,

143. இரு பனம்போந்தை தோடும்—கரிய பனங்குருத்தில் அலர்ந்த வெள்ளிய பக்கத்து ஓலையும்,

*"தோடே மடலே" என்னுஞ் சூத்திரத்துப் 'பிறவும்' என்றதனாற் போந்தை முடித்தாம். அதனிடத்தினின்றும் போந்ததனாற் போந்தையென்றார். "இரும்பனைக் கொண்டு கடைகழுமிய வடங்குசிறை வலைகலத்து" என்றார் பிறரும்.

143-4. [கருஞ்சினை, யரவாய் வேம்பி னங்குழைத் தெரியலும்:] கரு சினை வேம்பின் அரம் வாய் அம் குழை தெரியலும்—கரிய கொம்பினையுடைய வேம்பினுடைய வாளரத்தின் வாய்போலும் விளிம்பினையுடைய அழகிய தளிரிற்செய்த மாலையும்,

145-6. ஓங்கு இரு சென்னி மேம்பட மிலைந்த இரு பெரு வேந்தரும் பொருகளத்து அவிய—உறிய மாலைகளில் மேலாதற்குக் காரணமான பெரியதலையிலே வினைபோர்சூடும் அடையாளப்பூக்களிற் சிறப்ப அவற்றைச்சூடிய சோழனும் பாண்டியனும் ஒருகளத்தே படும்படி,

147-8. வெண்ணி தாக்கிய வெருவரு நோன் தாள் கண் ஆர் கண்ணி கரிகால் வளவன்—†வெண்ணியென்கின்ற ஊரிடத்தேபொருத அச்சந்தோன்றுகின்ற வலியையுடைய முயற்சியினையும் கண்ணுக்கு அழகுநிறைந்த ஆத்திமாலையினையுமுடைய கரிகாற்சோழன்,

‡"முச்சக் கரமும்" என்னுங் கவியானே கரிகாலாதலுணர்க.

தாயமெய்திப் (132) பிறந்து (137) மிகுவலிசெருக்கி; (140) தெவ்வர் வல் கேட்பச் (133) செய்யார்தேஎம் தெருமரல்கலிப்ப (134) நாடுசெகிற்கொண்டு நாடொறும் வளர்த்தல்காரணமாகக் (138) குருசில் (139) களிறட்டாங்கு (142) இருபெரு வேந்தரும் அவியத் (146) தாக்கிய (147) கரிகால்வளவனென முடிக்க.

149-50. [தாணிழன் மருங்கி லணுகுபு குறுகித், தொழுது:] நிழல் மருங்கில் தாள் அணுகுபு குறுகி தொழுது—அருளைத் தன்னிடத்திலே யுடைய திருவடிகளை அண்ணிதாக நின்றுசேர்ந்து வணங்கி,

150. முன் நிற்குவிராயின் - நம்முடைய வறுமைதோன்ற முன்னேநிற்பீராயின்,

150-51. [பழுதில், நீற்ற விருப்பிற் போற்றுபு நோக்கி:] ஈற்று ஆ விருப்பின் பழுதின்று போற்றுபு நோக்கி - ஈற்றுத்தொழிலையுடைய பசுத் தனது கன்றுக்குப் பால்சுரந்து கொடுக்கவேண்டுமென்னும் விருப்பம்போல நும்மிடத்து நிற்கின்ற மிடிஇல்லாம்படி பேணிப்பார்த்து,

* தொல்காப்பியம், மரபியல், 86.

† 'வெண்ணில்' என்றும் பிரதிபேதமுண்டு.

‡ இக்கவியைப் பொருநராற்றுப்படை உரையின்இறுதியிற் காண்க.

தான் பிறக்கின்றகாலத்துப் பிறவாதே நல்லமுகூர்த்தம் வருமளவும தாயுடைய வயிற்றிலேயிருந்து பிறக்கையினாலே அரசவுரிமையைப்பெற்றுப் பிறந்தென்றார்.

133. எய்யா தெவ்வர் ஏவல் கேட்ப—முன்பு தன்வலியறியாத பகைவர் பின்பு தன்வலியினையறிந்து ஏவினதொழிலைச் செய்ய,

134. செய்யார் தேஎம் தெருமரல் கலிப்ப—ஏவல்செய்யாத பகைவர்தேசம மனக்கலக்கம் பெருக,

135-6. [பௌவ மீமிசைப் பகற்கதிர் பரப்பி, வெவ்வெஞ் செல்வன் விசும்புபடர்ந் தாங்கு] வெவ்வெஞ்செல்வன், பௌவம் மீமிசை பகல் கதிர் பரப்பி விசும்பு படர்ந்தாங்கு — வெம்மையையுடைய * எல்லாரும்விரும்பப்படும் இளஞாயிறு கடலின்மீதே பகற்பொழுதைச்செய்யுங் கிரணங்களைப்பரப்பிப் பின்பு விசும்பிலே மெத்தெனச்சென்றாற்போல,

137 [பிறந்துதவழ் கற்றதற் றொட்டு]

தவழ் கற்றதன் தொட்டு—தவழ்தலைக் கற்றநாள் தொடங்கி,

பிறந்து, முன்னேகூட்டிற்று.

137—40. [சிறந்தநன், னாடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப, வாளி நன்மா னணங் குடைக் குருளை, மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி:]

மீளி மொய்ம்பின் மிகு வலி செருக்கி—கூற்றுவனுடைய வலியிற்காட்டில் மிகுகின்றவலியாலே கலித்து,

செல்வன் விசும்புபடர்ந்தாங்குத் (136) தவழ்கற்றதற்றொட்டு (137) மிகுகின்றவலியென்க.

இவன் பின்பு அரசாட்சிபெற்றானாதலின், தவழ்கற்றதற்றொட்டு நாடுசெகிற் கொண்டானென்றல் பொருந்தாமையுணர்க.

சிறந்த நல் நாடு செகில் கொண்டு நாள் தொறும் வளர்ப்ப—விளங்கின நாட்டிற்சிறந்த நன்னாட்டைத் தோளிலேவைத்துக்கொண்டு நாடோறும் வளர்க்க நல்காரணமாக,

தோள்வலியாலே பகைவென்று நாடுகாக்கமைபற்றி, நாடுசெகிற்கொண்டென்றார்

141. [முலைக்கோள் விடாஅ மாத்திரை] ஆளி நல் மான் அணங்கு உடை குருளை (139) முலை கோள் விடாஅ மாத்திரை — ஆளியாகிய மானினது வருத்துதலையுடைய குருளை முலையையுணலைக் கைவிடாத இளைய பருவத்தே,

யாளியை ஆளியென்றார், †"கடிசொ லில்லை" என்பதனன். ‡"நாயே பன்றி" என்னுஞ் சூத்திரத்து 'ஆயுங்காலை' என்பதனாற் குருளையென்பது முடித்தாம்

141. ஞெரேரென—கடுக,

---

* "வெம்புஞ்சுடரிற்சுடருந் திருமூர்த்தி" (சீவக. 2.)

† தொல்காப்பியம், எச்சவியல், 56.

‡ " மரபியல், 8.

142. தலை கோள் வேழம் களிறு அட்டாங்கு—முற்பட இரையைக் கோடற்குக்காரணமான வேட்டையிலே களிற்றைக் கொன்றாற்போல,

143. இரு பனம்போந்தை தோடும்—கரிய பனங்குருத்தில் அலர்ந்த வெண்பசுக்கத்து ஓலையும்,

*"தோடே மடலே" என்னுஞ் சூத்திரத்துப் 'பிறவும்' என்றதனாற் போந்தை முடித்தாம். அதனிடத்தினின்றும் போந்ததனாற் போந்தையென்றார். "இரும்பனைக் கொண்டு கடைகழுமிய வடங்குசிறை வலைகலத்து" என்றார் பிறரும்.

143-4. [கருஞ்சினை, யரவாய் வேம்பி னங்குழைத் தெரியலும்.] கருஞ்சினை வேம்பின் அரம் வாய் அம் குழை தெரியலும்—கரிய கொம்பினையுடைய வேம்பினுடைய வாளரத்தின் வாய்போலும் விளிம்பினையுடைய அழகிய தளிராற்செய்த மாலையும்,

145-6. ஓங்கு இரு சென்னி மேம்பட மிலைந்த இரு பெரு வேந்தரும் ஒருகளத்து அவிய—கூறிய மாலைகளில் மேலாதற்குக காரணமான பெரியதலையிலே வினையோர்சூடும் அடையாளப்பூக்களிற் சிறப்ப அவற்றைச்சூடிய சேரனும் பாண்டியனும் ஒருகளத்தே படும்படி,

147-8. வெண்ணி தாக்கிய வெருவரு நோன் தாள் கண் ஆர் கண்ணி கரிகால் வளவன்—†வெண்ணியென்கிற ஊரிடத்தேபொருத அச்சந்தோன்றுகின்ற வலியையுடைய முயற்சியையும் கண்ணுக்கு அழகுநிறைந்த ஆத்திமாலையினையுமுடைய கரிகாற்சோழன்,

‡"முச்சக் காமும்" என்னுங் கவியானே கரிகாலனதறுணர்க.

தாயமெய்திப் (132) பிறந்து (137) மிகுவலிசெருக்கி, (140) செவ்வர் வல் கேட்பச் (133) செய்யார்தேஎம் தெருமரல்கலிப்ப (134) நாடுசெகிற்கொண்டு நாடொறும் வளர்ந்ததற்காரணமாகக் (138) குருளை (139) களிறட்டாங்கு (142) இருபெரு வேந்தரும் அவிய (146) தாக்கிய (147) கரிகால்வளவனென முடிக்க.

149-50. [தாணிழன் மருங்கி லணுகுபு குறுகித், தொழுது:] நிழல் மருங்கில் தாள் அணுகுபு குறுகி தொழுது—அருளைத் தன்னிடத்திலே யுடைய திருவடிகளை அண்ணிதாக நின்றுசேர்ந்து வணங்கி,

150. முன் நிற்குவிராயின் - நும்முடைய வறுமைதோன்ற முன்னேநிற்றிராயின்,

150-51. [பழுதின், ரீற்று விருப்பிற் போற்றுபு நோக்கி.] ஈற்று ஆ விருப்பின் பழுதின்று போற்றுபு நோக்கி - ஈற்றுத்தொழிலையுடைய பசு, தனது கன்றுக்குப் பால்சுரந்து கொடுக்கவேண்டுமென்னும் விருப்பம்போல நும்மிடத்து நிற்கின்ற மிடிஇன்றும்படி பேணிப்பார்த்து,

---

* தொல்காப்பியம், மரபியல், 86.

† 'வெண்ணில்' என்றும் பிரதிபேதமுண்டு.

‡ இக்கவியைப் பொருநராற்றுப்படை உரையின்இறுதியிற் காண்க.

151-2. நும் கையது கேளா அளவை – நும்மிடத்துள்ள கலையைத் தான் கேட்பதற்கு முன்னே,

152. ஒய்யென – கடுக,

153-4. பாசி வேரின் மாசொடு குறைந்த துன்னல் சிதாஅர் நீக்கி – கொட்டைப்பாசியினது வேர்போலே அழுக்கோடேகுறைந்த தையலையுடைய துணிகளைப்போக்கி,

154-5. தூய கொட்டை கரைய பட்டு உடை நல்கி – தூயவாகிய திரள முடிந்தமுடிகளைக் கரையிலேயுடைய பட்டாகிய உடைகளைத் தந்து,

கொட்டை - தும்புமாம்.

156. பெறல் அரு கலத்தின் பெட்டாங்கு உண்க என – பெறுதற்கரிய பொற்கலத்தே விரும்பினபடியே உண்பாயாகவென்றுசொல்லி,

157-8. [பூக்கமழ் தேறல் வாக்குபு தரத்தர, வைகல் வைகல் கைகவி பருகி:] பூ கமழ் கை கவி தேறல் வாக்குபு தர தர வைகல் வைகல் பருகி – தேம் பூ நாறுகின்ற தன்கடுமையாற் சிறிதமையுமென்று கைகவித்தற்குக் காரணமான கட்டெளிவை மேன்மேலே வார்த்துத் தரத்தர நாடோறும் நாடோறும் பருகி,

* "தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்" என்றார்பிறரும்.

159. எரி அகைந்தன்ன ஏடு இல் தாமரை – நெருப்புத் தழைத்தாலொத்த ஒருவன செய்ததன்றித் தனக்கென இதழில்லாத தாமரையை,

எனவே பொற்றாமரைக்கு வெளிப்படைகூறினர். † "தோடே மடலே' என்னுஞ் சூத்திரத்தேகூறினும்.

160. சுரி இரு பித்தை பொலிய சூட்டி – கடைகுழன்ற கரிய மயிரிலே பொலிவுபெறச் சூட்டி,

161-2. நூலின் வலவா நுணங்கு அரில் மாலை வால் ஒளி முத்தமொ பாடினி அணிய – நூலாற்கட்டாத நுண்மையையும் பிணக்கத்தையு முடைய பொன்னரிமாலையை வெள்ளிதாகிய ஒளியையுடைய முத்தத்தோடே பாடின சூட,

163. கோட்டின் செய்த கொடிஞ்சி நெடு தேர் – யானைக்கொம்பாற் செய்த தாமரை முகையினையுடைய நெடிய தேரிலே,

164. ஊட்டு உளை துயல்வர ஓரி நுடங்க – சாதிலிங்கமூட்டின தலையாட்டம் பொங்கக் கழுத்தின்மயிரசைய,

165. பால் புரை புரவி நால்கு உடன் பூட்டி – பாலையொத்த நிறத்தினையுடைய குதிரைகள் நான்கினைச் சேரப்பூட்டி,

நான்கு, நால்கெனப் பெயர்த்திரிசொல்.

166. காலின் ஏழடி பின்சென்று – தான் காலாலே ஏழடிப் பின்னேவந்து

ஏழடிவருதல் ஒருமரபு; எழிசைக்கும் வழிபாடுசெய்தானாகக் கருதுதலின் ‡"செலவினும்வரவினும்" என்னுஞ் சூத்திரத்துப் பொதுவிதியாற் சென்றெ பது வந்தென்னும் பொருட்டாய் நின்றது.

---

* புறநானூறு, 392. † தொல்காப்பியம், மரபியல். 86.

‡ தொல்காப்பியம், கிளவியாக்கம், 28.

166-7. [கோலின், றுறு கிளர்ந்து:] இன் தாறுகோல் கிளர்ந்து—செலுத்துதற்கு இனிதாகிய செலவுமுடுக்குங்கோலைப் போக்கி,

என்றதனாற் கடுவிசைக்கு இவர் இருத்தலாற்றாரென்று கருதி இயற்கையிற்சேறல் அமையுமென்றான்.

167. ஏறு என்று ஏற்றி—இங்ஙனம் ஏறென்று ஏறவிட்டு,

167-8. வீறு பெறு பெரு யாழ் முறையுளி கழிப்பி—ஏனையாழ்களின் வீறுபெற்ற யாழ்ப்பாணர்க்குத் தொடக்குமுறைமைகளை நினக்குத் தந்துவிட்டு,

168-70. நீர் வாய் தண் பணை தழீஇய தளரா இருக்கை நல் பல் ஊர நாட்டொடு—நீரை எப்பொழுதும் தன்னிடத்தேயுடைத்தாகிய தண்ணிய மருத நிலஞ்சூழ்ந்த அசையாத குடியிருப்பினையுடைய நன்றான பலவூர்களையுடைய நாடுகளுடனே,

170-72. [நன்பல், வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை, வெருவரு செலவின் வெகுளி வேழம்:]

பறை வெரூஉ நுவலும் வேழம்—பறை எல்லார்க்கும் அச்சத்தைச்சாற்றுதற்குக் காரணமாகிய யானை,

பரூஉ பெரு தட கை வெரு வரு செலவின் வெகுளி நல் பல் வேழம்—பருத்த பெரியவளைவினையுடைய கையினையும் அச்சந்தோன்றும் ஓட்டத்தினையும் கோபத்தினையுமுடைய நன்றாகிய பலயானைகள்,

173. தரவு இடை தங்கல் ஓவிலன்—தருதற்றொழிலிடத்தே நிலைபெறுதலை ஒழிதலிலன்;

இனித் தரலிடத்துத் தாழ்த்தலிலனென்றுமாம்.

173-4. வரவிடை பெற்றவை பிறர்பிறர்க்கு ஆர்த்தி—வருதலிடத்துப் பெற்றபொருள்களைப் பிறர்க்குப்பிறர்க்குக் கொடுத்து,

174-5. தெற்றென செலவு கடைக்கூட்டுதிர் ஆயின்—கடுக அவனிடத்து நின்றும் போகின்றபோக்கை முடிவுபோக்குவீராயின்,

175. பல புலந்து—அதுபொறாமற் பலகாலும்வெறுத்து,

176. நில்லா உலகத்து நிலைமை தூக்கி—செல்வமும் யாக்கையுமுதலியன நிலையில்லாத உலகத்துப் புகழைச் சீர்தூக்கிப் பார்த்து,

நிலைபெறும் தன்மையுடைத்தாகலிற் *புகழை நிலைமையென்றார்; ஆகுபெயர்.

177. செல்க என—இங்ஙனம்போகெனக்கூறி,

விடுக்குவன் அல்லன்—நும்மைக் கடுக விடுவானல்லன்;

தொழுது முன்னிற்குவிராயின் (150) நோக்கி (151) நல்கிப் (155) பாடினி அணியாநிற்கச் (162) சூட்டி (160) வாக்குபு தரத்தரப் (157) பருகித் (158) தெற்றெனச் (174) செலவுகடைக்கூட்டுதிராயின் அதற்குப் பலபுலந்து (175) தேரிலே (163) குதிரையைப்பூட்டி (165) ஏற்றி (167) முறையுளிக்கழிப்பி (168) விடுக்குவனல்லன் (177); பின்னர் நின்னைநோக்கி நில்லாதவுலகத்துநிலைமையைச் சீர்தூக்கி (176) வரவிடைப் (173) பெற்றவை பிறர் பிறர்க்கார்த்தி (174) இங்ஙனஞ் செல்வாயாகவெனக்கூறி (177) அங்ஙனம் நீபோதற்கு நாட்டொடு (170) வேழம் (172) தரவிடைத்தங்கல் ஓவிலன் (173) எனமுடிக்க.

---

* திருக்குறள், 233.

னல்லாவுலகத்து நிலைமைதூக்கிப் பலபுலத்து செல்கென விடுக்குவனல்ல னென்பாருமுளர்.

177-9. ஒல்லென திரை பிறழிய இரு பௌவத்து கரை சூழ்ந்த அகல் இடக்கை மண் மருங்கினுன் (227) நாடு (248)—ஒல்லென்னும் ஓசைபடத்திரை முரிந்த கரியகடலினது கரைசூழ்ந்த அகன்ற பரப்பினையுடைய இவ்வுலகத்து ஒருகூற்றின்கண் உளதாகிய சோழநாடு,

180-82. [மாமாவின் வயின்வயினெற், ருழ்தாழைத் தண்டண்டலைக், கூடுகெழீஇய குடிவயினுன்:]

மாமாவின் வயின் வயின் நெல் கூடு கெழீஇய நாடு (248)—ஒருமாநிலத்தில் ஒருமாநிலத்தில் இடந்தோறும் இடந்தோறும் நெற்கூடுகள்பொருந்தினசோழ நாடு.

தாழ் தாழை தண் தண்டலை குடி வயினுன்—தாழ்ந்த தெங்கினையுடைய குளிர்ந்த மரச்சோலைகளிலிருக்கின்ற குடிமக்களிடத்தில்,

183-4. செ சோற்ற பலி மாந்திய கரு காக்கை—உதிரத்தாற் சிவந்தசோற்றையுடையவாகியபலியை விழுங்கின கரியகாக்கை,

184-6. [கவவுமுனையின், மனைநொச்சி நிழலாங்க, ணீற்றியாமை தன் பார்ப் போம்பவும்:] மனை நொச்சி நிழல் ஆங்கண் ஈற்று யாமை தன் பார்ப்பு கவவு முனையின் ஓம்பவும்—மனையைச்சூழ்ந்த நொச்சியின் நிழலிடத்துக்கிடந்த ஈற்றுத்தொழிலையுடைத்தாகிய யாமை தன்னுடையபார்ப்பைத் தான் தின்றலை வெறுத்ததாயின், அதனைப்பின்பு பசித்தகாலத்துத் தின்பதாகப் பாதுகாத்து வைப்பவும்,

எனவே மருதநிலத்திலிருக்குங்காக்கை நெய்தனிலத்துப்பார்ப்பைத் தின்னுமென்ருர்; *"தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன" என்பதனுற் பார்ப் பென்ருர்.

187. இளையோர் வண்டல் அயரவும்—அவ்வுழவர்மகளிர் நெய்தனிலத்தின் மணற்குன்றிலே வண்டலிழைத்து விளையாடவும்,

187-8. [முதியோர், அவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவும்:] பகை முதியோர் அவை புகு பொழுதில் தம் முரண்செலவும்—பகைமைமுதிர்ந்தோர் தனது அரசவையிற்சென்று புகுங்காலத்துத் தம்மாறுபாட்டைப் போக்கும்படியாகவும் பெரிதாண்ட (229) என மேலேகூட்டுக.

என்றது வழக்குமாறுபட்டு வந்தோர்க்கு அவ்வழக்குவிடறுப்பனென்ற வாறு; † "உரைமுடிவு காணுன்" (21) என்னும் பழமொழி கூறினுர்.

* தொல்காப்பியம், மரபியல், 5.

† "உரைமுடிவு காணு னிளமையோ னென்ற, நரைமுதுமக்க ளுவப்ப - நரைமுடித்துச், சொல்லான் முறைசெய்தான் சோழன் குலவிச்சை, கல்லாமற் பாகம் படும்"—'தம்முள் மறுதலையாயினுரிருவர் தமக்கு முறைமை செயவேண்டிவந்து சிலசொன்னுல் அச்சொன்முடிவுகண்டே ஆராய்ந்து முறைசெய்ய அறிவுநிரம்பாத இளமைப்பருவத்தானென்றிகழ்ந்த நரைமுதுமக்க ளுவக்கும் வகை நரைமுடித்துவந்து முறைவேண்டிவந்த இருதிறத்தாரும் சொல்லிய சொற்கொண்டே ஆராய்ந்தறிந்து முறைசெய்தான் கரிகாற்பெருவளத்தானென்னுஞ் சோழன்; ஆதலால், தத்தங்குலத்துக்குத்தக்க விச்சைகள் கற்பதற்குமுன்னே செம்பாகமுளவா மென்றவாறு' என்பது இதனுரை.

189-92. [முடக்காஞ்சிச் செம்மருதின், மடக்கண்ண மயிலாலப், பைம் பாகற் பழந்துணரிய, செஞ்சுளைய கனிமாந்தி:] பை பாகல் பழம் செ சுளைய துணரிய கனி மாந்தி முடம் காஞ்சி செ மருதின் மட கண்ண மயில் ஆல— பசிய பாகற் பழத்தையும் சிவந்த சுளையையுடையவாகிய குலைகொண்ட பலாப் பழத்தையுந் தின்று வளைவையுடைய காஞ்சிமரத்திலும் செவ்விய மருதிலு மிருந்த மடப்பத்தைத் தம்மிடத்தேயுடையவாகிய பெடைமயில்கள் ஆரவாரித் தழைக்கும்படி அங்குநின்றும்போந்து,

193-213. [அறைக்கரும்பி னரிநெல்லி, னினக்களம ரிசைபெருக, வற ளடும்பி னிவர்பகன்றைத், தளிர்ப்புன்கின் றாழ்காவி, னனைஞாழலொடு மரங் குழீஇய, வவண்முனையி னகன்றுமாறி, யவிழ்தளவி னகன்றோன்றி, நகுமுல்லை யுகுதேறுவீப், பொற்கொன்றை மணிக்காயா, நற்புறவி னடைமுனையிற், சுறவ ழங்கு மிரும்பௌவத், திறவருந்திய வினநாரை, பூம்புன்னைச் சினைச்சேப்பி, னோங்குதிரை யொலிவெரீஇத், தீம்பெண்ணை மடற்சேப்பவுங், கோட்டெங்கின் குலைவாழைக், கொழுங்காந்தண் மலர்நாகத்துத், துடிக்குடிஞைக் குடிப்பாக்கத், தியாழ்வண்டின் கொளைக்கேற்பக், கலவம் விரித்த மடமஞ்ஞை, நிலவெக்கர்ப் பலபெயர]

யாழ் வண்டின் கொளைக்கு ஏற்ப கலவம் விரித்த மட மஞ்ஞை நிலவு எக்கர் பல பெயர—யாழோசைபோலும் வண்டினது பாட்டினைக்கேட்டு அதற்குப் பொருந்தத் தோகையைவிரித்த அறியாமையையுடைய மயில் நிலவுபோலும் இடுமணலிலே பலபகுதிப்பட ஆடவும்,

பெடை தங்குகின்ற மருதநிலத்தைவிட்டுப் பாட்டைக்கேட்டு நெய்தனிலத் தேபோந்தமைபற்றி மடமஞ்ஞையென்றார்.

அகவர் (220) அறை கரும்பின் அரி நெல்லின் இனம் களமர் இசைபெருக வறள் அடும்பின் இவர் பகன்றை தளிர் புன்கின் தாழ் காவின் நனை ஞாழ லொடு மரம் குழீஇய அவண முனையின் அகன்று மாறி நீல் நிறம் முல்லை பல் திணை நுவல (221)—நாட்டில்வாழ்வார் அறுத்தலைச்செய்யும் கரும்பின்கண்ணும் அரிகின்ற நெல்லின் கண்ணுமெழுப்பின திரண்ட களமருடைய ஓசைமிகுகை யினாலே நீரற்ற இடத்திலெழுந்த அடும்பினையும் படர்கின்ற பகன்றையினையும் தளிரையுடைத்தாகிய புன்கினையும் தாழ்ந்தசோலைகளையுமுடையதாய் அரும் பின ஞாழலோடே ஏனைமரங்களுந்திரண்ட அந்நாட்டை வெறுத்தார்களாயின் அவ்விடத்தை நீங்கி நெஞ்சாலேகைவிட்டு நீலநிறத்தையுடைய முல்லைக்கொடி படர்ந்த பலகாட்டுநிலத்தேசென்று அந்நிலத்தைக்கொண்டாடவும்,

அகவர் இசைபெருக முனையின் அகன்று மாறிப் பஃறிணை நுவலவென முடிக்க.

கானவர் (220) அவிழ் தளவின் அகல் தோன்றி நகு முல்லை வீ உகு தேறு பொன் கொன்றை மணி காயா நல் புறவின் நடை முனையின் மருதம் பாட (220) —முல்லைநிலத்து வாழ்வார் அவிழ்கின்றதளவினையும் பரந்ததோன்றியினையும் அலர்கின்ற முல்லையினையும் பூ உகுகின்ற தேற்றாவினையும் பொன்போலும் பூவினையுடைய கொன்றையினையும் நீலமணிபோலும் பூவினையுடையகாயாவினை

புமுடைய நல்லகாட்டில் உறைகின்ற ஒழுக்கத்தை வெறுக்கின் மருதநிலத்தே சென்று அவ்வொழுக்கத்தைப் புகழவும்,

தளவு - முல்லைவிசேடம்.

சுற வழங்கும் இரு பௌவத்து இறவு அருந்திய இனம் நாரை பூ புன்னை சினை சேப்பின் ஓங்கு திரை ஒலி வெரீஇ தீ பெண்ணை மடல் சேப்பவும்—சுறாத் திரியும் கரிய கடலின்கண் இறவைத்தின்ற திரண்டநாரைகள் பூக்களையுடைய புன்னைக்கோட்டிலே தங்கின் அதன்மேலேமுறிகின்ற உயர்ந்ததிரையினது ஆரவாரத்திற்குவெருவி மருதநிலத்தில் இனியபனையினது மடலிலேதங்கவும்,

கோள் தெங்கின் குலை வாழை கொழு காந்தள் மலர் நாகத்து துடி குடிஞை குடி பாக்கத்து பரதவர் (218) அவண் முனையின் (198) குறிஞ்சி பாட (218)—குலைகொண்ட தெங்கினையும் குலையினையுடைய வாழையினையும் கொழுவிய காந்தளினையும் மலர்ந்த சுரபுன்னையினையும் துடியோசைபோலும் ஓசையினையுடைய பேராந்தையினையுமுடைய குடியிருப்பையுடைத்தாகிய பாக்கத்தில்வாழும் பரதவர் அவ்விடத்தைவெறுப்பின் குறிஞ்சிநிலத்தேசென்று அவ்விடத்தைப் புகழவும்,

214-5. தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர் மீன் நெய்யொடு நறவு மறுகவும்—தேனாகியநெய்யோடே கிழங்கையும் விற்றவர்கள் மீனினதுநெய்யோடே நறவையும் கொண்டுபோகவும்,

216-7. தீ கரும்போடு அவல் வகுத்தோர் மான் குறையொடு மது மறுகவும்—இனியகரும்போடே அவலைக் கூறுபடுத்தி விற்றவர்கள் மானினதுதசையோடே கள்ளையும் கொண்டுபோகவும்,

218-9. [குறிஞ்சி பரதவர் பாட நெய்தல், நறும்பூங் கண்ணிகுறவர்சூட]

குறவர் நெய்தல் நறு பூ கண்ணி சூட—குறவர் அந்நிலத்துப் பூக்களை வெறுக்கின் நெய்தலினது நறிய பூவாற்செய்த கண்ணியைச்சூடவும்,

220-22. [கானவர் மருதம் பாட வகவர், நீனிற முல்லைப் பஃறிணை நுவலக், கானக்கோழி கதிர்குத்த]

கானக் கோழி கதிர் குத்த—காட்டிடத்துக் கோழிகள் நெற்கதிரைத் தின்னவும்,

223. மனை கோழி தினை கவர—மருதநிலத்தின் மனையிற்கோழிகள் தினையைத் தின்னவும்,

224. வரை மந்தி கழி மூழ்க—மலையிடத்திற்குரியமந்திகள் கழியிலே மூழ்கவும்,

225. கழி நாரை வரை யிறுப்ப—கழியிற்றிரியும்நாரைகள் மலையிலே கிடக்கவும்,

226. தண் வைப்பின் நால் நாடு குழீஇ—குளிர்ந்த வைப்புக்களையுடைய நான்குகூறாகிய நாடுகள் திரண்டு,

நால் நாடென்றார், * "நடுவ ணைந்திணை நடுவண தொழிய" என்னுஞ்சூத்திரத்தால்.

---

* தொல்காப்பியம், அகத்திணையியல், 2.

பாசிலைம்பவும் (186) அயரவும் (187) மயிலால (190) மடமந்தை (212) பலபெயரவும் (216) ஈரை (204) சேப்பவும் (207) அகவர் (220) அகன்றுமாறிப் (198) பசுமீன் றுவலவும் (221) கானவர் (220) நடைமுனையின் (202) மருதம்பாடவும் (220) பாக்கத்துப் (210) பரதவர் குறிஞ்சிபாடவும் (218) இழங்கு மாறியோர் (214) நறவுமறுகவும் (215) அவல்வகுத்தோர் (216) மது மறுகவும் (217) குறவர் கண்ணிசூடவும் (219) கோழி கதிர்குத்தவும் (222) மனைக்கோழி தினைக்கவரவும் (223) மந்தி ஆழ்கவும் (224) நாரை வரைபிறப்பவும் (225) சான்றோர் குழீஇ (226) மாமாவின் வயின்வயின் நெற் (180) கடுகெழீஇய (182) நாடு (248) என வினைமுடிக்க.

குழீஇயென்னும் செய்தெனெச்சம் பிறவினைகொண்டது, * "அம்முக் கிளவியும்" என்னுஞ் சூத்திரவிதியால்.

227-31. [மண்மருங்கினன் மறுவின்றி, ஒருகுடையா னொன்று கூறப், பெரிதாண்ட பெருங்கேண்மை, யறனொடு புணர்ந்த திறனறி செங்கோ, லன்னோன் வாழி வெல்வேற் குருசில்:]

மறு இன்றி அறனொடு புணர்ந்த திறன் அறி செ கோல் ஒரு குடையான் ஒன்று கூற முதியோர் (187) முரண் செல (188) பெரு கேண்மை பெரிது ஆண்ட வெல் வேல் குருசில்—குற்றமின்றித் தருமத்தோடுகூடிய வழியை உலகம் அறிதற்குக் காரணமாகிய செவ்விய கோலாலும் தண்ணளிசெய்தற்கெடுத்த ஒருகுடையாலும் தனது ஆணையே உலகங்கூறும்படியாகவும் முதியோர் முரண் செல்லும்படியாகவும் பெரியநட்புடனே நெடுங்காலம் உலகையாண்ட வெல்கின்ற வேலையுடைய தலைவன்,

ஒருகுடை என்றதனானும், ஒன்றுகூற என்றதனானும் இவன் மண்முழுதும் ஆண்டானென்றார்.

அன்னோன்—யான்கூறிய அத்தன்மைகளையுடையோன்,

வாழி — வாழ்வாயாக;

இறுதியகரம் கெட்டுநின்றது.

232-3. [மன்னர் நடுங்கத் தோன்றிப் பன்மா, ணெல்லை தருநன் பல்கதிர் பரப்பி:]

மன்னர் நடுங்க தோன்றி - பகையரசர் நடுங்கும்படி விளங்கி,

பல் மாண் எல்லை தருநன் பல் கதிர் பரப்பி பல்லுயிர்களும் மாட்சிமைப் படுதற்குக் காரணமாகிய பகற்பொழுதைத் தருங்கதிரோன் தன்னிலையை விட்டுப் பலகிரணங்களைப் பரப்புகையினாலே,

234. குல்லை கரியவும் - கஞ்சங்குல்லை தீயவும்,

கோடு எரி கைப்பவும் — மரங்களினுடைய கொம்புகளை நெருப்புத்தின்னவும்,

* தொல்காப்பியம், வினையியல், 34.

235. [அருவி மா மலை நிழத்தவும்:] மா மலை அருவி நிழத்தவும்—பெருமையையுடையமலை தன்னிடத்து அருவிகளை இல்லையாக்கவும்,

235-6. மற்ற கருவி வானம் கடல் கோள் மறப்பவும்—இவையொழிந்த தொகுதியையுடைய மேகம் கடலிடத்துமுகத்தலை மறப்பவும்,

237. பெரு வறன் ஆகிய பண்பு இல் காலையும்—பெரிய வற்கடமுண்டாகிய நற்குணமில்லாத காலத்தும்,

கரியவும் சைப்பவும் (234) நிழத்தவும் (235) மறப்பவும் (236) வறனுகிய காலையுமெனமுடிக்க.

238-9. [நறையு நரந்தமு மகிலு மாரமுந், துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி:] நறையும் நரந்தமும் அகிலும் ஆரமும் பொறை துறை துறை தோறும் உயிர்த்து ஒழுகி—நறைக்கொடியும் நரந்தப்புல்லும் அகிலும் சந்தனமுமாகிய சுமையைத் துறைதோறும் துறைதோறும் இளைப்பாறத்தள்ளிப்போய்,

240. நுரை தலை குரை புனல்—நுரையைத் தலையிலேயுடைய ஆரவாரத்தையுடைய நீர்,

வரைப்பு அகம் புகுதொறும்—குளத்திலும் கோட்டத்திலும் புகுந்தோறும், வரைக்கப்படுதலின், வரைப்பு ஆகுபெயர்.

241. புனல் ஆடும் மகளிர் கதுமென குடைய—நீராடுமகளிர் கடுகக் குடைந்துவிளையாட,

புனல் ஒழுகிப் புகுதொறும் மகளிர் குடையவென்க.

242. கூனி குயத்தின் வாய் நெல் அரிந்து—வளைந்துநின்ற அரிவாளின் வாயாலே நெல்லையறுத்து,

நெல்லு மிகக்காய்த்துத் தரையிலேவிழுதலின், வளைந்துநிற்கவேண்டுமென்றார்.

243. சூடு கோடு ஆக பிறக்கி—சூட்டை மலையாகஅடுக்கி,

243-4. நாள் தொறும் குன்று என குவைஇய குன்று குப்பை—நாடோறும் கடாவிட்டு மேருவென்னும்படி திரட்டின தொலையாத நெற்பொலி,

245-8. [கடுந்தெற்று மூடையி னிடங்கெடக் கிடக்குஞ், சாலி நெல்லின் சிறைகொள் வேலி, யாயிரம் விளையுட் டாகக், காவிரி புரக்கு நாடுகிழ வோனே·]

கடு தெற்று மூடையின் இடம் கெட கிடக்கும்—நெருங்கத்தெற்றின குதிரின்கண்ணே வெற்றிடம் இல்லையாம்படி கிடத்தற்குக்காரணமான

கடுந்தெற்றுமூடை கோட்டையுமாம்.

சிறை கொள் வேலி ஆயிரம் சாலி நெல்லின் விளையுட்டாக—வரம்பு கட்டின வேலிநிலம் ஆயிரக்கலமாகிய செந்நெல்லின் விளையுட்டாக,

* தொல்காப்பியம், உரியியல், 34.

காவிரி புரக்கும் நாடு கிழவோன்—காவிரி பாதுகாக்கும் நாடு தனக்கே உரித்தாம் தன்மையுடையோன்.

வறனுறிய காலையும் (237) புனல்(240) ஒழுகிப் (239) புகுதொறும்(240) மகளிர் குடைந்து விளையாடக் (241) கூனி அரிந்து (242) பிறக்கிக் (243) குவைஇய குப்பை (244) கிடத்தற்குக்காரணமான (245) விளையுட்டாகக் (247) காவிரி புரக்குநாடு (248) என வினைமுடிக்க.

பொருந (3), கோடியர்தலைவ, கொண்டதறிந (57), புகழ்மேம்படுந (60), எழின்கிழவ (63), காடுறை கடவுட்கடன் கழிப்பியபின்றை(52) நெறிதிரிந்தொராஅது (58) ஆற்றெதிர்ப்படுதலும் நோற்றதன்பயனே (53), போற்றிக்கேண்மதி (60), நின்னிரும்பேரொக்கலொடு (61) பசி ஓராஅல்வேண்டின், நீடின்று (62) எழுமதி (63); யானும் (64) இன்மைதீர வந்தனென் (129), உருகெழு குருசிலாகிய (131) உருவப்பஃறே ரிளையோன்சிறுவன் (130), கரிகால்வளவன் (148), நாடுகிழவோன் (248), குருசில், அன்னோன் (231) தாணிழன் மருங்கிற் குறுகி (149) மன்னர்நடுங்கத்தோன்றி (232), வாழியெனத் (231) தொழுது முன்னிற்குவிராயின் (150), நாட்டொடு (170) வேழம் (172) தரவிடைத் தங்கலோவிலன் (173) எனக்கூட்டி வினை முடிவுசெய்க

*"முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி........வேண்டும்" என்பதனான், இங்ஙனமுடிந்தது.

†"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும், ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப், பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச், சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்" என்பது இதற்குவிதி.

‡"ஆசிரிய நடைத்தே வஞ்சி" என்பதனாற் பின்னர் வஞ்சி மிகவும் வந்தனவென் றுணர்க.

**சோழன் கரிகாற்பெருவளத்தானை முடத்தாமக்கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்த வுரை முற்றிற்று.**



* "முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி, பன்மையொடு முடியினும் வரைநிலை யின்றே, யாற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்" (தொல். எச்ச. 66.)

† தொல்காப்பியம், புறத்திணையியல், 36.

‡ ,, செய்யுளியல், 108.

வெண்பா.

1*வரிய மேற்றத்தி றலும் பிறர்நாட்டு
வாரி சுரக்கும் வளனெல்லாந் - தேரி
னரிகாலின் கீழ்கூஉ மந்நெல்லே சாலுங்
கரிகாலன் காவிரிசூழ் நாடு.

2 அரிமா சுமந்த வமளிமே லானைத்
†திருமா வளவனெனத் தேறேன் - றிருமார்பின்
மானமா லென்றே தொழுதேன் றொழுதகைப்
போனவா பெய்த வளை.

3 முச்சக் கரமு மளப்பதற்கு நீட்டியகா
லிச்சக் கரமே யளந்ததாற் - செய்ச்செ
யரிகான்மேற் றேன்றொடுக்கு மாய்புனனீர் நாடன்
கரிகாலன் கானெருப் புற்று.

---

* (தொல். புறத்திணை. சூ. 31-ந. மேற்)

† "திருமாவளவன்" (பட். 299), "செருவெங்காதலின் றிருமாவளவன்' (சிலப். 5: 90)

# மூன்றாவது

# சிறுபாணாற்றுப்படை.

மணிமலைப் பணைத்தோண் மாநில மடந்தை
யணிமுலைத் துயல்வரூஉ மாரம் போலச்
செல்புன லுழந்த சேய்வரற் கான்யாற்றுக்
கொல்கரை நறும்பொழிற் குயில்குடைந் துதிர்த்த
புதுப்பூஞ் செம்மல் சூடிப் புடைநெறித்துக்
கதுப்புவிரித் தன்ன காழக நுணங்கற
லயிலுருப் பனைய வாகி யைதுநடந்து
வெயிலுருப் புற்ற வெம்பரல் கிழிப்ப
வேனி னின்ற வெம்பத வழிநாட்
காலுறா யிற்றுக் கதிர்கடா வுறுப்பப்
பாலை நின்ற பாலை நெடுவழிச்
சுரன்முதன் மராஅத்த வரிநிழ லசைஇ
வைதுவீ ழிருப்பெய லழுகுகொண் டருளி
நெய்கனிந் திருளிய கதுப்பிற் கதுப்பென
மணிவயிற் கலாபம் பரப்பிப் பலவுடன்

---

1-269. இந்நூல் பாணாற்றுப் படைக்கு மேற்கோள்; (தொல். புறத்திணை. சூ. 36. ந)

2. 'துயல்வரும்' எனவும் பாடம்.

1-3. "அலைநீராடை மலைமுலையாகத். தாரப் பேரியாற்று மாரிக்கூந்தற், கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை" (சில. இந்திர. 1-3.)

7. 'அயிலுருக்கனையவாகி' என்றும், 'அயிலுருத் தனையவாகி' என்றும் பாடம்.

7-8. "எரியுந் தீமே லயில்போற் செறிபரற் கானில் (திருச்சிற். 228.)

10-11. பாலை யென்பது உட்டினகதுக்குப் பெயருமா மென்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்; (தக்க. 67-உரை.)

11-2. "நெறியயன் மராஅத், தல்குறு வரிநிழ லசைஇ" (அகநா. 121)

14. "எண்ணெயு நானமு மிவை மூழ்கி யிருடிருக் கிட்டு.........கடை குழன்ற கருங்குழல்கள்" (சீவக. 164.)

15. 'மணிமயிற்கலாபம்' என்றும் பாடம்.

14-5. "அகிலுண விரித்த வம்மென் கூந்தலின், மணிமயிற் கலாப மஞ்சிறைப் பரப்பி" (சிறுபாண். 263-4); "கணங்கொ டோகையிற் கதுப்பிகுத் தசைஇ" (மலைபடு. 44); "பூம்புகை, மாட மாலைமேனவார் மணிக்குழ லின் மூழ்கலிற், கோடுயர்ந்த குன்றின்மேற் குழீஇய மஞ்ஞை தஞ்சிற, கீறு மஞ்சி னுள்விரித் திருந்த வண்ண மன்னவே", "கோல நெடுங்கண் மகளிர் கூந்தல் பரப்பி யிருப்பப், பீலி மஞ்ஞை நோக்கிப் பேடைமயிலென் றெண்ணி" (சீவக. 71, 919.)

மயின்மயிற் குளிக்குஞ் சாயற் சாஅ
யுயங்குநாய் நாவி னல்லெழி லசைஇ
வயங்கிழை யுலறிய வடியி னடிதொடர்ந்
தீர்ந்துநிலந் தோயு மிரும்பிடித் தடக்கையிற்
சேர்ந்துடன் செறிந்த குறங்கிற் குறங்கென
மால்வரை யொழுகிய வாழை வாழைப்
பூவெனப் பொலிந்த வோதி யோதி
நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக்
களிச்சுரும் பரற்றுஞ் சுணங்கிற் சுணங்குபிதிர்ந்
தியாணர்க் கோங்கி னவிர்முகை யெள்ளிப்
பூணகத் தொடுங்கிய வெம்முலை முலையென
வண்கோட் பெண்ணை வளர்த்த நுங்கி
னின்செறி நீர்தரு மெயிற்றி னெயிறெனக்
குல்லையம் புறவிற் குவிமுகை யவிழ்ந்த
முல்லை சான்ற கற்பின் மெல்லியன்

---

16. 'மயிற்கொளிக்கும்' என்றும் பாடம். "மயிலன்ன சாயலாய்" (ஏலாதி. 28)

17-8: பொருநராற்றுப்படை, 42 - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

20. 'சேர்ந்து செறி குறங்கு' என்பதும் 'சேர்ந்து செறி குறங்கின்' என்பதும் சேர், திரட்சிப்பொருளில் வந்ததற்கு மேற் கோள். (தொல். உரி சூ. 67. சே; ஷை ஷை சூ. 65 - ந; இ-வி. சூ. 290)

21. இது, ஒழுகல் நெடுமைப்பண்பு உணர்த்தியதற்கு மேற்கோள் (தொல. உரி. சூ. 21-சே; ஷை ஷை சூ-19. ந; இ-வி. சூ. 284.)

21-2. "வாழை யீன்ற வையேந்து கொழுமுகை, மெல்லியன் மகளி ரோதி யன்ன, பூவொடு துயல்வரு மால்வரை நாடனை" (நற். 225)

19-23. "ஈர்ந்து நிலந்தோயும்..... நச்சி" என்பதூஉம், அடுக்கியதோற்றமெனப் படாதோவெனின், படாதன்றே; யானைக்கை போலுங் குறங்கு, குறங்குபோலும் வாழையென அடுக்கிச்சொல்லாது குறங்கினையுடையா ளென்று துணித்துக் கூறிய பின்னர்க் குறங்கென மால்வரை யொழுகிய வாழை யென் றுரைத்தலி னென்பது. (தொல். உவம. சூ. 36-உரை)

25-6. "யாணர்க் கோங்கின் மென்முகிழ்முலை" (பாக. 10: கோபியர். 13.)

27. இவ்வடி, நுங்கென்பது, புல்லொடு வந்ததற்கு மேற்கோள். (தொல். மர. சூ. 86 உரை)

28. 'நீர்தரும்' என்றும் பாடம்.

19-28. "ஈர்ந்து நிலந் தோயும்..... எயிற்றின்" என்னும் இச்சந்தான வுவமை மாலையுவமை யின்பாற் படும்; (இ-வி. சூ. 645) பாடபேதமுண்டு.

30. "முல்லை சான்ற கற்பின் மெல்லியற் குறு மகள்" (நற். 142)

மடமா னோக்கின் வாணுதல் விறலியர்
நடைமெலிந் தசைஇய நன்மென் சீறடி
கல்லா விளையர் மெல்லத் தைவரப்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பி
னின்குரற் சீறியா ழிடவயிற் றழீஇ
நைவளம் பழுநிய நயந்தெரி பாலை
கைவல் பாண்மகன் கடனறிந் தியக்க
வியங்கா வையத்து வள்ளியோர் நசைஇத்
துனிகூ ரெவ்வமொடு துயராற்றுப் படுப்ப
முனிவிகந் திருந்த முதுவா யிரவல
கொழுமீன் குறைய வொதுங்கி வள்ளிதழ்க்
கழுநீர் மேய்ந்த கயவா யெருமை
பைங்கறி நிவந்த பலவி னீழன்
மஞ்சண் மெல்லிலை மயிர்ப்புறந் தைவர
விளையா விளங்க ணாற மெல்குபு பெயராக்
குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளுங்
குடபுலங் காவலர் மருமா னொன்னார்
வடபுல விமயத்து வாங்குவிற் பொறித்த
வெழுவுறழ் திணிதோ ளியறேர்க் குட்டுவன்
வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே யதாஅன்று
நறவுவா யுறைக்கு நாகுமுதிர் நுணவத்

32. ‘நலமென் சீறடி’ என்றும் பாடம்.

34-5. “பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின், இருடையமைகேள்வி யிட வயிற் றழீஇ” (பெரும்பாண். 15-6.); “பொன் வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின், மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ்” (புறநா. 308); “கந்தாது பொன் வார்ந்தன யாழின் நரம்புளர்ந்து” (பாரத. 10. கோவத்தன. 39.)

36-7. “நைவளம் பழுநிய பாலை வல்லோன” (குறிஞ்சி. 146.)

38-9. கூர்ப்பு முன் கிளவாதுள்ள தொன்று சிறத்தலாகிய குறிப்புணர்த் துமென்பதற்கு மேற்கோள்; (தொல். உரி. சூ. 18, சே; ஷை ஷை சூ 16, ந; இ-வி. சூ. 281)

40 “முதுவாயிரவலன்” (முருகு. 284): “முதுவா யொக்கல்”, “முதுவாய்க் கோடியர்” (பட். 214, 253.)

45. “நெய்தல், விளையாவிளங்கணாற” (அகநா. 400)

42-7. “தடமருப் பெருமை தாமரை முனையின், முடமுதிர் பலவின் கொழு நிழல் வதியுங், குட நாடு” (அகநா. 91)

50. ‘புனல் வஞ்சிவாயிலும் வறிதே’ என்றும் பாடம்.

51. நாகு பெண்மையையன்றி இளமையு முணர்த்து மென்பதற்கு ‘நாகு முதிர் நுணவம்’ என்பது மேற்கோள்; (சீவக. 74.)

துறைவாய்க் குறுந்துணி யயிறுணி யொருத்த
கைபுனை செப்பங் கடைந்த மார்பிற்
செய்பூங் கண்ணி செவிமுதற் றிருத்தி
நோன்பகட் டுமண ரொழுகையொடு வந்த
மகாஅ ரன்ன மந்தி மடவோர்
நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்
வாள்வா யெருந்தின் வயிற்றகத் தடக்கித்
தோள்புற மறைக்கு நல்கூர் நுசுப்பி
னுளரிய லைம்பா லுமட்டிய ரீன்ற
கிளர்பூட் புதல்வரொடு கிலுகிலி யாடுந்
தத்துநீர் வரைப்பிற் கொற்கைக் கோமான்
றென்புலங் காவலர் மருமா னொன்னார்
மண்மாறு கொண்ட மாலை வெண்குடைக்
கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்
றமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நனை மறுகின் மதுரையும் வறிதே யதாஅன்று
நறுநீர்ப் பொய்கை யடைகரை நிவந்த
துறுநீர்க் கடம்பின் றுணையார் கோதை
போவத் தன்ன வுண்டுறை மருங்கிற்
கோவத் தன்ன கொங்குசேர் புறைத்தலைவ்
வருமுலை யன்ன வண்முகை யுடைந்து
திருமுக மவிழ்ந்த தெய்வத் தாமரை

53. ‘ கைபுனை சேயங்கடைந்த ’ என்றும் பாடம்.

55. உமணரொழுகை : “ பெருங்கையிற் றொழுகை மருங்கிற் காப்பச், சில் பத வுணவின் கொள்ளை சாற்றிப், பல்லெருத் துமணர் பதிபோகு நெடு நெறி ” (பெரும்பாண். 63-5.)

56. மகாஅரன்னமந்தி: “ கடும்பறைக் கோடியர் மகாஅ ரன்ன, நெடுங் கழைக் கொம்பர்க் கடுவ னுகளினும் ” (மலைபடு. 236-7.)

57. ‘நகாஅவன்ன’ என்றும் பாடம்.

57-62. கொற்கைமுத்து : “ விளைந்து முதிர்ந்த விழுமுத்தி, னிலங்கு வளை யிருஞ்சேரிக், கட்கொண்டிக் குடிப்பாக்கத்து, நற்கொற்கையோர் நசைப் பொருந ” (மதுரை. 135-8.)

65. “ கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன் (பொருந. 148)

66. தாங்கருமரபின் : (சிறுபாண். 127)

69. “ கடம்புசூடியகண்ணிமாலை ” (சீவக. 990)

70. ‘ வண்டுறை ’ என்றும் பாடம்.

71. ‘ கோபத்தன்ன ’ என்றும் பாடம்.

72-3. (தொல். உவம. சூ. 9-உரை; இ-வி. சூ-640)

யாசி லங்கை யரக்குத்தோய்ந் தன்ன
சேயிதழ் பொதிந்த செம்பொற் கொட்டை
யேம வின்றுணை தழீஇ யிறகுளர்ந்து
காமர் தும்பி காமரஞ் செப்பும்
தண்பணை தழீஇய தளரா விருக்கைக்
குணபுலங் காவலர் மருமா னொன்னா
ரோங்கெயிற் கதவ முருமுச்சுவல் சொறியுந்
தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை
நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பிய
னோடாப் பூட்கை யுறந்தையும் வறிதே யதாஅன்று
வானம் வாய்த்த வளமலைக் கவாஅற்
கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய
வருந்திற லணங்கி னாவியர் பெருமகன்
பெருங்க னாடன் பேகனுஞ் சுரும்புண
நறுவீ யுறைக்கு நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற்
பறம்பிற் கோமான் பாரியுங் கறங்குமணி
வாலுளைப் புரவியொடு வையக மருள
வீர நன்மொழி யிரவலர்க் கீந்த
வழறிகழ்ந் திமைக்கு மஞ்சுவரு நெடுவேற்
கழறொடித் தடகைக் காரியு நிழறிகழ்

---

84-7. "உடாஅ போரா வாகுத லறிந்தும், படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ, கடாஅ யானைக் கலிமான் பேகன்" (புறநா. 141.)

86-7. "அருந்திறற் கடவுள் காக்கு முயர்சிமைப், பெருங்க னாடன் பேகனும்" (புறநா. 158.)

88. 'நறவுவா யுறைக்கும்' என்றும் பாடம்.

90-91. "நெடுவரைக், கறங்குவெள் ளருவி கல்லலைத் தொழுகும், பறம்பிற் கோமான் பாரியும்" (புறநா. 158.)

89-91. "பூத்தலை யறாஅப் புனைகொடி முல்லை, நாத்தழும் பிருப்பப் பாடா தாயினுங், கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த, பரந்தோங்கு சிறப்பிற் பாரி", "தேருடன், முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப், படுமணி யானைப் பறம்பிற் கோமான், நெடுமாப் பாரி." (புறநா. 200, 201.)

93. ஈரநன்மொழி: (சிறுபாண். 99); "அன்புடை நன்மொழி யளைஇ" (முருகு. 292); "இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ், செம்பொருள் கண்டார் வாய்ச்சொல்" (குறள். 91.)

94. "உரவுச் சினங் கனலு மொளிறிகழ் நெடுவேல்" (சிறுபாண். 102.)

நீல நாக நல்கிய கலிங்க
மாலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த
சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோ
ளார்வ நன்மொழி யாயு மால்வரைக்
கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி
யமிழ்துவிளை தீங்கனி யௌவைக் கீந்த
வுரவுச்சினங் கனலு மொளிதிகழ் நெடுவே
லரவக்கடற் றானை யதிகனுங் கரவாது
நட்டோ ருவப்ப நடைப்பரி கார
முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்
துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு
நளிமலை நாட னள்ளியு நளிசினை
நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்
குறும்பொறை நன்னாடு கோடியர்க் கீந்த
காரிக் குதிரைக் காரியொடு மலைந்த
வோரிக் குதிரை யோரியு மெனவாங்
கெழுசமங் கடந்த வெழுவுறழ் திணிதோ
ளெழுவர் பூண்ட வீகைச் செந்நுகம்
விரிகடல் வேலி வியலகம் விளங்க
வொருதான் றாங்கிய வுரனுடை நோன்றா
ணறுவீ நாகமு மகிலு மாரமுந்
துறையாடு மகளிர்க்குத் தோட்புணை யாகிய
பொருபுன றரூஉம் போக்கரு மரபிற்

---

97. "ஆல்கெழு கடவுட் புதல்வ" (முருகு. 256); "ஆலமர் செல்வ னணிசால் பெருவிறல்" (கலி. 81); "ஆலமர் செல்வன் புதல்வன்" (சிலப். குன்ற); "ஆலமர் செல்வன் மகன்" (மணி. 3: 144.)

98. 'சாபந்தாங்கிய' என்றும் பாடம்

99. ஆர்வ நன்மொழி: "ஈர நன்மொழி" (சிறுபாண். 93)

100-103. "பூங்கமல வாவிசூழ் புல்வேளூர்ப் பூதனையும், ஆங்கு வருபாற்பெண்ணை யாற்றினையும்—ஈங்கே, மறப்பித்தாய் வாழிசா வன்கூற்றினைவை, அறுப்பித்தா யாமலகந் தந்து" (ஔவையார் பாட்டு; இது தமிழ் நாவலர்சரிதையிற்கண்டது); 'இனிய கனிகளென்றது, ஔவையுண்ட நெல்லிக்கனிபோல அமிழ்தாவனவற்றை' (குறள். 100—பரி. உரை); "நிறைசுவை யமுத நெல்லியின் கனியும்" (வி - பாரதம், பழம்பொருந்து. 22.)

106. 'தளிமழை' என்றும் பாடம்.

110. "காரியூர்ந்து பேரமர்க் கடந்த, மாரியீகை மறப்போர் மலையன்" (புறநா. 158.)

84-111. எழுவள்ளல்கள்: (புறநா. 158.)

117. 'புணையாக' என்றும் பாடம்.

116-8. "நறையு நரந்தமு மகிலு மாரமுந், துறைதுறைதோறும் பொறையுயிர்த் தொழுகி, நுரைத்தலைக் குரைப்புனல் வரைப்பகம் புகுதோறும், புனலாடு மகளிர் கதுமெனக் குடைய" (பொருந. 238—41.)

றொன்மா விலங்கைக் கருவொடு பெயரிய
நன்மா விலங்கை மன்ன ருள்ளு
மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வா
ளுறுபுலித் துப்பி னோவியர் பெருமகன்
களிற்றுத்தழும் பிருந்த கழறயங்கு திருந்தடிப்
பிடிக்கணஞ் சிதறும் பெயன்மழைத் தடக்கைப்
பல்லியக் கோடியர் புரவலன் பேரிசை
நல்லியக் கோடனை நயந்த கொள்கையொடு
தாங்கரு மரபிற் றன்னுந் தந்தை
வான்பொரு நெடுவரை வளனும் பாடி
முன்னாட் சென்றன மாக வின்னா
டிறவாக் கண்ண சாய்செவிக் குருளை
கறவாப் பான்முலை கவர்த னோனாது
புனிற்றுநாய் குரைக்கும் புல்லெ னட்டில்
காழ்சோர் முதுசுவர்க் கணச்சித லரித்த
பூழி பூத்த புழற்கா ளாம்பி
யொல்குபசி யுழந்த வொடுங்குநுண் மருங்குல்
வளைக்கைக் கிணைமகள் வள்ளுகிர்க் குறைத்த
குப்பை வேளை யுப்பிலி வெந்ததை
மடவோர் காட்சி நாணிக் கடையடைத்
திரும்பே ரொக்கலொ டொருங்குடன் மிசையு
மழிபசி வருத்தம் வீடப் பொழிகவுட்
டறுகட் பூட்கைத் தயங்குமணி மருங்கிற்

124. 'கணஞ்சிந்தும்' என்றும் பாடம். "புன்றலை மடப்பிடி பரிசிலாக" (புறநா. 151.)

119-26. "பெருமா விலங்கைத் தலைவன் சீறியாழ் இல்லோர் சொன்மலை நல்லியக் கோடன்" (புறநா. 176.)

127. தாங்கரு மரபின்: (சிறுபாண். 66.)

127-8. "நின்னுநின் மலையும் பாட" (புறநா. 143.)

130. நாய்க்குட்டியைக் குருளை யென்பதற்கு இவ்வடி மேற்கோள். (தொல். மரபு. சூ. 8.)

138. 'பெருமட மென்பது அஞ்ஞானம்; மடவோர் காட்சி......... யடைத் தென்பது சிறுபாணாற்றுப்படை.' (தக்க. 172. மேற்.)

140. "அற்றா ரழிபசி தீர்த்தல்" (குறள். 226.)

சிறுகண் யானையொடு பெருந்தே ரெய்தி
யாமவ ணின்றும் வருது நீயிரு
மிவணயந் திருந்த விரும்பே ரொக்கற்
செம்ம லுள்ளமொடு செல்குவி ராயி
னலைநீர்த் தாழை யன்னம் பூப்பவுந்
தலைநாட் செருந்தி தமனிய மருட்டவுங்
கடுஞ்சூன் முண்டகங் கதிர்மணி கழாஅலவு
நெடுங்கால் புன்னை நித்திலம் வைப்பவுங்
கானல் வெண்மணல் கடலுலாய் நிமிர்தரப்
பாடல் சான்ற நெய்த னெடுவழி
மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய
பனிநீர்ப் படுவிற் பட்டினம் படரி
னோங்குநிலை யொட்டகந் துயின்மடிந் தன்ன
வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகிற்
கரும்புகைச் செந்தீ மாட்டிப் பெருந்தோண்
மதியேக் கறாஅ மாசறு திருமுகத்து
நுதிவே னோக்கி னுளைமக ளரித்த
பழம்படு தேறல் பரதவர் மடுப்பக்
கிளைமலர்ப் படப்பைக் கிடங்கிற் கோமான்
றளையவிழ் தெரியற் றகையோற் பாடி
யறற்குழற் பாணி தூங்கி யவரொடு
வறற்குழற் சூட்டின் வயின்வயிற் பெறுகுவிர்
பைந்நனை யவரை பவழங் கோப்பவுங்
கருநனைக் காயாக் கணமயி லவிழவும்

---

142-3. "வாலுளைப் புரவியொடு வயக்களிறு முகந்துகொண், டியாமவ ணின்றும் வருதும்" (பெரும்பாண். 27 - 8); "தேரோடு மாசிதறி" (மதுரை 224); "தூமலர் துவன்றிய கரைபொரு நிவப்பின், மீமிசை நல்யாறு கடற் படர்ந் தாஅங், கியாமவ ணின்றும் வருதும்" (மலைபடு. 51-3); தும்மீற்றுத் தன்மைப் பன்மைவினைமுற்று நிகழ்காலமும் சிறுபான்மை காட்டுமென்பதற்கு இவ்வடிகள் மேற்கோள். (தொல். வினை. சூ. 5. ந; இ—வி. சூ. 50. உரை.)

148. "மணிப்பூ முண்டகத்து மணன்மலி கானல்" (மதுரை. 96); "மணிமருண் மலரமுள்ளி" (அகநா. 236.)

152. 'வைப்பின்' என்றும் பாடம்.

164. (குறுந். 240.)

165. "புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை, மென்மயி லெருத்திற் றோன்றுங், கான வைப்பு" (குறுந். 183); "கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா" (சீவக. 1558.)

கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவுஞ்
செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவுங்
கொல்லை நெடுவழிக் கோப மூரவு
முல்லை சான்ற முல்லையம் புறவின்
விடர்கா லருவி வியன்மலை மூழ்கிச்
சுடர்கான் மாறிய செவ்வி நோக்கித்
திறல்வே லுதியிற் பூத்த கேணி
விறல்வேல் வென்றி வேலூ ரெய்தி
னுறுவெயிற் குலைஇய வுருப்பவிர் குரம்பை
யெயிற்றிய ரட்ட வின்புளி வெஞ்சோறு
தேமா மேனிச் சில்வளை யாயமொ
டாமான் சூட்டி னமைவரப் பெறுகுவிர்
நறும்பூங் கோதை தொடுத்த நாட்சினைக்
குறுங்காற் காஞ்சிக் கொம்ப ரேறி
நிலையருங் குட்ட நோக்கி நெடிதிருந்து
புலவுக்கய லெடுத்த பொன்வாய் மணிச்சிரல்
வள்ளுகிர் கிழித்த வடுவாழ் பாசடை
முள்ளரைத் தாமரை முகிழ்விரி நாட்போது
கொங்குகவர் நீலச் செங்கட் சேவல்
மதிசே ரரவின் மானத் தோன்று
மருதஞ் சான்ற மருதத் தண்பணை
யந்தண ரருகா வருங்கடி வியனகர்

---

166. ‘கொட்டை கொள்ளவும்’ என்றும் பாடம்.

167. “காந்தண் முகைபுரை விரல்” (புறநா. 144)

169. முல்லை யென்ற சொற்குப் பொருள் இருத்தலென்பதற்கு இவ்வடி மேற்கோள். (தொல். அகத். சூ. 5. ந.)

172. ஐந்தாவதன் உருபு உவமப் பொருளில் வருதற்கு இவ்வடி மேற்கோள். (நன் - மயிலை. சூ. 298; நன்-வி. சூ. 299.)

173. ‘வென்றி யவன் வேலூர்’ என்றும் பாடம்.

175. இன்புளி வெஞ்சோறு: (மலைபடு. 179-83)

176. “மாவி, னவிர்தளிர் புரையு மேனியர்” (முருகு. 143-4.)

176-7. ‘ஆயமொ டியாமான்’ என்றும் பாடம்.

181. ‘கயலெறிந்த’ என்றும் பாடம்.

186. ‘மருதஞ் சான்ற.........பணையென்புழி, மருதமென்றது, ஊடியும் கூடியும் போகம் நுகர்தலை’—(தொல். அகத். சூ. 5. ந.)

187. ‘கடிவரைப்பின்’ என்றும் பாடம்.

ஈர்ந்தண் மிடற்றினை குறூஉ றெய்தின்
வலம்பட நடக்கும் வலிபுண ரெருத்தி
னுரன்கெழு நோன்பகட் டுழவர் தங்கை
பிடிக்கை யன்ன பின்னுவீழ் சிறுபுறத்துத்
தொடிக்கை மகடூஉ மகமுறை தடுப்ப
இருங்கா ழுலக்கை யிரும்புமுகந் தேய்த்த
அவைப்புமா ணரிசி யமலைவெண் சோறு
கவைத்தா ளலவன் கலவையொடு பெறுகுவி
ரொரிமறிந் தன்ன நாவி னிலங்கெயிற்றுக்
கருமறிக் காதிற் கவையடிப் பேய்மக
ணிணனுண்டு சிரித்த தோற்றம் போலப்
பிணனுகைத்துச் சிவந்த பேருகிர்ப் பணைத்தா
ளண்ணல் யானை யருவிதுக ளவிப்ப
நீறடங்கு தெருவினவன் சாறயர் மூதூர்
சேய்த்து மன்று சிறிதுநணி யதுவே
பொருநர்க் காயினும் புலவர்க் காயினு
மருமறை நாவி னந்தணர்க் காயினுங்
கடவுண் மால்வரை கண்விடுத் தன்ன
வடையா வாயிலவ னருங்கடை குறுகிச்
செய்ந்நன்றி யறிதலுஞ் சிற்றின மின்மையு
மின்முக முடைமையு மினிய னாதலுஞ்
செறிந்துவிளங்கு சிறப்பி னறிந்தோ ரேத்த

---

190-91. ‘தங்கைப்பிடி’ என்றும் பாடம்.

192. மகமுறை: (பெரும்பாண். 478-9; மலைபடு. 185)

191-2. “பிடிக்கை யன்ன பின்னகம் தீண்டித், தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று.”, “சிறுகண், ணிரும்பிடித் தடக்கை யான நெய்யருந், தொருங்கு பிணித் தியன்ற வெறிகொ ளைம்பால்” (அகநா. 9, 177); “பிடிக்கைக் கூந் தல்” (சீவக. 2663.)

194. “அவைப்புமா ணரிசி” (அகநா. 394.)

197. கவர்வு விருப்பாகு மென்னுஞ் சூத்திரத்தில், ‘கவைத்தல் சொற் புறநடையாற் கொள்க’ என்பதற்கு இவ்வடி மேற்கோள். (தொல். உரி. சூ. 64. ந.)

199-200. “முடியுடைக் கருந்தலை புரட்டு முன்றா, ளுகிருடை யடிய வோங்கெழில் யானை” (பட். 230-31.)

203-6. “நசையுநர்த் தடையா நன்பெரு வாயில், இசையேன் புக்கென் னிடும்பை தீர” (பொருந. 66-7.)

ஞாயிறுபோல இருளைக்கடிந்து முறைவேண்டுநர்க்கும் குறைவேண்டுநர்க்கும் வேண்டுவன வேண்டுவன முடித்துக்கொடுத்தலின், அதனை உவமித்தார்.

கடலைச் சுற்றத்திரட்சிக்கு உவமையாக்கலுமொன்று.

*பொறி வரி புகர்முகம் தாக்கிய வயமான் கொடுவரி குருளை கொள வேட்டாங்கு—ஒளியினையும் வரியினையுமுடைய யானையைப்பாய்ந்த வலியையுடைய சிங்கத்தினுடைய வளைந்தவரியினையுடைய குருளை அவ்வியானையின் மத்தகத்தைக் கொள்ளவிரும்பினாற்போல,

450 - 52. பகைவர் கடி மதில் எறிந்து குடுமி கொள்ளும் வென்றி அல்லது—பகைவரது காவலையுடைய மதில்களையழித்து ஆண்டிருந்த அரசருடைய முடிக்கலமுதலியவற்றை வாங்கிக்கொண்டு வீரமுடிபுனையும் வெற்றியினை விரும்புதலல்லது,

இதனால் †"இகல்மதிற் குடுமி கொண்ட மண்ணுமங்கலம்" என்னுந் துறை கூறினார்; ‡குடுமிகொள்ளும் வென்றியெனவே மண்ணுமங்கலமாயிற்று

452 - 4 வினை உடம்படினும் ஒன்றல் செல்லா உரவு வாள் தட கை கொண்டி உண்டி தொண்டையோர் மருக—அம்மதிலரசர் §சந்துசெய்தற்கு உடம்பட்டாராயினும் அதற்கு மனம்பொருந்துதல் நிகழாமைக்குக்காரணமாகிய உலகெங்கும்பரக்கும் வாளையுடைத்தாகிய பெருமையையுடைய கையினையும் பகைப்புலத்துக் கொள்ளையாகிய உணவினையுமுடைய தொண்டையைச்சூடினோருடைய குடியிலுள்ளவனே,

455. மள்ளர் மள்ள—வீரர்க்கு வீரத்தைக்கொடுக்கின்றவனே,

மறவர் மறவ—கொடியோர்க்குக் கொடியவனே.

456. செல்வர் செல்வ—செல்வமுடையோர்க்குங் கொடுத்தலைவிரும்புபவனே,

செரு மேம்படுந—போர்த்தொழிலிலே மிக்கவனே.

பெரும (461)—பெருமானே,

457 - 8. வெள் திரை பரப்பில் கடு சூர் கொன்ற பைம்பூண் சேஎய் பயந்த மா மோடு—வெள்ளிய திரையினையுடைய கடலிலேசென்று கடியசூரனைக்கொன்ற பசிய பூணினையுடைய முருகனைப்பெற்ற பெருமையையுடைய வயிற்றினையும்,

459. துணங்கை அம் செல்விக்கு அணங்கு நொடித்தாங்கு—பேய்களோடு ||துணங்கைக்கூத்தினையும் அழகினையுமுடைய இறைவிக்குப் பேய்மகள் சில நொடிசொன்னாற்போல,

* பொறி - ஒளி; (புறநா. 161)

† "தொல்லிலங்கை குடுமிகொண்டு" (கூர்ம. சவேத. 5.)

‡ "குடுமிகொள்ளு மண்ணுமங்கலம்" (கூர்ம 27 - 5.)

§ சந்துசெய்தல் - பொருத்துதல்.

|| துணங்கை: (முந்து. 56.)

மாட்சிய துணை புணர் தொழில மால் கடல் வளை கண்டன்ன *வால் உளை புரவி நாக்கு உடன் பூட்டி—குதிரைநூல்கற்றோர்புகழ்ந்த அழகினையுடையவாய்த் தனித்துத்தொழில்செய்யாமல் இனங்களோடேகூடுந் தொழிலையுடையவாய்க் கருமையையுடையகடலிற் சங்கைக்கண்டாற்போன்ற வெள்ளிய †கழுத்தின் மயிரையுடைய குதிரைகள்நான்கைச் சேரப்பூட்டி.

நான்கு நால்லெனப்பெயர்த்திரிசொல்.

490. அரி தேர் நல்கியும் அமையான்—பொன்னாற்செய்த தேரைத்தந் தும் கொடை மேல் விருப்பந்தவிரானாய்,

490 - 92. செரு தொலைத்து ஒன்னா தெவ்வர் உலைவிடத்து ஒழித்த விசும்பு செல் இவுளியொடு பசு படை தரீஇ—தார்முடன்வந்து பொருதோரு டைய போர்களை மாளப்பண்ணித் தன்னேவலைப்பொருந்தாத பகைவர்முது கிட்டவிடத்து விட்டுப்போன ஆகாயத்தேசெல்கின்ற குதிரைகளுடனே பசிய பொன்னாற்செய்த ‡பக்கரைகளையுந்தந்து,

493. [அன்றே விடுக்குமவன் பரிசில் :] அவன் அன்றே பரிசில் விடுக கும்—அவன் நீசென்ற அற்றைநாளே இவைமொழிந்த பரிசில்களையுந்தரும் ;

493 - 4. இன் சீர் கின்னரம் முரலும் அணங்குடை சாரல்—இனியதா ளத்திலே கின்னரமென்னும் பறவைகள்பாடுந் தெய்வங்களையுடைய சாரலி டத்து,

495. மஞ்ஞை ஆலும் மரம் பயில் இறும்பின்—மயில்களாரவாரிக்கு மரம்நெருங்கின இளமரக்காட்டினையுமுடைய,

496. கலை பாய்ந்து உதிர்த்த மலர் வீழ் புறவின்—முசுக்கலைகள்பாய்ந்து உதிர்த்த மலர்கள்சிந்தின காட்டினையும்,

497. மந்தி சீக்கும் மா துஞ்சும் முன்றில்—மந்திகள் அவ்விடத்துக் கிடந்த §தூராலைவாரும் மானும்புலியுந் துயில்கொள்ளும் முற்றத்தே,

புறவினையும் (496) இறும்பினையு (495) முடைய சாரலிடத்து (494) முன்றிலிலே (497) வேட்கு (499) மென்க.

498. செ தீ பேணிய முனிவர்—சிவந்ததீயைக் கைவிடாமற்காத்துப் போந்த இருடிகள்,

498 - 9. வெள் கோடு களிறு தரு விறகின் வேட்கும் — வெள்ளிய கொம்பினையுடைய களிறு முறித்துக்கொண்டுவந்த சமிதையாலே வேள்வி யைச்செய்யும்.

மந்தி சீத்தலும், மாத் துஞ்சலும், களிறு விறகுதருதலும் இருடிகளாணை யால் நிகழ்ந்தனவென்றுணர்க.

500. [ஒளிறிலங் கருவிய மலைகிழ வோனே :]

ஒளிறு மலை—இவற்றால்விளங்குமலை.

இலங்கு அருவிய மலை —விளங்குகின்ற அருவிகளையுடையமலை.

மலை கிழவோன்—இச் சிறந்த மலையையாளும் உரிமையையுடையோன்.

---

* பொருந. 165. ‡ பக்கரை - சேணம்.

† கழுத்தின்மயிர் தலைபாட்டமெனவும்வழங்கும். § தூரால் - செத்தை.

புலவுவாய்ப்பாண (22), பெருவளனெய்தி (26) முகந்துகொண்டு (27) யாம் அவனூரினின்றும் வருகின்றேம்; நீயிரும் (28) இரையற்படர்குவிராயின் (37) நின்னுள்ளஞ்சிறக்க (45); நின்னவலங்கெடுக (38); இரவல (45). அவனிலைகேள் (38); அவன்புலம் கொடியோரின்று (41); அதுவேயன்றி அப்புலத்தில் உருமுமுரறாது; அரவுந் தப்பா (42); மாவும் உறுகண்செய்யா ஆகலின், ஆங்கு (43) அசைவுழி அசைஇத் தங்கிச் (44) சென்மோ (45); அங்ஙனஞ்செல்லுங்கால் வில்லுடைவைப்பிற் (82) குரம்பையில் (88) எயிற்றியர் (94) தாங்களட்ட புழுக்கலையும் வாடூனையும் (100) எல்லிடைக்கழியுநர்க்கு ஏமமாகத் (66) தேக்கிலையிலேகுவிக்கையினாலே (101) அப்பதத்தைப் (105) பெருமகனாகிய (101) வரைநாடன் சென்னியமெனிற் (103) கடும்போடே மிகப்பெறுகுவிர் (105); பின்னர் அருஞ்சுரமிறந்த அம்பர்க் (117) குறும்பிற் சேப்பின் (129) சொன்றியை (131) வறைகால்யாத்ததுவயின்றொறும்பெறுகுவிர் (133); பின்னர்த் தூங்கா (116) முரண்டலை (117) யிருக்கை (146) கழிந்தபின்றைக் (147) குடிவயிற்சேப்பின் (166) மூரல் பாலொடும்பெறுகுவிர் (168); பின்னர்ப் பறவையோர்க்கும் (183) புலத்தைபபோய்ச் (184) சீறூர்களிலே (191) வரகின் சொன்றியைப் (193) புழுக்கையட்டி (195) மூரலோடேபெறுகுவிர் (196); பின்னர் ஞாங்கர் (196) வன்புலமிறந்தபின்றை (206) மல்லற்பேரூர்மடியின் (254) வல்சியை (255) வாட்டொடும் பெறுகுவிர் (256); பின்னர்க் கருப்பின்றீஞ்சாறு விரும்பினிர் மிசைமின் (262); பின்னர் வலைஞர் குடிவயிற் சேப்பின் (274) பிழியைச் (281) சூட்டொடும் பெறுகுவிர் (282); பின்னர்த் தீப்பட மலர்ந்த (289) பூவையோம்பிக் (290) குறுநரிட்டமலரைப் (295) பிணையினிர் கழிமின் (296); பின்னர் மறைகாப்பாளர் உறைபதிச்சேப்பின் (301) வத்தத்தாலுண்டான அரிசியை (305) விளக்கைமகடூஉ வயினறிந்தட்டனவற்றைச் (304) சுடர்க்கடையிலே (305) போழொடே (307) காடியோடே பெறுகுவிர் (310); பின்னர் நீர்ப்பெயற்றெல்லை போகிப் (319) பட்டினமருங்கி னசையின், மூட்டுப்பாடின்றாகக் (336) கொழுமீனத்தடியொடு கூர்நறாப்பெறுகுவிர் (345); பின்னர்த் துறைபிறக்கொழியப்போகி (351) தனிமனைச்சேப்பின் (355), ஆண்டைத் தீம்பஃறாமுனையிற் சேம்பிலையோடே (361) முதிர்கிழங்கார்குவிர் (362); இவற்றை இவ்வழியின்கண்ணே பெற்றுப் பின்னர்ப் பன்மரநீளிடைப்போய் (368) நாடுபலகழிந்தபின்றைப் (371) பள்ளியமர்ந்தோன் ஆங்கட் (373) பொழிறொறும் (380) ஆடி (387) அசைஇத் (390) தொலைச்சி (382) மரீஇக் (383) கடவுள்வாழ்த்தி (391) இயக்கினிர் கழிமின் (392); இங்ஙனஞ்சென்று கைவண்டோன்றல் (420) இப்பொழுது இவர்போலக் (417) குருதியீர்ப்பப் (414) பொருது (415) ஆர்த்துப் (419) பகைமேற் செல்லுதலின்றி நச்சிச்சென்றோர்க்கு ஏமமாகிய (421) படப்பை முதலியவற்றையுடைய (401) விழவு பேம்பட்ட மூதூராகிய (411) கச்சியிடத்தே யிருந்தோன் (420); அவ்வூரிற் பணிந்த மன்னர் (428) செவ்வி பார்த்தும் முற்றத்தினையுடைய (435) பொன்றுஞ்சு வியனகர்க்கண்ணே (440) பகல்செய் மண்டிலம் பாரித்தாங்கு (442) மிக்ககாட்சியாலே (445) அருளிப்

மாட்சிய துணை புணர் தொழில மால் கடல் வளை கண்டன்ன *வால் உளை புரவி நால்கு உடன் பூட்டி—குதிரைநூல்கற்றோர்புகழ்ந்த அழகினையுடையவாய்த் தனித்துத்தொழில்செய்யாமல் இனங்களோடேகூடுந் தொழிலையுடையவாய்க் கருமையையுடையகடலிற் சங்கைக்கண்டாற்போன்ற வெள்ளிய †கழுத்தின் மயிரையுடைய குதிரைகள்நான்கைச் சேரப்பூட்டி.

நான்கு நால்கெனப்பெயர்த்திரிசொல்.

490. அரி தேர் நல்கியும் அமையான்—பொன்னாற்செய்த தேரைத்தந் தும் கொடை மேல் விருப்பந்தவிராளுய்,

490 - 92. செரு தொலைத்து ஒன்னு தெவ்வர் உலைவிடத்து ஒழித்த விசும்பு செல் இவுளியொடு பசு படை தரீஇ—தர்முடன்வந்து பொருதோரு டைய போர்களை மாளப்பண்ணித் தன்னோவலைப்பொருந்தாத பகைவர்முது கிட்டவிடத்து விட்டுப்போன ஆகாயத்தேசெல்கின்ற குதிரைகளுடனே பசிய பொன்னாற்செய்த ‡பக்கரைகளேயுந்தந்து,

493. [அன்றே விடுக்குமவன் பரிசில்:] அவன் அன்றே பரிசில் விடுக் கும்—அவன் நீசென்ற அற்றைநாளே இவைமொழிந்த பரிசில்களையுந்தரும்;

493 - 4. இன் சீர் கின்னரம் முரலும் அணங்குடை சாரல்—இனியதா ளத்திலே கின்னரமென்னும் பறவைகள்பாடுந் தெய்வங்களையுடைய சாரலி டத்து,

495. மஞ்ஞை ஆலும் மரம பயில் இறும்பின்—மயில்களாரவாரிக்கும் மரம்நெருங்கின இளமரக்காட்டினையுமுடைய,

496. கலை பாய்ந்து உதிர்த்த மலர் வீழ் புறவின்—முசுக்கலைகள்பாய்ந்து உதிர்த்த மலர்கள்சிந்தின காட்டினையும்,

497. மந்தி சீக்கும் மா துஞ்சும் முன்றில்—மந்திகள் அவ்விடத்துக் கிடந்த §தாராலைவாரும் மானும்புலியுந் துயில்கொள்ளும் முற்றத்தே,

புறவினையும் (496) இறும்பினையு (495) முடைய சாரலிடத்து (494) முன்றிலிலே (497) வேட்கு (499) மென்க.

498. செ தீ பேணிய முனிவர்—சிவந்ததீயைக் கைவிடாமற்காத்துப் போந்த இருடிகள்,

498 - 9. வெள் கோடு களிறு தரு விறகின் வேட்கும் — வெள்ளிய கொம்பினையுடைய களிறு முறித்துக்கொண்டுவந்த சமிதையாலே வேள்வி யைச்செய்யும்.

மந்தி சீத்தலும், மாத் துஞ்சலும், களிறு விறகுதருதலும் இருடிகளாணை யால் நிகழ்ந்தனவென்றுணர்க.

500. [ஒளிறிலங் கருவிய மலைகிழ வோனே:]

ஒளிறு மலை—இவற்றால் விளங்குமலை.

இலங்கு அருவிய மலை —விளங்குகின்ற அருவிகளையுடையமலை.

மலை கிழவோன்—இச சிறந்த மலையையாளும் உரிமையையுடையோன்.

---

* பொருந. 165. ‡ பக்கரை - சேணம்.

† கழுத்தின்மயிர் தலைபாட்டமெனவும்வழங்கும். § தரால் - செத்தை.

புலவுவாய்ப்பாண (22), பெருவளனெய்தி (26) முகந்துகொண்டு (27) யாம் அவனூரினின்றும் வருகின்றேம்; நீயிரும் (28) இரையற்படர்குவிராயின் (37) நின்னுள்ளஞ்சிறக்க (45); நின்னவலங்கெடுக (38); இரவல (45). அவனிலைகேள் (38); அவன்புலம் கொடியோரின்று (41); அதுவேயன்றி அப்புலத்தில் உருமுமுரறாது; அரவுந் தப்பா (42); மாவும் உறுகண்செய்யா ஆகலின், ஆங்கு (43) அசைவுழி அசைஇத் தங்கிச் (44) சென்மோ (45); அங்ஙனஞ்செல்லுங்கால் வில்லுடைவைப்பிற் (82) குரம்பையில் (88) எயிற்றியர் (94) தாங்களட்ட புழுக்கலையும் வாடூனையும் (100) எல்லிடைக்கழியுநர்க்கு ஏமமாகத் (66) தேக்கிலையிலேகுவிக்கையினாலே (101) அப்பதத்தைப் (105) பெருமகனாகிய (101) வரைநாடன் சென்னியமெனிற் (103) கடும்போடே மிகப்பெறுகுவிர் (105); பின்னர் அருஞ்சுரமிறந்த அம்பர்க் (117) குறும்பிற் சேப்பின் (129) சொன்றியை (131) வறைகால்யாத்ததுவயின்றொறும்பெறுகுவிர் (133); பின்னர்த் தூங்கா (146) முரண்டலை (117) யிருக்கை (146) கழிந்தபின்றைக் (147) குடிவயிற்சேப்பின் (166) மூரல் பாலொடும்பெறுகுவிர் (168); பின்னர்ப் பறவையோர்க்கும் (183) புலத்தைபபோய்ச் (184) சீறூர்களிலே (191) வரகின் சொன்றியைப் (193) புழுக்கையட்டி (195) மூரலோடேபெறுகுவிர் (196); பின்னர் ஞாங்கர் (196) வன்புலமிறந்தபின்றை (206) மல்லற்பேரூர்மடியின் (254) வல்சியை (255) வாட்டொடும் பெறுகுவிர் (256); பின்னர்க் கரும்பின்றீஞ்சாறு விரும்பினிர் மிசைமின் (262); பின்னர் வலைஞர் குடிவயிற் சேப்பின் (274) பிழியைச (281) சூட்டொடும் பெறுகுவிர் (282); பின்னர்த் தீப்பட மலர்ந்த (283) பூவையோம்பிக் (290) குறுநரிட்டமலரைப் (295) பிணையினிர் கழிமின் (296); பின்னர் மறைகாப்பாளர் உறைபதிச்சேப்பின் (301) வத்தகத்தாலுண்டான அரிசியை (305) வளைக்கைமகடூஉ வயினறிந் தட்டனவற்றைச் (304) சுடர்க்கடையிலே (305) போழோடே (307) காடியோடே பெறுகுவிர் (310); பின்னர் நீர்ப்பெயற்றெல்லை போகிப் (319) பட்டினமருங்கி னசையின், முட்டுப்பாடின்றாகக் (336) கொழுமீனக்தடியொடு கூர்நறாப்பெறுகுவிர் (345); பின்னர்த் துறைபிறக்கொழியப்போகி (351) தனிமனைச்சேப்பின் (355), ஆண்டைத் தீம்பஃறாமுனையிற் ேம்பிலையோடே (361) முதிர்கிழங்கார்குவிர் (362); இவற்றை இவ்வழியின்கண்ணே பெற்றுப் பின்னர்ப் பன்மரநீளிடைப்போய் (368) நாடுபலகழிந்தபின்றைப் (371) பள்ளியமர்ந்தோன் ஆங்கட் (373) பொழிறொறும் (380) ஆடி (387) அசைஇத் (390) தொலைச்சி (382) மரீஇக் (383) கடவுள்வாழ்த்தி (391) இயக்கினிர் ..றிரின் (392); இங்ஙனஞ்சென்று கைவண்டோன்றல் (420) இப்பொழுது ..போலக் (417) குருதியீர்ப்பப் (414) பொருது (415) ஆர்த்துப் (419) கைமேற் செல்லுதலின்றி நச்சிச்சென்றோர்க்கு ஏமமாகிய (421) படப்பை ..தலியவற்றையுடைய (401) விழவு பேம்பட்ட மூதூராகிய (411) கச்சி ..த்தே யிருந்தோன் (420); அவ்வூரிற் பணிந்த மன்னர் (428) செவ்விபார்க் ..முற்றத்திணையுடைய (435) பொன்றுஞ்சு வியனகர்க்கண்ணே (440) ..ல்செய் மண்டிலம் பாரித்தாங்கு (442) மிக்ககாட்சியாலே (445) அருளிப்

(444) பூண்கடனாற்றிக் (450) கடனிறுத்த உள்ளத்தோடே (446) சுற்றத் தோடேயிருந்தோனைக் குறுகித் (447) தொண்டையோர் மருகனே (454), மன்னனே, மறவனே (455), செல்வனே, செருமேம்படுநனே (456), பெருமானே (461), செல்விக்கு அணங்கு நொடித்தாங்கு (459) நின் பெயருட்சில வற்றைச் சொல்லிப் புகழ்ந்து (460) வந்தேன்; வாழியவெனச்சொல்லிக் (461) கழிப்பிப் (462) பழிச்சி (463) நின்னுடைய கலைகளெல்லாந் தனக்குத்தெரிவதற்கு முன்னே (464) மலைகிழவோன் (500) நில்லாவுலகத்து நிலைமை தூக்கி (466) அந்நிலையணுகல் வேண்டி அழைத்துச் (467) சிதாவரீக்கி (468) உடீஇ (470) அமுதோடே (475) குறையும் (472) புழுக்கலும் (474) பிறவுமாகிய (475) அடிசிலைக் (476) கலங்களைப் பரப்பித் (477) தான் (479) முகனமர்ந்து மகமுறைநோக்கி (478) முன்னின்றூட்டி (479) விறலியர் மாலை வேயாநிற்க (486) நமக்குத் தாமரை (481) பொலியச்சூட்டி (482) அரித்தேர் நல்கியும் அமையானாய் (490) இவுளியொடு பசும்படைதரீஇ (492) அவன் அன்றே (493) அந்நிலையிலே (464) நாவலந்தண்பொழில் வீவின்றுவிளங்கும்படி (465) இவையொழிந்த பரிசில்களையும் தரு (493) மெனவினைமுடிவு செய்க.

இப்பாட்டில் ஒருமைபன்மை மயக்கம், "முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி * * * போற்றல் வேண்டும்" (தொல். எச்ச. 66.) என்பதனாற்கொள்க.

தொண்டைமானிளந்திரையனைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடிய பெரும்பாணாற்றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.

---

வெண்பா.

கங்குலு நண்பகலுந் துஞ்சா வியல்பிற்றாய்
மங்குல்சூழ் மாக்கட லார்ப்பதூஉம்—வெஞ்சினவேற்
கான்பயந்த கண்ணிக் கடுமான் றிரையனை
யான்பயந்தே னென்னுஞ் செருக்கு.

# ஐந்தாவது

# முல்லைப்பாட்டு.



நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்
பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு
கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி
பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை
யருங்கடி மூதூர் மருங்கிற் போகி
யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
யரும்பவி ழலரி தூஉய்க் கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றி
னுறுதுய ரலமர னோக்கி யாய்மக
ணடுங்குசுவ லசைத்த கையள் கைய

1. "நனந்தலை யுலகம்" (பதிற். 63 - 18); 'நன' என்னும் அகர வீற்றுரிச் சொல், அகலமென்னுங் குறிப்புப்பொருளை யுணர்த்துதற்கும் உரிச் சொல் எழுத்துத்திரிந்திசைத்தற்கும் இவ்வடி மேற்கோள்; (தொல். உரி. 78 ந; இ - வி. சூ. 282, 289.)

2 - 3. "நீர்வழி கமலச் செங்கை நீர்செல நிவந்த மாயோன்" (பாக. வாமனாவதார. 64.) கம்ப. வேள்வி. 35 - ஆம் பாடலையும்பார்க்க.

4. 'வலனேர்பு' (முருகு. 1; முல்லை. 91; நெடுநல். 1).

7. மூ. "வாள் போழ்" (நன். சூ. 147 - உரை) என்னுஞ் செய்யுளிலும் ஓரடி இப்படி வந்துள்ளது.

8 - 10. "நெல்லு மலருந் தூஉய்க்கை தொழுது" (நெடுநல். 43). "அரும்பவிழ் முல்லை, நிகர்மலர் நெல்லொடு தூஉய்" (சிலப். 9 : 1 - 2); தொல். அகத். சூ. 5 - இள. மேற்.

11. பெருமுது பெண்டிர் : குறுந். 181.

8 - 11. "நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்குஞ், செம்முது பெண்டின் சொல்லு நிரம்பா" (புறநா. 280.)

12 - 4. இவ்வடிகளுடன், "எம்மனை மாரினி" (சீவக. 425) என்னும் செய்யுளை ஒப்பிடுக.

கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர
வின்னே வருகுவர் தாய ரென்போ
ணன்னர் நன்மொழி கேட்டன மதனு
னல்ல நல்லோர் வாய்ப்புட் டெவ்வர்
முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து
வருத றலைவர் வாய்வது நீநின்
பருவர லெவ்வங் களைமா யோயெனக்
காட்டவுங் காட்டவுங் காணாள் கலுழ்சிறந்து
பூப்போ லுண்கண் புலம்புமுத் துறைப்பக்
கான்யா று தழீஇய வகனெடும் புறவிற்
சேணு றிடவமொடு பைம்புத லெருக்கி
வேட்டுப்புழை யருப்ப மாட்டிக் காட்ட
விடுமுட் புரிசை யேமுற வளைஇப்
படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி
யுவலைக் கூரை யொழுகிய தெருவிற்
கவலை முற்றங் காவ னின்ற
தேம்படு கவுள சிறுகண் யானை
யோங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந் தியாத்த
வயல்விளை யின்குள குண்ணாது நுதறுடைத்

---

16. இன்னே வருகுவர் (நெடுநல் 155.)

15 - 6. சாதல் பற்றியும், உவப்புப்பற்றியும் அஃறிணை உயர்திணை மயங்கியதற்கு இவ்வடிகள் மேற்கோள்; (தொல் கிளவி. சூ. 27 - ந; இ - சூ 299.)

20 - 21. "பொய்ம்மை யுடன் புணரார் மேலவர் பொய்ம்மையு, செ மைசூழ் மேலவரை மேவாவாம் - இம்முறையால், பூவலருந் தாரார் பிரிந் பொலங் குழையார். காவலர்சொற் போற்றல் கடன்" (இ - வி - சூ. 658-மே பா. வருவ ராதல் வாய்வது.

21. பா. மாயோளென.

20 - 22. "இன்னே வருகுவ ரின்றுணை யோரென, முகத்தவை செ யவு மொல்லாண் மிகக்கலுழ்ந்து" (நெடுநல். 155 - 6)

24 - 8. தொல். புறத். சூ 6. இள ந. மேற்.

28. பா. பரந்த பாசறை.

29. உவலை தழையென்னும் பொருளையுணர்த்து மென்பதற்கு இ மேற்கோள். (தஞ்சை. 363.)

30 - 31 "எல்லை நின்ற வென்றி யானை யென்ன நின்ற...வாயி (கம்ப. நகர. 22.)

தயிலுழை மருப்பிற்றங் கையிடைக் கொண்டெனக்
கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக்
கல்லா விளைஞர் கவளங் கைப்பக்
கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்
முக்கோ லசைநிலை கடுப்ப நற்போ
ரோடா வல்விற் றூணி நாற்றிக்
கூடங் குத்திக் கயிறுவாங் கிருக்கைப்
பூந்தலைக் குந்தங் குத்திக் கிடுகுநிரைத்து
வாங்குவி லரண மரண மாக
வேறுபல் பெரும்படை நாப்பண் வேறோர்
நெடுங்காழ்க் கண்டங் கோலி யகனேர்பு
குறுந்தொடி முன்கைக் கூந்தலஞ் சிறுபுறத்
திரவுபகற் செய்யுந் திண்பிடி யொள்வாள்
விரவுவரிக் கச்சிற் பூண்ட மங்கையர்
நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக்
கையமை விளக்க நந்துதொறு மாட்ட
நெடுநா வொண்மணி நிழற்திய நடுநா
ளதிரல் பூத்த வாடுகொடிப் படாஅர்
சிதர்வர லசைவளிக் கசைவந் தாங்குத்
துகின்முடித்துப் போர்த்த தூங்க லோங்குநடைப்
பெருமூ தாள ரேமஞ் சூழப்
பொழுதளந் தறியும் பொய்யா மாக்க
டொழுது காண்கையர் தோன்ற வாழ்த்தி
யெறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்நின்

---

35. "கவை முட் கருவியு மாகிக் கடிகொள" (மணி. 18 164.)

36. "காழ்ோர் கடுங்களிறு கவளங் கைப்ப" (மதுரை. 658 - 9.)

41. "கிடுகுநிரைத் தெஃகூன்றி" (பட. 78.)

43. வேறுபல் பெரும்படை "பன்னூ றடுக்கிய வேறுபடு பைந்நிலை, மிடங்கெட வீண்டிய வியன்கட் பாசறை" (புறநா. 62).)

44. "நெடுங்காழ்க் கண்ட நிரல்பட நிரைத்த, கொடும்பட நெடுமதில்" (சிலப். 27: 151 - 2.)

48. "சொரிசுரை கவரு நெய்வழி புராலில்" (பதிற். 47. அடி - 5.)

49. பா. மாட்டி.

50. "நெடுநா வொண்மணி கடிமனை யிரட்ட", "யாமங் கொள்பவர் நெடுநா வொண்மணி, யொன்றெறி பாணியி னிரட்டும்" (நற். 40, 132.)

குறுநீர்க் கன்ன லினைத்தென் றிசைப்ப
மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை
மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்
புலித்தொடர் விட்ட புனைமா ணல்லிற்
றிருமணி விளக்கங் காட்டித் திண்ஞா
ணெழினி வாங்கிய வீரறைப் பள்ளியு
ளுடம்பி னுரைக்கு முரையா நாவிற்
படம்புகு மிலேச்ச ருழைய ராக
மண்டமர் நசையொடு கண்படை பெறாஅ
தெடுத்தெறி யெஃகம் பாய்தலிற் புண்கூர்ந்து
பிடிக்கண மறந்த வேழம் வேழத்துப்
பாம்புபதைப் பன்ன பரூஉக்கை துமியத்
தேம்பாய் கண்ணி நல்வலந் திருத்திச்
சோறுவாய்த் தொழிந்தோ ருள்ளியுந் தோறுமிபு

---

58. "சூதர் வாழ்த்த மாகதர் நுவல, வேதா ளிகரொடு நாழிகை யிசைப்ப", (மதுரை. 670 - 71); "குறுநீர்க் கன்ன லெண்ணுந ரல்லது, கதிர்மருங் கறியா தஞ்சுவரப் பாஅய்" (அகநா. 43 - 6); "குறுநீர்க் கன்னலின் யாமங் கொள்பவர்" (மணி. 7 : 64 - 5); "புனலுற் றுருவு செப்பின், காலமறி வுற்றுணர்தல் கன்னலளவல்லான், மாலைபக லுற்றதென வோர்வரிது மாதோ" (கம்ப. கார் காலப். 73 ); இவ்வடி, சிலப். 5 : 49 - அடியார் மேற்கோள்.

66. படம் புகும் : (பெரும்பாண். 69.) "செங்கட் புன்மயிர்த் தோறிரை செம்முக, வெங்க ணேக்கிற்குப் பாயமி லேச்சனைச். செங்கட் டவிழி யாத் தெழித்தான்" (சீவக. 431.)

67. "போரெனிற் புகலும் புனைகழன் மறவர்", "பொதுவிற் றூங்கும விசியுறு தண்ணுமை, வளிபொரு தெண்கண் கேட்பி, னதுபோரென்னு மென்னையு முளனே", "வான்வடு விளங்கிய சென்னிச், செருவெங்குரிசில்" (புறநா. 31, 89, 321.) பா. மிலேச்சர்.

69. பா. வேழமும்.

70. "யானைதன், வாய்நிறை கொண்ட வலிதேம்பு தடக்கை, குன்றுபுகு பாம்பிற் றோன்றும்" (அகநா. 391: அடி. 11 - 2); "நிரைகதிர் நீளெஃக நீட்டி வயவர், வரைபுரை யானைக்கைந் நூற - வரைமேல், உருமெறி பாம்பிற் புரளுஞ் செருமொய்ம்பிற், சேய் பொரு தட்ட களத்து" (களவழி. 13.)

71 - 72. "புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா, டிரந்துகோட் டக்க துடைத்து" (குறள். 780); "குஞ்சரத் தலையடுத்துக் கூர்தன்மாக் காலினையாச், செஞ்சோற்றுக் கடனீங்கிச் செவ்வுவான் பிடித்தடுத்த, பஞ்சியேற்

வைந்நுனைப் பகழி மூழ்கலிற் செவிசாய்த்
துண்ணா துயங்கு மாசிந் தித்
தொருகை பள்ளி யொற்றி யொருகை
முடியொடு கடகஞ் சேர்த்தி நெடிதுநினைந்து
பகைவர்ச் சுட்டிய படைகொ ணோன்விர
ணகைதாழ் கண்ணி நல்வலந் திருத்தி
யரசிருந்து பனிக்கு முரசுமுழங்கு பாசறை
யின்றுயில் வதியுநற் காணா டுயருழந்து
நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு
நீடுநினைந்து தேற்றியு மோடுவளை திருத்தியு
மையல் கொண்டு மொய்யென வுயிர்த்து
மேவுறு மஞ்ஞையி னடுங்கி யிழைநெகிழ்ந்து
பாவை விளக்கிற் பருஉச்சுட ரழல
விடஞ்சிறந் துயரிய வெழுநிலை மாடத்து
முடங்கிறைச் சொரிதரு மாத்திர ளருவி
யின்ப லிமிழிசை யோர்ப்பனள் கிடந்தோ
ளஞ்செவி நிறைய வாலின வென்றுபிறர்

---

டடர்துடைஞாண் பதைத்திலங்கக கிடந்தாரை" (சீவக. 2240); "செஞ்சோற்றுக் கடனின்றே கழியே னுயிற் றிண்டோள் வளர்த்ததனுற் செயல்வே றுண்டோ" (பாரதம், 17 - ஆம போர. 20.)

73. "வேணிறத் தீர்க்க வயவரா லேறுண்டு, யானிலங் கொள்ளாக் கலங்கிச் செவிசாய்த்து, மாநிலங் கூறு மறைகேட்ப" (களவழி. 11); வை கூர்மையாகிய குறிப்புப்பொருளையுணர்த்துமெனற்கு இவ்வடி மேற்கோள்; (தொல். உரி. சூ. 91 - சே; 89. ந.)

74. பா. மாவுஞ் சிந்தித்து.

76. நெடிதுநினைந்து: முல்லை. 82.

75 - 6. (தொல். கற்பியல். சூ. 34. ந. மேற்.)

83. ஒருபிரதியில் இவ்வடியின்பின் "அஞ்சி லோதி யாய்கவி னழிஇ, யேவுறு" என்னும்பகுதி காணப்படுகின்றது.

85. "யவன ரியற்றிய வினைமாண் பாவை, கையேந் தையக னிறைய நெய் சொரிந்து, பருஉத்திரி கொளீஇய குரூஉத்தலை நிமிரெரி". "பாண்டில் விளக்கிற் பருஉச்சுட ரழல" (நெடுநல். 101 - 3, 175); "பாண்டில் விளக்கும் பருஉச்சுட ரழல" (பதிற். 47. அடி - 6.)

86. "எழுநிலை மாடஞ் சேர்ந்தும்" (சீவக. 2840.)

89. அல்வழிக்கட் ககரமும் அகரமுங்கெடுதற்கு இது மேற்கோள்; (தொல். குற். சூ. 78 - ந.)

வேண்டுபுலங் கவர்ந்த வீண்டுபெருந் தானையொடு
விசயம் வெல்கொடி யுயரி வலனேர்பு
வயிரும் வளையு மார்ப்ப வயிர
செறியிலைக் காயா வஞ்சன மலர
முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்
கோடற் குவிமுகை யங்கை யவிழத்
தோடார் தோன்றி குருதி பூப்பக்
கான நந்திய செந்நிலப் பெருவழி
வானம் வாய்த்த வாங்குகதிர் வரகிற்
றிரிமருப் பிரலையொடு மடமா னுகள
வெதிர்செல் வெண்மழை பொழியுந் திங்களின்
முதிர்காய் வள்ளியங் காடுபிறக் கொழியத்
துனைபரி துரக்குஞ் செலவினர்
வினைவிளங்கு நெடுந்தேர் பூண்ட மாவே.

## இதன்பொருள்.

இப்பாட்டிற்கு முல்லையென்று பெயர்கூறினார்; முல்லைசான்ற கற்புப்பொருந்தியதனால். இல்லறநிகழ்த்துதற்குப் பிரிந்தவருந்துணையும் ஆற்றியிருவென்று கணவன் கூறிய சொல்லைப் பிழையாமல் ஆற்றியிருந்து இல்லறநிகழ்த்திய இயற்கை முல்லையாமென்றுகருதி இருத்தலென்னும்பொருட்டா முல்லை

---

90 - 91. "நீரொலித் தன்ன நிலவுவேற் றானையொடு. புலவுப்படக் கொன்று மிடைதோ லோட்டிப், புகழ்செய் தெடுத்த விறல்சா னன்கொடி" (மதுரை. 369 - 371.)

91. "வென்றெழு கொடியொடு வேழஞ் சென்றுபுக" (நெடுநல். 87.)

94. "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்" (அகநா. கடவுள்); "கொன்றைகள் பொன்சொரிய" (தேவாரம், திருப்புகலி.)

95. சிறுபாண். 167. "கைவிரிந் தனகாந்தளும்" (சூளா. நாட்டு. 11.)

96. "குருதிப் பூவின் குலைக்காந் தட்டே" (குறுந். 1.)

99. "பெருங்கவின் பெற்ற சிறுதலை நௌவி. மடக்கட் பிணையொடு மறுகுவன வுகள" (மதுரை. 275 - 6), "அறுகோட் டிரலையொடு மான்பிணை யுகளவும்" (பட். 245); "மறியுடை மடப்பிணை தழீஇப் புறவிற். றிரிமருப் பிரலை பைம்பயி ருகள" (அகநா. 314 · அடிகள் 5 - 6.)

100. வெண்மழை · (நெடுநல். 19)

102. 'துனை' என்னுஞ்சொல் விரைவென்னும் பொருளை யுணர்த்து மென்பதற்கு இவ்வடி மேற்கோள், (தொல். உரி. சூ. 17 - ந.)

யென்று இச்செய்யுட்கு நப்பூதனர் பெயர்கூறினமையிற் கணவன் வருந்துணையும் ஆற்றியிருந்தாளாகப் பொருள்கூறலே அவர்கருத்தாயிற்று. *“ தானே சேறல் ” என்னும்விதியால், அரசன் தானே சென்றது இப்பாட்டு.

இது, தலைவன் வினைவயிற் பிரியக்கருதியதனை அவன்குறிப்பானுணர்ந்து ஆற்றாளாய தலைவியது நிலைமைகண்டு அவன் வரற்புறுப்பவும் உடம்படாதவளைப் பெருமுதுபெண்டிர் அவன் வினைமுடித்துவருதல் வாய்வது. நீவருத்தநீங்குவதெனக்கூற, அதுகேட்டு அவள் நீடுநினைந்து ஆற்றியிருந்தவழித் தலைவன் அக்காலத்தே வந்ததனைக் கண்டு வாயில்கள் தம்முட்கூறியது. இது, †“ வாயிலுசாவே தம்முளு முரிய ” ‡“ எல்லா வாயிலு மிருவர் தேஎத்தும் - புல்லிய மகிழ்ச்சிப் பொருள வென்ப ” என்பனவற்றாற் கூறினார்.

1. நனை தலை உலகம் வளைஇ—அகலத்தை இடத்தேயுடைய உலகத்தை வளைத்து,

1 - 2. [நேமியொடு, வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை :]

நேமியொடு வலம்புரி தாங்கு தட கை மால் (3) —சக்கரத்தோடே வலம்புரியைத்தாங்கும் பெரியகைகளையுடையமால்,

மா § பொறித்த மால் (3) —திருமார்பிடத்தே திருமகளைவைத்த மால்,

3. நீர் செல நிமிர்ந்த மாஅல் போல மாவலிவார்த்த நீர் தன்கையிலே சென்றதாக உயர்ந்த திருமாலைப்போல,

இனி, நேமியோடே வலம்புரியையுமுடைய உத்தம இலக்கணங்களைப் பெற்றிருக்கின்ற திருமகளையணைத்தகையிலே நீர்செல்லவென்றுமாம்.

இதனானே முல்லைக்குரிய தெய்வங்கூறினார்.

4 - 5. [பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு, கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி :]

பாடு இமிழ் பனி கடல் பருகி வலன் எர்பு கோடு கொண்டு—ஒலிமுழங்குகின்ற குளிர்ச்சியையுடைய கடலைக்குடித்து வலமாகவெழுந்து மலைகளை இருப்பிடமாகக்கொண்டு,

உலகம் வளைஇ (1) எழுந்த கொடு செலவு எழிலி—பெய்யுங்காலத்தே உலகத்தைவளைத்தெழுந்த கடிய செலவினையுடைய மேகம்.

மால் நீர் செல நிமிர்ந்தாற்போல மேகமும் நீர்செலநிமிர்ந்த தென்றார்

இனி, உலகத்தைத் திருவடிகளிலே அணைத்துக்கொண்டுநிமிர்ந்த மாலென்று முரைப்பர்.

6. பெரு பெயல் பொழிந்த சிறு புல் மாலை - பெரிய மழையைப்பெய்த சிறுபொழுதாகிய வருத்தஞ்செய்கின்ற மாலைக்காலத்துப் பாவைவிளக்கு (85) எனக்கூட்டுக.

---

* தொல்காப்பியம் : அகத்திணையியல், 27.

† ,, செய்யுளியல், 201

‡ ,, கற்பியல். 37.

§ பொறித்தல்-வைத்தல். இதனைச் சிறுபாணாற்றுப்படை, “ வடபுல விமயத்து வாங்குவிற் பொறித்த ” (48) என்பதனுரையானுமுணர்க.

இதனானே முல்லைக்குரிய *காரும் மாலையுங் கூறினார்.
மால்போலெழுந்த எழிலிபொழிந்த மாலையெனக.

7. [அருங்கடி மூதூர் மருங்கிற் போகி :] அருங்கடி மூதூர் மருங்கில் நல்லோர் (18) போகி — அரியகாவலையுடைய பழைய ஊர்ப்பக்கத்துப் பாக்கத்தே படைத்தலைவரேவ நற்சொற்கோடற்குரியோர்போய்,

8 - 11. [யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு, நாழி கொண்ட நறுவீ முல்லை, யரும்பவி ழலரி தூஉய்க்கை தொழுது, †பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப:]

நறு வீ முல்லை அரும்பு யாழ் இசை இனம் வண்டு ஆர்ப்ப அவிழ் அலரி நாழி கொண்ட நெல்லொடு தூஉய் — நறியபூக்களையுடைய முல்லையினது அரும்புகள் யாழினது ஓசையினையுடைய இனமானவண்டுகள் ஆரவாரிக்கும்படி அவிழ்ந்தபூவை நாழியிடத்தே கொண்டுபோன நெல்லுடனே தூவி,

கைதொழுது விரிச்சி நிற்ப - தெய்வத்தை வணங்கி நற்சொற்கேட்டு நிற்க, நல்லோர் (18) போகித் (7) தூஉய்த் தொழுது நிற்பவெனக.

என்றது:—ஒருவேந்தன் ஒருவேந்தனோடு இகல்கருதினாற் போர்செய்ய வேண்டுதலின், அவனாட்டந்தணர்முதலியோரைத் தன்னாட்டின்கண்ணே அழைத்தற்கும், அதனையறியாத ஆவைக் கொண்டுபோந்து தான் காத்தற்குமாகத் தன்படைத்தலைவரை நோக்கி அரசன் நிரையடித்தற்கேவியவழி அவர் அவனூரினின்றும்போய் ஒருபாக்கத்துவிட்டிருந்து அரசனுக்கு மேல்வரும் ஆக்கத்தையறிதற்கு விரிச்சியோர்த்தல் வேண்டுமென்று புறத்திணையியலுட் கூறினமையான், ஈண்டும் அவ்வாறே கூறினார். அது, ‡“வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின், ஆதந் தோம்பல் மேவற் றாகும்,” §“படையியங் கரவம் பாக்கத்து விரிச்சி” என்னுஞ் சூத்திரங்களானும், “நிரைகவுள் வெண்வாய்த் திரிந்துவீழ் தாடி. நரைமுதியோ னின்றுரைத்த நற்சொ - னிரையன்றி, யெல்லைநீர் வைய மிறையோற் களிக்குமால், வல்லையே சென்மின் வழி” என்னும் உதாரணத்தானுமுணர்க. இவர் இதுகேட்டு நிரைகொண்டால் அரசன் வஞ்சி சூடி மண்ணசையால் மேற்செல்வனென்பது. ஆண்டு ¶“எஞ்சாமண்ணசை” என்னுஞ் சூத்திரத்திற் கூறியவாறே ஈண்டுக் கூறினார். அது மேல் “முனைகவர்ந்து” (19) என்பதனானுணர்க.

12 - 8. [சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றி, னுறுதுய ரலமர னோக்கி யாய்மக. ணடுங்குசுவ லசைத்த கையள் கைய, கொடுங்கோற் கோவலர் பின்

* “காரு மாலையு முல்லை குறிஞ்சி. கூதிர் யாம மென்மனார் புலவர்” என்பது தொல்காப்பியம், அகத்திணையியல், 6.

† பெருமுதுபெண்டிரென்பதற்கு ஒருபிரதியிலும் உரையிலது; பெரிய முதிர்ந்தபெண்டிரெனக.

‡ தொல்காப்பியம், புறத்திணையியல், 2.
§ ,, ,, 3.
¶ ,, ,, 7.

னின் றுய்த்தர, வின்னே வருகுவர் தாய ரென்போ, ணன்னர் நன்மொழி கேட்டன மதனால், நல்ல நல்லோர் வாய்ப்புள் :]

நன்னர் வாய்ப்புள் — அவர்கேட்ட நன்றாகிய நற்சொல்,

ஆய் மகள் நடுங்கு சுவல் அசைத்த கையள் — இடைச்சாதியின் மகள் குளிரால் நடுங்குகின்ற தோளின்மேலே கட்டின கையளாய்நின்று,

சிறு தாம்பு தொடுத்த பசலை கன்றின் உறு துயர் அலமரல் நோக்கி — சிறிய தாம்பாலே காலிலே கட்டப்பட்ட வருத்தத்தையுடைத்தாகிய கன்றினுடைய முலையுண்ணாமையுறுகின்ற துயராலே தாய்வருமென்று சுழலுகின்ற தன்மையைப்பார்த்து,

கைய கொடு கோல் கோவலர் பின் நின்று உய்த்தர — கையிடத்தனவாகிய கொடிய கோலையுடைய இடையர் பின்னேநின்று செலுத்துதலைசெய்கையினாலே,

தாயர் இன்னே வருகுவர் என்போள் நன்மொழி கேட்டனம் — நிரம்ப மேய்ந்து நும்முடைய தாய்மார் இப்பொழுதேவருவரென்று கூறுகின்றோளுடைய நன்றாகிய வார்த்தையாக யாங்கள்கேட்டோம்;

அதனால் — அவள்கூறிய நற்சொல்லின் கருத்தால்,

18 - 20. [தெவ்வர், முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து, வருத றலைவர் வாய்வது :] தலைவர் தெவ்வர் முனை கவர்ந்து கொண்ட திறையர் வினை முடித்து வருதல் வாய்வது — நம் தலைவர் வஞ்சிசூடிச் சென்று பகைவர் மண்ணைக்கொண்டு பின் அவரிடத்தேவாங்கிக்கொண்ட திறையினையுமுடையராய் இங்ஙனந் தாமெடுத்துக்கொண்ட வினையை முடித்துவருவரென்று நாம் கருதிய தன்மையிலே அவர்நிற்றல் உண்மை,

நல்ல — அவர் அங்ஙனம் வினைமுடித்துவருதல் நமக்கு இல்லறம் நிகழ்தற்குக்காரணமாகலின் நல்லகாரியம்;

20 - 21. [நீ நின், பருவர லெவ்வங் களைமா யோயெனக்] மாயோய் நீ நின் பருவரல் எவ்வம் களை என — *மாமைநிறத்தையுடையோளே, நீ நின் மனத்தடுமாற்றத்தான் உளதான வருத்தத்தைப் போக்கென்றுகூற, அதுகேட்டு,

செலவுக்குறிப்பறிந்து வேறுபட்டதுணர்ந்தமையின். மனத்தடுமாற்றமென்றார்.

பெருமுதுபெண்டிர் (11), நல்லோர் (18) போகித் (7) தூஉய்த்த தொழுது (10) விரிச்சிநிற்ப (11) அவர்கேட்ட நன்னர் (17) வாய்ப்புள் (18) ஆய் மகள் (13) கையளாகிக் (14) கன்றின் (12) அலமரனோக்கித் (13) தாயர் இன்னே வருகுவரென்போளுடைய (16) நன்மொழியாக யாங்கள் கேட்டனம்; அதன் கருத்தால் (17) தலைவர் வருதல் வாய்வது (20); நல்லகாரியம் (18); மாயோய் (21)

---

* மாமைநிறம் - நாருரித்த ஆம்பற்றண்டுபோன்றநிறம்; "நீர்வள ராம்பற் றூம்புடைத் திரள்கா, லுரித் தன்ன மதனின் மாமை" (நற். 6.)

நின் (20) பருவரலெவ்வம் களையென்று கூற (21) அதுகேட்டு நீடு நினைந்து (82) என்க.

இங்ஙனம்பொருள்கூறாமல் தலைவியது இரக்கமிகுதிகண்டு பெருமுது பெண்டிர் விரிச்சிகேட்டுவந்து தலைவர் வருவாராதல் வாய்வது; நின்னெவ்வங் களையென்று பல்காலும் ஆற்றுவிக்கவும் ஆற்றாளாய்த் துயருழந்து (80) புலம்பொடு (81) தேற்றியும் திருத்தியும் (82) மையல்கொண்டும் உயிர்த்தும் (83) நடுங்கிநெகிழ்ந்து (84) கிடந்தோள் (88) எனப் பொருள்கூறியக்கால் நெய்தற்குரிய இரங்கற்பொருட்டன்றி முல்லைக்குரிய இருத்தற்பொருட்டாகாமை யுணர்க. அன்றியும் தலைவன் காலங் குறித்தல்லது பிரியானென்பதூஉம் அவன்குறித்தகாலங்கண்டால் தலைவிக்கு வருத்தமிகுமென்பதூஉம், அது பாலையாமென்பதூஉம். அவ்வாற்றாமைக்கு இரங்கல் நிகழ்ந்தால் நெய்தலாமென்பதூஉம் நூற்கருத்தாதலுணர்க.

22. [காட்டவுங் காட்டவுங் காணாள் கலுழ்சிறந்து :] காட்டவும் காட்டவும் *கலுழ்சிறந்து காணாள்—தலைவன் †புகழும் மானமும் எடுத்துக்காட்டி வற்புறுத்தவும் தோன்றல் சான்ற மாற்றார் பெருமைகூறிக்காட்டி வற்புறுத்தவும் அன்புமிகுதியாற் கலக்கமிக்கு இவை அரசற்கு வேண்டுமென்று மனத்திற் கருதாதவள்,

23. பூ போல் உண் கண் ‡புலம்பு முத்து உறைப்ப—பூப்போலும் மையுண்கண்கள் தாரையாகச் சொரியாது தனித்துவீழ்கின்ற முத்துப்போலுந் துளியைத் துளிப்ப அதுகண்டு,

24. கான் யாறு தழீஇய அகல் நெடு புறவின் — காட்டாறுசூழ்ந்த அகன்ற நெடிய காட்டிடத்தே,

25. சேண் நாறு பிடவமொடு பைம்புதல் எருக்கி — தூரியநிலத்தே நாறுகின்ற §பிடவமோடே ஏனைப் பசியதூறுகளையும் வெட்டி,

26. வேடு புழை அருப்பம் மாட்டி—பகைப்புலத்துக்குக் காவலாகவிருக்கும் வேட்டுவச்சாதியினுடைய அரண்களையழித்து,

26 - 7. [காட்ட. விடுமுட் புரிசை யேமுற வளைஇ :] காட்ட முள் இடு புரிசை ஏமம் உற வளைஇ—காட்டின்கண்ணவாகிய முள்ளாலிடுமதிலைக் காவலுறும்படி வளைத்து.

28. [படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி :] புணரி படும் நீரின் பரந்த பாடி—திரையொலிக்கின்ற ||கடல்போற்பரந்த பாசறைக்கண்ணே கண்படைபெறாது (67) என்க.

---

* பி - ம். 'கலிழ் சிறந்து'

† "புகழு மானமு மெடுத்துவற் புறுத்தலும் ........ தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும" (தொல். அகத்திணை. சூ. 41.)

‡ "புலம்பே தனிமை" (தொல். உரி. சூ. 33.)

§ இது பிடாவென வழங்கும்.

|| "கடன்மருள் பெரும்படை", "படைநிலா விலங்குங் கடன்மரு டானை" (அகநா. 116, 212.); "கடலெனக், வானீர்க் கூக்குந் தானை"(புறநா.17.)

புறவிடத்தே (24) எருக்கி (25) மாட்டி (26) வளைஇப் (27) பரந்த பாடி யென்க.

29. உவலை கூரை ஒழுகிய தெருவில்—தழையாலேவேய்ந்த கூரை ஒழுங்குபட்டதெருவிடத்து,

30 - 31. கவலை முற்றம் காவல் நின்ற தேம் படு கவுள சிறு கண் யானை — நாற்சந்தியானமுற்றத்தே காவலாகநின்ற மதம்பாய்கின்ற கதுப்பினை யுடையவாகிய சிறியகண்ணையுடைய யானை,

32 - 3. [ஓங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந் தியாத்த, வயல்விளை யின்குள குண்ணாது :] ஓங்கு நிலை கரும்பொடு வயல் விளை கதிர் மிடைந்து யாத்த இன் குளகு உண்ணாது—வளர்கின்ற தன்மையையுடைய கரும்புகளோ டே வயலிலேவிளைந்த நெற்கதிரிடையே நெருங்கப்பட்டுக் கட்டிப்போகட்ட சாவியையும் இனிய *அதிமதுரத்தழையையும் தின்னமல்,

33 - 4. நுதல் துடைத்து அயில் நுனை மருப்பில் தம் கையிடை கொண் டென — அவற்றாலே நுற்நெற்றியைத்துடைத்துக் கூர்மையையுடைய முனை களையுடைய கொம்பினிடத்தே எடுத்த தம் கையிடத்தே கொண்டுநின்றனவாக,

35 - 6. [கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக், கல்லா விளைஞர் கவளங் கைப்ப :] கல்லா இளைஞர் வடமொழி பயிற்றி கவை முள் கருவியின் †கவளம் கைப்ப—வடமொழியை அடியிலேகல்லாத இளைஞர் ‡யானைப்பேசசான வடமொழிகளைக்கற்றுப் பலகாற்சொல்லிக் கவைத்தமுள்ளையுடைய §பரிக் கோலாலே கவளத்தைத் தின்னும்படி குத்த.

யானைக்குச்செய்யும் தொழில்களொழிய வேறொருதொழிலைக் கல்லாத இளைஞரென்றுமாம்.

37 - 40. [கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான், முக்கோ லசைநிலை கடுப்ப நற்போ, ரோடா வல்விற் றூணி நாற்றிக், கூடங் குத்திக் கயிறுவாங் கிருக்கை :]

கூடம் குத்தி கயிறு வாங்கு இருக்கை—கூடமாகக் கால்களைநட்டுக் கயிற்றை வலித்துக்கட்டின இருப்பின்கண்ணே,

என்றது ||படங்குகளை.

கல் தோய்த்து உடுத்த படிவம் பார்ப்பான் முக்கோல் அசை நிலை கடுப்ப—துகிலைக் காவிக்கல்லைத் தோய்த்துடுத்த விரதங்களையுடைய ¶முக்கோலந்தணன் அம்முக்கோலிலே அந்தஉடையினை இட்டுவைத்த தன்மையையொக்க.

---

* யானைக்கு அதிமதுரத்தழையில் விருப்பமுண்டென்பதை. சீவக. 750 ஆம் செய்யுளாலுமுணர்க. பி - ம். அட்டிமதுரத்தழை.

† பி - ம். 'கவழமகைப்ப'

‡ யானைப்பேச்சான வடமொழிகளாவன, அப்புது அப்புது, ஆது ஆது, ஐ ஐ என்பன. (சீவக. 1834 - உரை.)

§ பரிக்கோல் - குத்துக்கோல்.

|| படங்குகள் - கூடாரங்கள்.

¶ "உரைசான்ற முக்கோல்" (கலி. 9.)

கல் போர் ஓடா வல் வில் தூணி நாற்றி—அறத்தாற்பொருகின்ற போரிற்கு ஓடாமைக்குக் காரணமான வலியவில்லைச் சேரவூன்றி அதிலே தூணிகளைத் தூக்கி,

41. பூ தலை குந்தம் குத்தி—பூத்தொழிலைத் தலையிலேயுடைய எறிகோல் களையுமூன்றி,

பூந்தலை, விகாரம்.

இடுகு நிரைத்து—இடுகுகளையும் நிரையாகக் குத்தி,

42. வாங்கு வில் அரணம் அரணம் ஆக—இங்ஙனஞ்சூழும் விற்படையாகிய அரணை தங்களுக்கு அரணாக, இதற்குள்ளேவிட்ட,

கயிறுவாங்கிருக்கைக்கண்ணே (40) நாற்றிக் (39) குத்தி நிரைத்து (41) வாஙகுவில்லரணமென்க.

43. வேறு பல் பெரு படை நாப்பண்—பாடைவேறுபட்ட பலவாகிய பெரியபடைக்குநடுவே,

43 - 4. [வேறோர், நெடுங்காழ்க் கண்டங் கோலியக நேர்பு ·]

வேறு ஓர் அகம் நேர்பு—வேறோரிடத்தை அரசனுக்குக் கோயிலாக எல்லாருமுடம்பட்டு,

நெடு காழ் கண்டம் கோலி—நெடிய குத்துக்கோலுடனேபண்ணின பல நிறத்தாற் கூறுபட்ட *மதிட்டிரையைவளைத்து,

கண்டம், ஆகுபெயர்.

45. குறு தொடி முன்கை கூந்தல் அம் சிறு புறத்து மங்கையர் (47)—குறியதொடியையுடைய முன்கையினையும் கூந்தலைத்துகிடக்கின்ற அழகினையுடைய சிறியமுதுகினையுமுடைய மங்கையர்,

46 - 7. இரவு பகல் செய்யும் திண் பிடி ஒள் வாள் விரவு வரி கச்சின் பூண்ட மங்கையர்—இராப்பொழுதைப் பகற்பொழுதாக்கும் திண்ணிய †ஆசினையுடைய ஒள்ளியவாளை விரவினநிறத்தினையுடைய கச்சிலேபூண்ட மங்கையர்,

48 - 9. நெய் உமிழ் சுரையர் நெடு திரி கொளீஇ கை அமை விளக்கம் நந்துதொறும் மாட்ட—நெய்யைக்காலுகின்ற திரிக்குழாயையுடைய சிற்றூட்கள் நெடிய திரியை எங்குங்கொளுத்தி ஒழுங்காயமைந்த விளக்குக்கள் அவியுந்தோறும் தம்கையிற்பந்தத்தைக்கொளுத்த,

50 நெடு நா ஒள் மணி நிழற்றிய நடு நாள்—நெடிய நாக்கினையுடைய ஒள்ளியமணி எறிந்துவிட்ட நடுயாமத்தும்,

கோயில் ‡பணிமடங்கினால் மணியெறிந்துவிடுதல் இயல்பு.

---

* மதிட்டிரை, கண்டத்திரையெனவும் பல்வண்ணத்திரையெனவும் வழங்கும்; (சீவக. 647, 873.)

† பி - ம். (க) கவிசினையுடைய (உ) வாய்ச்சினையுடைய.

‡ பணி - வேலை.

இனி யானை குதிரைமுதலியன துயில்கோடலின், அவற்றின் மணி யோசை அடங்கிய நடுநாளென்றுமாம்.

51 - 2. அதிரல் பூத்த ஆடு கொடி படாஅர் சிதர் வரல் அசை வளிக்கு அசைவந்தாங்கு—*புனலிபூத்த அசைகின்ற கொடியினையுடைய சிறுதூறுகள் துவலையோடே வருதலையுடைய அசைந்த காற்றிற்கு அசைந்தாற்போல,

சிதர் - மெத்தெனவுமாம்.

53 - 4. துகில் முடித்து போர்த்த தூங்கல் ஓங்கு நடை †பெரு மூதாளர் ஏமம் சூழ—‡மயிர்க்கட்டுக்கட்டிச் சட்டையிட்ட அனந்தரினையும் பெரிய ஒழுக்கத்தினையுமுடைய மெய்காப்பாளர் காவலாகச் சூழ்ந்துதிரிய,

55 - 6. [பொழுதளந் தறியும் பொய்யா மாக்கள், டொழுது காண்கையர் தோன்ற வாழ்த்தி :]

மாக்கள் பொழுது அளந்து அறியும பொய்யா காண்கையா - அறிவில்லாதோருடைய வாழ்நாளை இத்துணையென்று அளந்தறியும் பொய்யாத காட்சியையுடையார்,

தொழுது தோன்ற வாழ்த்தி—அரசனைவணங்கி விளங்க வாழ்த்தி.

57. எறி நீர் வையகம் வெலீஇய செல்வோய்—திரையெறிகின்ற கடல் சூழ்ந்த உலகத்தே பகைவரை வெல்லுதற்குச் செல்கின்றவனே,

57 - 8. நின் குறுநீர் கன்னல் இனைத்து என்று இசைப்ப—கடாரத்து நீரிலேகாண்கின்ற நினது நாழிகைவட்டிலிற் சென்றநாழிகை இத்துணையென்று சொல்லுகையினாலே,

59. [மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை :]

மத்திகை வளைஇய உடை—புரவியை யடிக்கின்ற சம்மட்டி வளைந்து கிடக்கின்ற உடை,

மறிந்து வீங்கு செறிவு உடை—அச்சமட்டி மறையும்படி வடிவுதாழ்ந்து பெருக்குஞ் செறிதலையுடைய §புடைவையுடையினையும,

60. மெய்ப்பை புக்க வெரு வரும தோற்றத்து—சட்டையிட்ட அச்சம் வரும் தோற்றரவினையும்,

61. வலி புணர் யாக்கை —இயல்பான வலிகூடின மெய்யினையுமுடைய,

வன்கண் யவனர்—தறுகண்மையினையுடைய சோனகர்,

62. புலி தொடர் விட்ட புனை மாண் நல் இல்—புலிச்சங்கிலிவிடப்பட்டு கைசெய்தமாட்சிமைப்பட்ட நன்றாகிய இல்லிலே,

* புனலி - மோசிமல்லிகை; (சிலப். 13 : 156 - அடியார்.)
† "பெருமூ தாளரே மாகிய வெமக்கே" (புறநா. 243.)
‡ மயிர்க்கட்டு - தலைப்பாகை.
§ ஆணுடையையும் புடைவையென்பது பண்டைக்காலவழக்கு.

63 - 4. *திரு மணி விளக்கம் காட்டி திண் ஞாண் எழினி வாங்கிய ஈரறை பள்ளியுள்* — அழகினையுடைய மாணிக்கமாகிய விளக்கை எரியவைத்துத் திண்ணிய கயிற்றிற்றிரையைவளைத்த புறவறைக்குள்ளறையிற் படுக்கைக்கண்ணே சென்று,

65 - 6. [*உடம்பி னுரைக்கு முரையா நாவிற், படம்புகு மிலேச்ச ருழைய ராக:*] *உரையா நாவின் உடம்பின் உரைக்கும் படம் புகும் மிலேச்சர் உழையர் ஆக* — வார்த்தை சொல்லாத நாவினையுடைய கையாலும் முகத்தாலும் வார்த்தைசொல்லும் சட்டையிடும் *அசாரவாசிகள் பள்ளிகொள்ளுமிடத்தைச் சூழ்ந்துதிரிய,

உரையா நாவென்றார், ஊமைகளென்றற்கு.

67. *மண்டு அமர் நசையொடு கண்படை பெறாஅது* — பகைவர் மனமறியாமல் மிக்குச்செல்கின்ற போரை நச்சுதலாலே கண்ணுறக்கம்பெறாமல்,

68 - 9. *எடுத்து எறி எஃகம் பாய்தலின் புண் கூர்ந்து பிடி கணம் மறந்த வேழம் உள்ளியும்* (72) — ஓச்சிவெட்டுகின்ற வாளழுந்துகையினாலே புண்மிக்குப் பிடித்திரளைமறந்த வேழத்தை உள்ளியும்,

69 - 70. [*வேழத்துப், பாம்புபதைப் பன்ன பருஉக்கை துமிய:*] *வேழத்து பருஉ கை பாம்பு பதைப்பன்ன துமிய* — யானையினுடைய பரியகைகள் பாம்பினது பதைக்கின்ற தன்மையையொத்த பதைப்பினையுடையவாக அற்றுவிழும்படி,

71 - 2. *தேம் பாய் கண்ணி நல் வலம் திருத்தி சோறு வாய்த்து ஒழிந்தோர் உள்ளியும்* — தேன்பரக்கும் †வஞ்சிமாலைக்கு நன்றாகிய வெற்றியை யுண்டாக்கிச் செஞ்சோற்றுக்கடனிறுத்துப் பட்ட வீரரை நினைத்தும்,

72 - 4. *தோல் துமிபு வைந் நுனை பகழி மூழ்கலின் செவி சாய்த்து உண்ணாது உயங்கும் மா சிந்தித்தும்* — பக்கரைகளை யறுத்துக் கூரியமுனையினையுடைய அம்புகள்வந்து அழுந்துகையினாலே செவிசாய்த்துப் புல்லுண்ணாதே வருந்தும் குதிரைகளை நினைத்தும்,

75 - 6. [*ஒருகை பள்ளி யொற்றி யொருகை, முடியொடு கடகஞ் சேர்த்தி:*] *ஒருகை பள்ளி ஒற்றி ஒருகை கடகம் முடியொடு சேர்த்தி* — ஒருகையைப் படுக்கையின்மேலேவைத்து ஒருகையிற்கடகத்தை முடியோடேசேரவைத்து,

என்றது, கையிலே தலையைவைத்தென்றாராயிற்று.

*நெடிது நினைந்து* — இப்படைநொந்தவளவுக்கு நாளை எவ்வாறு பொருமென்று நெடிதாகநினைந்து,

77. *பகைவர் சுட்டிய படை கொள் நோன் விரல்* — ‡பகைவரைக்கருதி வைத்த வாளைப்பிடித்த வலியினையுடைய கையாலே வெட்டிவென்று (89) என்க.

---

* பி - ம். சரவாசிகள்.

† வஞ்சிமாலை - பகைமேற்செல்வோர்க்குரிய அடையாளமாலை.

‡ "தெவ்வர்க் கோக்கிய, வேல்" (பட். 299 - 300) என்பதனுரை இங்கே அறியற்பாலது.

78. ஓகை தாழ் கண்ணி நல் வலம் திருத்தி—தனக்கு எக்காலமும் விளக்கந்தரும் *வஞ்சிக்கு ஏன்றாகிய வெற்றியை நிலைபெறுத்தி,

79. அரசு இருந்து பனிக்கும் பாசறை - பகையரசிருந்து நடுங்குதற்குக் காரணமான பாசறை.

பனிக்கும் பாசறை, †கோய்தீருமருந்துபோனின்றது.

முரசு முழங்கு பாசறை — வெற்றிக்களிப்புத்தோன்ற முரசுமுழங்கும் பாசறை,

80 - 84. [இன்றுயில் வதியுநற் காணா டயருழந்து, நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு, நீடுநினைந்து தேற்றியு மோடுவளை திருத்தியு, மையல் கொண்டு மொய்யென வுயிர்த்து, மேவுறு மஞ்ஞையி னடுங்கி யிழைநெகிழ்ந்து]

வதியுநன் இன் துயில் காணாள்—தன்னிடத்தேதங்குகின்றவனை இனிய துயில் கொள்ளுதலைக் காணாளாய்,

நெஞ்சு ஆற்றுப்படுத்த புலம்பொடு—அவன் தன்னெஞ்சம் தான்போகின்ற வழியிற் செலுத்துதலால் தனக்குண்டான தனிமையாலே,

இது ‡"நிகழ்ந்தது நினைத்தற் கேதுவு மாகும்" என்பதாம்.

நிறை தபு புலம்பு—தனதுநிறைகெடுத்ததனிமை,

நீடு நினைந்து—இங்ஙனம் பிரிந்தாலன்றி இவ்வரசியல் நிகழாதென்று நினைத்து,

ஓடு வளை திருத்தியும்—கழலுகின்றவளையைக் கழலாமற் செறித்தும்,

மையல்கொண்டும்—மயக்கங்கொண்டும்,

ஒய்யென உயிர்த்தும்—விரைய நெட்டுயிர்ப்புக்கொண்டும்,

ஏவு உறு மஞ்ஞையின் நடுங்கி இழை நெகிழ்ந்து—அம்புதைத்த மயில் போல நடுங்கி அணிகலங்கள் நெகிழ்ந்து கண் புலம்புமுகதுறைப்ப (23) எனக் கூட்டுக.

துயர் உழந்து தேற்றியும்—அதனைக்கண்டு தானும் வருத்தமுற்று இவள் ஆற்றியிராளென்று துணிந்தும்

85. பாவை விளக்கில் பரூஉ சுடர் அழல—பொற்பாவை ஏந்திநின்ற §தகளியிலே பரியவிளக்கு நின்றெரிய,

---

* மேற்சென்றுபொருது பகைவரை அவரிடத்தே வெல்ல நினைந்தானென்பது இதன்கருத்து; "சிறுபடையான்", "சிறைநலனும்" என்னும் திருக்குறள்களும், "ஈண்டவ ரடுதலு மொல்லா னாண்டவர், மாணிழை மகளிர் நாணினர் கழியத், தந்தை தம்மூ ராங்கட், டெண்கிணை கறங்கச்சென் றாண்டட் டனனே" என்னும் புறநானூறும் (78) இதனைவலியுறுத்தும்.

† கலித்தொகை, 60.

‡ தொல்காப்பியம், அகத்திணையியல், 43.

§ தகளி - அகல்; "வையந் தகளியா" (திவ். முதற்றிரு. 1); இப்பெயர் தாளியென்றும் வழங்கும்.

விளக்கு, ஆகுபெயர்.

86. இடம் சிறந்த உயரிய எழுநிலை மாடத்து—தனக்குள்ள இடமெல்லாம் பொன்னாலும் மணியாலும் சிறப்புப்பெற்று உயர்ந்த எழுநிலையினையுடைய மாடத்திடத்து,

87. முடங்கு இறை சொரிதரும் மா திரள் அருவி—*மூட்டுவாய்களினின்றும் சொரிதலைச்செய்யும் பெருமையையுடைய திரண்ட அருவிகளினுடைய,

88. இன் பல் இமிழ் இசை ஓர்ப்பனள் கிடந்தோள்—இனிய பலவாகிய முழங்குகின்ற ஓசைக்கண்ணே தலைவன் தான்கூறிய பருவம் பொய்யாமல் வருவனென்னுங் கருத்தினளாகலின் அவன்வரவினையே கருதிக்கிடந்தோளுடைய,

89. அஞ்செவி நிறைய ஆலின—அகஞ்செவி நிரம்பும்படி ஆரவாரித்தன;

89 - 91. [வென்றுபிறர், வேண்டுபுலங் கவர்ந்த ஈண்டுபெருந் தானையொடு, விசயம்:]

வென்று—வெட்டிவென்று,

பிறர் வேண்டு புலம் கவர்ந்த விசயம்—பகையரசர் எக்காலமும் விரும்பும் நிலங்களைக் கைக்கொண்ட வெற்றியாலே,

ஈண்டு பெரு தானையொடு—திரளுகின்ற பெரிய படையோடே,

அரசன் வினைமுடிந்தகாலத்தே விரைந்துபோந்தானாகலின், அதுகேட்டு வருகின்ற படையென்பதுதோன்ற ஈண்டுபெருந்தானை யென்றார்.

91. வெல் கொடி உயரி—எக்காலமும் வென்றெடுக்கின்ற கொடியை எடுத்து,

91 - 2. வலன் ஏர்பு வயிரும் வளையும் ஆர்ப்ப—வெற்றிதோன்றிக் கொம்பும் சங்குமுழங்க,

92 - 3. அயிர செறி இலை காயா அஞ்சனம் மலர—நுண்மணலிடத்தனவாகிய நெருங்கின இலையினையுடைய காயா அஞ்சனம்போல அவிழ,

94. முறி இணர் கொன்றை நல் பொன் கால—தளிரினையும் கொத்தினையுமுடைய கொன்றை நன்றாகிய பொன்னைச்சொரிய,

95. †கோடல் குவி முகை அங்கை அவிழ—கோடலினது குவிந்தமுகைகள் அகங்கைபோலவிரிய,

96. ‡தோடு ஆர் தோன்றி குருதி பூப்ப—திரட்சிநிறைந்த தோன்றி உதிரம்போலப் பூப்ப,

97. கானம் நந்திய செ நிலம் பெரு வழி—காடுதழைத்த சிவந்தநிலத்திற் பெருவழியிலே,

---

* பி - ம். கூடுவாய்.

† கோடல் - வெண்காந்தள்.

‡ தோடு - தொகுதி; (புறநா. 238.)

98 - 100. [வானம் வாய்த்த வாங்குகதிர் வரகிற், றிரிமருப் பிரலையொடு மடமா னுகள, வெதிர்செல் வெண்மழை பொழியுந் திங்களின் :]

வானம் வாய்த்த வரகு—மழை வேண்டப் பெய்தவரகு,

எதிர் செல் வெள் மழை பொழியும் திங்களில் வாங்கு கதிர் வரகின்—எதிர்காலத்துக்குப் பெய்யச்செல்கின்ற வெள்ளியமழை சிறுதுவலையைப்பொழியும் முன்பனிதொடங்குந் திங்களிலே வளைகின்ற கதிரையுடைய வரகிடத்தே,

* திரி மருப்பு இரலையொடு மடமான் உகள—முறுக்குண்ட கொம்பினையுடைய புல்வாய்க்கலையோடே மடப்பத்தையுடைய மான் துள்ள,

மழையால் தண்ணீரும் புல்லும் நிறையப்பெற்றுப் புணர்ந்து திரியுமென்ற கருப்பொருளால், அவற்றைக்கண்ட அரசனுக்கு வேட்கை மிகுதிகூறிற்று.

மலரக் (93) கால (94) அவிழப் (95) பூப்ப (96) உகளக் (99) கானநந்திய பெருவழி (97) யென்க.

இவையெல்லாம் வேட்கைவிளைதற்குக் காரணமாயின.

101. முதிர் காய் †வள்ளி அம் காடு பிறக்கு ஒழிய—தன்பருவம் வந்தால் முதிருங்காயையுடைய வள்ளியங்காடு பின்னாக,

102. துனை பரி துரக்கும் செலவினர்—விரைந்துசெல்லும் பரியை அதனை அமையாமற் கடிதாகச்செலுத்தும் செலவினையுடையராய் வந்தவருடைய,

என்றது:— ‡ "வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவரு காலை, யிடைச்சுர மருங்கிற் றவிர்த லில்லை, யுள்ளம் போல வுற்றுழி யுதவும், புள்ளியற் கலிமா வுடைமை யான" என்பது தோன்றக் கூறிற்று.

103. வினை விளங்கு நெடு தேர் பூண்ட மாவே—தான் எடுத்துக்கொண்ட வினை எக்காலமும்விளங்கும் நெடிதாகிய தேரைப்பூண்டகுதிரை.

தலைவி தன்னிடத்தே வதிகின்றவனை இன்றுயிலைக்காணாளாய் (80) நெஞ்சாற்றுப்படுத்த புலம்பாலே (81) ஓவிளை திருகியும் (82) மையல்கொண்டும் உயிர்த்தும் (83) நடுங்கி நெகிழ்ந்து (84) பூப்போலுண்கண் புலம்புமுத்துறைப்ப (23) அதுகண்டு துயருழந்து (80) தேற்றியும் (82) வற்புறுத்திப் பிரிதல் வேண்டுமெனக் கருதிக் காட்டவும் காட்டவும் காணுதவள் (22) பெருமுது பெண்டிர் (11) எவ்வம் களையெனக்கூற (21) அதுகேட்டு நீடுநினைந்து (82) பெரும்பெயல்பொழிந்த சிறுபுன்மாலையில் (6) இட்டசுடர் அழலாநிற்க (85) இமிழிசை ஓர்ப்பனள் கிடந்தோளுடைய (88) அஞ்செவிநிறையப் (89) பரந்த பாடியிலே (28) அரசிருந்து (79) ஒருகை பள்ளியொற்றி ஒருகை (75) முடியொடுசேர்த்தி (76) வேழத்தை (69) உள்ளியும் (72) மாவைச்சிந்தித்தும் (74)

* "இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பின், ......... இரலைதெறிப்ப" (அகநா. 4.)

† வள்ளி - ஒருவகைக்கொடி.

‡ தொல்காப்பியம், கற்பியல், 53.

ஒழிக்கோதாரை யுள்ளியும் (72) நினைந்து (76) நடுங்குதற்குக்காரணமான பாசறையிற் (79) பெரும்படைநாப்பண் வேறோர் (43) அகம் சேர்பு கண்டங்கோலி (44) யவனர் (61) புலித்தொடர்விட்ட நல்லில்லிலே (62) பொழுதளந்தறியும் (55) காண்கையர் (56) கன்னல் இனைத்தென்றிசைக்கையினாலே (58) மங்கையர் (47) திருமணிவிளக்கங்காட்டி (63) எழினிவாங்கிய பள்ளியிலே சென்று (64) இளையர் கவளங் கைப்பச் (36) சுரையர் (48) மாட்டப் (49) பெருமூதாளர் ஏமஞ்சூழ (54) மிலேச்சர் உழையராக (66) வெண்மணிநிழற்றிய நடுநாளிலும் (50) மண்டமர்நசையாற் கண்படைபெறாதிருந்து (67) மற்றைநாட் படைகொள்ளோன் விரலாலே (77) வென்று (89) கண்ணிவலந்திருத்திப் (78) பிறர் வேண்டுபுலங்கவர்ந்த (90) விசயத்தாலே வெல்கொடியுயரிக் (91) காடு பிறக்கொழியப் (101) பெருவழியிலே (97) வயிரும் வளையுமார்ப்ப (92) கண்டு பெருந்தானையோடே (90) துனைபரி துரக்குஞ் செலவினையுடையராய் வந்தவருடைய (102) தேர்பூண்டமா (103) ஆலின (89) வென வினைமுடிக்க.

* "செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே, வன்புறை குறித்த றவிர்ச்சி யாகும்" என்பதனால் வற்புறுத்திப்பிரிதல்வேண்டுமென்றுணர்க.

தொல்காப்பியனார் கருத்திற்கேற்ப நப்பூதனார் செய்யுள் செய்தாரென்றுணர்க. இவ்வாறன்றி ஏனையோர்கூறும்பொருள்கள் இலக்கணத்தோடு பொருந்தாமையுணர்க.

காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வாணிகனார்மகனார் நப்பூதனார் பாடிய முல்லைப்பாட்டிற்கு மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.

1. வண்டடைந்த கண்ணி வளராய்ச்சி வாணெடுங்கண்
சென்றடைந்த நோக்க மினிப்பெறுவ - தென்றுகொல்
கன்றெடுத் தோச்சிக் கனிவிளவின் காயுதிர்த்துக்
குன்றெடுத்து நின்ற நிலை.

2. புனையும் பொலம்படைப் பொங்குளைமான் றிண்டேர்
துனையுந் துனைபடைத் துன்னார் - முனையு
ளடன்முகந்த தானை யவர்வரா முன்னங்
கடன்முகந்து வந்தன்று கார்.

(பு - வெ. பொதுவியற். 2.)

* தொல்காப்பியம், கற்பியல், 44.

## ஆறாவது

# *மதுரைக்காஞ்சி.



ஓங்குதிரை வியன்பரப்பி
னொலிமுந்நீர் வரம்பாகத்
தேன்றூங்கு முயர்சிமைய
மலைநாறிய வியன்ஞாலத்து
வலமாதிரத்தான் வளிகொட்ப
வியனாண்மீ னெறியொழுகப்
பகற்செய்யுஞ் செஞ்ஞாயிறு
மிரவுச்செய்யும் வெண்டிங்களு
மைதீர்ந்து கிளர்ந்துவிளங்க
மழைதொழி லுதவ மாதிரங் கொழுக்கத்
தொடுப்பி னாயிரம் வித்தியது விளைய
நிலனு மரனும் பயனெதிர்பு நந்த
நோயிகந்து நோக்குவிளங்க
மேதக மிகப்பொலிந்த

---

*வீடுபேறு நிமித்தமாகச் சான்றோர் பல்வேறு நிலையாமையை அறைந்த மதுரைக்காஞ்சி காஞ்சித்திணைக்கு உதாரணமென்பர்; (தொல். புறத். சூ. 23 - ந.)

1. தொல். செய். சூ. 14 - பேர். ந; ஷை 40 - ந. மேற்.

1 - 2. வழிமோனைக்கு இவ்வடிகள் மேற்கோள். (தொல். செய். சூ. 94 - பேர்.)

4. "மாமலை நாறிய ஞாலம்" (பரி. "வானுரெழில்"); "கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே" (பு - வெ. கரந்தை. 14.)

1 - 4. யா - வி. செய். சூ. 2 - உரையைப்பார்க்க.

3 - 4. இவ்வடிகள் பதினெட்டெழுத்தான் வந்ததென்பர்; (தொல். செய். சூ. 50 - இள.) (3)=பா. தூங்கியவுயர்.

5. "வளிவலங் கொட்கு மாதிரம் வளம்படும்" (மணி. 12: 91.) தொல். செய். சூ. 38 - ந. மேற்.

6 - 10. "மீன்வயி னிற்ப வானம் வாய்ப்ப" (பதிற். 90.).

10 - 11. "வான மின்னு வசிவு பொழிய வாஅ, திட்ட வெல்லாம் பெட்டாங்கு விளைய" (மலைபடு. 97 - 8.)

12. பா. எதிர்புந்த.

14. பா. மேதகப்பொலிந்த.

வோங்குநிலை வயக்களிறு
கண்டுதண்டாக் கட்கின்பத்
துண்டுதண்டா மிகுவளத்தா
னுயர்பூரிம விழுத்தெருவிற்
பொய்யறியா வாய்மொழியாற்
புகழ்நிறைந்த நன்மாந்தரொடு
நல்லூழி யடிப்படரப்
பல்வெள்ள மீக்கூற
வுலக மாண்ட வுயர்ந்தோர் மருக
பிணக்கோட்ட களிற்றுக்குழும்பி
னிணம்வாய்ப்பெய்த பேய்மகளி
ரிணையொலியிமிழ் துணங்கைச்சீர்ப்
பிணையூப மெழுந்தாட
வஞ்சுவந்த போர்க்களத்தா
னாண்டலை யணங்கடுப்பின்
வயவேந்த ரொண்குருதி
சினத்தீயிற் பெயர்புபொங்கத்
தெறலருங் கடுந்துப்பின்
விறல்விளங்கிய விழுச்சூர்ப்பிற்
றொடித்தோட்கை துடுப்பாக
வாடுற்ற வூன்சோறு
நெறியறிந்த கடிவாலுவ
னடியொதுங்கிப் பிற்பெயராப்
படையோர்க்கு முருகயர

---

17. பா. தண்டாவிகு.
18. பா. பூரியவிழுத்தெரு.
21. "நல்லூழி யாவர்க்கும் பிழையாது வருதலின்" (கலி. 99); "முத லூழி யின்பம், வரவிப் படிதன்னை வாழ்வித்த வாணன்" (தஞ்சை. 286.)
22. "ஆயிர வெள்ளம் வாழிய பலவே" (பதிற். 21.)
24. பிணக்கோட்ட களிறு: "வேலாண் முகத்த களிறு" (குறள். 500.)
25. பா. பேஎய்.
28. பா. வந்த.
29 - 38. "முடித்தலை யடுப்பிற் பிடர்த்தலைத் தாழித், தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய வூன்சோறு, மறப்பேய் வாலுவன் வயினறிந் தூட்ட" (சிலப். 26: 242 - 4.)
37. "பிறக்கடி யொதுக்காப் பூட்கை" (பதிற். 80: அடி 8.)
38. பா. படையோர்முருகயர.

வமர்கடக்கும் வியன்றானைத்
தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற்
றொன்முது கடவுட் பின்னர் மேய
வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருந
விழுச்சூழிய விளங்கோடைய
கடுஞ்சினத்த கமழ்கடாஅத்
தளறுபட்ட நறுஞ்சென்னிய
வரைமருளு முயர்தோன்றல
வினைநவின்ற பேர்யானை
சினஞ்சிறந்து களனுழக்கவு
மாவெடுத்த மலிகுரூஉத்துக
ளகல்வானத்து வெயில்கரப்பவும்
வாம்பரிய கடுந்திண்டேர்
காற்றென்னக் கடிதுகொட்பவும்
வாண்மிகு மறமைந்தர்
தோண்முறையான் வீறுமுற்றவு
மிருபெரு வேந்தரொடு வேளிர் சாயப்
பொருதவரைச் செருவென்று

---

40 - 42.. "மறைமுது முதல்வன் பின்னர் மேய, பொறையுயர் பொதியிற் பொருப்பன்" (சிலப். 12.)

45. பா. அயம்பட்டாறுஞ்.

48. பா. உழக்க.

44 - 8. "செல்சமந் தொலைத்த வினைநவில் யானை, கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி, வண்டுபடு சென்னிய பிடிபுணர்ந் தியல" (பதிற். 82 அடி 4 - 6.)

50. பா. வெயிற்கரப்ப.

51. பா. வாய்பரிய.

52. பா. காற்றெனக்.

55 - 6. "கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழிய, ஆலங் கானத் தகன்றலை சிவப்பச், சேரல் செம்பியன் சினங்கெழு திதியன், போர்வல் யானைப் பொலம்பூ ணெழினி, நாரரி நறவி னெருமை யூரன், தேங்கம ழகலத்துப் புலர்ந்த சாந்தி, னிருங்கோ வேண்மா னியறேர்ப் பொருநனென், றெழுவர் நல்வல மடங்க வொருபகல், முரைசொடு வெண்குடை யகப்படுத் துரைசெலக், கொன்று" (அகநா. 36); "எழுவர் நல்வலங் கடந்தோய்", "புனைகழ லெழுவர் நல்வல மடங்க, வொருதா னாகிப் பொருதுகளத் தடலே" (புறநா. 19, 76.)

மிலங்கருவிய வரைநீந்திச்
சுரம்போழ்ந்த விகலாற்ற
லுயர்ந்தோங்கிய விழுச்சிறப்பி
னிலந்தந்த பேருதவிப்
பொலந்தார் மார்பி னெடியோ னும்பன்
மரந்தின் னூஉ வரையுதிர்க்கு
நரையுருமி னேறனையை
யருங்குழுமிளைக் குண்டுகிடங்கி
னுயர்ந்தோங்கிய நிரைப்புதவி
னெடுமதி னிரைஞாயி
லம்புமி ழயிலருப்பந்
தண்டாது தலைச்சென்று
கொண்டுநீங்கிய விழுச்சிறப்பிற்
றென்குமரி வடபெருங்கல்
குணகுடகட லாவெல்லைத்
தொன்றுமொழிந்து தொழில்கேட்ப
வெற்றமொடு வெறுத்தொழுகிய
கொற்றவர்தங் கோனாகுவை
வானியைந்த விருமுந்நீர்ப்
பேஎநிலைஇய விரும்பௌவத்துக்
கொடும்புணரி விலங்குபோழக்
கடுங்காலொடு கரைசேர
நெடுங்கொடிமிசை யிதையெடுத்
தின்னிசைய முரசமுழங்கப்
பொன்மலிந்த விழுப்பண்ட

57. பா. மலைநீந்தி.

61. தார்: "வண்ணமார்பிற்றார்" (புறநா. 1); நெடியோன்: "முந்நீர் விழவி னெடியோன்" (புறநா. 9 அடி 10.)

64 - 7. "கடிமிளைக் குண்டு கிடங்கின், னெடுமதி னிரைஞாயில், லம்புடை யாரெயில்" (பதிற். 20 அடி 17 - 9.)

70 - 72. "வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும், தெனாஅது உருகெழு குமரியின் றெற்கும், குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும், குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்", "தென்குமரி வடபெருங்கற், குணகுட கடலாவெல்லை, குன்றுமலை காடுநா, டொன்றுபட்டு வழிமொழிய" (புறநா. 6, 17.)

72. மொழ: (மதுரை. 124; பதிற். 90 அடி 8); "தொன்றுபட்டு வழிமொழிய" (புறநா. 17 அடி 4.)

நாடார நன்கிழிதரு
மாடியற் பெருநாவாய்
மழைமுற்றிய மலைபுரையத்
துறைமுற்றிய துளங்கிருக்கைத்
தெண்கடற் குண்டகழிச்
சீர்சான்ற வுயர்நெல்லி
னூர்கொண்ட வுயர்கொற்றவ
* நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர்
பாடுசிலம்பு மிசையேற்றத்
தோடுவழங்கு மகலாம்பியிற்
கயமகைய வயனிறைக்கு
மென்றொடை வன்கிழாஅ
ரதரி கொள்பவர் பகடுபூண் டெண்மணி
யிரும்பு ளோப்பு மிசையே யென்று
மணிப்பூ முண்டகத்து மணன்மலி கானற்
பரதவர் மகளிர் குரவையொ டொலிப்ப
ஒருசார், விழவுநின்ற வியலாங்கண்
முழவுத்தோண் முரட்பொருநர்க்
குருகெழு பெருஞ்சிறப்பி
னிருபெயர்ப் பேராயமொ
டிலங்கு மருப்பிற் களிறு கொடுத்தும்
பொலந்தாமரைப் பூச்சூட்டியு
நலஞ்சான்ற கலஞ்சிதறும்
பல்குட்டுவர் வெல்கோவே

---

82. பா. நாடாரக் கரைசேர நெடுங்கொடிமிசை நன்கிழிதரும்.

89. தெவ்வு கொள்ளுதலாகிய குறிப்புப்பொருளை உணர்த்துமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; (தொல். உரி. சூ. 49 - சே; ௸ ௸ ௸ 47 - ந; இ - வி. சூ. 290.) பா. நீர்தெவுநிரை.

90. பா. எத்தத்.

92. பா. கயனகைய.

89 - 93. கிழார் பூட்டைப்பொறி என்னும் பொருளில் வருமென்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்; (சிலப். 10: அடி 110 - அடியார்.)

94. பா. அதரிகொள்பவரிசை.

96. சிறுபாண். 148.

98. மதுரை. 328.

கல்காயுங் கடுவேனிலொ
டிருவானம் பெயலொளிப்பினும்
வரும்வைகன் மீன்பிறழினும்
வெள்ளமாறாது விளையுள் பெருக
நெல்லி னோதை யரிநர் கம்பலை
புள்ளிமிழ்ந் தொலிக்கு மிசையே யென்றுஞ்
சலம்புகன்று சுறவுக்கலித்த
புலவுநீர் வியன்பௌவத்து
நிலவுக் கானன் முழவுத் தாழைக்
குளிர்ப்பொதும்பர் நளித்தூவ
னிறைதிமில் வேட்டுவர் கரைசேர் கம்பலை
யிருங்கழிச் செறுவின் வெள்ளுப்புப் பகர்நரொ
டொலியோவாக் கலியாணர்
முதுவெள்ளிலை மீக்கூறும்
வியன்மேவல் விழுச்செல்வத்
திருவகையா னிசைசான்ற
சிறுகுடிப் பெருந்தொழுவர்
குடிகெழீஇய நானிலவரொடு
தொன்றுமொழிந்து தொழில்கேட்பக்
காலென்னக் கடிதுராஅய்
நாடுகெட வெரிபரப்பி
யாலங்கானத் தஞ்சுவரவிறுத்
தரசுபட வமருழக்கி
முரசுகொண்டு களம்வேட்ட
வடுதிறலுயர் புகழ்வேந்தே

115. பா. குளிர்ப்பொதும்பு.

124. மு: மதுரை. 72.

126. “முனையெரி பரப்பிய”, “ஊரெரி கவர வுருத்தெழுந் துறைஇப், போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப” (பதிற். 15, 71); “வாடுக விறைவநின் கண்ணி யொன்னார், நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே”, “பகைவ ரூர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக், கொள்ளை மேவலை”, “பெருந்தண்பணை பாழாக, வேம நன்னா டொள்ளெரி யூட்டினை” (புறநா. 6, 7, 16.)

127 - 9. மதுரை. 55 - 6 ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

129. “முரைசொடு வெண்குடை யகப்படுத் துரைசெலக், கொன்று களம் வேட்ட ஞான்றை” (அகநா. 36) முருகு. 99 - 100 கீழ்க்குறிப்பைப்பார்க்க.

நட்டவர் குடியுயர்க்குவை
செற்றவ ரரசுபெயர்க்குவை
பேருலகத்து மேஎந்தோன்றிச்
சீருடைய விழுச்சிறப்பின்
விளைந்துமுதிர்ந்த விழுமுத்தி
னிலங்குவளை யிருஞ்சேரிக்
கட்கொண்டிக் குடிப்பாக்கத்து
நற்கொற்கையோர் நசைப்பொருந
செற்ற தெவ்வர் கலங்கத் தலைச்சென்
றஞ்சுவரத் தட்கு மணங்குடைத் துப்பிற்
கோழூஉன்குறைக் கொழுவல்சிப்
புலவுவிற் பொலிகூவை
யொன்றுமொழி யொலியிருப்பிற்
றென்பரதவர் போரேறே
யரிய வெல்லா மெளிதி னிற்கொண்
டுரிய வெல்லா மோம்பாது வீசி
நணிபுகன் றுறைது மென்னு தேற்றெழுந்து
பணிவார் சிமையக் கானம் போகி
யகநாடு புக்கவ ரருப்பம் வௌவி

---

128 - 30. "அரசுபட வமருழக்கி, யுரைசெல முரசு வௌவி, முடித்தலை யடுப்பாகப், புனற்குருதி யுலைக்கொளீஇத், தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சியி, னடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய" (புறநா. 26.)

131 - 2. "நட்டாரை யாக்கிப் பகைதணித்து" (பழமொழி, 398.)

135. "முதிர்வா ரிப்பி முத்தம்" (புறநா. 53.)

135 - 8. "நகாஅ ரன்ன நளிநீர் முத்தம், வாள்வா யெருந்தின் வயிற்றகத் தடக்கித், தோள்புற மறைக்கு நல்கூர் நுசுப்பி, னுளரிய லைம்பா லுமட்டிய ரீன்ற, கிளர்பூட் புதல்வரொடு கிலுகிலி யாடுந், தத்துநீர் வரைப்பிற் கொற்கைக் கோமான்" (சிறுபாண். 57 - 62.)

137 - 8. பாக்கமென்பதற்கு அரசனிருப்பென்று பொருள்கூறி இவ்வடிகளை மேற்கோளாகக் காட்டினர்; (பதிற். 13 - உரை.)

140. பா. அஞ்சுவரக்கடக்கும்.

144. "தென்பரதவர் மிடல்சாய" (புறநா. 378.)

149. அகமென்பதற்குப் பொருள் மருதமென்பதற்கும் (சீவக. 1613-ந.), மதில் பெரும்பான்மையும் மருதத்திடத்ததென்பதற்கும் (தொல். புறத். சூ. 9 - ந.) இவ்வடி மேற்கோள்.

யாண்டுபல கழிய வேண்டுபுலத் திறுத்து
மேம்பட மரீஇய வெல்போர்க் குரிசி
லாறுசெறு நர் புலம்புக்கவர்
கடிகாவி னிலைதொலைச்சி
யிழிபறியாப் பெருந்தண்பணை
குரூஉக்கொடிய வெரிமேய
நாடெனும்பேர் காடாக
வாசேர்ந்தவழி மாசேப்ப
வூரிருந்தவழி பாழாக
விலங்குவளை மடமங்கையர்
துணங்கையஞ்சீர்த் தழூஉமறப்ப
வவையிருந்த பெரும்பொதியிற்
கவையடிக் கடுநோக்கத்துப்
பேய்மகளிர் பெயர்பாட
வணங்குவழங்கு மகலாங்க
ணிலத்தாற் றுங் குழூஉப்புதவி
னரந்தைப் பெண்டி ரினைந்தன ரகவக்
கொழும்பதிய குடிதேம்பிச்
செழுங்கேளிர் நிழல்சேர
நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளிக்
குடுமிக் கூகை குராலொடு முரலக்
கழுநீர் பொலிந்த கண்ணகன் பொய்கைக்
களிறுமாய் செருந்தியொடு கண்பமன் றூர்தர
நல்லேர் நடந்த நசைசால் விளைவயற்
பன்மயிர்ப் பிணவொடு கேழ லுகள
வாஅ ழாமையின் வழிதவக் கெட்டுப்
பாழா யினநின் பகைவர் தேஎ
மெழாஅத்தோ ளிமிழ்முழக்கின்
மாஅத்தா ளுயர்மருப்பிற்

---

150. "யாண்டுதலைப் பெயர வேண்டுபுலத் திறுத்து" (பதிற். 15.)

153. பா. கடிகாவு.

154 - 5. "பெருந்தண்பணை பாழாக, வேமநன்னா டொள்ளெரி யூட்டினை" (புறநா. 16.)

172. பா. சண்பமன்ற.

கடுஞ்சினத்த களிறுபரப்பி
விரிகடல் வியன்றானையொடு
முருகுறழத் தலைச்சென்
றகல்விசும்பி னார்ப்பிமிழப்
பெயலுறழக் கணைசிதறிப்
பலபுரவி நீறுகைப்ப
வளைநரல வயிரார்ப்பப்
பீடழியக் கடந்தட்டவர்
நாடழிய வெயில்வௌவிச்
சுற்றமொடு தூவறுத்தலிற்
செற்ற தெவ்வர் நின்வழி நடப்ப
வியன்கண் முதுபொழின் மண்டில முற்றி
யரசியல் பிழையா தறநெறி காட்டிப்
பெரியோர் சென்ற வடிவழிப் பிழையாது
குடமுதற் றோன்றிய தொன்றுதொழு பிறையின்
வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றங்
குணமுதற் றோன்றிய வாரிருண் மதியிற்
றேய்வன கெடுகநின் றெவ்வ ராக்க
முயர்நிலை யுலக மமிழ்தொடு பெறினும்
பொய்சே ணீங்கிய வாய்நட் பினையே
முழங்குகட லேணி மலர்தலை யுலகமொ
டுயர்ந்த தேஎத்து விழுமியோர் வரினும்
பகைவர்க் கஞ்சிப் பணிந்தொழு கலையே
தென்புல மருங்கின் விண்டு நிறைய

---

187. பா. நாடுகெடவெயில்.

194 மு: சிலப. 25: அடி 92.

193 - 6. "வளர்பிறை போல வழிவழி பெருகி" (குறுந். 289), "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசை வரிசையா நந்தும் - வரிசையால், வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே, தானே சிறியார் தொடர்பு" (நாலடி. தீவினை. 5); "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப் பின்னீர பேதையார் நட்பு" (குறள், 782).

195 - 6. "நீள்கதிர் அவிர்மதி நிறைவுபோ னிலையாது, நாளினு நெகிழ்போடு நலனுடை நிலையுமோ" (கலி. 17.) சிலப. 10 1 - 3 அடியார். மேற்.

201. பா. பகைவரஞ்சி.

202. புலமென்பதற்கு நிலமென்று பொருள்கூறி இவ்வடியை மேற்கோள்காட்டினர்; (சீவக. 28 - ந.)

வாணன் வைத்த விழுநிதி பெறினும்
பழிநமக் கெழுக வென்னாய் விழுநிதி
ஈத லுள்ளமொ டிசைவேட் குவையே
யன்னாய் நின்னொடு முன்னிலை யெவனோ
கொன்னொன்று கிளக்குவ லடுபோ ரண்ணல்
கேட்டிசின் வாழி கெடுகநின் னவலங்
கெடாது நிலைஇயர்நின் சேண்விளங்கு நல்லிசை
தவாப்பெருக்கத் தறாயாண
ரழித்தானாக் கொழுந்திற்றி
யிழித்தானாப் பலசொன்றி
யுண்டானாக் கூர்நறவிற்
றின்றானா வினவைக
னிலனெடுக் கல்லா வொண்பல் வெறுக்கைப்
பயனற வறியா வளங்கெழு திருநகர்
நரம்பின் முரலு நயம்வரு முரற்சி
விறலியர் வறுங்கைக் குறுந்தொடி செறிப்பப்
பாண ருவப்பக் களிறு பலதரீஇக்
கலந்தோ ருவப்ப வெயிற்பல கடைஇ
மறங்கலங்கத் தலைச்சென்று
வாளுழந்ததன் றாள்வாழ்த்தி
நாளீண்டிய நல்லகவர்க்குத்
தேரோடு மாசிதறிச்
சூடுற்ற சுடர்ப்பூவின்
பாடுபுலர்ந்த நறுஞ்சாந்தின்
விழுமிய பெரியோர் சுற்ற மாகக்
கள்ளி னிரும்பைக் கலஞ்செல வுண்டு
பணிந்தோர் தேஎந் தம்வழி நடப்பப்
பணியார் தேஎம் பணித்துத் திறைகொண்மார்
பருந்துபறக் கல்லாப் பார்வற் பாசறைப்

---

204. பா. பழிநமக்கொழுக. 208. பெரும்பாண். 38.
215. மலைபடு. 575; "நிலம்பொறுக் கலாத செம்பொ னீணிதி" (சீவக [402.
223 - 4. பு. வெ. பாடாண். 18 - ஆம் செய்யுளைப்பார்க்க.
224. கருத்து: சிறுபாண். 142.
231. "பருந்திருந் துகக்கும் பன்மா ணல்லில்" (மதுரை. 502) "பருந்துயிர்த், திடைமதிற் சேக்கும் புரிசை" (புறநா. 343); பார்வல்: "பார் வற் பாசறை" (பதிற். 84); "பார்வ லிருக்கை" (புறநா. 3.)

படுகண் முரசங் காலை யியம்ப
வெடிபடக் கடந்து வேண்டுபுலத் திறுத்த
பணைகெழு பெருந்திறற் பல்வேன் மன்னர்
கரைபொரு திரங்குங் கனையிரு முந்நீர்த்
திரையிடு மணலினும் பலரே யுரைசெல
மலர்தலை யுலக மாண்டுகழிந் தோரே
அதனால், குணகடல் கொண்டு குடகடன் முற்றி
யிரவு மெல்லையும் விளிவிட னறியா
தவலு மிசையு நீர்த்திரள் பீண்டிக்
கவலையங் குழும்பி னருவி யொலிப்பக்
கழைவளர் சாரற் களிற்றின நடுங்க
வரைமுத லிரங்கு மேறொடு வான்ஞெமிர்ந்து
சிதரற் பெரும்பெயல் சிறத்தலிற் றாங்காது
குணகடற் கிவர்தருங் குரூஉப்புன லுந்தி
நிவந்துசெ னீத்தங் குளங்கொளச் சாற்றிக்
களிறுமாய்க்குங் கதிர்க்கழனி
யொளிறிலஞ்சி யடைநிவந்த
முட்டாள சுடர்த்தாமரை
கட்கமழு நறுநெய்தல்
வள்ளித ழவிழ்நீல
மெல்லிலை யரியாம்பலொடு
வண்டிறை கொண்ட கமழ்பூம் பொய்கைக்

---

232. "தழங்குரன் முரசங் காலை யியம்ப" (ஐங்குறு. 448); "சோரி விற், காலை முரசங் கனைகுர லியம்பும்" (சிலப். 17.)

235. "கரைகொன் றிரங்குங் கடல்" (சீவக. 1063.)

235 - 7. "தொல்லுலகம் பிறவி யெண்ணிற் றொடுகடன் மணலு மாற்றா" (சீவக. 27(.)

244. பா. சிதரற்பெயல்கான் றழிதலிற்.

247. மாய்தல் மறைதலென்பதற்கு இவ்வடி மேற்கோள். (சிலப். 9 : 2 - அடியார்; சீவக. 453); "களிறுமாய் கழனி", "களிறுமாய் கதிர்ச் செநெற் கழனி" (சீவக. 54, 1617); "களிறு மாய்க்குஞ் செந்நெலங்குலை" (நைடதம். சுயம்வர. 138); "யானை மறையக் கதிர்த்தலைச் சாலிநீடி" (பிரபு. மாயையுற். 11); "களிறு மாய்ப்ப கதழ்ந்தெழு பூம்பயிர்" (தணிகை. நாட்டு. 114.)

248 - 9 "அடையிறந் தவிழ்ந்த வள்ளிதழ்த் தாமரை" (பரி. 13.)

249 - 53. முருகு. 73 - 6.

கம்புட் சேவ லின்றுயி லிரிய
வள்ளை நீக்கி வயமீன் முகந்து
கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்
வேழப் பழனத்து நூழி லாட்டுக்
கரும்பி னெந்திரங் கட்பி னோதை
யள்ளற் றங்கிய பகடுறு விழுமங்
கள்ளார் களமர் பெயர்க்கு மார்ப்பே
யொலிந்த பகன்றை விளைந்த கழனி
வன்கை வினைஞ ரரிப்பறை யின்குரற்
றளிமழை பொழியுந் தண்பரங் குன்றிற்
கலிகொள் சும்மை யொலிகொ ளாயந்
ததைந்த கோதை தாரொடு பொலியப்
புணர்ந்துட னாடு மிசையே யனைத்து
மகலிரு வானத் திமிழ்ந்தினி திசைப்பக்
குருகுநரல மனைமரத்தான்
மீன்சீவும் பாண்சேரியொடு
மருதஞ் சான்ற தண்பணை சுற்றி யொருசார்ச்
சிறுதினை கொய்யக் கவ்வை கறுப்பக்
கருங்கால் வரகி னிருங்குரல் புலர
வாழ்ந்த குழும்பிற் றிருமணி கிளர
வெழுந்த கடற்றி னன்பொன் கொழிப்பப்

---

255 - 7. நூழில் கொன்றுகுவித்தலென்னும் பொருளில் வருமெனபதற்கு இவ்வடிகள் மேற்கோள்; (தொல். புறத். 17. ந.)

259 - 60. "அள்ளற் பட்டுத் துள்ளுபு தரப்ப, நல்லெருது முயலு மளறு போகு விழுமத்து, சாகாட் டாளர் கம்பலை" (பதிற். 27 அடி 12 - 4); "ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கு, முரனுடை கோன்பகட் டன்ன வெங்கோன்", "அச்சொடு தாக்கிய பாருற் றியங்கிய, பண்டச் சாகாட் டாழ்ச்சி சொலிய, வரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும். பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ" (புறநா. 60, 90); "மடுத்தவா யெல்லாம் பகடன்னான்" (குறள். 624); "இரும்பாத நீரியாற் றிடுமணலு ளாழ்ந்து, பெரும்பார வாடவர்போல் ......... புல்லுண்ணு பொன்றும்" (சீவக. 2784); "குண்டுதுறை யிடுமணற் கோடுற வழுத்திய, பண்டிப் பாறை யேற்றும் பகட்டினைப்போல" (பெருங்கதை, பிடிவீழ்ந்தது, 53 - 4.)

263 - 4. கலி செருக்கினையுணர்த்துதற்கும் (தொல். உரி. 51. ந), அம்மை அரவமாகிய இசைப்பொருண்மையை உணர்த்துதற்கும் இவ்வடிகள் மேற்கோள்; (தொல். உரி. சூ. 51 - ந; இ - வி. சூ. 285 - 6.)

பெருங்கவின் பெற்ற சிறுதலை நௌவி
மடக்கட் பிணையொடு மறுகுவன வுகளச்
சுடர்ப்பூங் கொன்றை தாஅய நீழற்
பாஅ யன்ன பாறை யணிந்து
நீலத் தன்ன பைம்பயிர் மிசைதொறும்
வெள்ளி யன்ன வொள்வீ யுதிர்ந்து
சுரிமுகிழ் முசுண்டையொடு முல்லை தாஅய்
மணிமரு ணெய்த லுறழக் காமர்
துணிநீர் மெல்லவற் றொய்யிலொடு மலர
வல்லோன் றைஇய வெறிக்களங் கடுப்ப
முல்லை சான்ற புறவணிந் தொருசார்
நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய
குறுங்கதிர்த் தோரை நெடுங்கா லையவி
மைவன வெண்ணெலொ டரில்கொள்பு நீடி
யிஞ்சி மஞ்சட் பைங்கறி பிறவும்
பல்வேறு தாரமொடு கல்லகத் தீண்டித்
தினைவிளை சாரற் கிளிகடி பூசன்
மணிப்பூ வவரைக் குருஉத்தளிர் மேயு
மாமா கடியுங் கானவர் பூசல்
சேணோ னகழ்ந்த மடிவாய்ப் பயம்பின்
வீழ்முகக் கேழ லட்ட பூசல்
கருங்கால் வேங்கை யிருஞ்சினைப் பொங்கர்
நறும்பூக் கொய்யும் பூச லிருங்கே

---

275 - 6. முல்லை. 99; பட். 245.

278. "படுத்துவைத்தன்னபாறை" (மலைபடு. 15.)

279. "நீலத் தன்ன விதைப்புனம்" (மலைபடு. 102.)

281. "சுரிமுகிழ் முசுண்டை" (அகநா. 235.) பா. சுரிமுக.

282. "மணிக்கலத் தன்ன மாயிதழ் நெய்தல்" (பதிற். 30.)

279 - 84. "பல்விதழ் தாஅய், வெறிக்களங் கடுக்கும் வியலறை" (மலைபடு. 149 - 50.)

296 - 7. "தலைநாட் பூத்த பொன்னிணர் வேங்கை, மலைமா ரிடூஉ மேயப் பூசல்" (மலைபடு. 305 - 6); "ஒலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழிப், புலிபுலி யென்னும் பூச றோன்ற", "இளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப், பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமகளி, ரின்னா விசைய பூசல் பயிற்றலின்" (அகநா. 48, 52.)

297 - 8. பா. இருங்கேழலேறு.

ழேறடு வயப்புலிப் பூசலோ டனைத்து
யிலங்குவெள் ளருவியொடு சிலம்பகத் திரட்டக்
கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பணிந்
தருங்கடி மாமலை தழீஇ யொருசா
ரிருவெதிர்ப் பைந்தூறு கூரெரி நைப்ப
நிழத்த யானை மேய்புலம் படரக்
கலித்த வியவ ரியந்தொட் டன்ன
கண்விடு புடையூஉத் தட்டை கவினழிந்
தருவி யான்ற வணியின் மாமலை
வைகண் டன்ன புன்முளி யங்காட்டுக்
கமஞ்சூழ் கோடை விடரக முகந்து
காலுறு கடலி னொலிக்குஞ் சும்மை
யிலைவேய் குரம்பை யுழையதட் பள்ளி
யுவலைக் கண்ணி வன்சொ லிளைஞர்
சிலையுடைக் கையர் கவலை காப்ப
நிழலுரு விழந்த வேனிற்குன் றத்துப்
பாலை சான்ற சுரஞ்சேர்ந் தொருசார்
முழங்குகட றந்த விளங்குகதிர் முத்த
மரம்போழ்ந் தறுத்த கண்ணே ரிலங்குவளைப்
பரதர் தந்த பல்வேறு கூல
மிருங்கழிச் செறுவிற் றீம்புளி வெள்ளுப்புப்
பரந்தோங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்
கொழுமீன் குறைஇய துடிக்கட் டுணியல்
விழுமிய நாவாய் பெருநீ ரோச்சுநர்
நனந்தலைத் தேஎத்து நன்கல னுய்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொ டனைத்தும்
வைக றோறும் வழிவழிச் சிறப்ப
நெய்தல் சான்ற வளம்பல பயின்றாங்

300. தொல். அகத். சூ. 5 - ந. மேற்.

303. நிழத்தலென்பது நுணுக்கமாகிய குறிப்பை யுணர்த்துமென்றற்கு இவ்வடி மேற்கோள். (தொல். உரி. சூ. 31, 32. சே. ந; இ - வி. சூ. 281.)

310. உழையதட்பள்ளி: "மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி" (பெரும்பாண். 89.)

314. பாலைத்திணைக்கும் நிலமுண்டெனபதற்கு இவ்வடி மேற்கோள்; (நம்பி. சூ. 6 - உரை; இ - வி. சூ. 382.)

கைம்மாற் றிணையுங் கவினி யமைவர
முழவிமிழ் மகலாங்கண்
விழவுநின்ற வியன்மறுகிற்
றுணங்கையந் தழூஉவின் மணங்கமழ் சேரி
யின்கலி யாணர்க் குழூஉப்பல பயின்றாங்குப்
பாடல் சான்ற நன்னாட்டு நடுவட்
கலைதாய வுயர்சிமையத்து
மயிலகவு மலிபொங்கர்
மந்தி யாட மாவிசும் புகந்து
முழங்குகால் பொருத மரம்பயில் காவி
னியங்குபுனல் கொழித்த வெண்டலைக் குவவுமணற்
கான்பொழி றழீஇய வடைகரை தோறுந்
தாதுசூழ் கோங்கின் பூமலர் தாஅய்க்
கோதையி னொழுகும் விரிநீர் நல்வர
லவிரறல் வையைத் துறைதுறை தோறும்
பல்வேறு பூத்திரட் டண்டலை சுற்றி
யழுந்துபட் டிருந்த பெரும்பா ணிருக்கையு
நிலனும் வளனுங் கண்டமை கல்லா
விளங்குபெருந் திருவின் மான விறல்வே
ளழும்பி லன்ன நாடிழந் தனருங்
கொழும்பல் பதிய குடியிழந் தனருந்
தொன்றுகறுத் துறையுந் துப்புத்தர வந்த
வண்ணல் யானை யடுபோர் வேந்த
ரின்னிசை முரச மிடைப்புலத் தொழியப்

328. மதுரை. 98.

339 - 40. "கோதைபோற் கிடந்த கோதாவிரி" (கம்ப. ஆறுசெல். 27.)

342. "அழுந்துபட் டலமரும்" (மலைபடு. 219.)

341. மானவிறல்வேள் (மலைபடு. 161.) பா. வானவிறல்வேள்.

345. அழும்பில் —'பெரும்பூட் சென்னி, யழும்பி லன்ன வறுஅ யாணர்" (அகநா. 44); "அறைபறை யென்றே யழும்பில்வே ளுரைப்ப" (சிலப். 25 : 177.) பா. அழும்பி னன்ன.

349. (மதுரை. 129.) பகைவருடையமுரசை வெளவல்: "வேந்தரை, யணங்கரும் பறந்தலை யுணங்கப் பண்ணிப். பிணியுறு முரசங் கொண்ட காலை", "அரசுபட வமருழக்கி, யுரைசெல முரசுவெளவி", "சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை, யருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ, டொருங் ககப் படேஎ னாயின்", "மலைந்தோர், விசிபிணி முரசமொடு மண்பல தந்த ........ பாண்டியன்" (புறநா. 25, 26, 72, 179.)

பன்மா ணோட்டிப் பெயர்புறம் பெற்று
மண்ணுற வாழ்ந்த மணிநீர்க் கிடங்கின்
விண்ணுற வோங்கிய பல்படைப் புரிசைத்
தொல்வலி நிலைஇய வணங்குடை நெடுநிலை
நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்
மழையாடு மலையி னிவந்த மாடமொடு
வையை யன்ன வழக்குடை வாயில்
வகைபெற வெழுந்து வான மூழ்கிச்
சில்காற் றிசைக்கும் பல்புழை நல்லில்
யாறுகிடந் தன்ன வகனெடுந் தெருவிற்
பல்வேறு குழாஅத் திசையெழுந் தொலிப்ப
மாகா லெடுத்த முந்நீர் போல
முழங்கிசை நன்பணை யறைவனர் நுவலக்
கயங்குடைந் தன்ன வியங்கொட் டிமிழிசை
மகிழ்ந்தோ ராடுங் கலிகொள் சும்மை
யோவுக்கண் டன்ன விருபெரு நியமத்துச்
சாறயர்ந் தெடுத்த வுருவப் பல்கொடி
வேறுபல் பெயர வாரெயில் கொளக்கொள
நாடோ றெடுத்த நலம்பெறு புனைகொடி
நீரொலித் தன்ன நிலவுவேற் றானையொடு
புலவுப்படக் கொன்று மிடைதோ லோட்டிப்
புகழ்செய் தெடுத்த விறல்சா லன்கொடி

---

351. "மணிமரு டெண்ணீர்" (மலைபடு. 250.)

353-4. "புரைதீர்ந், தையவி யப்பிய நெய்யணி நெடுநிலை" (நெடுநல். 86), 'நெய்யோ டிமைக்கு மையவித் திரள்காழ், விளங்குநகர் விளங்க" (நற். 370.)

354. போர்க்கதவு : (பட். 40.)

355. மலைபுரைமாடத்த (மதுரை. 406)

358. பா சில்காற்றசைக்கும்.

359. மு. நெடுநல். 30; நற். 200; "யாறெனக் கிடந்த தெரு" (மலைபடு. 481); "நீத்தியாற் றன்ன நெடுங்கண் வீதி" (பெருங்கதை. 5. 7. 23.)

363. "குடைதொறுந், தெரியிமிழ் கொண்டநும் மியம்போ லின்னிசை" (மலைபடு. 295 - 6); "தண்ணுமை முழவ மொந்தை தகுணிச்சம் பிறவு மோசை, யெண்ணிய விரலோ டங்கை புறங்கையி னிசைய வாக்கித், திண் ணீரிற் றெறித்து, மோவார் கொட்டியுங் குடைந்து மாடி" (சீவக. 965.)

369 - 71. "வேண்டுபுலங் கவர்ந்த வீண்டுபெருந் தானையொடு, விசயம் வெல்கொடி யுயரி" (முல்லை. 90 - 91.)

கள்ளின் களிநவில் கொடியொடு நன்பல
பல்வேறு குழூஉக்கொடி பதாகை நிலைஇப்
பெருவரை மருங்கி னருவியி னுடங்கப்
பனிமீன் வழங்கும் வளைமேய் பரப்பின்
வீங்கு சோன்கயி றரீஇ யிதைபுடையூக்
கூம்புமுதன் முருங்க வெற்றிக் காய்ந்துடன்
கடுங்காற் றெடுப்பக் கல்பொரு துரைஇ
நெடுஞ்சுழிப் பட்ட நாவாய் போல
விருதலைப் பணில மார்ப்பச் சினஞ்சிறந்து
கோலோர்க் கொன்று மேலோர் வீசி
மென்பிணி வன்றொடர் பேணாது காழ்சாய்த்துக்
கந்துநீத் துழிதருங் கடாஅ யானையு
மங்கண் மால் விசும்பு புதைய வளிபோழ்ந்
தொண்கதிர் ஞாயிற் றூறளவாத் திரிதருஞ்
செங்கா லன்னத்துச் சேவ லன்ன
குரூஉமயிர்ப் புரவி யுராலிற் பரிசிமிர்ந்து
காலெனக் கடுக்குங் கவின்பெறு தேருங்
கொண்ட கோலன் கொள்கை நவிற்றலி
னடிபடு மண்டிலத் தாதி போகிய
கொடிபடு சுவல விடுமயிர்ப் புரவியும்
வேழத் தன்ன வெருவரு செலவிற்
கள்ளார் களம ரிருஞ்செரு மயக்கமு
மரியவும் பெரியவும் வருவன பெயர்தலிற்
றீம்புழல் வல்சிக் கழற்கான் மழவர்
பூந்தலை முழவி னோன்றலை கடுப்பப்
பிடகைப் பெய்த கமழ்நறும் பூவினர்
பலவகை விரித்த வெதிர்பூங் கோதையர்
பலர்தொகு பிடித்த தாதகு சுண்ணத்தர்
தகைசெய் தீஞ்சேற் றின்னீர்ப் பசுங்காய்

372. பெரும்பாண். 337 - ஆம் அடி உரையின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.
373 - 4. "வேறுபஃறுகிலி னுடங்கி ........ இழிதருமருவி" (முருகு. [296 - 316.)
376. பா. வீக்குபிணிசோன்கயிறு.
380 - 83. பொருந. 171 - 2 - ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.
385. பா. ஞாயிறுளவா.
398 - 9. "சாந்தினர் புகையினர் தயங்கு கோதையர், ........ இடித்த சுண்ணத்தர்" (சிலப். மங்கலவாழ்த்து.)
400. சீவக. 31 - ஆ, மேற்கோள்.

நீடுகொடி யிலையினர் கோடுசுடு நூற்றின
ரிருதலை வந்த பகைமுனை கடுப்ப
வின்னுயி ரஞ்சி யின்னா வெய்துயிர்த்
தேங்குவன ரிருந்தவை நீங்கிய பின்றைப்
பல்வேறு பண்ணியந் தழீஇத் திரி விலைஞர்
மலைபுரை மாடத்துக் கொழுநிழ லிருத்தர
விருங்கடல் வான்கோது புரைய வாருற்றுப்
பெரும்பின் னிட்ட வானரைக் கூந்தலர்
நன்னர் நலத்தர் தொன்முது பெண்டிர்
செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை
செல்சுடர்ப் பசுவெயிற் றோன்றி யன்ன
செய்யர் செயிர்த்த நோக்கினர் மடக்
ணைஇய கலுழு மாமையர் வைவெயிற்று
வார்ந்த வாயர் வணங்கிறைப் பணைத்தோட்
சோர்ந்துகு வன்ன வயக்குறு வந்திகைத்
தொய்யில் பொறித்த சுணங்கெதி ரிளமுலை
மையுக் கன்ன மொய்யிருங் கூந்தன்
மயிலிய லோரு மடமொழி யோருங்
கைஇ மெல்லிதி னொதுங்கிக் கையெறிந்து
கல்லா மாந்தரொடு நகுவனர் திளைப்பப்
புடையமை பொலிந்த வகையமை செப்பிற்
காம ருருவிற் றாம்வேண்டும் பண்ணியங்
கமழ்நறும் பூவொடு மனைமனை மறுக
மழைகொளக் குறையாது புனல்புக மிகாது
கரைபொரு திரங்கு முந்நீர் போலக்
கொளக்கொளக் குறையாது தரத்தர மிகாது
கழுநீர் கொண்ட வெழுநா ளந்தி
யாடுதுவன்று விழவி னாடார்த் தன்றே
மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூட
னாளங் காடி நனந்தலைக் கம்பலை
வெயிற்கதிர் மழுங்கிய படர்கூர் ஞாயிற்றுச்

---

406 - 7. "வலம்புரி புரையும் வானரை முடியினர்" (முருகு. 127.)
410. "செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த" (புறநா. 9 அடி 9.)
411. சிலப். 4: 5 - 8. அடியார். மேற்.
419. பா. கைஇமெல்லிதின்.

செக்க ரன்ன சிவந்துநுணங் குருவிற்
கண்பொரு புகூஉ மொண்பூங் கலிங்கம்
பொன்புனை வாளொடு பொலியக் கட்டித்
திண்டேர்ப் பிரம்பிற் புரளுந் தானைக்
கச்சந் தின்ற கழறயங்கு திருந்தடி
மொய்ம்பிறந்து திரிதரு மொருபெருந் தெரியன்
மணிதொடர்ந் தன்ன வொண்பூங் கோதை
யணிகிளர் மார்பி னாரமொ டளைஇக்
காலியற் கன்ன கதழ்பரி கடைஇக்
காலோர் காப்பக் காலெனக் கழியும்
வான வண்கை வளங்கெழு செல்வர்
நாண்மகி ழிருக்கை காண்மார் பூணொடு
தெள்ளரிப் பொற்சிலம் பொலிப்ப வொள்ளழற்
றாவுற விளங்கிய வாய்பொ னவிரிழை
யணங்குவீழ் வன்ன பூந்தொடி மகளிர்
மணங்கமழ் நாற்றந் தெருவுடன் கமழ
வொண்குழை திகழு மொளிகெழு திருமுகந்
திண்கா ழேற்ற வியலிரு விலோதந்
தெண்கடற் றிரையி னசைவளி புடைப்ப
நிரைநிலை மாடத் தரமியந் தோறு
மழைமாய் மதியிற் றோன்றுபு மறைய
நீரு நிலனுந் தீயும் வளியு
மாக விசும்போ டைந்துட னியற்றிய
மழுவா ணெடியோன் றலைவ னாக
மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
வாடாப் பூவி னிமையா நாட்டத்து
நாற்ற வுணவி னுருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபி னுயர்பலி கொடுமா
ரந்தி விழவிற் றூரியங் கறங்கத்
திண்கதிர் மதாணி யொண்குறு மாக்களை
யோம்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்
தாதணி தாமரைப் போதுபிடித் தாங்கு

448. பா. குழையிருந்தவொளிகெழு
456. "மாசற விமைக்கு முருவினர்" (புறநா. 128.)
461 - 3. குழந்தைகளுக்குத் தாமரைப்போது: "நீரு, ளடைமறை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட, குடைநிழற் றோன்றுமின் செம்மலை" (கலி. 84); "பொய்கையுண் மலரென வளர்ந்து" (சீவக. 2756.)

தாமு மவரு மோராங்கு விளங்கக்
காமர் கவினிய பேரிளம் பெண்டிர்
பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்
சிறந்துபுறங் காக்குங் கடவுட் பள்ளியுஞ்
சிறந்த வேதம் விளங்கப் பாடி
விழுச்சீ ரெய்திய வொழுக்கமொடு புணர்ந்து
நிலமமர் வையத் தொருதா மாகி
யுயர்நிலை யுலக மிவணின் றெய்து
மறநெறி பிழையா வன்புடை நெஞ்சிற்
பெரியோர் மேஎ யினிதி னுறைபுங்
குன்றுகுயின் றன்ன வந்தணர் பள்ளியும்
வண்டுபடப் பழுநிய தேனார் தோற்றத்துப்
பூவும் புகையுஞ் சாவகர் பழிச்சச்
சென்ற காலமும் வரூஉ மமயமு
மின்றிவட் டோன்றிய வொழுக்கமொடு நன்குணர்ந்து
வானமு நிலனுந் தாமுழு துணருஞ்
சான்ற கொள்கைச் சாயா யாக்கை
யான்றடங் கறிஞர் செறிந்தனர் நோன்மார்
கல்பொளிந் தன்ன விட்டுவாய்க் கரண்டைப்
பல்புரிச் சிமிலி நாற்றி நல்குவரக்
கயங்கண் டன்ன வயங்குடை நகரத்துச்
செம்பியன் றன்ன செஞ்சுவர் புனைந்து
நோக்குவிசை தவிர்ப்ப மேக்குயர்ந் தோங்கி
யிறும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கையுங்
குன்றுபல குழீஇப் பொலிவன தோன்ற

---

470. பா. ஒருதிறமாகி.

455 - 74. “நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலு, முவணச் சேவ லுயர்த்தோ னியமமு, மேழிவல னுயர்த்த வெள்ளை நகரமுங், கோழிச் சேவற் கொடியோன் கோட்டமு, மறத்துறை விளங்கிய வறவோர் பள்ளியும்” (சிலப். 14 : 7 - 11); “நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப், பதிவாழ் சதுக்கத் துத் தெய்வமீ றாக” (மணி. 1 : 54 - 5.)

485. “செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்” (நெடுநல். 112); “செம்புறழ் புரிசை” (அகநா. 375); செம்புறழ் புரிசை”, “செம்புபுனைந் தியற்றிய சேணெடும் புரிசை” (புறநா. 37, 201); “செம்பைச்சேரிஞ்சி” (தே. பிரம. ஞான.)

வச்சமு மவலமு மார்வமு நீக்கிச்
செற்றமு முவகையுஞ் செய்யாது காத்து
ஞெமன்கோ லன்ன செம்மைத் தாகிச்
சிறந்த கொள்கை யறங்கூ றவையமு
நறுஞ்சாந்து நீவிய கேழ்கிள ரகலத்
தாவுதி மண்ணி யவிர்துகின் முடித்து
மாசிசும்பு வழங்கும் பெரியோர் போல
நன்றுந் தீதுங் கண்டாய்ந் தடக்கி
யன்பு மறனு மொழியாது காத்துப்
பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்களு
மறநெறி பிழையா தாற்றி னொழுகிக்
குறும்பல் குழுவிற் குன்றுகண் டன்ன
பருந்திருந் துகக்கும் பன்மா ணல்லிற்
பல்வேறு பண்டமோ டூண்மலிந்து கவினி
மலையவு நிலத்தவு நீரவும் பிறவும்
பல்வேறு திருமணி முத்தமொடு பொன்கொண்டு
சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரு
மழையொழுக் கறாஅப் பிழையா விளையுட்
பழையன் மோகூ ரவையகம் விளங்க
நான்மொழிக் கோசர் தோன்றி யன்ன
தாமேஎந் தோன்றிய நாற்பெருங் குழுவுங்
கோடுபோழ் கடைநருந் திருமணி குயினருஞ்
சூடுறு நன்பொன் சுடரிழை புனைநரும்
பொன்னுரை காண்மருங் கலிங்கம் பகர்நருஞ்
செம்புநிறை கொண்மரும் வம்புநிறை முடிநரும்
பூவும் புகையு மாயு மாக்களு

489 - 92. "காய்த லுவத்த லகற்றி யொருபொருட்கண், ணாய்த லறிவுடையார் கண்ணதே - காய்வதன்க, ணுற்றகுணந் தோன்றா தாகு முவப்ப தன்கட், குற்றமுந் தோன்றா கெடும்" (அறநெறி. 22.)

493. கெழுவென்னும் உரிச்சொல் நிறப்பண்பை உணர்த்துமென்பதற்கு இவ்வடி மேற்கோள். (தொல். உரி. சூ. 5 - ந; இ - வி. சூ. 283.)

494. மண்ணுதல் என்பதற்குப் பண்ணுதல் எனப் பொருள்கூறி இவ்வடியை மேற்கோளாகக்காட்டினர்; (சீவக. 202, 735, 1808.)

502. இந்நூல் 231 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

மெவ்வகைச் செய்தியு முவமங் காட்டி
நுண்ணிதி னுணர்ந்த நுழைந்த நோக்கிற்
கண்ணுள் வினைஞரும் பிறருங் கூடித்
தெண்டிரை யவிரறல் கடுப்ப வொண்பல்
குறியவு நெடியவு மடிதரூஉ விரித்துச்
சிறியரும் பெரியருங் கம்மியர் குழீஇ
நால்வேறு தெருவினுங் காலுற நிற்றரக்
கொடும்பறைக் கோடியர் கடும்புடன் வாழ்த்துந்
தண்கட ணாட னொண்பூங் கோதை
பெருநா ளிருக்கை விழுமியோர் குழீஇ
விழைவுகொள் கம்பலை கடுப்பப் பலவுடன்
சேறு நாற்றமும் பலவின் சுளையும்
வேறுபடக் கவினிய தேமாங் கனியும்
பல்வே றுருவிற் காயும் பழனுங்
கொண்டல் வளர்ப்பக் கொடிவிடுபு கவினி
மென்பிணி யவிழ்ந்த குறுமுறி யடகு
மமிர்தியன் றன்ன தீஞ்சேற்றுக் கடிகையும்
புகழ்படப் பண்ணிய பேருன் சோறுங்
கீழ்செல வீழ்ந்த கிழங்கொடு பிறவு
மின்சோறு தருநர் பல்வயி னுகர
வாலிதை யெடுத்த வளிதரு வங்கம்
பல்வேறு பண்ட மிழிதரும் பட்டினத்
தொல்லெ னிமிழிசை மானக் கல்லென
நனந்தலை வினைஞர் கலங்கொண்டு மறுகப்
பெருங்கடற் குட்டத்துப் புலவுத்திரை யோத
மிருங்கழி மருவிப் பாயப் பெரிதெழுந்
துருகெழு பானாள் வருவன பெயர்தலிற்
பல்வேறு புள்ளி னிசையெழுந் தற்றே
யல்லங் காடி யழிதரு கம்பலை
யொண்சுட ருருப்பொளி மழுங்கச் சினந்தணிந்து
சென்ற ஞாயிறு நண்பகற் கொண்டு

---

516. பா. எண்வகைச்செய்தியும்.

524. பா. தெண்கடணாடன்.

531. பா. குறுமுறியடகும்.

குடமுதற் குன்றஞ் சேரக் குணமுதல்
நாண்முதிர் மதியந் தோன்றி நிலாவிரிபு
பகலுரு வுற்ற விரவுவர நயந்தோர்
காத லின்றுணை புணர்மா ராயிதழ்த்
தண்ணறுங் கழுநீர் துணைப்ப விழைபுனையூஉ
நன்னெடுங் கூந்த னறுவிரை குடைய
நரந்த மரைப்ப நறுஞ்சாந்து மறுக
மென்னூற் கலிங்கங் கமழ்புகை மடுப்பப்
பெண்மகிழ் வுற்ற பிணைநோக் கமகளிர்
நெடுஞ்சுடர் விளக்கங் கொளீஇ நெடுநக
ரெல்லை யெல்லா நோயொடு புகுந்து
கல்லென் மாலை நீங்க நாணுக்கொள
வேழ்புணர் சிறப்பி னின்றொடைச் சீறியாழ்
தாழ்பெயற் கனைகுரல் கடுப்பப் பண்ணுப்பெயர்த்து
வீழ்துணை தழீஇ வியல்விசும்பு கமழ
நீர்திரண் டன்ன கோதை பிறக்கிட்
டாய்கோ லவிர்தொடி விளங்க வீசிப்
போதவிழ் புதுமலர் தெருவுடன் கமழ
மேதகு தகைய மிகுநல மெய்திப்
பெரும்பல் குவளைச் சுரும்படு பன்மலர்
திறந்துமோந் தன்ன சிறந்துகமழ் நாற்றத்துக்
கொண்டன் மலர்ப்புதன் மானப் பூவேய்ந்து
நுண்பூ ணாகம் வடுக்கொள முயங்கி
மாயப் பொய்பல கூட்டிக் கவவுக்கரந்து
சேயரு நணியரு நலனயந்து வந்த
விளம்பல் செல்வர் வளந்தப வாங்கி
நுண்டா துண்டு வறும்பூத் துறக்கு
மென்சிறை வண்டின மானப் புணர்ந்தோர்
நெஞ்சே மாப்ப வின்றுயி றுறந்து

560. "இருமழை தலைஇய விருணிற விசும்பின், விண்ணதி ரிமிழிசை கடுப்பப் பண்ணமைத்து" (மலைபடு. 1 - 2; தொல். புள்ளி. சூ 11. ந. மேற்.) பா. தாழ்பயல்.

562. "மார்விற்றார்கோலிமழை" (பு - வெ பாடாண். 16.)

572 - 5. "நறுந்தா துண்டு நயனில் காலை, வறும்பூத் துறக்கும் வண்டு போல்குவம்", "பயன்பல வாங்கி வண்டிற் றுறக்குங், கொண்டி மகளிரை" (மணி. 18 : 19 - 20, 108 - 9.)

பழந்தேர் வாழ்க்கைப் பறவை போலக்
கொழுங்குடிச் செல்வரும் பிறரு மேஎய
மணம்புணர்ந் தோங்கிய வணங்குடை நல்லி
லாய்பொன் னவிர்தொடிப் பாசிழை மகளி
ரொண்சுடர் விளக்கத்துப் பலருடன் றுவன்றி
நீனிற விசும்பி லமர்ந்தன ராடும்
வானவ மகளிர் மானக் கண்டோர்
நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்
யாம நல்யாழ் நாப்ப ணின்ற
முழவின் மகிழ்ந்தன ராடிக் குண்டுநீர்ப்
பனித்துறைக் குவவுமணன் முனைஇ மென்றளிர்க்
கொழுங்கொம்பு கொழுதி நீர்நனை மேவர
நெடுந்தொடர்க் குவளை வடிம்புற வடைச்சி
மணங்கமழ் மனைதொறும் பொய்தல யரக்
கணங்கொ ளவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய வோண நன்னாட்
கோணந் தின்ற வடுவாழ் முகத்த
சாணந் தின்ற சமந்தாங்கு தடக்கை
மறங்கொள் சேரி மாறுபொரு செருவின்
மாறா துற்ற வடுப்படு நெற்றிச்
சுரும்பார் கண்ணிப் பெரும்புகன் மறவர்
கடுங்களி றோட்டலிற் காணுந ரிட்ட
நெடுங்கரைக் காழக நிலம்பா வுறுப்பக்
கடுங்கட் டேறன் மகிழ்சிறந்து திரிதரக்
கணவ ருவப்பப் புதல்வர்ப் பயந்து
பணைத்தேந் திளமுலை யமுத மூறப்
புலவுப்புனி றீர்ந்து பொலிந்த சுற்றமொடு
வளமனை மகளிர் குளநீ ரயரத்

---

576. பொருந. 64 - ஆம் அடியின் கீழ்க் குறிப்பைப்பார்க்க. "வள்ளி யோர்ப்படர்ந்துபுள்ளிற்போகி" (புறநா. 47.)

584. யாமநல்யாழ் : "விரல்கவர்ந் துழந்த கவர்வி னல்யாழ், யாமமுய யாமை" (நற். 335 ; பரி. 14.) "யாமயாழ் மழலையாள்" (கம்ப. நாடவிட்ட. 31)

602 - 3. "புதல்வரைப் பயந்த புனிறுதீர் கயக்கச், தீர்கிளை மகளிர் குளனா டாவும்" (மணி. 7 : 75 - 6 - ஆம் அடிகளையும் அவற்றின்குறிப் பையும் பார்க்க.)

இலவுமெய்ந் திறுத்துச் செவ்வழி பண்ணிக்
குரல்புணர் நல்யாழ் முழவொ டொன்றி
நுண்ணீ ராகுளி யிரட்டப் பலவுட
னொண்சுடர் விளக்க முந்துற மடையொடு
நன்மா மயிலின் மென்மெல வியலிக்
கடுஞ்சூன் மகளிர் பேணிக் கைதொழுது
பெருந்தோட் சாலினி மடுப்ப வொருசா
ரருங்கடி வேலன் முருகொடு வளைஇ
யரிக்கூ டின்னியங் கறங்கநேர் நிறுத்துக்
கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்
சீர்மிகு நெடுவேட் பேணித் தழூஉப்பிணையூஉ
மன்றுதொறு நின்ற குரவை சேரிதொறு
முரையும் பாட்டு மாட்டும் விரைஇ
வேறுவேறு கம்பலை வெறிகொள்பு மயங்கிப்
பேரிசை நன்னன் பெறும்பெயர் நன்னாட்
சேரி விழவி னார்ப்பெழுந் தாங்கு
முந்தை யாமஞ் சென்ற பின்றைப்
பணிலங் கலியவிந் தடங்கக் காழ்சாய்த்து
நொடைநவி னெடுங்கடை யடைத்து மடமத
ரொள்ளிழை மகளிர் பள்ளி யயர
நல்வரி யிறாஅல் புரையு மெல்லடை
யயிருருப் புற்ற வாடமை விசயங்
கவவொடு பிடித்த வகையமை மோதகந்
தீஞ்சேற்றுக் கூவியர் தூங்குவன ருறங்க
விழவி னாடும் வயிரியர் மடியப்
பாடான் றவிந்த பனிக்கடல் புரையப்
பாயல் வளர்வோர் கண்ணினிது மடுப்பப்
பானாட் கொண்ட கங்கு லிடையது
பேயு மணங்கு முருவுகொண் டாய்கோற்

---

604. புறநா. 149 - ஆம் பாடல் பார்க்க.
605 - 6 "நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கி" (புறநா. 64.)
608. முருகு. 205 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.
618. பா. பெரும்பெயர்.
624. அடைக்கு இறால்: "தேனி றாலன தீஞ்சுவை யின்னடை" (சீவக. 2674.)

கூற்றக் கொலைறேர் கழுதொடு கொட்ப
விரும்பிடி மேனந்தோ லன்ன விருள்சேர்பு
கல்லு மரனுந் துணிக்குங் கூர்மைத்
தொடலை வாளர் தொடுதோ லடியர்
குறங்கிடைப் பதித்த கூர்நுனைக் குறும்பிடிச்
சிறந்த கருமை நுண்வினை நுணங்கற
னிறங்கவர்பு புனைந்த நீலக் கச்சினர்
மென்னூ லேணிப் பன்மாண் சுற்றினர்
நிலனக ழுளியர் கலனசைஇக் கொட்குங்
கண்மா றாடவ ரொடுக்க மொற்றி
வயக்களிறு பார்க்கும் வயப்புலி போலத்
துஞ்சாக் கண்ண ரஞ்சாக் கொள்கைய
ரறிந்தோர் புகழ்ந்த வாண்மையர் செறிந்த
நூல்வழிப் பிழையா நுணங்குநுண் டேர்ச்சி
யூர்காப் பாள ரூக்கருங் கணையினர்
தேர்வழங்கு தெருவி னீர்திரண் டொழுக
மழையமைந் துற்ற வரைநா ளமயமு
மசைவில ரெழுந்து நயம்வந்து வழங்கலிற்
கடவுள் வழங்குங் கையறு கங்குலு
மச்ச மறியா தேம மாகிய
மற்றை யாமம் பகலுறக் கழிப்பிப்
போதுபிணி விட்ட கமழ்நறும் பொய்கைத்
தாதுண் டும்பி போது முரன்றாங்
கோத லந்தணர் வேதம் பாடச்
சீரினிது கொண்டு நரம்பினி தியக்கி

635 - 6. "குன்று துகளாக்குங் கூர்ங்கணையான்" என்பது பாடம்; (தொல். புறத். சூ 21 - ந. மேற்); 'வேறிரண் டனவும் வில்லு மிடைந்தவும வெற்பென் றுலுங், கூறிரண் டாக்கும் வாட்கைக் குழுவையுங் குணிக்க லாற் றேம்" (கம்ப சுந்தர. பாச. 6.)

639 - 42. "நிலனக ழுளிய னீலத் தானையன், கலனசை வேட்கையிற் கடும்புலி போன்று" (சிலப். 16 : 204 - 5 அடியார். மேற்.)

653. பகலென்பதற்கு, அரையாமம் எனப் பொருள்கொண்டு இவ்வடி யை மேற்கோள் காட்டினர்; (சிலப். 4 : 81 - அரும்பத. அடியார்.)

655. சீவக. 893 - ந. மேற்.

யாமோர் மருதம் பண்ணக் காமோர்
கடுங்களிறு கவளங் கைப்ப நெடுந்தேர்ப்
பணைநிலைப் புரவி புல்லுணாத் தெவிட்டப்
பல்வேறு பண்ணியக் கடைமெழுக் குறுப்பக்
கள்ளோர் களிநொடை நுவல வில்லோர்
நயந்த காதலர் கவவுப்பிணித் துஞ்சிப்
புலர்ந்துவிரி விடிய லெய்த விரும்பிக்
கண்பொரா வெறிக்கு மின்னுக்கொடி புரைய
வொண்பொ னவிரிழை தெழிப்ப வியலித்
திண்சுவர் நல்லிற் கதவங் கரைய
வுண்டுமகிழ் தட்ட மழலை நாவிற்
பழஞ்செருக் காளர் தழங்குரல் றோன்றச்
சூதர் வாழ்த்த மாகதர் நுவல
வேதா ளிகரொடு நாழிகை யிசைப்ப
விமிழ்முர சிரங்க வேறுமாறு சிலைப்பப்
பொறிமயிர் வாரணம் வைகறை யியம்ப
யானையங் குருகின் சேவலொடு காம
ரன்னங் கரைய வணிமயி லகவப்
பிடிபுணர் பெருங்களிறு முழங்க முழுவலிக்
கூட்டுறை வயமாப் புலியொடு குழும
வான நீங்கிய நீனிற விசும்பின்
மின்னுநிமிர்ந் தன்ன ராகி நறவுமகிழ்ந்து
மாணிழை மகளிர் புலந்தனர் பரிந்த
பரூஉக்கா ழாரஞ் சொரிந்த முத்தமொடு
பொன்சுடு நெருப்பி னிலமுந் நென்ன
வம்மென் குறும்பைக் காப்புடைப் பிறவுந்

658. புறநா. 119 - ஆம் பாடல் பார்க்க.

659. "கல்லா விளைஞர் கவளங் கைப்ப" (முல்லை 36.)

666. பா. தெளிர்ப்பவியலி. 670. பா. சூதரேத்த.

671. பா. வேதாளியர்

670 - 71. சிலப். 5 : 10. அடியார் மேற்.

673 - 4. 'யானைபங் குருகின் கானலம் பெருந்தோடு" (குறுந். 34); "களிமயில், குஞ்சரக் குரல குருகொ டாலும்" (அகநா 145); "கீசுகீசென் றெங்குமானைச்சாத்தங்கலந்து" (திருப்பாவை. 7.)

678. நீனிறவிசும்பு: (மதுரை. 581.)

தருமணன் முற்றத் தரிஞிமி றார்ப்ப
மென்பூஞ் செம்மலொடு நன்கலஞ் சீப்ப
விரவுத்தலைப் பெயரு மேம வைகறை
மைபடு பெருந்தோண் மழவ ரோட்டி
யிடைப்புலத் தொழிந்த வேந்துகோட் டியானை
பகைப்புலங் கவர்ந்த பாய்பரிப் புரவி
வேல்கோ லாக வாள்செல நூறிக்
காய்சின முன்பிற் கடுங்கட் கூளிய
ரூர்சுடு விளக்கிற் றந்த வாயமு
நாடுடை நல்லெயி லணங்குடைத் தோட்டி
நாடொறும் விளங்கக் கைதொழூஉப் பழிச்சி
நாடா வந்த விழுக்கல மனைத்துங்
கங்கையம் பேரியாறு கடற்படர்ந் தாஅங்
களந்துகடை யறியா வளங்கெழு தாரமொடு
புத்தே ளுலகங் கவினிக் காண்வர
மிக்குப்புக ழெய்திய பெரும்பெயர் மதுரைச்
சினைதலை மணந்த சுரும்புபடு செந்நீ
யொண்பூம் பிண்டி யவிழ்ந்த காவிற்
சுடர்பொழிந் தேறிய விளங்குகதிர் ஞாயிற்
றிலங்குகதி ரிளவெயிற் றோன்றி யன்ன
தமனியம் வளைஇய தாவில் விளங்கிழை
நிலம்விளக் குறுப்ப மேதகப் பொலிந்து
மயிலோ ரன்ன சாயன் மாவின்
தளிரே ரன்ன மேனித் தளிர்ப்புறத்
தீர்க்கி னரும்பிய திதலையர் கூரெயிற்
றொண்குழை புணரிய வண்டாழ் காதிற்
கடவுட்கயத் தமன்ற சுடரிதழ்த் தாமரைத்
தாதுபடும் பெரும்போது புரையும் வாண்முகத்
தாழ்தொடி மகளிர் நறுந்தோள் புணர்ந்து
கோதையிற் பொலிந்த சேக்கைத் துஞ்சித்
திருந்துதுயி லெடுப்ப வினிதி னெழுந்து

695 - 7. மலைபடு. 526 - 9.

706. பா. மயிலோடன்ன.

707 - 9. “சன்றவ டிதலைபோ லீர்பெய்யுந் தளிரொடு” (கலி. 32.)

திண்கா ழார நீவிக் கதிர்விடு
மொண்கா ழாரங் கவைஇய மார்பின்
வரிக்கடைப் பிரச மூசுவன மொய்ப்ப
வெருத்தந் தாழ்ந்த விரவுப்பூந் தெரியற்
பொலஞ்செயப் பொலிந்த நலம்பெறு விளக்கம்
வலிகெழு தடக்கைத் தொடியொடு சுடர்வரச்
சோறமை வுற்ற நீருடைக் கலிங்க
முடையணி பொலியக் குறைவின்று கவைஇ
வல்லோன் றைஇய வரிப்புனை பாவை
முருகியன் றன்ன வுருவினை யாகி
வருபுனற் கற்சிறை கடுப்ப விடையறுத்
தொன்னா ரோட்டிய செருப்புகன் மறவர்
வாள்வலம் புணர்ந்தநின் றாள்வலம் வாழ்த்த
வில்லைக் கவைஇக் கணைதாங்கு மார்பின்
மாதாங் கெறுழ்த்தோண் மறவர்த் தம்மின்
கல்லிடித் தியற்றிய விட்டுவாய்க் கிடங்கி
னல்லெயி லுழந்த செல்வர்த் தம்மின்
கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த
மாக்கண் முரச மோவில கறங்க
வெரிநிமிர்ந் தன்ன தானை நாப்பட்
பெருநல் யானை போர்க்களத் தொழிய
விழுமிய வீழ்ந்த குரிசிலர்த் தம்மின்
புரையோர்க்குத் தொடுத்த பொலம்பூந் தும்பை
நீர்யா ரென்னாது முறைகருதுபு சூட்டிக்
காழ்மண் டெஃகமொடு கணையலைக் கலங்கிப்
பிரிபிணை யரிந்த நிறஞ்சிதை கவயத்து

---

715-6. "இருபே ராரமு மெழில்பெற வணியுந், திருவீழ் மார்பிற் றென்னவர்." (அகநா. 13.)

727. பா. தாள்வலம்பழிச்ச.

726-7. சிறுபாண். 211-2

731. கலி. 92; சீவக. 906-ந மேற்.

732-3. "ஓடாநல் லேற்றுரிவை தைஇய, பாடுகொண் முரசம்" (அகநா. 334); "வாளுங் குடையு மயிர்க்கண் முரசம்" (சிலப். 5 · 91.)

734. பா. (க) எரிபரந்தன்ன (உ) எரிநிகழ்ந்தன்ன.

வானத் தன்ன வளநகர் பொற்ப
நோன்குறட் டன்ன வூன்சாய் மார்பி
னுயர்ந்த வுதவி யூக்கலர்த் தம்மி
னிவந்த யானைக் கணநிரை கவர்ந்த
புலர்ந்த சாந்தின் விரவுப்பூந் தெரியற்
பெருஞ்செ யாடவர்த் தம்மின் பிறரும்
யாவரும் வருக வேனோருந் தம்மென
வரையா வாயிற் செறாஅ திருந்து
பாணர் வருக பாட்டியர் வருக
யாணர்ப் புலவரொடு வயிரியர் வருகென
விருங்கிளை புரக்கு மிரவலர்க் கெல்லாங்
கொடிஞ்சி நெடுந்தேர் களிற்றொடும் வீசிக்
களந்தோறுங் கள்ளரிப்ப
மரந்தோறு மைவீழ்ப்ப
நிணவூன்சுட் டுருக்கமைய
நெய்கனிந்து வறையார்ப்பக்
குருஉக்குய்ப் புகை மழைமங்குலிற்
பரந்துதோன்றா வியனகரால்
பல்சாலை முதுகுடுமியி
னல்வேள்வித் துறைபோகிய
தொல்லாணை நல்லாசிரியர்
புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பி
னிலந்தரு திருவி னெடியோன் போல
வியப்புஞ் சால்புஞ் செம்மை சான்றோர்
பலர்வாய்ப் புகரறு சிறப்பிற் றோன்றி
யரியதந்து குடியகற்றிப்
பெரியகற் றிசைவிளக்கி
முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும்

---

742. "எஃகா ணவை கடுப்பமெய் சிதைந்து" (பதிற். 67 17.)

747. பொருந. 101 - அடி மேற்.

760. "பரந்தகேள்வித் துறைபோய பைந்தார் மார்பன" (சீவக. 717)

760 - 761. பட். 169 - 170.

763. "நிலந்தரு திருவிற் பாண்டியன்" (தொல். பாயிரம்.)

பன்மீ னடுவட் டிங்கள் போலவும்
பூத்த சுற்றமொடு பொலிந்தினிது விளங்கிப்
பொய்யா நல்லிசை நிறுத்த புனைதார்ப்
பெரும்பெயர் மாறன் றலைவ னாகக்
கடந்தடு வாய்வா ளிளம்பல் கோச
ரியனெறி மரபினின் வாய்மொழி கேட்பப்
பொலம்பூ ணைவ ருட்படப் புகழ்ந்த
மறமிகு சிறப்பிற் குறுநில மன்ன
ரவரும் பிறருந் துவன்றிப்
பொற்புவிளங்கு புகழவை நிற்புகழ்ந் தேத்த
விலங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
மணங்கமழ் தேறன் மடுப்ப நாளு
மகிழ்ந்தினி துறைமதி பெரும
வரைந்துநீ பெற்ற நல்லூ ழியையே.

## இதன்பொருள்.

இப்பாட்டிற்கு மாங்குடிமருதனார் மதுரைக்காஞ்சியென்று மதுரைப்பெயரானன்றித் திணைப்பெயராற் பெயர்கூறினார். இத்திணைப்பெயர் பன்னிருபடல முதலிய நூல்களாற்கூறிய திணைப்பெயரன்று; தொல்காப்பியனார்கூறிய திணைப்பெயர்ப்பொருளே இப்பாட்டிற்குப் பொருளாகக் கோடலின். வஞ்சி மேற்செல்லலானும், காஞ்சி எஞ்சாதெதிர்சென்றூன்றலானும் "வஞ்சியுங் காஞ்சியுந் தம்முண் மாறே" எனப் பன்னிருபடலத்திற்கூறிய திணைப்பெயர் இப்பாட்டிற்குப் பொருளன்மையுணர்க. அவர் முதுமொழிக்காஞ்சிமுதலியவற்றைப் பொதுவியலென்று ஒருபடலமாக்கிக்கூறலின், அவை திணைப்பெயராகாமையுணர்க.

இனி, மதுரைக்காஞ்சியென்றதற்கு மதுரையிடத்து அரசற்குக் கூறிய காஞ்சியென விரிக்க. இஃது உருபும்பொருளும் உடன்றொக்கது. *"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே" என்பதனாற் காஞ்சி பெருந்திணைக்குப் புறனு

769 - 70. சிறுபாண். 219 - 20 ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப்பார்க்க. "பன்மீ னாப்பட் டிங்கள் போலப், பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை" (பதிற். 90: 17 - 8.)

775. பா. உளப்பட.

779 - 81. பொருந. 85 - 7 ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப்பார்க்க; "ஒண்டொடி மகளிர் பொலங்கலத் தேந்திய, தண்கமழ் தேறன் மடுப்ப மகிழ்சிறந், தாங்கினி தொழுகுமதி பெரும." (புறநா. 24.)

* தொல்காப்பியம், புறத்திணையியல், 22.

யிற்று. அது, *“ பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் ருனு, நில்லா வுலகம் புல்லிய நெறித்தே.” என்பதாம். இதன்பொருள்: பாங்கு அரு சிறப்பின் - தனக்குத் துணையில்லாத வீடுபேறுநிமித்தமாக, பல் ஆற்ருனும் - அறம் பொருள் இன்பமென்னும் பொருட்பகுதியானும், அவற்று உட்பகுதியாகிய உயிரும் யாக்கையும் செல்வமும் இளமையுமுதலியவற்ருனும், நில்லா உலகம் புல்லிய நெறித்து - நிலைபேறில்லாத உலகியற்கையைப்பொருந்திய நன்னெறியினை உடைத்து அக்காஞ்சியென்றவாறு. எனவே வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமை சான்ருேரறையுங்குறிப்பினது காஞ்சித்திணையென்பதுபொருளாயிற்று.

இச்செய்யுட்புலவர் இப்பொருளேகோடலின், யாம் இப்பொருளேதர உரைகூறுகின்ரும்.

1 - 2. [ஓங்குதிரை வியன்பரப்பி, னெலிமுந்நீர் வரம்பாக:] வியல் பரப்பின் ஓங்கு திரை ஒலி முந்நீர் வரம்பு ஆக—அகலத்தையுடைத்தாகிய நீர்ப்பரப்பின்கண்ணே ஓங்குதிரையொலிக்குங்கடல் எல்லையாக,

3 - 4. தேன் தூங்கும் உயர் சிமையம் மலை நாறிய வியல் ஞாலத்து—தேனிறால் தூங்கும் உயர்ந்த உச்சியையுடைய மலைகள்தோன்றிய அகலத்தையுடைய ஞாலத்தின்கண்ணே,

5. வலம் மாதிரத்தான் வளி கொட்ப—வலமாக ஆகாயத்தின்கண்ணே காற்றுச்சுழல,

6. வியல் நாண்மீன் நெறி ஒழுக—அகலத்தையுடைய நாண்மீன்கள் தாம் நடக்கு நெறியின்கண்ணே நடக்க,

7. பகல் செய்யும் செ ஞாயிறும்—பகற்பொழுதை உண்டாக்கும் சிவந்த பகலோனும்,

8. இரவு செய்யும் வெள் திங்களும்—இராப்பொழுதை உண்டாக்கும் வெள்ளிய மதியும்.

9. மை தீர்ந்து கிளர்ந்து விளங்க—குற்றமற்றுத் தோன்றிவிளங்க,

10. மழை தொழில் உதவ—மேகம் தானே பெய்தற்ருெழிலை வேண்டுங்காலத்தேதர,

†உழவுத்தொழிற்கு உதவவென்றுமாம்.

மாதிரம் கொழுக்க—திசைகளெல்லாம் தழைப்ப,

மலைகள் விளைந்துகொழுக்கவென்றுமாம்.

11. [தொடுப்பி னாயிரம் வித்தியது விளைய:] தொடுப்பின் வித்தியது ஆயிரம் விளைய—ஒருவிதைப்பின்கண்ணே விதைத்தவிதை ஆயிரமாக விளைய,

12. நிலனும்—விளைநிலங்களும்,

* தொல்காப்பியம், புறத்திணையியல், 23.

† “ காலைமாரிபெய்துதொழிலாற்றி ” (பதிற். 84.)

மகனும்—மாக்களும்,

பயன் எதிர்பு நந்த — பல்லுயிர்க்கும் தம்பயன்கொடுத்தலை ஏறட்டுக் கொண்டு தழைப்ப,

13. *நோய் இகந்து நோக்கு விளங்க—மக்கட்குப் பசியும்பிணியுநீங்கி அழகுவிளங்க,

14 - 5. [மேதக மிகப்பொலிந்த, வோங்குநிலை வயக்களிறு :] மிக பொலிந்த ஓங்கு நிலை வய களிறு மே தக—அறவும்பொலிவுபெற்ற உலகத்தைத்தாங்குதல் வளருந்தன்மையையுடைய வலியையுடையவாகிய திக்கயங்கள் இவர் தாங்குதலின் வருத்தமற்று மேம்பாடுதக.

சுருளும் படியுமாகப் பண்ணினவிடத்துப் பண்ணிநிற்கும் யானையென் றுரைப்பாருமுளர்.

16 - 7. [கண்டுதண்டாக் கட்கின்பத், துண்டுதண்டா மிகுவளத்தான் :] உண்டு தண்டா மிகு வளத்தான்—உண்டு அமையாத உணவுமிகுகின்ற செல்வத்தோடே.

கண்டு தண்டா கட்கு இன்பத்து—நோக்கியமையாத †கட்கு இனிமையினையும்,

18. உயர் பூரிமம் விழு தெருவில்—உயர்ந்த ‡சிறகுகளையுமுடைய சீரியதெருவிலிருக்குமாந்தர் (20),

பூரிமம் - சார்திட்ட தொட்டிகளென்பாருமுளர்.

19 - 20. [பொய்யறியா வாய்மொழியாற், புகழ்நிறைந்த நன்மாந்தரொடு:] வாய் மொழியால் புகழ் நிறைந்த பொய் அறியா நல் மாந்தரொடு -§மெய்ம் மொழியே எக்காலமும் கூறுதலாற்பெற்ற புகழ்நிறைந்த ||பொய்யைக் கேட்டறியாத நல்ல அமைச்சருடனே,

21. நல் ஊழி அடி படர — நன்றாகிய ஊழிக்காலமெல்லாம் தமக்கு அடிப் பட்டுநடக்க,

22. பல் வெள்ளம் மீ கூற—பல¶வெள்ளமென்னும் எண்ணைப்பெற்ற காலமெல்லாம் அரசாண்டதன்மையை மேலாகச்சொல்லும்படி,

---

* "நோயொடு பசியிகந்து". "நோயிகந்தொரீஇய ... ... ... நாடு" (பதிற். 13, 15.) "பசியும் பிணியும் பகையு நீங்கி" (சிலப். 5: 72; மணி. 1: 70.)

† கட்கு - கண்ணுக்கு.

‡ சிறகு - தெருவின் இருபுறத்துமுள்ள வீடுகளின் வரிசை; வழக்கு.

§ "பொய்யாமை யன்ன புகழில்லை" (குறள். 296.)

|| "பொய்ச்சொற் கேளா வாய்மொழி மன்னன்" (கம்ப. கைகேசி சூழ் வினை. 31.)

¶ வெள்ளம் - ஒருபேரெண்.

23. உலகம் ஆண்ட உயர்ந்தோர் மருக—உலகத்தையாண்ட உயர்ச்சி பெற்றோர் குடியிலுள்ளவனே,

மாதிரம் கொழுக்க (10) வித்திய துவிளைய (11) நிலனும் மரனும் நந்த (12) வளிகொட்கையினாலே (5) மழை தொழிலுதவ (10) எனமுடிக்க.

வியன்ஞாலத்திடத்தே (4) மழைதொழிலுதவ (10) நாண்மீன் நெறியொழுக (6) ஞாயிறும் (7) திங்களும் (8) விளங்க (9) நோக்குவிளங்கக் (13) களிறு (15) மேதக (14) நன்மார்க்கத்தோடே (20) ஊழி அடிப்பட்டு நடக்கும்படி (21) மீக்கூற (22) முந்நீர்வரம்பாக (2) உலகமாண்ட உயர்ந்தோர்மருக (23) எனமுடிக்க.

*இவர்கள் தருமத்தில் தப்பாமல் நடத்தவே இக்கூறியவையும் நெறிதப்பாமல் நடக்குமென்றார்.

24 - 5. பிணம் கோட்ட களிறு குழும்பின் நிணம் வாய்ப்பெய்த பேய் மகளிர்—பிணங்களையுடைய கொம்புகளையுடையனவாய்ப் பட்ட யானையினுடைய திரளின் நிணத்தைத்தின்ற பேய்மகளிருடைய துணங்கை (26),

26. இனை ஒலி இமிழ் †துணங்கை சீர்—இனைத்த ஆரவாரம் முழங்குகின்ற துணங்கைக்கூத்தின் சீர்க்கு,

27. பிணை யூபம் எழுந்து ஆட—செறிந்த குறைத்தலைப்பிணம் எழுந்து நின்று ஆடுகையினாலே,

28. அஞ்சு வந்த போர்க்களத்தான்—அஞ்சுதலுண்டான போர்க்களத்திடத்தே,

29. ஆண் தலை அணங்கு அடுப்பின்—ஆண்மக்கள் தலையாகிய நோக்கினாரை வருத்தும் அடுப்பின்கண்ணே,

30 - 31. வய வேந்தர் ஒள் குருதி சினம் தீயின் பெயர்பு பொங்க—வலியினையுடையவேந்தருடைய ஒள்ளிய குருதியாகிய உலை சினமாகிய தீயினால் மறுகிப் பொங்குகையினாலே,

32 - 8. [தெறலருங் கடுந்துப்பின், விறல்விளங்கிய விழுச்சூர்ப்பிற், றொடித்தோட்கை துடுப்பாக, வாடுற்ற வூன்சோறு, நெறியறிந்த கடிவாலுவ, னடிபொலிந்து பிற்பெயராப், படையோர்க்கு முருகயர.]

தொடி தோள் கை துடுப்பு ஆக ஆடு உற்ற ஊன் சோறு—வீரவளையை உடையவாகிய தோளையுடையகைகள் துடுப்பாகக்கொண்டு துழாவி அடுதலுற்ற ஊனிணங்கியசோற்றை,

நெறி அறிந்த கடி வாலுவன்—இடுமுறைமையறிந்த பேய்‡மடையன்.

---

* "இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட, பெயலும் விளையுளுந் தொக்கு" (குறள். 545.) மணி. 7 : 8 - 10; சீவக. 255 பார்க்க.

† துணங்கையினியல்பு இப்புத்தகம் 26 - ஆம் பக்கத்தால் அறியலாகும்.

‡ மடையன் - சோறுசமைப்போன்.

தெறல் அரு கடு துப்பின் விறல் விளங்கிய விழு சூர்ப்பின் அடி ஒதுங்கி பின் பெயராப் படையோர்க்கு முருகு அயர—பகைவராற் கோபித்தற்கு அரிய கடிய வலியினையும் வெற்றிவிளங்கிய சீரிய கொடுந்தொழிலினையுமுடையராய் இட்ட அடிவாங்கிப் பின்போகாத வீரர்க்கு வேள்விசெய்யும்படி,

39. அமர் கடக்கும் வியல் தானை—போரைவெல்லும் அகலத்தையுடைய படையினையுடைய,

போர்க்களத்தே (28) கூழ்சமைக்கின்ற (29) ஆடுற்றசோற்றை (35) வாலுவன் (36) அடிபெயரா (37) வீரர்க்கு முருகயரக் (38) கடக்குந்தானையென்க.

40 - 42. [தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற், றொன்முது கடவுட் பின்னர் மேய, வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருந :]

வரை தாழ் அருவி பொருப்பின் கடவுள்—பக்கமலையிலே விழுகின்ற அருவியினையுடைய பொதியின்மலையிலிருக்கும் கடவுள்,

தென்னவன் பெயரிய துன் அரு துப்பின் தொல் முது கடவுள் பின்னர் மேய பொருந—*இராவணனைத் தமிழ்நாட்டையாளாதபடிபோக்கின கிட்டுதற்கரிய வலியினையுடைய பழமைமுதிர்ந்த அகத்தியன்பின்னே எண்ணப்பட்டுச் சான்றோனாயிருத்தற்கு மேவின ஒப்பற்றவனே,

† 'திசைநிலைக் கிளவியி னாஅ குநவும்' என்றதனால், இராவணன் தென்றிசையாண்டமைபற்றித் ‡தென்னவனென்றார்; இப்பெயர் பாண்டியற்கும் கூற்றுவற்கும் ஏற்றுநின்றாற்போல. அகத்தியனைத் தென்றிசையுயர்ந்த நொய்ம்மைபோக இறைவனுக்குச் சீரொப்பஇருந்தானென்பதுபற்றிக் கடவுளென்றார். இராவணனுதல் பாயிரச்சூத்திரத்து உரையாசிரியர்கூறிய உரையானுமுணர்க.

இனி, §"முத்தேர் முறுவலாய் நாமணம் புக்கக்கா, லிப்போழ்துபோழ் தென் றதுவாய்ப்பக் கூறிய, வெக்கடவுண் மற்றக் கடவுள்" என ||இருடிகளையும கடவுளென்று கூறியவாற்றானும் காணக.

---

* அகத்தியமுனிவர், பொதியின்மலை உருகும்படி இசைபாடி இராவணனைவென்றுபோக்கினரென்பது பண்டைவரலாறு; அவர் இசையில் வல்லுநரென்பது முதலியவற்றைப் பின்னுள்ளவற்றாலும், இசையிலக்கணநூலாசிரியரென்பதனாலுமுணர்க;—"மன்னு மகத்தியன் யாழ்வா சிப்ப" (திருக்கைலாய ஞானவுலா), 'இராவணனைக் கந்தருவத்தாற்பிணித்து' (தோல். பாயிரம், உரையாசிரியருரை), "இனிய பைந்தமிழின் பொதியமால் வரைபோ லிசைக் குருகாது", (சோணசைல. 26), "மலை, முன்னு ளுருக்கு முனிவர்கோ - இந்நாள், அசையா தடுத்த பழமலையை யன்ன, மிசையா லுருக்குவா யென்ன" (வெங்கையுலா, 319), 'இசைக்குருகப்படுசிலை - இராவணனைப்பிணிக்கக் குறுமுனிபாடும் இசைக்கு உருகிய பொதியின்மலை' (தஞ்சை. 345 - உரை.)

† தொல்காப்பியம், எச்சவியல், 53.

‡ "தென்னவன் மலையெ டுக்கச் சேயிழை நடுங்கக் கண்டு, மன்னவன் விரலா லூன்ற ... ... .மேற் றளியி னாரே" என்புழியும் தென்னவன் இராவணனுதல்காண்க; (திருக்கச்சிமேற்றளி. திருநா. தே.)

§ கலித்தொகை, 93.

|| "கந்தன் பள்ளிக் கடவுளர்க் கெல்லாம்" (சிலப். 11 : 5) என்பதும் இதனை வலியுறுத்தும்.

இதனால், அகத்தியனுடன் தலைச்சங்கத்துப் பாண்டியனிருந்து தமிழாராய்ந்த சிறப்புக்கூறினார்.

கூற்றுவனையுதைத்தகடவுளென்று இறைவனுக்கி, அவன்பின்னவரென்றது அகத்தியனையென்று பொருள்கூறின், இறைவனுக்குத் தம்பியென்றல் சாலாமையாலும், அப்பொருடருங்காலத்து, முன்னவன் பின்னவன், முன்னோன் பின்னோனென்றல்லது அச்சொல் நில்லாமையாலும் அது பொருந்தாது. *"முன்னரே சாரண் முனிதக்க மூப்புள. பின்னரும் பீடழிக்கு நோயுள" எனப் பிறண்டும் முன்னர் பின்னரென்பன இடமுணர்த்தியே நிற்குமென்றுணர்க.

பொருநனென்றது †தான் பிறர்க்கு உவமிக்கப்படுவானெனவும் பொருட்டு.

43. விழு சூழிய—சீரிய முகபடாத்தையுடையவாய்,

விளங்கு ஓடைய —விளங்குகின்ற பட்டத்தையுடையவாய்,

44. கடு சினத்த—கடிய சினத்தையுடையவாய்,

44 - 5. கமழ் கடாத்து அளறு பட்ட நறு சென்னிய — ‡கமழுகின்ற மதத்தாலே சேறுண்டான நறிய தலையினையுடையவாய்,

46 வரை மருளும் உயர் தோன்றல—வரையென்றுமருளும் உயர்ந்த தோற்றத்தினையுடையவாய்,

47. வினை நவின்ற பேர் யானை—§போர்த்தொழிலிலேபயின்ற பெரிய யானை,

இச் செய்தெனெச்சக்குறிப்பாகிய வினையெச்சமுற்றுக்கள் அடுக்கிவந்தனவற்றை நவின்றவென்னும் பெயரெச்சத்தோடு முடிக்க.

48. சினம் சிறந்து களன் உழக்கவும்—சினமிக்குக் களந்துவீரரைக் கொன்றுதிரியவும்,

49 - 50. மா எடுத்த மலி குரூஉ துகள் அகல் வானத்து வெயில் கரப்பவும— குதிரைத்திரள் பகைவர்மேற்செல்லுதலானுண்டான மிக்க நிறத்தையுடையவாகியதூளி ||அகலுதற்குக் காரணமான ஆகாயத்திடத்தே வெயிலைமறைக்கவும,

51 - 2. வாம் பரிய கடு திண் தேர் காற்று என்ன கடிது கொட்பவும்—தாவும் குதிரைகளையுடைய செலவுகடிய திண்ணியதேர் காற்றுச்சுற்றியடித்தாலென்னக் கடிதாகச்சுழலவும்,

---

* நாலடியார், ௲௭, 2.

† "பிறர்க்குநீ வாயி னல்லது நினக்குப், பிறருவம மாகா வொருபெரு வேந்தே" (பதிற். 73.)

‡ யானைமதம்கமழுதல், "துன்னருந்திறற் கமழ்கடாஅத்து", "மிஞிறார்க்குங் கமழ்கடாஅத், தயறு சோறு மிருஞ் சென்னிய .... ... களிறு" (புறநா. 3, 22) என்பவற்றாலும், காஞ்சிப் புராணம், கடவுள்வாழ்த்து, 5-ஆம் செய்யுள் முதலியவற்றாலும் அறியலாகும்.

"தொழினவில் யானை" (பதிற். 84.)

"அகலிருவிசும்பு" (பெரும்பாண். 1) என்பதன்பொருள் பார்க்க.

53 - 4. [வாண்மிகு மறமைந்தர், தோண்முறையான் வீறுமுற்றவும்:] வாள் மிகு மறம் மைந்தர் தோள் வீறு முறையான் முற்றவும் – வாட்போரான் மிகுகின்ற மறத்தையுடைய வீரருடையதோள் வெற்றி முறையாகவெட்டுத லான் முற்றுப்பெறவும்,

* "விருந்தாயினை யெறிகேயென விரைமார்பகங் கொடுத்தாற், கருப்பூணற வெறிந்தாங்கவ னினதுழினி யெனவே" என்றார் பிறரும்.

55 - 6. இரு பெரு வேந்தரொடு வேளிர் சாய பொருது அவரை செரு வென்றும்—சேரன்சோழனுகிய இருவராகிய பெரிய அரசருடனே †குறுநில மன்னரும் இளைக்கும்படி பொருது அவரைப் போரைவென்றும் அமையாமல்,

உம்மை சிறப்பும்மை.

57 - 9. [இலங்கருவிய வரைநீந்திச், சுரம்போழ்ந்த விகலாற்ற, லுயர்ந் தோங்கிய விழுச்சிறப்பின்:]

உயர்ந்து இலங்கு அருவிய வரை நீந்தி ஓங்கிய விழு சிறப்பின்—உயர்ந்து விளங்குகின்ற அருவிகளையுடைய மலையிற் குறிஞ்சிநிலமன்னரையெல்லாம் வென்று உயர்ந்த சீரிய தலைமையினுலே,

இகல் ஆற்றல் சுரம் போழ்ந்த சிறப்பின்—மாறுபாட்டை நடத்துதலை யுடைய பகைவர்காடுகளைப் பலவழியாகப்பிளந்த சிறப்பினுலே,

60. நிலம் தந்த பெரு உதவி—நாட்டிலிருக்கின்ற அரசர்நிலங்களையெல் லாம்கொண்ட பெரிய உதவியையும்,

‡மலையும் காடும் அரணாகஇருந்தஅரசரை அழித்தவலியாலே நாட்டிலிருக் கின்ற அரசர் தத்தம் நாடுகளைவிட்டாரென்றதாம்.

61. பொலந்தார் மார்பின் நெடியோன் உம்பல் — பொன்னாற்செய்த தாரையணிந்தமார்பினையுமுடைய §வடிம்பலம்பநின்றபாண்டியன் வழியில் வந்தோனே,

யானை (47) களனுழக்கவும் (48) துகள் (49) வெயில்கரப்பவும் (50) தேர் (51) கொட்பவும் (52) மைந்தர் (53) முற்றவும் (54) பொருது செருவென் றும் அமையாமல் (56) விழுச்சிறப்பின் (59) நிலந்தந்த உதவியினையும் (60) மார்பினையுமுடைய நெடியோனெனக.

* சீவகசிந்தாமணி, 2265.

† குறுநிலமன்னர் - திதியன்முதலானோர்; இந்நூல் 128 - 9 ஆம் அடி களின் விசேடவுரையைப்பார்க்க.

‡ "உண்டாகிய வுயர்மண்ணுஞ், சென்றுபட்ட விழுக்கலனும், பெறல் கூடுமிவ னெஞ்சுறப்பெறின்" (புறநா. 17) என்பதன்கருத்து இவ்விசேடவுரை யுடன் ஒப்புநோக்கற்பாலது.

§ "அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி" (சிலப். 11 · 17), "ஆழிவடிம் பலம்பநின்றானும்" (நள. சுயம். 137) என்பனவும், "வென்றிபட", "மாலை முடியோன்" (திருவால. 21: 6 - 7) என்னும் செய்யுட்களும், "கடல்வடிம் பலம்ப நின்ற கைதவன்" (வி - பாரதம். 15 - ஆம் போர். 18) என்பதும் இங்கே அறியத்தக்கன.

62-3. மரம் தின்னூஉ வரை உதிர்க்கும் நரை உருமின் ஏறு அனையை—மரங்களைச்சுட்டு மலைகளைநீறாக்கும் பெருமையினையுடைய உருமேற்றை ஒப்பை,

*"கருநரைநல்லேறு" என்றார்பிறரும். இன், அசை.

64. அரு குழு மிளை—பகைவர்சேர்தற்கரிய திரட்சியையுடைய காவற்காட்டினையும்,

குண்டு கிடங்கின்—ஆழத்தினையுடைய கிடங்கினையும்,

65. உயர்ந்து ஓங்கிய நிரை புதவின்—உயர்ந்துவளர்ந்த கோபுரங்களிடத்து வாயில்களையும்,

நிரை, ஆகுபெயர். உயர்ச்சி ஓங்குதலைவிசேடித்துநின்றது.

66. நெடு மதில்—நெடிய மதிலினையும்,

நிரை ஞாயில்—நிரைத்த சூட்டினையுமுடைய,

அஃது எய்தால்மறைதற்கு உயரப்படுப்பது.

67. [அம்புமி ழயிலருப்பம்:] அயில் †அம்பு உமிழ் ‡அருப்பம்—கூர்மையையுடைய அம்புகளையுமிழும் அரண்களை,

மிளை (64) முதலியவற்றையுடைய அருப்பமென்க.

68-9. தண்டாது தலை சென்று கொண்டு நீங்கிய விழு சிறப்பின்—அமையாமல் அவ்விடங்களிலேசென்று கைக்கொண்டு அவ்விடங்களினின்றும் போன சீரிய தலைமையினையுடைய கொற்றவர் (71),

70-71. [தென்குமரி வடபெருங்கல், குணகுடகட லாவெல்லை.] தென் குமரி எல்லை ஆ வட பெரு கல் எல்லை ஆ குண குட கடல் எல்லை ஆ—தென்றிசைக்குக் குமரி எல்லையாக வடதிசைக்குப் பெரியமேரு எல்லையாகக் கீழ்த்திசைக்கும் மேற்றிசைக்கும் கடல் எல்லையாக இடையில்வாழ்வோரெல்லாம்,

72. தொன்று மொழிந்து தொழில் கேட்ப—தம்முடன் பழமையைச் சொல்லி ஏவல்கேட்கும்படி,

73. வெற்றமொடு வெறுத்து ஒழுகிய—வெற்றியோடே செறிந்துநடந்த,

74. கொற்றவர்தம் கோன் ஆகுவை—வெற்றியுடையோர்தம்முடைய தலைவனான தன்மையையுடையை,

75-6. வான் இயைந்த இரு §முந்நீர் பேஎம் நிலைஇய இரு பௌவத்து—மேகம்படிந்த பெரிதாகிய மூன்றுநீர்மையையுடைய அச்சம்நிலைபெற்ற கரியகடலிடத்து,

---

* குறுந்தொகை, 317.

† "அம்புமிழ்வ வேலுமிழ்வ" (சீவக. 103.)

‡ "அவாருப்பம் வௌவி" (மதுரை. 149.)

§ 'முந்நீர்' என்பதன்பொருள், "முந்நீர்ப்பிறந்த" (சீவக. 5) என்பதனை விசேடவுரையாலும், புறநானூறு, 9-ஆம் செய்யுளுரையாலும், "முந்நீரினுள்புக்கு" (சிலப். ஆய்ச்சியர்) என்பதனுரையாலும் விளங்க அறியலாகும்.

77 - 9. [கொடும்புணரி விலங்குபோழக், கடுங்காலொடு கரைசேர, நெடு ங்கொடிமிசை யிதையெடுத்து :]

கடு காலொடு கொடு புணரி விலங்கு போழ இதை எடுத்து—கடிய காற் றாலே வளைகின்றதிரையைக் குறுக்கே பிளந்தோடும்படி பாய்விரிக்கப்பட்டு.

80. இன்னிசைய *முரசம் முழங்க—இனிய ஓசையையுடைய முரசம் முழங்காநிற்க,

81 - 2. பொன் மலிந்த விழு பண்டம் நாடு ஆர—பொன்மிகுதற்குக் காரணமாகிய சீரிய சரக்குக்களை நாட்டிலுள்ளார் நுகரும்படியாக,

[நன்கிழிதரும்:] கரை சேர (78) நன்கு இழிதரும் — கரையைச்சேர வாணிகம்வாய்த்துவந்து இழிந்லைச்செய்யும்,

83. [ஆடியற் பெருநாவாய் ] நெடு கொடி மிசை (79) ஆடு இயல் பெரு நாவாய்—நெடியகொடி பாய்மரத்தின்மேலே ஆடும் இயல்பினையுடைய பெரிய மரக்கலம்.

இதையெடுத்து (79) முழங்க (80) ஆர இழிதரும் (82) நாவாயென்க.

84 - 5. மழை முற்றிய மலை புரைய துறை முற்றிய துளங்கு இருக் கை—கருமேகஞ்சூழ்ந்த மலைபோலக் கடல்சூழ்ந்த அசைகின்ற இருப்பினையும்,

துறை ஆகுபெயர். சரக்குப்பறித்தற்குக் கடலினின்றமரக்கலங்கள் அக் கடல்சூழநின்றதற்கு மழைமுற்றியமலை உவமமாயிற்று.

நாவாய் துளங்கிருக்கையென்க.

86 தெள் கடல் குண்டு அகழி—தெளிந்த கடலாகிய ஆழத்தையுடைய கிடங்கினையுமுடைய,

87 - 8. சீர் சான்ற உயர் நெல்லின் ஊர் கொண்ட உயர் கொற்றவ— தலைமையமைந்த உயர்ந்த நெல்லின்பெயரைப்பெற்ற சாலியூரைக்கொண்ட உய ர்ந்த வெற்றியையுடையவனே,

இதனால், தனக்குநட்பாகாதோர் ஊர்கொண்டானென்றார்.

இன்னை அசையாக்கி நெல்லூரென்பாருமுளர்.

இருக்கையினையும் (85) கிடங்கினையும் (86) உடைய ஊரென்க.

89 - 92. [நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர், பாடுசிலம்பு மிசையேற்றத், தோடுவழங்கு மகலாம்பியிற், கயமகைய வயனிறைக்கும் :]

வயல் அகைய நிறைக்கும் கயம் நீர் †தெவ்வும் நிரை ‡தொழுவர் பாடு சிலம்பும் இசை — வயல் தழைக்கும்படி நீரை நிறைத்தற்குக்காரணமான குளங்களில்

* "கோடுபறையாாப்ப" (சீவக. 501.)

† 'தெவ்வு' என்றபாடமே நேரானது; 'எடுத்தல் படுத்தல்" (பிர யோக. 10) என்பதன் உரையைப்பார்க்க; "சோறுநீர்தெவ்வுதலும்" என்றார், ஸ்ரீ கச்சியப்பமுனிவரும்; (காஞ்சி. நகரேற்று. 142.)

‡ தொழில் செய்வாரென்னும் பொருளில் தொழுவரென்பது, (மது. 122.) "நெல்லரியு மிருந்தொழுவர்", "நெல்லரிதொழுவர்" (புறநா. 24, 209) என் பவழியும் வந்துள்ளது.

நீரை *இடாவான்முகந்துகொள்ளும் நிலையாகவின்றுதொழில்செய்வாரிடத்தே ஒலிக்குமோசை,

ஏற்றத்தோடு வழங்கும் அகல் ஆம்பியின் இசை—ஏற்றத்துடனே உலாவும் அகன்ற பன்றிப்பத்தலின்ஓசை,

93. மெல் தொடை வல் கிழாஅர் இசை (95)—மெத்தென்ற கட்டுகளையுடைய வலிய †பூட்டைப்பொறியினோசை,

94. அதரி கொள்பவர் இசை (95)—கடாவிடுகின்றவரோசை,

பகடு பூண் தெள் மணி இசை (95)—எருதுகள்பூண்ட தெள்ளிய மணியினோசை,

95. இரு புள் ஓப்பும் இசையே—பயிர்களிற் பெரியகிளிமுதலியவற்றை ஓட்டுமோசை,

ஏகாரம் ஈற்றசை.

என்றும்—எக்காலும்.

96 - 7. மணி பூ முண்டகத்து மணல் மலி கானல் பரதவர் மகளிர் குரவையொடு ஒலிப்ப—நீலமணிபோலும் பூக்களையுடையவாகிய கழிமுள்ளிகளையுடைய மணற்குன்றுகள்மிக்க கடற்கரையிலிருக்கும் பரதவருடைய மகளிராடும் குரவைக்கூத்தின் ஓசையோடேகூடி ஆரவாரியாநிற்ப,

98. ஒருசார் விழவு நின்ற வியல் ஆங்கண்—ஒருபக்கம் விழாக்கொண்டாடுதலாற் பிறந்த ஓசைகள் மாறாமனின்ற அகலத்தையுடைய ஊர்களிடத்தே யிருந்து,

பாடுசிலம்புமிசை (90) முதலியன குரவையொடு (97) என்றும் (95) ஒலிப்ப ஒருசார் விழவுநின்ற ஊரென்க.

99. முழவு தோள் முரண் பொருநர்க்கு—முழவுபோலும் தோளினையுடையராய்க் கல்வியால் மாறுபடுதலையுடைய ‡தடாரிப்பொருநர்க்கு,

100 - 102. உரு கெழு பெரு சிறப்பின் இரு பெயர் பெரு ஆயமொடு இலங்கு மருப்பின் களிறு கொடுத்தும்—அச்சம்பொருந்திய பெரிய தலைமையையுடைய §கன்றும்பிடியுமென்னும் இரண்டுபெயரையுடைய பெரியதிரளுடனே விளங்குகின்ற கொம்பினையுடைய களிறுகளைக்கொடுத்தும்.

---

* இடா - இறைகூடை; “பேரிடாக்கொள்ளமுகந்து” (பெரிய. இளையான்குடி. 17.)

† “காலையங்கதிர்ப் பூட்டையங் கடமெனத் தமிழ, மேலைமுந்துசெல் கின்றதோர் கடமென மேலை, வேலை வெங்கதி ரமிழ்ந்துற முழுமதி விண்ணின், பாலெழுந்தது விரிகதிருலகெலாம் பரப்பி” (சீகாளத்தி. கண்ணப். 119.) என்பதனால், பூட்டைப்பொறியினியல்பை அறிந்துகொள்க. இது காஞ்சிபுரத்தின் பக்கத்துள்ள ஊர்களிற் பெரும்பாலும் காணப்படும்.

‡ தடாரி - கிணைப்பறை. (பு - வெ.)

§ “கன்றொடு, கறையடி யானை யிரியல் போக்கும், ......... ஆய்” (புறநா. 135), “கன்றுடைப்பிடி நீக்கிக் களிற்றினம், வன்றொடர்ப் படுக்கும் வனவாரி” (கம்ப. நாட்டு. 32) என்பன இங்கே ஆராயத்தக்கவை.

இருபெயர்க்கு ஆடும் மாடமென்பாருமுளர்.

103. பொலந்தாமரை பூ சூட்டியும் — பொன்னாற்செய்த தாமரைப் பூவைச் சூட்டியும்,

104 - 5. [நலஞ்சான்ற கலஞ்சிதறும். பல்குட்டுவர் வெல்கோவே.]

நலம் சான்ற கலம் சிதறும் கோவே—நன்மையமைந்த பேரணிகலங்களை எல்லார்க்குங்கொடுக்குங்கோவே,

ஊர்களிடத்தே யிருந்து (98) பொருநர்க்குக் (99) கொடுத்தும் (102) சூட்டியும் (103) அமையாது கலஞ்சிதறுங்கோவேயென்க.

பல் குட்டுவர் வெல் கோவே—பலவாகிய குட்டநாட்டிலுள்ளாரை வெல்லுங்கோவே.

என்பது. அடை.

இதனால், தன்னாட்டிலூர்களிலிருந்து கொடுக்கின்ற சிறப்புக்கூறினார்.

106. கல் காயும் கடு வேனிலொடு—*மலைகள் காய்தற்குக்காரணமாகிய கடிய முதுவேனிலாலே,

107. இரு வானம் பெயல் ஒளிப்பினும்- பெரியமேகம் மழையைத் தன்னிடத்தே மறைத்துக்கொள்ளினும்,

108. [வரும்வைகன் மீன்பிறழினும் :] வைகல் வரும் மீன் பிறழினும்—தான் தோன்றுதற்குரிய நாளிலேதோன்றும் †வெள்ளி தென்றிசையிலே எழினும்,

109. வெள்ளம் மாறாது விளையுள் பெருக—யாறுகள் வெள்ளமாறாமல் வந்து விளைதல் பெருகுகையினாலே,

110. நெல்லின் ஓதை—முற்றினநெல்லுக் காற்றடித்து அசைதலாலே எழுந்த ஓசை,

அரிநர் கம்பலை—அதனை அறுப்பாருடைய ஓசை

111. புள் இமிழ்ந்து ஒலிக்கும் இசை —பறவைகள் கத்துகையினாலே ஆரவாரிக்கும் ஆரவாரம்,

---

* "மலைவெம்ப" (கலி. 13.)

† வெள்ளிக்கோள் தென்றிசையில் எழுதல் தீயநிமித்தம் ; இது, "வசை யில்புகழ் வயங்குவெண்மீன், றிசைதிரிந்து தெற்கேகினுந், தற்பாடிய தளி யுணவிற், புட்டேம்பப் புயன்மாறி, வானபொய்ப்பினுந் தானபொய்யா, மலைத் தலைய கடற்காவிரி" (பட். 1 - 6), "வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி, பயங்கெழு பொழுதோ டாகிய நிற்ப", "நிலம்பயம் பொழியச் சுடர்சினந் தணி யப், பயங்கெழு வெள்ளி யாகிய நிற்ப" (பதிற். 24, 69), "மைமீன் புகை யினுந் தூமந் தோன்றினுந். தென்றிசை மருங்கின வெள்ளி யோடினும், ........ பெயல்பிழைப் பறியாப் புன்புலத் ததுவே", "வெள்ளி தென்புலத் துறைய விளைவயற், பள்ளம் வாடிய பயனில் காலை" (புறநா. 117, 388), "கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும், விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும், ......... காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை" (சிலப். 10: 102 - 8.) எனபவற்றால் அறியலாகும்.

என்றும்—எந்நாளும்,

112 - 3. சலம் புகன்று சுறவு கலித்த புலவு நீர் வியல் பௌவத்து—தம்முள் மாறுபாட்டைவிரும்பிச் சுறாக்கள் செருக்கித்திரிகின்ற புலாலுநாற்றத்தையுடையதாகிய நீரையுடைய அகற்சியையுடைய கடலிடத்துத் துவலை(115),

114 - 5. நிலவு கானல் முழவு தாழை குளிர் பொதும்பர் நளி தூவல்—*நிலாப்போலும் மணலையுடையகரையினிற் குடமுழாப்போலுங் †காயையுடையதாழையை வேலியாகவுடைய குளிர்ச்சியையுடைய இளமரக்காவின்கண்ணே வந்து செறிதலையுடைய துவலையினோசை,,

116. திரை ‡திமில் வேட்டுவர் கரை சேர் கம்பலை—திரைத்த மீன்படகாலே வேட்டையாடுவார்வந்து கரையைச்சேரும் ஆரவாரம்,

117. இரு கழி செறுவின் வெள் உப்பு பகர்நரொடு—பெரியகழியிடத்து உப்புப்பாத்தியிலே வெள்ளிய உப்பைவிற்கும் §அளவரொலியோடே,

118 - 24. [ஒலியோவாக் கலியாணர், முதுவெள்ளிலை மீக்கூறும், வியன் மேவல் விழுச்செல்வத், திருவகையா னிசைசான்ற, சிறுகுடிப் பெருந்தொழுவர், குடிகெழீஇய நானிலவரொடு. தொன்றுமொழிந்து தொழில் கேட்ப :]

சிறு குடி பெரு தொழுவர் ஒலி ஓவா கலி யாணர் முதுவெள்ளிலை—சிறிய குடிகளாய்ப் பெரியதொழில்களைச் செய்வாருடைய ஆரவாரமும் ஒழியாத பெருக்கினையுடைத்தாகிய புதுவருவாயினையுடைய முதுவெள்ளிலையென்னு மூர்,

இது குறுநிலமன்னனிருப்பு

பகர்நரொலியோடே (117) நெல்லினோதை (110) முதலியவொலி என்றும் (111) ஓவாத முதுவெள்ளிலையென்க,

மீ கூறும் இரு வகையான் வியல் மேவல் விழு செல்வத்து இசை சான்ற குடி கெழீஇய நானிலவரொடு—உலகத்துத்தொழில்களில் மேலாகச்சொல்லும உழவு வாணிகமென்கின்ற இரண்டுகூற்றாலே அகலம்பொருந்துதலையுடைய சீரியசெல்வத்தாலே புகழ்நிறைந்த குடிமக்கள் பொருந்தின நான்குநிலத்து வாழ்வாருடனே,

தொன்று மொழிந்து தொழில் கேட்ப—பழமைகூறிநின்று ஏவலைக்கேட்கும்படியாக,

125 - 7. கால் என்ன கடிது உராஅய் நாடு கெட எரி பரப்பி ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்து—காற்றென்னும்படி கடிதாகப்பரந்துசென்று பகை

---

* "நிலவுக்குவித்தன்ன வெண்மணல்" குறுந். 123); "நிலாவினிலங்கு மணல்" (அகநா. 200.)

† பி - ம். தாளையுடைய.

‡ "பன்மீன் வேட்டத் தென்னையர் திமிலே", "கொடுந்திமிற்பரதவர்" (குறுந். 123, 304.) "திமில்வாழ்நர்" (சிலப். 7 : 11.)

§ அளவர் - நெய்தனிலமாக்களுள் ஒருவகையார்.

வர்ளாடுகெடும்படி நெருப்பைப்பரப்பித் *தலையாலங்கானமென்கின்ற ஊரிலே பகைவர்க்கு அச்சந்தோன்றும்படி †விட்டு.

‡" எரிபரந்தெடுத்தல் " என்னுந் துறைகூறிற்று.

128 - 9. அரசு பட அமர் உழக்கி முரசுகொண்டு களம் வேட்ட—சேர நிலமன்னரிருவரும் குறுநிலமன்னரைவரும் படும்படி போரிலேவென்று அவர் முரசைக் கைக்கொண்டு களவேள்விவேட்ட,

எழுவராவார் :—§சேரன், செம்பியன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநனென்பார்

130. அடு திறல் உயர் புகழ் வேந்தே—||கொல்லுகின்ற வலியுயர்ந்த புகழையுடைய வேந்தனே.

நானிலவரோடே (123) முதுவெள்ளிலை (119) தொழில் கேட்பத் (124) திறலுயர்ந்த வேந்தேயென்க.

இது ¶தலையாலங்கானத்து வென்றமைகூறிற்று.

131. $நட்டவர் குடி உயர்க்குவை நின்னுடனே நட்புக்கொண்டவருடையகுடியை உயர்த்தலைச்செய்வை,

132. செற்றவர் அரசு பெயர்க்குவை நீசெறப்பட்டவர் அரசுரிமையை வாங்கிக்கோடலைச் செய்வை,

133 - 4. பெரு உலகத்து மேஎந்தோன்றி சீர் உடைய விழு சிறப்பின்—பெரிய நன்மக்களிடத்தே மேலாய்த்தோன்றுகையினாலே புகழையுடைய விழுமிய தலைமையினையும்,

---

* இவ்வூர் தலையாலங்காடென்று வழங்கும்; இது தேவாரம்பெற்ற ஒரு சிவதலம்; சோழநாட்டிலுள்ளது; இவ்வூரிற் பகைவரெழுவரையும் வென்றது பற்றியே தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனென்று இப் பாண்டியன் கூறப்படுவான்; சிலப்பதிகாரத்திற் கூறப்படுபவன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்.

† விட்டு - தங்கி; விடுதலெனபது பகைமேற்சென்றோர்தங்குவதற்கே பெரும்பாலும் வழங்கும்; (பு - வெ.)

‡ தொல்காப்பியம், புறத்திணையியல், சூ. 8.

§ இந்நூல் 55, 56 - ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

|| " மறம்வீங்குபல்புகழ் " (பதிற். 12 - 8) என்பதும் அதனுரையும் ஈண்டு அறிதற்பாலன.

¶ நெடுஞ்செழியன் தலையாலங்கானத்துச் செருவென்றமை பின்னுள்ள செய்யுட்களாலும் விளங்கும். " காலிய னெடுந்தேர்க் கைவண் செழிய, னாலங் கானத் தமர்கடந் துயர்த்த, வேலினும் பல்லூழ் மின்னி ", " தென்னர் கோமா, னெழுவுறழ் திணிதோ ளியறேர்ச செழிய, னேரா வெழுவ ரடிபடக் கடந்த, வாலங் கானத் தார்ப்பினும் பெரிது " (அகநா. 175, 209.)

$ (பெரும்பாண். 423 - 4); " செற்றோரை வழிதபுத்தன, னட்டோரை யுயர்புகூறினன் " (புறநா. 239); " நட்டாரை யாக்கிப் பகைதணித்து " (சிறுபஞ்ச. 18.)

135. விளைந்து முதிர்ந்த விழு முத்தின்—நல்முற்றி ஒளிமுதிர்ந்த சீரிய முத்தினையு

136. வளை இரு சேரி—விளங்குகின்ற சங்கினையுமுடைய பெரிய சங்குகுளிப்பாரிருப்பினையும்,

முத்தினையும் சங்கினையுமுடைய சேரியென்க.

137. கள் கொண்டி குடி பாக்கத்து—கள்ளாகிய உணவினையுடைத்தாகிய இழிந்த குடிகளையுடைய சிற்றூர்களையுமுடைய,

கொண்டி - கொள்ளப்படுதலின் உணவாயிற்று; கொள்ளையுமென்ப.

138. நல் கொற்கையோர் நசை பொருந—நன்றாகிய கொற்கையென்னும் ஊரிலுள்ளோர் நச்சுதலைச்செய்யும் பொருநனே.

இதனாற் கொற்கைக்குரியோனென்றார்.

சிறப்பினையும் (134) சேரியினையும் (136) பாக்கத்தினையு (137) முடைய கொற்கை.

139 - 40. செற்ற தெவ்வர் கலங்க தலை சென்று *அஞ்சு வர தட்கும அணங்கு உடை துப்பின்—தாங்கள்செறப்பட்ட பகைவர்மனங்கலங்கும்படி அவர்களிடத்தேசென்று அவர்க்கு அச்சந்தோன்றத் தங்கும் வருத்தத்தையுடைத்தாகிய வலியினையும்.

141. கொழு ஊன்குறை கொழு வல்சி—கொழுத்த †இறைச்சியையுடைய கொழுத்திருக்கின்ற சோற்றினையும்,

இதனைக் கூடவிட்டு ஆக்குதலிற் கொழுவல்சியென்றார். கொழுவல்சி—கொழுவினாலாகிய வல்சியென்றுமாம்; இஃது ஆகுபெயர்.

142. புலவு வில்—எய்த அம்புதன்னை மீண்டும் தொடுத்தலிற் புலானாற்றத்தையுடைய வில்லினையும்,

பொலி கூவை—பொலிந்த ‡கூவைக்கிழங்கினையும்,

கூவை - திரளுமாம்.

143. §ஒன்றுமொழி—வஞ்சினங்கூறுதலையும்,

ஒலி இருப்பின்—ஆரவாரத்தையுடைய குடியிருப்பினையுமுடைய,

144. தென்பரதவர் போர் ஏறே—தென்றிசைக்கண்வாழும் பரதவர்க்குப் போர்த்தொழிலைச்செய்யும் ஏறுயவனே,

இதனாற் பரதவரைத் தனக்குப் படையாக அடிப்படுத்தினமை கூறினார்.

---

* அஞ்சு - அஞ்சுதல்; (மதுரை. 28)

† "ஊன்சோற்றமலை", "பைஞ்ஞிணம் பெருத்த பசுவெள் ளமலை (புறநா. 33, 177), "ஊன்கணோடலைபதஞ்செய்ய" (கந்த. கள்புகு. 29.)

‡ மலைபடு. 137 ; புறநா. 29.

§ "ஒன்றுமொழிக்கோசர்" (குறுந். 73.)

தப்பு (140) முதலியவற்றையுடைய பரதவரென்க

பரதவர் - தென்றிசைக்கட்குறுநிலமன்னர். அது * "தென்பரதவர் மிடல் சாய, வடவடுகர் வாளோட்டிய" என்னும் புறப்பாட்டாலுமுணர்க.

145. அரிய வெல்லாம் எளிதினின் கொண்டு—பிறர்க்கு அரிய நுகர்பொருள்களெல்லாம் எளிதாக நின்னாரிடத்தேயிருந்து †மனத்தார்கைக்கொண்டு,

146. உரிய எல்லாம் ஓம்பாது வீசி—அப்பொருளையெல்லாம் நினக்கென்று பாதுகாவாது ஊரிடத்தேயிருந்து பிறர்க்குக்கொடுத்து,

என்றது:—‡ "கொள்ளார் தேஎங் குறித்த கொற்றம்" கூறிற்று.

147. நனி புகன்று உறைதும் என்னாது ஏற்று எழுந்து—மிகவிரும்பி அரின்கண்ணேயிருந்து உறையக்கடவேமென்றுகருதாதே பகைவர்மேற்செல்லுதலை §ஏறட்டுக்கொண்டு போக்கிலே ஒருப்பட்டு,

இது ||வஞ்சிகூறிற்று.

148. பனி வார் சிமையம் கானம் போகி—பனியொழுகுகின்ற மலையிடததனவாகிய காடுகளைக்கடந்து,

சிமையம் - ஆகுபெயர்.

149. அகம் நாடு புக்கு—அவர்களுணணாடுகளிலே புகுந்து,

இதனால் ¶"தொல்லெயிற்கிவர்தல்" கூறினர்.

அவர் அருப்பம் வௌவி—அப்பகைவரரண்களைக் கைக்கொண்டு அதனாலுமமையாமல்,

இது $குடுமிகொண்ட மண்ணுமங்கலங் கூறிற்று. இதனால் அரசரரண்களை அழித்தமை கூறினர்.

150. [யாண்டுபல கழிய வேண்டுபுலத் திறுத்து :] வேண்டு புலத்து பல யாண்டு கழிய இறுத்து—நீஅழித்தநாடுகளிற் கொள்ளவேண்டும் நிலங்களிலே பலயாண்டுகளும் போம்படி தங்கி,

151. மேம்பட மரீஇய வெல் போர் குரிசில்—அந்நிலங்கள் பண்டையின் மேலாதற்கு அடிப்படவிருந்த வெல்லு மபோரினையுடைய தலைவனே,

இது பகைவர்நாட்டைத் தன்னுடாக்கினமைகூறிற்று.

---

* புறநானூறு, 378.

† "ஒன்னா ராரெயி லவர்கட் டாகவு நுமதெனப், பாண்கட னிறுக்கும் வள்ளியோய்" (புறநா. 203.)

‡ தொல்காப்பியம், புறத்திணையியல், சூ. 12.

§ ஏறட்டுக்கொள்ளல் - மேற்கொள்ளல்.

|| வஞ்சி - மண்ணசையாற் பகைமேற்சேறல்.

¶ தொல்காப்பியம், புறத்திணையியல், சூ. 12.

$ ,, ,, ,, 13.

152. உறு செறுநர் புலம் புக்கு—தொன்றுதொட்டுவந்த பகைவர்நிலத்தே விட்டு.

152 - 3. அவர் *கடி காவின் நிலை தொலைச்சி—அவர் காவலையுடைய பொழில்களின் நிற்கின்ற நிலைகளைக் கெடுத்து,

என்றது வெட்டியென்றவாறு.

154 - 5. இழிபு அறியா பெரு தண் பணை குருஉ கொடிய எரி மேய—வளப்பங்குன்றுதலை ஒருகாலத்துமறியாத பெரிய மருதநிலங்களை நிறத்தையுடைய ஒழுங்கினையுடைய நெருப்புண்ண,

156. நாடு எனும் பேர் காடு ஆக—நாடென்னும்பெயர்போய்க் காடென்னும் பெயரைப்பெற,

157. ஆ சேந்த வழி மா சேப்ப—பசுத்திரள் தங்கின இடமெல்லாம் புலி முதலியன தங்க,

158. ஊர் இருந்த வழி பாழ் ஆக—ஊராயிருந்த இடங்களெல்லாம் பாழாய்க்கிடக்க,

ஊராரிருந்த இடமென்றுமாம்.

159 - 160. இலங்கு வளை மடம் மங்கையர் துணங்கை அம் சீர் தழூஉ மறப்ப—விளங்குகின்ற வளையினையும் மடப்பத்தினையுமுடையமகளிர் துணங்கைக்கூத்தினையும், அழகினையுடைய தாளஅறுதியையுடைய †குரவைக்கூத்தினையுமறப்ப,

தழூஉ, ஆகுபெயர்.

161 - 3. அவை இருந்த பெரு ‡பொதியில் §கவை அடி கடு நோக்கத்து பேய் மகளிர் பெயர்பு ஆட—||சான்றோரிருந்த பெரிய அம்பலங்களிலே இரட்டையான அடிகளையும் கடியபார்வைகளையுமுடைய பேயாகியமகளிர் உலாவியாட,

164. அணங்கு வழங்கும் அகல் ஆங்கண்—இல்லுறைதெய்வங்கள் உலாவும் அகன்ற ஊரிடத்து,

---

* "காவுதொறுங், கடிமரந் தடியு மோசை", "கடிமரந்தடிதலோம்பு' (புறநா. 36, 57.)

† குரவை - மகளிர் எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும கைபிணைந்தாடுங்கூத்து, (சிலப 3: 12 - உரை.)

‡ திருமுருகாற்றுப்படை, 226.

§ (சிறுபாண். 197 ) "கவையடி பெயர்த்துத், தண்டாக் களிப்பி னுடங் கூத்து" (மணி. 6: 125 - 6.)

|| சான்றோர் - குடிப்பிறப்புமுதலிய எண்குணங்களமைந்தோர்; "எட்டு வகை நுதலிய அவையத் தானும்" (தொல். புறத்திணை. சூ 21) எனபதனுரையாலும், "குடிப்பிறப்புக்கல்வி" (பு - வெ. வாகை. 19 - மேற்) எனபதனாலும் அறியலாகும்.

165. நிலத்து ஆற்றும் குழூஉ புதவின்—நிலத்திலுள்ளாரையெல்லாம் போக்கும் வாசல்காப்பாரையுடைய வாசலின்கண்ணேயிருந்து,

குழூஉ. ஆகுபெயர். இனிக் *குடுமிதேய்ந்துபோதலின் மண்ணைக் கொழித்துவருமென்பாருமுளர்.

166. அரந்தை பெண்டிர் இனைந்தனர் அகவ—மனக்கவற்சியையுடைய பெண்டிர் வருந்திக் கூப்பிட,

167 - 8. கொழு பதிய குடி தேம்பி செழு கேளிர் நிழல் சேர—வளவிய ஊர்களிடத்தனவாகிய குடிகளெல்லாம் பசியாலுலர்ந்து புறநாட்டிலிருக்கும் வளவிய சுற்றத்தார் தமக்குப் பாதுகாவலாகச் சென்றுசேர,

169 - 70. நெடு நகர் வீழ்ந்த கரி குதிர் பள்ளி †குடுமி கூகை குராலொடு முரல—பெரியமாளிகைகளிலே வெந்துவீழ்ந்த கரிந்த குதிரிடங்களிலே குட்டியையுடைய கூகைச்சேவல் பேட்டுடனேயிருந்து கதற,

171 - 2. கழுநீர் பொலிந்த கண் அகல் பொய்கை ‡களிறு மாய் செருந்தியொடு §கண்பு அமன்று ஊர்தர—செங்கழுநீர்மிக்க இடமகன்ற பொய்கைகளிடத்தே யானைநின்றால்மறையும் வாட்கோரையுடனே சண்பங்கோரையும் நெருங்கிவளர,

செருந்தி - கொட்டிக்கோரையுமாம.

173 - 4. நல் ஏர் நுடந்த நசை சால் விளை வயல் பல் மயிர் பிணவொடு கேழல் உகள—நன்றாகிய எருதுகளுழுத நச்சுதலமைந்த விளைகின்ற வயலிடத்தே பலமயிரினையுடைய பெண்பன்றியுடனே ஆண்பன்றி ஓடித்திரிய,

பிணவென்னும் அகரவீற்றுச்சொல் வகரவுடம்படுமெய்பெற்றது; ||"பன்றி புல்வாய் நாயென மூன்று, மொன்றிய வென்ப பிணவென் பெயர்க்கொடை" என்றார்.

175. [வாழா மையின் வழிதவக் கெட்டு:] தவ வழி வாழாமையின கெட்டு—மிக ¶நின் ஏவல்செய்து வாழாமையினாலே கெட்டு,

இனித் தவக்கெட்டெனக் கூட்டி மிகக்கெட்டெனறலுமாம்.

176. பாழ் ஆயின—பாழாய்விட்டன,

நின் பகைவர் தேஎம்—நின்னொடு பகைத்தலைச்செய்தவருடைய நாடுகள்,

---

* குடுமி - கதவைத்தாங்கிநிற்பதாயுள்ள ஓருறுப்பு; "திருகுங் குடுமி விடியுந் தேயுங் கபாடம்" (கலிங்க. கடைதிறப்பு, 10.)

† "துய்த்தலைக் கூகை, கவலை கவற்றுங் குராலம் பறந்தலை" (பதிற். 44.)

‡ மதுரை. 247.

§ சண்பு: (பெரும்பாண். 220; மலைபடு. 154); "கண்பகத்தின் வாரமே" (திருத்தோணிபுரம், திருஞான. தே.)

|| தொல்காப்பியம், மரபியல், சூ. 58.

¶ "தொன்று மொழிந்து தொழில்கேட்ப" (மதுரை. 72) என்பது இங்கே கருதற்பாலது.

177 - 9. [எழாஅத்தோ ளிமிழ்முழக்கின், மாஅத்தா ளுயர்மருப்பிற், கடுஞ்சினத்த களிறுபரப்பி:]

*இமிழ் முழக்கின் மா தாள் உயர் மருப்பின் *கடு சினத்த களிறு பரப்பி*—முழங்குகின்ற ஓசையையும் பெருமையையுடைய கால்களையும் தலைசேர்ந்தின கொம்புகளையுமுடைய கடியசினத்தவாகிய யானைகளை எங்கும்பரப்பி,

180. [*விரிகடல் வியன்றானையொடு:*] †*எழா தோள்* (177) *விரி கடல் வியல் தானையொடு*—முதுகிட்டார்மேற் செல்லாத தோளினையுடைய விரிகின்ற ‡கடல்போலும் அகற்சியையுடைய படையோடே,

181. *முருகு உறழ பகை தலை சென்று*—முருகன் பகைவர்மேற் செல்லுமாறுபோலத் தடையறப் பகைவரிடத்தே சென்று,

*முருகு - தெய்வத்தன்மை; ஆகுபெயராய்நின்றது.*

182. *அகல் விசும்பின் ஆர்ப்பு இமிழ*—அகன்ற ஆகாயத்தின்கண்ணே படையெழுந்த ஆரவாரமொலிப்ப,

*விசும்பெனவே ஆகுபெயராய்த் தேவருலகையுணர்த்திற்று.*

183. *பெயல் உறழ கணை சிதறி*—§மழையோடே மாறுபடும்படி அம்புகளைத் தூவி,

184. *பல புரவி நீறு உகைப்ப*—||பலகுதிரைத்திரள் ஓடுகின்ற விசையால் தூள்களை எழுப்ப,

185. *வளை நரல*—சங்குமுழங்க,

*வயிர் ஆர்ப்ப*—கொம்பு ஒலிப்ப,

186. *பீடு அழிய கடந்து அட்டு*—பெருமைகெடும்படி வென்று கொன்று.

186 - 7. *அவர் நாடு அழிய எயில் வௌவி*—அவருடைய நாடுகளழியும்படியாக அவரிருக்கின்ற மதிலைக்கொண்டு,

188. *சுற்றமொடு தூ அறுத்தலின்*—அவர்களுக்கு உதவிசெய்யும் சுற்றத்தாரோடேகூட அவர்கள்வலியைப் போக்குதலாலே,

189. *செற்ற தெவ்வர் நின்வழி நடப்ப*—நின்னாற் சிறிதுசெறப்பட்ட பகைவர் நின் ஏவல்கேட்டு நடக்கையினாலே,

---

* "கடுங்கண்ண கொல்களிறு", "கடுஞ்சினத்த கொல்களிறு" (புறநா. 14, 55.)

† "எழாஅத் துணைத்தோள்" (பதிற். 90 - 27) என்பதும் அதனுரையும் இதனோடு ஒப்பிடத்தக்கன.

‡ "தெவ்வர்தேஎத்துக், கடற்படைகுளிப்பமண்டி" (புறநா. 6.)

§ "ஓடுங்கா ருடன்றவன் றானை வில்விசை, விடுங்கணை யொப்பிற் கதமுறை சிதறூஉ" (பரி. 22: 5 - 6); சீவக. 451 - ஆம் செய்யுளும் இதனுடன் ஒப்புநோக்கற்பாலது.

|| "மாவெடுத்த மலிகுரூஉத்துகள்" (மதுரை. 49.)

190. வியல் கண் முது பொழில் மண்டிலம் முற்றி—அகலத்தை இடத்தேயுடைய பழைய காவலர்நின்கணுளவாகிய சோழமண்டலம் தொண்டை மண்டலமென்கின்ற மண்டலங்களை நினவாக வளைத்துக்கொண்டு,

மண்டலம் மண்டிலமென மருவிற்று.

191. அரசு இயல் பிழையாது — நூல்களிற்கூறிய அரசிலக்கணத்தில் தப்பாமல்,

191 - 2. [அறநெறி காட்டிப், பெரியோர் சென்ற வடிவழிப் பிழையாது:] பெரியோர் சென்ற அடி வழி பிழையாது அறநெறி காட்டி—நின்குலத்திற் *பெரியோர்நடந்த அடிப்பாட்டின்வழியைத் தப்பாமல் அறநெறியிருக்கும்படி இதுவென்று அவர்களுக்கு விளக்கி,

களிபுகன்றுறைதுமென்னுது எற்றெழுந்து (147) களிறுபரப்பித் (179) தானையோடே (180) தலைச்சென்று (181) அரசமண்டிலமுற்றிச் (190) செற்ற தெவ்வர் நின்வழிநடக்கையினலே (180) நீ நட்டவர்குடியையுயர்க்குவை (131) யாகையினலே அவர்களுக்கு அறநெறிகாட்டிப் (191) பின்னர் அம்மண்டலங்களைச் சூழவிருந்த குறுநிலமன்னர் அரண்களிலுள்ளனவற்றை எளிதிற்கொண்டு (145) வீசிப் (146) போகிப் (148) புக்கு அவரருப்பங்களைவௌவிப் (149) பின்னர் உறுசெறுநர் (152) நின்வழிவாழாமையினலே (175) அவர்புலம் புக்கு (152) நீநரையுருமேறனையை (63) யாகையினலே அரசியல் பிழையாமல் (191) ஆர்ப்பிமிழ (182) நீறுஞெகிழ்ப்ப (184) நரல ஆர்ப்பக் (185) கணைசிதறித் (183) தொலைச்சி (153) அவரைக்கடந்து அட்டு (186) அவரெயிலைவௌவி (187) அவரைத் தூவறுத்தலின் (188) அப்பகைவர்தேஎம் (176) எரிமேயக் (155) காடாக (156) மா சேப்பப் (157) பாழாக (158) மறப்ப (161) ஆட (163) அகவச் (166) சேர (168) முரல (170) ஊர்தர (172) உகளக் (174) கெட்டுப் (175) பாழாயின (176); அங்ஙனம் பாழாயினபின்பு நீ செற்றவரரசு பெயர்க்குவை (132) யாகையினலே வேண்டுபுலத்திறுத்து (150) அந்நாடுகள் மேம்படுதற்குமருவின குருசில் (151) என வினைமுடிக்க.

193 - 4. [குடமுதற் றோன்றிய தொன்றுதொழு பிறையின், வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றம்:] குடமுதல் தோன்றிய தொன்று தொழு பிறையின் நின் வலம் படு கொற்றம் வழிவழி சிறக்க—மேற்றிசைக்கட்டோன்றிய நின்குலத்திற்குப் பழைதாகிய எல்லாருந்தொழும்பிறை நாடோறுஞ்சிறக்குமாபோல நின்னுடைய வெற்றியாலே நின்பின்னுள்ளோர்க்குண்டாங்கொற்றம் அவர்கள் வழிவழியாக மிகுவதாக;

195 - 6. [குணமுதற் றோன்றிய வாரிருண் மதியிற், றேய்வன கெடுகநின் றெவ்வ ராக்கம்:] குணமுதல் தோன்றிய ஆர் இருள் மதியின் நின் தெவ்வர் ஆக்கம் தேய்வன கெடுக—கீழ்த்திசைக்கட்டோன்றிய நிறைந்த †இருளைத்தரு

* "முன்றிணை முதல்வர்போலநின்று" (பதிற். 85), "தொல்லோர் சென்ற நெறிய போலவும்" (புறநா. 58.)

† "குறைமதிக் கதிரென மாய்க வென்றவம்" (கந்த. மார்க்கண்டே. 59.)

மதி நாடோறும் தேயுமாறுபோல நின்பகைவருடையஆக்கம் நாடோறும் தேய்வனவாய்க் கெடுவனவாக;

197 - 8. உயர் நிலை உலகம் அமிழ்தொடு பெறினும் பொய் சேண் நீங்கிய வாய் நட்பினையே—*ஒருபொய்யாலே உயர்ந்தநிலைமையையுடைய தேவருலகை அவர்நுகரும் அமுதத்தோடே பெறுவையாயினும் அவற்றைத்தருகின்றபொய் நின்னைக்கைவிட்டுநீங்க மெய்யுடனே நட்புச்செய்தலையுடையை;

இனி, 'பொய்சே ணீங்கிய வாய்நட்பி னையே' என்று பாடமாயின், மெய்யை நடத்தலைச் செய்தனையென்க.

199 - 201. முழங்கு கடல் ஏணி மலர் தலை உலகமொடு உயர்ந்த தேஎத்து விழுமியோர் வரினும் பகைவர்க்கு அஞ்சி பணிந்து ஒழுகலையே—முழங்குகடலாகிய எல்லையையுடைய அகன்றஇடத்தையுடைய உலகத்துள்ளாருடனே உயர்ந்த தேவருலகத்துத்தேவரும் பகைவராய்வரினும் †பகைவர்க்கு அஞ்சித் தாழ்ந்து ஒழுகலைச்செய்யாய்;

202 - 4. தென்புலம் மருங்கின் விண்டு நிறைய வாணன் வைத்த விழு நிதி பெறினும் பழி நமக்கு எழுக என்னாய்—தென்றிசைநிலத்தின் மலைமுழுதெல்லாம் நிறையும்படி வாணனென்னுஞ்சூரன்வைத்த ‡சீரிய பொருட்டிரள்களினைப் பெறுவையாயினும் பிறர்கூறும்பழி நமக்கு வருவதாகவென்று கருதாய்;

204 - 5. §விழு நிதி ஈதல் உள்ளமொடு இசை வேட்குவையே—சீரிதாகியபொருளைக் கொடுத்தலையுடைத்தாகிய நெஞ்சுடனே புகழை விரும்புவை;

206. அன்னாய்—அத்தன்மையையுடையாய்,

[நின்னொடு முன்னிலை யெவனோ] முன்னிலை நின்னொடு எவனோ—ஐம்பொறிகளுக்கும் நுகரப்படுவனவாய் முன்னிற்கப்படுவனவாகிய இந்நாப் பொருள்கட்கு நின்னோடு என்ன உறவுண்டு;

நின்னென்றது சிவான்மாவை. முன்னிலை ஆகுபெயர்.

207 - 8. [கொன்னொன்று கிளக்குவ லடுபோ ரண்ணல், கேட்டிசின வாழிி கெடுகநின் னவலம்:]

நின் அவலம் கெடுக—நின்னிடத்துண்டாகியமாயை இனிக்கெடுவதாக;

அடு போர் அண்ணல் அம்மாயையைக்கொல்கின்ற போர்த்தொழில்வல்ல தலைவனே,

கொன் ஒன்று கிளக்குவல் —பெரிதாயிருப்பதொருபொருளை யான் கூறுவன்; அஃது என்றாற்சாட்டுதற்கரிது;

---

* நாலடி. பொறையுடைமை, 10.

† "வலியரென வழிமொழியலன்" (புறநா. 239.)

‡ "புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனி, னுலகுடன் பெறினுங் கொள்ளலர்" (புறநா 182); "வங்கப்போழ் முந்நீர் வளம்பெறினும் வேறுமோ, சங்கப்போல் வான்மையார் சால்பு" (பு - வெ. வாகை. 31.)

§ திருக்குறள், 231.

என்றது *கற்றழியினை.

கேட்டிசின் — அதனைத் †தொல்லாணை நல்லாசிரியரிடத்தே கேட்பாயாக; வாழியென்பதனைச் சுற்றமொடுவிளங்கி (770) என்பதன்பின்னே கூட்டுக.

209. [கெடாது நிலைஇயர்நின் ‡சேண்விளங்கு நல்லிசை] சேண் விளங்கு நின் நல் இசை கெடாது நிலைஇயர் — சேட்புலமெல்லாம் சென்றுவிளங்கும் நின்னுடைய நல்லபுகழ் ஒருகாலமும் கெடாதே நிலைபெறுவதாக;

210 - 216. [தவாப்பெருக்கத் தறாயாணர், அழித்தானாக் கொழுந்திற்றி, யிழித்தானாப் பலசொன்றி, யுண்டானாக் கூர்நறவிற், றின்றாறா வினைவைக, னிலனெடுக் கல்லா வொண்பல் வெறுக்கைப், பயனற வறியா வளங்கெழு திருநகர்:]

தவா பெருக்கத்து §அறா யாணர் வளம் கெழு திருநகர் — கெடாத பெருக்கத்தினையுடைய நீங்காத புதுவருவாயாலே செல்வம்பொருந்தின திருமகளை யுடைய நகர்,

அழித்து ஆனா கொழு திற்றி தின்று - அழிக்கப்பட்டு விருப்பு அமையாத கொழுவிய தசையைத்தின்று,

“ஆட்டழிக்க” என்ப.

ஆனா பல சொன்றி இழித்து ஆனா கூர் நறவின் உண்டு - விருப்பமையாத பலவகைப்பட்ட சோற்றைத் தீதென்றுகூறிக் களிப்பமையாத மிக்க கள்ளை உண்டு.

ஆறா இனம் பாணர் (219)—அவ்விரண்டிலும் விருப்பமையாத திரட்சியையுடைய பாணரென்க.

தின்று உண்டு ஆறா இனப் பாணரென்க.

வைகல் – நாடோறும்.

நிலன் எடுக்கல்லா ஒள் பல் வெறுக்கை — நிலஞ்சுமக்கமாட்டாத ஒள்ளிய பலவாகிய பொருட்டிரள்களையும்.

என்றது பூண்களையும் பொன்னையும்.

பயன் அறவு அறியா நகர் – எக்காலமும் பயன்கெடுதலறியாத நகர்,

217 - 8. நரம்பின் முரலும் நயம் வரும் முரற்சி விறலியர் வறு கை குறு தொடி செறிப்ப — யாழ்வாசித்தாற்போலப் பாடும் நயப்பாடுதோன்றும் ||பாட்டினையுடைய விறல்பட ஆடுதலையுடையார் தம்முடைய பூணணியாத கைகளிலே குறிய தொடிகளையிட,

¶“நரம்பொடு வீணை நாவி னவின்றதோ வென்று நைந்தார்” என்றார் பிறரும்

---

* இப்புத்தகம் 56 - ம் பக்கம்பார்க்க.

† மதுரை. 761; பட். 170.

‡ “சேணுறு நல்லிசைச் சேயிழை கணவ” (பதிற். 88); “விண்பொரு புகழ்” (புறநா. 11), “வானேற நீண்ட புகழான்” (சீவக. 6.)

§ பொருந. 1.

|| “பாடனல் விறலியர்” (பரி. 17 : 15.)

¶ சீவகசிந்தாமணி, 658.

219. *பாணர் உவப்ப களிறு பல தரீஇ*—பாணர்மகிழும்படி யானைகள் பலவற்றையுங்கொடுத்து,

*நகரிலே யிருந்து (216) நாடோறும் (214) விரலியர் தொடிசெறியாநிற்பப் (218) பாணருவப்ப (219) வெறுக்கையையும் (215) யானையையுங் கொடுத்தென்க.*

*தரீஇ' என்றதனைச் *"செலவினும் வரவினும்" என்னும் பொதுச்சூத்திரத்தாற்கொள்க.*

220. *கலந்தோர் உவப்ப எயில் பல கடைஇ*—தம்முடன் நட்புக்கொண்டோர் மனமகிழும்படி அழித்த †அரண்களிற்கொண்ட பலபொருள்களையும் அவர்க்குச் செலுத்திக்கொடுத்து,

*என்றது - அவர் ‡வேண்டாவென்றுமறுக்கவும் தாம் வலியப்போகவிட்டென்றவாறு.*

221. *மறம் கலங்க தலை சென்று*—பகைவர்மறம் நிலைகுலையும்படி அவர்களிடத்தேசென்று,

222. *வாள் உழந்து அதன் தாள் வாழ்த்தி*—அவர்க்கு வாட்போரிலே வருந்தினபடியாலே அவ்வருத்தத்தினாற் பின்பும் அதன்கட்பிறக்கின்ற முயற்சியைவாழ்த்தி,

*என்றது, வாட்போரின்கட்பெற்ற இனிமையைப் பின்னும்விரும்பி அதிலேமுயல்கின்றானென வீரச்சிறப்புக்கூறிற்றாம்.*

*உழந்தென்னுஞ் செய்தெனெச்சம் காரணப்பொருட்டு. §"விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள், வைக்குந்தன் னாளை யெடுத்து." என்றார் பிறரும்.*

*உழந்த தன்னெனப் பெயரெச்சமாயின், தன்னென்னுமொருமை மேல்வருகின்ற மன்னர் (234) என்னும் பன்மைக்காகாமையுணர்க.*

223 - 4. *நாள் ஈண்டிய நல் அகவர்க்கு ||தேரோடு மா சிதறி*—விடியற்காலத்தே வந்துதிரண்ட அரசர்விரும்பப்பட்ட சூதர்க்குத் தேருடனே குதிரைகளையும் பலவாகக் கொடுத்து,

*என்றது, ¶"தாவி னல்லிசை கருதிய கிடந்தோர்க்குச் - சூதரேத்திய துயிலெடை நிலையும்" என்னும்விதியாற் சூதர் இருசுடர்தொடங்கி இன்றுகாறு*

---

* தொல்காப்பியம், கிளவியாக்கம், சூ. 28.

† "*அவ்வெயிற் கொண்ட செய்வுறு நன்கலம், பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கி*" (புறநா. 6.)

‡ "*கொள்ளே னென்ற லதனினு முயர்ந்தன்று*" (புறநா. 204.)

§ திருக்குறள், 776.

|| "*தேர்வீ சிருக்கை நெடியோன்*" (புறநா. 114), "*மாசித றிருக்கை*" (பதிற். 76.)

¶ தொல்காப்பியம், *புறத்திணையியல்*, சூ. 36.

வருகின்ற தங்குலத்துள்ளோர்புகழை அரசர் கேட்டற்குவிரும்புவரென்றுகருதி விடியற்காலத்தே பாசறைக்கண்வந்து துயிலெடைபாடுவரென்பது நன்குக் கூறிற்றும்.

அகவரென்றார், குலத்தோரெல்லாரையும் அழைத்துப் புகழ்வரென்பது பற்றி; ஆகுபெயர்; *"அகவல்" போல.

இனி வைகறைபாடும் பாணரென்பாருமுளர்.

வாழ்த்தித் திரண்டஅகவரென்க.

225 - 8. [சூடுற்ற சுடர்ப்பூவின், பாடுபுலர்ந்த நறுஞ்சாந்தின், விழுமிய பெரியோர் சுற்றமாகக், கள்ளி னிரும்பைக் கலஞ்செல வுண்டு:] கள்ளின் இரு பைக்கலம் செல உண்டு சூடு உற்ற சுடர் பூவின் பாடு புலர்ந்த நறு சாந்தின் விழுமிய பெரியோர் சுற்றம் ஆக — கள்ளினையுடைத்தாகிய பெருமையினையுடைய குப்பிகள் வற்றும்படியாகக் †கள்ளினையுண்டு சூடுதலுற்ற விளக்கத்தையுடைத்தாகிய ‡வஞ்சியினையும் பூசினபடியே புலர்ந்த நறிய சந்தனத்தினையுமுடைய சீரியபடைத்தலைவரைத் தமக்குச் சுற்றத்தாராகக்கொண்டு,

உண்டென்னுஞ் செய்தெனெச்சம உடையவென்னும் வினைக்குறிப்போடு முடிந்தது.

229. பணிந்தோர் தேஎம் தம் வழி நடப்ப — தம்மைவழிபட்டோருடைய தேசங்கள் தம் ஏவலைக்கேட்டு நடக்கையினாலே,

230. பணியார் தேஎம் பணித்து திறை கொண்மார் — தம்மை வழிபடாதோருடைய தேசங்களைத் தம்மேவல் கேட்கும்படிபண்ணி அவர்களைத் திறை வாங்குதற்கு,

231. பருந்து பறக்கல்லா பார்வல் பாசறை — உயரப்பறக்கும் பருந்துகளும் பறத்தலாற்றாத உயர்ச்சியையுடைய அரண்களையுடைய பாசறைக் கண்ணே,

§பார்வல், ஆகுபெயர்.

232. படு கண் முரசம் காலை இயம்ப — ஒலிக்கின்ற கண்ணையுடைய பள்ளியெழுச்சிமுரசம் நாட்காலத்தே ஒலிப்பவிருந்து,

233. வெடி பட கடந்து — பகைவர்படைக்குக் கேடுண்டாக வென்று,

வெடி - ஓசையுமாம்.

||வேண்டு புலத்து இறுத்த — பின்னும் அழிக்கவேண்டுமென்ற நிலங்களிலே சென்றுவிட்ட,

---

* தொல்காப்பியம், செய்யுளியல், சூ. 81.

† கள்ளுணல் இங்கே வீரபானம்; (சீவக. 1874.)

‡ வஞ்சி - வஞ்சிப்பூ அல்லது வஞ்சிமாலை; இது பகைமேற்செல்வோர் அணிதற்குரியது.

§ பார்வல் - அரசர், தம்பகைவர் செய்கைக்கண்வருதலைப் பார்த்திருத்தற்குரிய உயர்ச்சியையுடைய அரண்.

|| "யாண்டு நிலைப்பெயர வேண்டு புலத்திறுத்து" (பதிற்றுப்பத்து, 15.)

234. பணை கெழு பெரு திறல் பல் வேல் மன்னர் — வெற்றிமுரசு பொருந்தின பெரியவலியினையும் பலவேற்படையினையுமுடைய அரசர்கள்,

235 - 6. [கரைபொரு திரங்குங் கனையிரு முந்நீர்த், திரையிடு மணலினும் பலரே:] கனை இரு முந்நீர் கரை பொருது இரங்கும் திரை இடு மணலினும் பலரே — செறிதலையுடைய கரிய கடலிற் கரையைப் பொருது ஒலிக்கும் திரைகுவிக்கின்ற மணலினும் பலரே.

ஏகாரம், பிரிநிலை.

236 - 7. உரை செல மலர் தலை உலகம் ஆண்டு கழிந்தோரே — புகழ் எங்கும்பரக்கும்படி அகன்ற இடத்தையுடைய உலகங்களைத் தமது ஏவல்களை நடத்தி மக்கட்குரிய மனவுணர்வின்மையிற் பிறப்பறமுயலாது பயனின்றி மாண்டோர்,

ஏகாரம், ஈற்றசை. *"மக்க டாமே யாறறி வுயிரே" என்றதனால், மனவுணர்வின்மையினென்றார்.

தரீஇக் (219) கடைஇச் (220) சிதறிப் (221) பணிந்தோர்தேஎம் தம்வழி நடக்கையினாலே (229) பணியார்தேஎம் பணித்துத் திறைகொள்ளுதற்குப் (230) பெரியோர் சுற்றமாகக்கொண்டு (227) பாசறையிலே (231) முரசியம்ப இருந்து (232) கடந்து இறுத்த (233) மன்னர் (234) உலகமாண்டுகழிந்தோர் (237) திரையிடுமணலினும்பலர் (236) எனமுடிக்க.

இது †"மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமை" அன்றிப் பிறவியறமுயலாமையிற் கழிந்தமைகூறிற்று.

238. அதனால் — பயனின்மையாலே,

238 - 44. [குணகடல் கொண்டு குடகடன் முற்றி, யிரவு மெல்லையும் விளிவிட னறியா, தவலு மிசையு நீர்த்திரள் பீண்டிக், கவலையங் குழும்பி னருவி யொலிப்பக், கழைவளர் சாரற் களிற்றின நடுங்க, வரைமுத லிரங்கு மேறொடு வான்ஞெமிர்ந்து, சிதரற் பெரும்பெயல் சிறந்தலின்:]

வான் குணகடல் கொண்டு ‡குடகடல் வரைமுதல் முற்றி — மேகம் கீழ்த்திசைக் கடலிடத்தே நீரைமுகந்து மேற்றிசைக் கடலருகின் மலையிடத்தே தங்கி,

இரவும் எல்லையும் விளிவு இடன் அறியாது — இரவும்பகலும் ஒழிந்தஇடத்தை அறியாது.

அவலும் மிசையும் நீர் திரள்பு ஈண்டி கவலை அம் குழும்பின் அருவி ஒலிப்ப — பள்ளமும் மேடுமாகிய பலநிலத்துண்டாகிய நீரினாலே திரண்டு சேரக் குவிந்து கவலைக்கிழங்கு கல்லின அழகியகுழியிலேவீழ்ந்த அருவியொலிக்கும்படி,

---

* தொல்காப்பியம், மரபியல், சூ. 33.
† ,, புறத்திணையியல், சூ. 24.
‡ "மேன்மலைமுற்றி" (பரி. 12.)

கழை வளர் சாரல் களிறு இனம் நடுங்க இரங்கும் ஏறொடு ஞெமிர்ந்து— மூங்கில்வளர்ந்த மலைப்பக்கத்திலே யானைத்திரள் நடுங்கும்படி ஒலிக்கும் உருமேற்றோடே பரந்து,

சிதரல் பெரு பெயல்—சிதறுதலையுடைய பெருமழை,

சிறத்தலின்—மிகுகையினாலே,

வான் முற்றி ஞெமிர்ந்து அருவியொலிக்கும்படி பெரும்பெயல் விளிவிடனறியாது சிறத்தலினெனமுடிக்க.

244 - 6. [தாங்காது, குணகடற் கிவர்தருங் குரூஉப்புன லுந்தி, நிவந்து செ னீத்தங் குளங்கொளச் சாற்றி] தாங்காது உந்தி நிவந்து செல் நீத்தம் குளம் கொள சாற்றி குணகடற்கு இவர்தரும் குரூஉ புனல்—யாறுகள் தாங்காமல் யாற்றிடைக்குறையிலே ஓங்கிசசெல்கின்றபெருக்கைக் குளங்கள்கொள்ளும்படி நிறைத்துக் கீழ்த்திசைக் கடலுக்குப் பரந்துசெல்லும் நிறத்தையுடைய நீராலே,

247. களிறு மாய்க்கும் கதிர் கழனி—யானைகள் நின்றால் அவற்றை மறைக்கும்படிவிளைந்த கதிரையுடைய கழனியிலும்,

248. ஒளிறு இலஞ்சி—விளங்கும் மடுக்களிலும்,

248 - 9. அடை நிவந்த முள் தாள சுடர் தாமரை—இலைக்குமேலான முள்ளையுடைய தாள்களையுடையவாகிய ஒளியினையுடைய தாமரைப்பூவினையும்,

250. கள் கமழும் நறு நெய்தல்—தேனாறும் நறிய நெய்தற்பூவினையும்.

251. வள் இதழ் அவிழ் நீலம்—பெருமையையுடைய இதழ்விரிந்த நீலப்பூவினையும்.

252. மெல் இலை அரி ஆம்பலொடு—மெல்லிய இலையினையும் வண்டுகளையுமுடைய ஆம்பற்பூவோடே.

அரி - மென்மையுமாம்.

253. வண்டு இறை கொண்ட கமழ் பூ பொய்கை—வண்டுகள் தங்குதல் கொண்ட மணநாறும் பிறபூக்களையுமுடைய பொய்கைகளிலும்,

254 - 5. கம்புள் சேவல் இன் துயில் இரிய வள்ளை நீக்கி *வய மீன் முகந்து — †கம்புட்கோழி இனிய உறக்கங்கெடும்படி வள்ளைக்கொடிகளைத் தள்ளி வலியையுடையமீன்களை முகந்துகொண்டு,

256 ‡கொள்ளை சாற்றிய கொடு முடி வலைஞர்—விலைகூறிவிற்ற கொடிய முடிகளையுடைய வலையான்மீன்பிடிப்பார்,

கழனியிலும் (247) இலஞ்சியிலும் (248) பொய்கைகளிலும் (253) மீன் முகந்துசாற்றிய வலைஞரென்க.

* "வயவலியாகும்" (தொல். உரி. 68.)

† கம்புட்கோழி - சம்பங்கோழி.

‡ "பரதமாக்கள் ......... கொள்ளைசாற்றி" (அகநா. 30.)

257\. வேழம் பழனத்து நூழிலாட்டு ஓதை (258)— *கொறுக்கைச்சியை யுடைய மருதநிலத்துமீனைக் கொன்றுகுவித்தலாற் பிறந்த ஓசை,

258\. கரும்பின் எந்திரம் ஓதை—கரும்பிற்கு இட்ட ஆலையிடத்து ஓசை,

கட்பின் ஓதை—களைபறிப்பிடத்தோசை,

259 - 260 அள்ளல் தங்கிய பகடு உறு விழுமம் கள் ஆர் களமர் பெயர்க்கும் ஆர்ப்பே—மூத்தலான் அள்ளலிலே வலியற்றுத்தங்கிய எருதுற்றவருத்தத்தைக் கள்ளையுண்ணுங்களமர் பெயர்க்குமாரவாரம்,

261 - 2. ஒலிந்த பகன்றை விளைந்த கழனி வல் கை வினைஞர் அரி பறை—தழைத்த பகன்றையினையுடைய நெல்லுமுற்றியகழனியில் அந்நெல்லை வலியகையினாலே அறுப்பாருடைய அரித்தெழுகின்ற பறையோசை,

262 - 4. இன் குரல் தளி மழை பொழியும் தண் பரங்குன்றில் கலி கொள் சும்மை — இனியவோசையினையுடைய துளிகளையுடைய மேகந்தங்குங் குளிர்ந்த திருப்பரங்குன்றில் விழாக்கொண்டாடுமாரவாரம்,

†"வயிரியர், முழவதிர்ந் தன்ன முழக்கத் தேரேறு" என்றார்பிறரும்.

264 - 6. ஒலி கொள் ஆயம் ததைந்த கோதை தாரொடு பொலிய புணர்ந்து உடன் ஆடும் இசையே—புதுநீர்விழவின் ஆரவாரத்தைத் தம்மிடத்தே கொண்ட ‡மகளிர்திரள் தம்மிடத்து நெருங்கினகோதை தம்கணவர்மார்பின் மாலையுடனே அழகுபெறக் கூடி அவர்களுடனே நீராடுமோசை,

266 - 7. அனைத்தும் அகல் இரு வானத்து இமிழ்ந்து இனிது இசைப்ப—அவ்வோசைமுழுவதூஉம் தன்னையொழிந்தபூதங்கள் விரிதற்குக்காரணமாகிய பெருமையையுடைய ஆகாயத்தேசென்று முழங்கி ஆண்டுவாழ்வார்க்கு இனிதாக ஒலிப்ப,

268 - 9. குருகு நரல மனை மரத்தான் மீன் சீவும் பாண் சேரியொடு—குருகென்னும்பறவைகள் கூப்பிடும்படி மனையிடத்து மரங்கடோறும் மீனைத் திருத்தும் பாணர்குடியிருப்பிற் பாடலாடலால் எழுந்த ஓசையோடே,

270\. மருதம் சான்ற—ஊடலாகிய உரிப்பொருளமைந்த,

தண்பணை சுற்றி—மருதநிலஞ் சூழப்பட்டு,

ஒருசார்—ஒருபக்கம்,

ஒருசார் (270) சேரியிலோசையோடே (269) ஓதை (258) ஆர்ப்புப் (260) பறையோசை (262) சும்மை (264) இசையாகிய அவ்வோசைமுழுவதும் (266) இசைக்கும்படி (267) தண்பணை சுற்றப்பட்டு (270) என்க.

271\. சிறு தினை கொய்ய—சிறியதினையையறுக்க,

---

* கொறுக்கைச்சி - கொறுக்காந்தட்டை

† அகநானூறு, 328; "முழவுகார்கொள" (பெரிய. திருக்குறிப்பு. 10)

‡ "மகளிர் கோதை மைந்தர் புனையவு, மைந்தர் தண்டார் மகளிர் பெய்யவும்" (பரி. 20.)

கனைவை கறுப்ப—எள்ளினக்காய் முற்ற,

272. கரு கால் வரகின் இரு குரல் புலர—கரியதாளினையுடைய வரகினது கதிர்தாகியகதிர் முற்ற,

273. ஆழ்ந்த குழும்பில் திரு மணி கிளர—ஆழ்ந்தகுழியிலே திருவினையுடையமணிசுடர்துவிளங்க,

274 - 6. [எழுந்த கடற்றி னன்பொன் கொழிப்பப், பெருங்கவின் பெற்ற சிறுதலை நௌவி, மடக்கட் பிணையொடு மறுகுவன வுகள:] பெருகவின் பெற்ற சிறு தலை நௌவி எழுந்த கடற்றில் நல் பொன் கொழிப்ப மடம் கண் பிணையொடு மறுகுவன உகள—பெரிய அழகைப்பெற்ற சிறியதலையினையுடைய நௌவிமான் வளர்ந்தகாட்டில் மாற்றற்றபொன் மேலேயாம்படி மடப்பத்தையுடைத்தாகிய கண்ணினையுடைய பிணையோடே சுழல்வனவாய்த் துள்ள,

277 சுடர் பூ கொன்றை தாஅய நீழல்—ஒளியினையுடையவாகிய பூக்களையுடைய கொன்றைபரந்த நிழலிடத்தே,

278. பாஅயன்ன பாறை அணிந்து—பரப்பினலொத்த பாறை அழகு பெற்று,

279 - 81. [நீலத் தன்ன பைம்பயிர் மிசைதொறும். வெள்ளி யன்ன வொள்வீ யுதிர்த்து, சுரிமுகிழ் முசுண்டையொடு முல்லை தாஅய்:] நீலத்து அன்ன பைம்பயிர் மிசைதொறும் சுரி முகிழ் முசுண்டையொடு முல்லை வெள்ளி அன்ன ஒள் வீ உதிர்ந்து தாய்—நீலமணியையொத்த பசியபயிர்களினிடங்கடோறும் முறுக்குண்ட அரும்புகளையுடைய முசுண்டையுடனே முல்லையினுடையவெள்ளியினிறத்தையொத்த ஒள்ளியபூக்கள் உதிர்ந்து பரந்து,

282 - 4. [மணிமருளணைய்த லுறழக் காமர், துணிநீர் மெல்லவற் றொய்யிலொடு மலர, வல்லோன் றைஇய வெறிக்களங் கடுப்ப:] வல்லோன் தைஇய வெறி களம் கடுப்ப காமர் துணி நீர் மெல் அவல் மணி மருள் நெய்தல் தொய்யிலொடு உறழ மலர—இழைத்தல்வல்லவன் இழைத்த கூத்தினையுடைய களத்தையொப்ப விருப்பத்தையுடைய தெளிந்த நீரையுடைத்தாகிய நெகிழ்ந்த பள்ளத்திலே நீலமணியென்றுமருளும் நெய்தல் தொய்யிற்கொடியோடே மாறுபட மலர,

285. முல்லை சான்ற புறவு அணிந்து ஒருசார்—இருத்தலாகிய உரிப்பொருளமைந்த காடுசூழ்ந்து ஒருபக்கம்,

ஒருசார் (285) அணிந்து (278) தாஅய்க் (281) கொய்யக் கறுப்பப் (271) புலரக் (272) கிளர (273) உகள (276) மலரப் (283) புறவுசூழப்பட்டு (285) எனமுடிக்க.

*"பன்முறையானும்" என்பதனாற் பலவினையெச்சம் விராஅய் அடுக்கி அணிந்தென்னும் வினைகொண்டன.

* தொல்காப்பியம், வினையியல், சூ. 36.

286 - 7. நறு காழ் கொன்று கோட்டின் வித்திய குறு கதிர் தோரை—நறியஅகிலையும் சந்தனத்தையும்வெட்டி மேட்டுநிலத்தேவிதைத்த குறியகதிர்களையுடைய தோரைநெல்லும்,

287. நெடு கால் ஐயவி—நெடியதாளினையுடைய வெண்சிறுகடுகும்,

288. ஐவனம் வெள் நெல்லொடு அரில் கொள்பு நீடி—*ஐவனநெல்லென்னும் வெள்ளியநெல்லோடே பிணக்கங்கொண்டு வளரப்பட்டு,

289 - 90. இஞ்சி மஞ்சள் பைங்கறி பிறவும் பல்வேறு தாரமொடு கல் அகத்து ஈண்டி — இஞ்சியும் மஞ்சளும் பசுத்தமிளகுகொடியும் ஒழிந்த பலவாய் வேறுபட்டபண்டங்களும் கற்றரையிடத்தே குவியப்பட்டு,

291. †தினை விளை சாரல் கிளி கடி பூசல்—தினையும்விளையப்படுகின்ற மலைப்பக்கத்திற் படியும் கிளியையோட்டும் ஆரவாரம்,

நீடி ஈண்டியென்னுஞ் செய்தெனெச்சங்கள் விளையுமென்னும் பிறவினை கொண்டன; ‡"அம்முக் கிளவி" என்னுஞ் சூத்திரவிதியால்.

292 - 3. மணி பூ அவரை §குரூஉ தளிர் மேயும் ஆமா கடியும் கானவர் பூசல்—பன்மணிபோலும்பூவினையுடைய அவரையினது நிறவியதளிரைத் தினனும் ஆமாவையோட்டுங் கானவருடையஆரவாரம்,

294 - 5. சேணோன் அகழ்ந்த மடி வாய் பயம்பின் ||வீழ் முகம் கேழல் அட்ட பூசல்—மலைமிசையுறையுங்குறவன் சல்லப்பட்ட மூடினவாயையுடைய பொய்க்குழியிலேவிழும்பக்குவத்தினையுடைய ஆண்பன்றியைக் கொன்றதனாலுண்டான ஆரவாரம்,

சேணோன் அகழ்ந்த பயம்பு, இழிகுலத்தோனாகியவன் அகழ்ந்தபயம்பென்பாருமுளர்.

296 - 7. கரு கால் வேங்கை ¶இரு சினை பொங்கர் நறு பூ கொய்யும கானவர் (293) பூசல்—கரியதாளினையுடைய வேங்கையிடத்துப் பெரிய கவடுகளிற் றோன்றிய சிறியகொம்புகளிற்பூத்த நறியபூவைப்பறிக்குமகளிர் புலிபுலியென்றுகூறுமாரவாரம்,

297 - 8. இரு கேழ் ஏறு அடு வய புலி பூசலொடு—கரியநிறத்தையுடைய பன்றியைக்கொல்லுகின்ற வலியினையுடைய புலியினது ஆரவாரத்தோடே,

ஏறு $ - ஆணேறுமாம்.

298. அனைத்தும்—முழுவதும்,

299 - 301. [இலங்குவெள் ளருவியொடு சிலம்பகத் திரட்டக், **கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பணிர். தருங்கடி மாமலை தழீஇ:]

---

* "வெண்ணெ லருந்திய வரிநுதல் யானை" (நற். 7.)
† பி - ம். தினைவளர்.
‡ தொல்காப்பியம், வினையியல், சூ. 34.
§ பி - ம். குரூஉத்திரள்.
|| பி - ம். விழுமுகக்.
¶ பி - ம். பெருஞ்சினைப்.
$ பி - ம். ஆனையுமாம்.
** பி - ம். கருங்கோற்குறிஞ்சி.

*இலங்கு வெள் அருவியொடு கரு கால் வெற்பு அணிந்து—விளங்குகின்ற வெள்ளிய அருவிவீழ்கின்றவாற்றாலே கரிய நீரோடுங்கால்களையுடைய பக்கமலைகள்சூழ்ந்து,

சிலம்பு அகத்து இரட்ட—மலையிடத்தே மாறிமாறியொலிப்ப,

குறிஞ்சி சான்ற—புணர்ச்சியாகிய உரிப்பொருளமைந்த,

அரு கடி மா மலை தழீஇ—பெறுதற்கரிய சிறப்பினையுடைய பெரியமலை தழுவப்பட்டு,

301. ஒருசார்—ஒருபக்கம்.

ஒருசார் (301), அருவியாற் (299) கருங்காலையுடையவெற்பணிதலாலே (300) நீடி (288) ஈண்டி (290) விளையுஞ் சாரலிற் கிளிகடி பூசல் (291), கானவர்பூசல் (293), அட்டபூசல் (295), கொய்யும்பூசலாகிய (297) அனைத்துப்பூசலும் புலிப்பூசலோடே (298) சிலம்பகத்து இரட்டக் (299) குறிஞ்சிசான்ற (300) அருங்கடியினையுடைய மலைதழுவப்பட்டு (301) எனமுடிக்க.

302. [இருவெதிர்ப் பைந்தூறு கூரெரி நைப்ப:] இரு வெதிர் கூர் எரி பைந் தூறு †நைப்ப—பெரியமூங்கிலிற்பிறந்த மிக்கநெருப்புப் பசியதூறுகளைச் சுடுகையினாலே,

303. கிழத்த யானை மேய் புலம் படர—ஓய்ந்தயானைகள் தமக்கு மேயலாமிடங்களிலே போக,

304. கலித்த இயவர் இயம் ‡தொட்டன்ன—மகிழ்ந்த வாச்சியக்காரர் தம்வாச்சியத்தை வாசித்தாலொத்த.

305. கண் விடுபு உடையூ தட்டை கவின் அழிந்து—மூங்கிலின் §கண் திறக்கப்பட்டு உடைந்து ||இயந்தொட்டன்ன (304) ஓசையையுடைய தட்டை அழகழிகையினாலே,

தட்டப்படுதலிற் றட்டையென்றார்.

நெருப்பு நைக்கையினாலே (302) பயிரின்றித் தட்டை கவினழிகையினாலே (305) ஓய்ந்தயானை மேய்புலம் படரும்படி (303) அருவியான்ற மலை (306) யென்க.

கவினழியவெனத் திரித்துமுடித்தலுமாம்.

306. அருவி ஆன்ற அணி இல் மா மலை—அருவிகளில்லையான அழகில்லாத பெரியமலையிடத்து விடரகம் (308.)

---

* "இலங்கு மருவித் திலங்கு மருவித்தே.........மலை" (கலி. 41.)

† "கோடெரிநைப்பவும்" (பொருந. 234.)

‡ பி - ம். தொட்டென்ன.

§ கண் - கணுக்கள்.

|| இயம் - வாத்தியம்.

307. மை கண்டன்ன புல் முனி அம் காட்டு—மைக்கோலைக்கண்டாற் போன்ற *ஊகம்புல்முவர்த்த அழகியகாட்டிடத்தில்,

308. கம சூழ் †கோடை விடர் அகம் முகந்து—நிறைவினையுடைய ‡சூறைவளியை முழைஞ்சிடங்கள் முகந்துகொள்கையினாலே,

309. கால் உற கடலின் ஒலிக்கும் சும்மை—காற்றுமிகுந்த கடல்போல் ஒலிக்கும் ஆரவாரத்தையுடைய வேனிற்குன்றம் (313).

310 - 11. இலை வேய் குரம்பை உழை அதள் பள்ளி உவலை கண்ணி வல் சொல் §இளைஞர்—குழையாலேவேய்ந்த குடிலிலிருக்கும் மான்றோலாகிய படுக்கையினையும், தழைவிரவினகண்ணியினையும். கடியசொல்லினையுமுடைய இளையோர்,

312. சிலை உடை கையர் கவலை காப்ப—வில்லையுடைய கையையுடையராய்ப் பலவழிகளில் ஆறலைகள்வரைக் காக்கும்படி சுரஞ்சேர்ந்து (314) என்க.

313. நிழல் உரு இழந்த வேனில் குன்றத்து—||நிழல் தன்வடிவையிழத்தற்குக்காரணமான முதுவேனிற்காலத்தையுடைய மலையிடத்துச் சுரம் (314),

314. பாலை சான்ற—பிரிவாகிய உரிப்பொருளமைந்த.

சுரம் சேர்ந்து—அருநிலஞ் சேரப்பட்டு.

ஒருசார்—ஒருபக்கம்,

ஒருசார் (314). மலை (306) விடரகம் கோடையைமுகக்கையினாலே (308) கடலினொலிக்குஞ் சும்மையையுடைய (309) வேனிற்குன்றத்துப் (313) பாலை சான்ற சுரஞ்சேரப்பட்டு (314) என்க.

பாலைக்கு ¶நடுவணதென்னும் பெயர்கூறியவதனால், அது தத்தம்பொருளானும் $"முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப். பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்" என **முதற்பொருள்பற்றிப் பாலைநிகழ்தலானும் பாலையையும் வேறோர்நிலமாக்கினர்.

---

* "ஊகம் வேய்ந்த வுயர்நிலை" (பெரும்பாண். 122.)

† பி - ம். கொட்டை.

‡ சூறைவளி - சுழல்காற்று.

§ பி - ம் இளையர்.

|| "முருகு நாறுபொன் னிதழியார் முண்டகப் பதத்தி, னுருவு மாருயிர் பருவத்தின் மீளவுற் றிடல்போற், பருதி வானவ னுச்சமாம் பதத்துமென மலர்ப்பூத், தருவி னீங்கிய நிழலெலாந் தருவடி யடைந்த" (காஞ்சி. பன்னிரு நாம. 340.)

¶ நடுவணதென்னும்பெயர் பாலைக்குண்மையையும் அப்பெயர்க்காரணத்தையும் "அவற்றுள், நடுவணது" (தொல். அகத்திணை. 2) என்னும் சூத்திர உரையாலுணர்க.

$ சிலப்பதிகாரம், காடுகாண்காதை, 64 - 6.

** முதற்பொருளென்றது ஈண்டு நிலமுதற்பொருள்களை.

315. முழங்கு கடல் தந்த விளங்கு கதிர் முத்தம்—ஒலிக்குங்கடல்தந்த விளங்குகின்ற ஒளியினையுடையமுத்து,

316. *அரம் போழ்ந்து அறுத்த கண் நேர் இலங்கு வளை—வாளரம் கீறியறுத்த இடம் நேரிதாகிய விளங்கும்வளை,

நேர்ந்தவளையுமாம்.

317. பரதர் தந்த பல் வேறு கூலம்—செட்டிகள் கொண்டுவருதலால் மிக்க பலவாய் வேறுபட்ட பண்டங்கள்,

தந்ததென்றும் பாடம்.

318. [இருங்கழிச் செறுவிற் தீம்புளி வெள்ளுப்பு·]

இரு கழி செறுவின் வெள் உப்பு—கரிய கழியிடத்துப் பாத்தியில்விளைந்த வெள்ளிய உப்பு,

தீ புளி— †கருப்புக்கட்டி கூட்டிப் பொரித்தபுளி,

319. பரந்து ஓங்கு வரைப்பின் — மணற்குன்று பரந்துயருங் கானவிடத்தே,

319 - 20. வல் கை திமிலர் ‡கொழு மீன் குறைஇய துடி கண் துணியல்—வலியகையினையுடைய திமிலர் கொழுவிய மீன்களையறுத்த §துடியின் கண்போலுருண்ட துணிகள்,

என்றது கருவாடுகளை.

தீம்புளியினையும், உப்பினையும், ||கருவாட்டினையுமேற்றின நாவா (321) யென்க.

321. விழுமிய நாவாய்—சீரியமரக்கலம்.

பெருநீர் ஓச்சுநர்—மரக்கலமீகாமர்,

322. நனை தலை தேஎத்து—அகன்ற இடத்தையுடைய யவனமுதலிய தேயத்தினின்றும்,

நல் கலன் உய்ம்மார்—இவ்விடத்துண்டாகிய பேரணிகலங்களை ஆண்டுச் செலுத்துதற்கு,

323. புணர்ந்து பலருங்கூடி,

உடன் கொணர்ந்த புரவியொடு—சேரக்கொண்டுவந்த குதிரைகளோடே,

அனைத்தும்—முழுவதும்,

---

* "அரம்போழ்வளை" (அகநா. 6, 125.)

† கருப்புக்கட்டி - கரும்பின்வெல்லம்.

‡ கொழுமீனென்றே ஒருவகை மீனுண்டென்பர்; "செய்த்தலைக் கொழுமீன்", "கொழுமீன் சுடுபுகை" (நற். 291, 311.); "நுளையர்கள் கொடுப்பன கொழுமீன்" (பெரிய. திருக்குறிப்பு. 35.)

§ "வாராற்றுடிக்கட்கொழுங்குறை" (அகநா. 196.)

|| கருவாடு - உலர்ந்தமீன்.

324. வைகல் தோறும் *வழி வழி சிறப்ப—நாடோறும் முறைமையே முறைமையே மிகுகையினாலே வளம்பல பயின்று (325) என்க.

325. நெய்தல் சான்ற—இரங்கலாகிய உரிப்பொருளமைந்த.

வளம் பல பயின்று—பலசெல்வமும் நெருங்கப்பட்டு.

ஒருசார், பெருநீரோச்சுநர் (321) கலனும்மார தேளத்துக் (322) கொணர்ந்த புரவியோடே (323) முகதம் (315) வினை (316) கூலமானவை (317) அனைத்தும் (323) வழிவழிச்சிறப்ப (324) வளம்பல பயிலப்பட்டு (325) என்க

நெய்தல்சான்ற (325) பரந்தோங்குவரைப்பின்கண்ணே (319) வளம்பல பயிலப்பட்டு (325) எனமுடிக்க.

325 - 6 ஆங்கு ஐம்பால் திணையும் கவினி—அம்மண்டலத்தின்கண்ணே ஐந்துகூற்றிணையுடைய நிலங்களும் அழகுபெற்று,

அமை வர - பொருந்துதல்தோன்ற,

327 - 8 [முழவிமிழ் மகலாங்கண் †விழவுநின்ற வியன்மறுகிற்]

முழவு இமிழும் விழவு நின்ற வியல் மறுகின—முழவுமுழங்குந் திருநாளொழிவிலபெற்ற அகற்சியையுடைய தெருவினையும்,

329. துணங்கை—துணங்கைக்கூத்தினையும்,

அம் தழூஉவின—அழகினையுடைய குரவைக்கூத்தினையும்,

மணம் கமழ் சேரி—மணநாறுகின்ற பரத்தையர்சேரியினையும்,

330. ‡இன் கலி யாணர்—இனிய செருக்கினையுடைத்தாகிய புதுவருவாயினையுமுடைய,

327 அகல் ஆங்கண்—அகன்ற ஊரிடத்தே,

330 [குழூஉப்பல பயின்று] பல குழூஉ பயின்று—பலகுடித்திரள் நெருங்கி,

ஆங்கு—அந்நாட்டில்

331. பாடல் சான்ற நல் நாட்டு நடுவண்—புலவரால் பாடுதல் முற்றுப்பெற்ற நல்லநாட்டிற்கு நடுவணதாய,

ஒருசார் தண்பணை சுற்றப்பட்டு (270) ஒருசார் மலைதழுவப்பட்டு (301) ஒருசார் காடுதழுவப்பட்டு (285) ஒருசார் சுரஞ்சேரப்பட்டு (314) ஒருசார் நெய்தல்சான்ற (325) வரைப்பின்கண்ணே (319) வளம்பல பயிலப்பட்டு ஆங்கு (325) ஐம்பாற்றிணையுங்கவினி (326) அந்நாட்டிடத்து (330) அகலாங்கண் (327) குழூஉப்பலபயின்று (330) அமைவரப் (326) பாடல்சான்ற நன்னாட்டு நடுவணதாய் (331) என்க

* வழிவழிச்சிறக்க: (மதுரை. 194.)
† (மதுரை. 98.) ‡ பி - ம். இன்கண்.

332 - 7. [கலைதாய வுயர்சிமையத்து, மயிலகவு மலிபொங்கர், மந்தியாட மாவிசும்புகந்து, முழங்குகால் பொருத மரம்பயில் காவின், இயங்குபுனல் கொழித்த வெண்டலைக் குவவுமணற், கான்பொழில் :]

கலை தாய மலி பொங்கர் மந்தி ஆட மரம் பயில் கா—முசுக்கலைகள்தாவின மிக்ககொம்புகளிலே அவற்றின்மந்திகள் விளையாடும்படி மரம்நெருங்கினசோலை,

மா விசும்பு உகந்து—பெரிய ஆகாயத்தேசெல்ல உயர்கையினாலே,

முழங்கு கால் பொருத மரம்—முழங்குகின்ற பெருங்காற்றடித்த மரம்.

மயில் அகவும் காவின்—மயில் ஆரவாரிக்குங் காவோடே,

உயர் சிமையத்து இயங்கு புனல் கொழித்த வெள் தலை குவவு மணல் கான் பொழில்—உயர்ந்த மலையுச்சியிடத்துநின்றும் வீழ்ந்தோடுகின்ற நீர் கொழித்து எறட்ட வெள்ளிய தலையினையுடைத்தாகிய திரட்சியையுடைய மணற்குன்றிடத்து மணத்தையுடைய பொழில்,

337. தழீஇய அடை கரை தோறும்—காவோடே பொழில்சூழ்ந்த நீரடையும் கரைகடோறும்,

338 - 42. [தாதுசூழ் கோங்கின் பூமலர் தாஅய்க், கோதையி னொழுகும் *விரிநீர் நல்வரல், அவிரறல் வையைத் துறைதுறை தோறும், பல்வேறு †பூத் திரட் டண்டலை சுற்றி, யழுந்துபட் டிருந்த பெரும்பா ணிருக்கையும் :]

தாது சூழ் கோங்கின் பூ மலர் தாஅய் கோதையின் ஒழுகும் விரிநீர் நல் வரல் வையை—தாதுக்கள்சூழ்ந்த கோங்கினுடையபூவும் ஏனைமலர்களும்பரந்து மாலையொழுகினாற்போல ஓடும் பெருநீர் நன்றாகிவருதலையுடைய வையையிடத்து,

அவிர் அறல் துறை துறை தோறும் பல் வேறு பூ திரள் தண்டலை சுற்றி அழுந்து பட்டு இருந்த ‡பெரும்பாண் இருக்கையும்—விளங்குகின்ற அறலையுடைய துறைகடோறும் துறைகடோறும் பலவாய்வேறுபட்ட பூத்திரளையுடைய பூந்தோட்டங்கள் சூழப்பட்டு நெடுங்காலம் அடிப்பட்டிருந்த பெரிய பாண்சாதியின் குடியிருப்பினையும்,

343 - 5. நிலனும் வளனும் கண்டு அமைகல்லா விளங்கு பெரு திருவின் மானவிறல்வேள் அழும்பில் அன்ன நாடு இழந்தனரும்—நிலத்தையும் அதிற் பயிர்களையும் பார்த்தபார்வை மாறுதலமையாத விளங்கும் பெரியசெல்வத்தினையுடைய மானவிறல்வேளென்னுங் குறுநிலமன்னனுடைய அழும்பிலென்னும் ஊரையொத்த நாடுகளையிழந்தவர்களும்,

346. கொழு பல் பதிய குடி இழந்தனரும்—செல்வத்தினையுடைய பல ஊர்களிடத்தனவாகிய குடிகளையிழந்தவர்களும்,

---

* பி - ம். விரிநீ ரவிரற லல்வரல் வையை.

† பி - ம். பூவின் றண்டலை

‡ பெரும்பாணச்சாதியினிலக்கணத்தை இப்புத்தகம் 129 - ஆம் பக்கத்திற் காண்க.

324. வைகல் தோறும் *வழி வழி சிறப்ப—நாடோறும் முறைமையே முறைமையே மிகுகையினாலே வளம்பல பயின்று (325) என்க.

325. நெய்தல் சான்ற—இரங்கலாகிய உரிப்பொருளமைந்த,

வளம் பல பயின்று—பலசெல்வமும் நெருங்கப்பட்டு.

ஒருசார், பெருநீரோச்சுநர் (321) கலனும்மார் தேளத்துக் (322) கொணர்ந்த புரவியோடே (323) முத்தம் (315) வளை (316) கூலமானவை (317) அனைத்தும் (323) வழிவழிச்சிறப்ப (324) வளம்பல பயிலப்பட்டு (325) என்க.

நெய்தல்சான்ற (325) பரந்தோங்குவரைப்பின்கண்ணே (319) வளம்பல பயிலப்பட்டு (325) எனமுடிக்க.

325 - 6. ஆங்கு ஐம்பால் திணையும் கவினி—அம்மண்டலத்தின்கண்ணே ஐந்துகூற்றினையுடைய நிலங்களும் அழகுபெற்று,

அமை வர—பொருந்துதல்தோன்ற,

327 - 8. [முழவிமிழு மகலாங்கண், †விழவுநின்ற வியன்மறுகிற்:]

முழவு இமிழும் விழவு நின்ற வியல் மறுகின்—முழவுமுழங்கும் திருநாள் நிலைபெற்ற அகற்சியையுடைய தெருவினையும்,

329. துணங்கை—துணங்கைக்கூத்தினையும்,

அம் தழூஉவின்—அழகினையுடைய குரவைக்கூத்தினையும்,

மணம் கமழ் சேரி—மணநாறுகின்ற பரத்தையர்சேரியினையும்,

330. ‡இன் கலி யாணர்—இனிய செருக்கினையுடைத்தாகிய புதுவருவாயினையுமுடைய,

327. அகல் ஆங்கண்—அகன்ற ஊரிடத்தே,

330 [குழூஉப்பல பயின்று:] பல குழூஉ பயின்று—பலகுடித்திரள் நெருங்கி,

ஆங்கு—அந்நாட்டில்,

331. பாடல் சான்ற நல் நாட்டு நடுவண்—புலவராற் பாடுதல் முற்றுப்பெற்ற நல்லநாட்டிற்கு நடுவணதாய்,

ஒருசார் தண்பணை சுற்றப்பட்டு (270) ஒருசார் மலைதழுவப்பட்டு (301) ஒருசார் காடுதழுவப்பட்டு (285) ஒருசார் சுரஞ்சேரப்பட்டு (314) ஒருசார் நெய்தல்சான்ற (325) வரைப்பின்கண்ணே (319) வளம்பல பயிலப்பட்டு ஆங்கு (325) ஐம்பாற்றிணையுங்கவினி (326) அந்நாட்டிடத்து (330) அகலாங்கட் (327) குழூஉப்பலபயின்று (330) அமைவரப் (326) பாடல்சான்ற நன்னாட்டு நடுவணதாய் (331) என்க.

---

* வழிவழிச்சிறக்க: (மதுரை. 194.)

† (மதுரை. 98.)  ‡ பி - ம். இன்கண்.

332 - 7. [கலைதாய வுயர்சிமையத்து, மயிலகவு மலிபொங்கர், மந்தியாட மாவிசும்புகந்து, முழங்குகால் பொருத மரம்பயில் காவி, னியங்குபுனல் கொழித்த வெண்டலைக் குவவுமணற், கான்பொழில் :]

கலை தாய மலி பொங்கர் மந்தி ஆட மரம் பயில் கா—முசுக்கலைகள் தாவின மிக்க கொம்புகளிலே அவற்றின் மந்திகள் விளையாடும்படி மரம்நெருங்கின சோலை,

மா விசும்பு உகந்து—பெரிய ஆகாயத்தே செல்ல உயர்கையினாலே,

முழங்கு கால் பொருத மரம்—முழங்குகின்ற பெருங்காற்றடித்த மரம்.

மயில் அகவும் காவின்—மயில் ஆரவாரிக்குங் காவோடே,

உயர் சிமையத்து இயங்கு புனல் கொழித்த வெள் தலை குவவு மணல் கான் பொழில்—உயர்ந்த மலையுச்சியிடத்துநின்றும் வீழ்ந்தோடுகின்ற நீர் கொழித்து ஏறட்ட வெள்ளிய தலையினையுடைத்தாகிய திரட்சியையுடைய மணற்குன்றிடத்து மணத்தையுடைய பொழில்,

337. தழீஇய அடை கரை தோறும்—காவோடே பொழில்சூழ்ந்த நீரடையும் கரைகடோறும்,

338 - 42. [தாதுசூழ் கோங்கின் பூமலர் தாஅய்க், கோதையி னொழுகும் *விரிநீர் நல்வர, லவிரறல் வையைத் துறைதுறை தோறும், பல்வேறு †பூத் திரட் டண்டலை சுற்றி, யழுந்துபட் டிருந்த பெரும்பா ணிருக்கையும் :]

தாது சூழ் கோங்கின் பூ மலர் தாஅய் கோதையின் ஒழுகும் விரிநீர் நல் வரல் வையை—தாதுக்கள்சூழ்ந்த கோங்கினுடையபூவும் ஏனைமலர்களும்பரந்து மாலையொழுகினாற்போல ஓடும் பெருநீர் நன்றாகிவருதலையுடைய வையையிடத்து,

அவிர் அறல் துறை துறை தோறும் பல் வேறு பூ திரள் தண்டலை சுற்றி அழுந்து பட்டு இருந்த ‡பெரும்பாண் இருக்கையும்—விளங்குகின்ற அறலையுடைய துறைகடோறும் துறைகடோறும் பலவாய்வேறுபட்ட பூத்திரளையுடைய பூந்தோட்டங்கள் சூழப்பட்டு நெடுங்காலம் அடிப்பட்டிருந்த பெரிய பாண்சாதியின் குடியிருப்பினையும்,

343 - 5. நிலனும் வளனும் கண்டு அமைகல்லா விளங்கு பெரு திருவின் மானவிறல்வேள் அழும்பில் அன்ன நாடு இழந்தனரும்—நிலத்தையும் அதிற் பயிர்களையும் பார்த்தபார்வை மாறுதலமையாத விளங்கும் பெரியசெல்வத்தினையுடைய மானவிறல்வேளென்னுங் குறுநிலமன்னனுடைய அழும்பிலென்னும் ஊரையொத்த நாடுகளையிழந்தவர்களும்,

346. கொழு பல் பதிய குடி இழந்தனரும்—செல்வத்தினையுடைய பலவூர்களிடத்தனவாகிய குடிகளையிழந்தவர்களும்,

---

* பி - ம். விரிநீ ரவிரற னல்வரல் வையை.

† பி - ம். பூவின் றண்டலை

‡ பெரும்பாணச்சாதியினிலக்கணத்தை இப்புத்தகம் 129 - ஆம் பக்கத்திற் காண்க.

347. தொன்று கறுத்து உறையும் துப்பு தர வந்த—பழையதாய *செற்றங்கொண்டு தங்கும்வலி தம்மைக்கொண்டுவருகையினாலே எதிராய்வந்த,

348. அண்ணல் யானை அடு போர் வேந்தர்—தலைமையினையுடைய யானையினையும் பகைவரைக்கொல்லும் போர்த்தொழிலையுமுடைய வேந்தரை.

பல் மாறு ஓட்டி (350)—பலவாய் நெஞ்சிற்கிடந்த மாறுபாடுகளை முதற் போக்கிப் பின்னர்,

349 - 50. [இன்னிசை முரச மிடைப்புலத் தொழியப், பன்மா றோட்டிப் பெயர்புறம் பெற்று :]

இன் இசை †முரசம் இடைப்புலத்து ஒழிய பெயர் புறம் பெற்று—இனிய ஓசையினையுடைய முரசம் ‡உழிஞைப்போர்க்கு இடையே கிடக்கும்படி மீளுகையினாலுண்டான முதுகைப்பெற்று,

என்றது: உழிஞைப்போர்செய்யவந்த அரசர் §குடுமிகொண்ட மண்ணுமங்கலமெய்தாது இடையேமீளும்படி காத்தகிடங்கு (351) என்றவாறு

351. ||மண்ணுற ஆழ்ந்த மணி நீர் கிடங்கின்—¶மண்ணுள்ளவளவுமாழ்ந்த நீலமணிபோலும் நீரையுடைய கிடங்கினையும்,

352. விண் உற ஓங்கிய பல் $படை புரிசை—தேவருலகிலே செல்லும்படியுயர்ந்த பல கற்படைகளையுடைய மதிலினையும்;

353. தொல் வலி நிலைஇய வாயில் (356)—பழைதாகிய வலி நிலைபெற்ற வாயில்,

அணங்கு உடை நெடு நிலை—தெய்வத்தையுடைத்தாகிய நெடிய நிலையினையும்,

354. நெய் பட கரிந்த திண் போர் கதவின்—நெய் பலகாலுமிடுதலாற் கருகின திண்ணிய செறிவினையுடைய கதவினையும்,

வாயிலில் தெய்வமுறையுமாகலின், அதற்கு அணியுநெய்யுமாம்; **"ஐயவியப்பிய நெய்யணி நெடுநிலை" என்பதனானுணர்க.

---

* செற்றம் - பகைமை நெடுங்காலம் நிகழ்வது; (முருகு. 132 - உரை)

† "இரங்கிசை முரச மொழியப் பரந்தவ, ரோடுபுறங் கண்ட ஞான்றை" (அகநா. 116.)

‡ உழிஞைப்போரென்றது இங்கே புறத்துழிஞைப்போரை; (தொல். புறத்திணை. சூ. 10.)

§ தொல். புறத்திணை. சூ. 13 - பார்க்க.

|| பி - ம். மண்ணுறவீழ்ந்த.

¶ "நிலவரையிறந்தகுண்டுகண்ணகழி" (புறநா. 21.)

$ "படையார்புரிசைப்பட்டினம்" (பல்லவனீச்சரம், ஞான. தே), "படைமதில்" (பெருங்கதை, 3. மகதகாண்டம், 4: 3.)

** நெடுநல்வாடை, 86.

355. மழை ஆடும் *மலையின் நிவந்த மாடமொடு—மேகமுலாவுமலை போலே ஓங்கினமாடத்தோடே,

கோபுரமன்றி வாசலே மாடமாகவுஞ் சமைத்தலின், மாடமென்றார்.

356. வையை அன்ன வழக்கு உடை வாயில்—வையையாறு இடைவிடாது ஓடுமாறுபோன்ற மாந்தரும் மாவும் இடையறாமல் வழங்குதலையுடைய வாயில்,

மாடத்தோடே (355) நிலையினையும் (353) கதவினையும் (354) வழக்கினையுமுடைய வாயில் (356.)

பெருநம்பாணிருக்கையினையும் (342) கிடங்கினையும் (351) புரிசையினையும் (352) வாயிலினையு (356) முடைய மதுரை (699) என்க.

357 - 8. வகை பெற எழுந்து வானம் மூழ்கி சில் காற்று இசைக்கும் பல் புழை நல் இல்—கூறுபாடாகியபெயர்களைத் தாம்பெறும்படியுயர்ந்து தேவருலகிலேசென்று தென்றற்காற்று ஒலிக்கும் பலசாளரங்களையுடைய நன்றாகிய அகங்களையும்,

மண்டபம் கூடம் †தாய்க்கட்டு அடுக்களையென்றாற்போலும் பெயர்களைப் பெறுதலின். வகைபெறவெழுந்தென்றார்.

359. யாறு கிடந்தன்ன அகல் நெடு தெருவில்—யாறுகிடந்தாற்போன்ற அகன்ற நெடிய தெருக்களிலே,

இருகரையும் யாறும்போன்றன, இரண்டுபக்கத்தின்மனைகளும் தெருவுகளும்.

360. பல் வேறு குழாஅத்து இசை எழுந்து ஒலிப்ப— ‡நாளங்காடியிற் பண்டங்களைக்கொள்ளும் பலசாதியாகிய பாடைவேறுபாட்டையுடைய மாக்கள் திரளிடத்து ஓசைமிக்கொலிக்கும்படி இருந்த (406) என்க.

361 - 2. மா கால் எடுத்த முந்நீர் போல முழங்கு இசை நல் பணை அறைவனர் நுவல—பெருமையையுடைய காற்றெடுத்த கடலொலிபோல முழங்கும் ஓசையையுடைய நன்றாகிய முரசைச் சாற்றினராய் விழவினை நாட்டிலுள்ளார்க்குச் சொல்லுகையினாலே நடாநின்றதே (428) என்க.

'அறைவன நுவல' என்றுபாடமாயின், அறையப்படுவனவாய் விழாவைச் சொல்லவென்க.

363 - 4. கயம் குடைந்தன்ன இயம் தொட்டு இமிழ் இசை மகிழ்ந்தோர் ஆடும் கலி கொள் சும்மை—கயத்தைக் கையாற்குடைந்துவிளையாடுந் தன்மையவாக வாச்சியங்களைச் சாற்றலான் முழங்கின ஓசையைக்கேட்டு மகிழ்ந்தவர்களாடுஞ் செருக்கினைக்கொண்ட ஆரவாரத்தினையுமுடைய தெரு (359) என்க.

* "மலைபுரைமாடத்து" (மதுரை. 406.)

† தாய்க்கட்டு - தாய்மனை.

‡ நாளங்காடி - காலைக்கடை. (மதுரை. 430.)

365. *ஓவு கண்டன்ன இரு பெரு நியமத்து—சித்திரத்தைக் கண்டாற் போன்ற கட்கு இனிமையையுடைய இரண்டாகிய பெரிய அங்காடித்தெருவில்,

நாளங்காடி, †அல்லங்காடியாகிய இரண்டுகூற்றையுடைத்தென்றார்.

366. சாறு அயர்ந்து எடுத்த உருவம் பல் கொடி—கோயில்களுக்கு விழாக்களை நடத்திக் கட்டின அழகினையுடைய பலகொடிகளும்.

இதனால் அறங்கூறினார்.

367 - 8. வேறு பல் பெயர ஆர் எயில் கொள கொள நாள் தோறு எடுத்த நலம் பெறு புனை கொடி—வேறுபட்ட பலபெயர்களையுடையவாகிய அழித்தற்கரிய அரணகளைத் ‡தண்டத்தலைவர் அரசனேவலாற்சென்று கைக்கொள்ளக் கைக்கொள்ள அவர்கள் அவ்வெற்றிக்கு நாடோறுமெடுத்த நன்மையைப்பெற்ற சயக்கொடியும்,

இதனாற் §புறத்துழிஞைப்போர்கூறினார்.

369 - 71. நீர் ஒலித்தன்ன நிலவு வேல் தானையொடு புலவு பட கொன்று மிடை தோல் ஓட்டி புகழ் செய்து எடுத்த விறல் சால் நல் கொடி—கடலொலித்தாற்போன்ற நிலைபெறுதலையுடைய வேற்படையோடே சென்று பகைவர் புலானாற்றமுண்டாகக்கொன்று பின்னர் அணியாய்நின்ற யானைத்திரளையுங் கெடுத்துத் தமக்குப் புகழையுண்டாக்கி எடுத்த வெற்றியமைந்த நன்றாகிய கொடியும்,

இது தும்பைப்போர்கூறிற்று.

372. கள்ளின் களி ||நவில் கொடியொடு கள்ளினது களிப்புமிகுதியைச் சாற்றுகின்ற கொடியும்,

372 - 3. நல் பல பல் வேறு குழூஉ கொடி- நன்றாகிய பலவற்றினாலே பலவாய் வேறுபட்ட திரட்சியையுடைய கொடிகளும,

நன்பலவென்றார், கல்வி கொடை தவம் முதலியவற்றை.

373 - 4. பதாகை ¶நிலைஇ பெரு வரை மருங்கின் அருவியின் நுடங்க- பெருங்கொடிகளும் நிலைபெற்றுப் பெரிய மலையிடத்து அருவியசையுமாறு போல அசைய.

இக்கொடிகள் அருவியினுடங்குப்படி வகைபெறவெழுந்து (357) என முன்னேகூட்டுக.

---

* ஓவு - ஓவியம்; "ஓவுக்கண் டன்னவில்" (நற். 268), "ஓவுறழ் நெடுஞ்சுவர்" (பதிற். 68.)

† அல்லங்காடி - மாலைக்கடை. (மதுரை. 544.)

‡ தண்டத்தலைவர் - சேனைத்தலைவர்.

§ புறத்துழிஞைப்போர் - வேற்றுவேந்தருடைய மதிலின்புறத்தைச் சூழ்ந்து செய்யும்போர்.

|| பி - ம். நுவல், துவல்.

¶ பி - ம். நிலைஇய.

375. பனை மீன் வழங்கும் வளை மேய் *பரப்பின்—†பனைமீனென்னுஞ் சாதியுள்ளவுஞ் சங்குமேய்கின்ற கடலிடத்தே,

376 - 7. வீங்கு பிணி நோன் கயிறு அரீஇ இதை புடையூ கூம்பு முதல் முருங்க எற்றி—இறுகும் பிணிப்பினையுடைய வலியினையுடைய பாய் கட்டினகயிற்றையறுத்துப் பாயையுங்கீறிப் பாய்மரம் அடியிலேமுறியும்படி அடித்து,

377 - 8. [காய்ந்துடன், கடுங்காற் றெடுப்ப:] கடு காற்று உடன் காய்ந்து எடுப்ப—கடியகாற்று நாற்றிசையினும் சேரக் கோபித்தெடுக்கையினாலே,

378. கல் பொருது உரைஇ—கற்குாக்கல் கயிற்றுடனேநின்று பொருது உலாவி,

379. நெடு சுழி பட்ட நாவாய் போல—நெடியசுழியிலேயகப்பட்டுச் சுழலாநின்ற மரக்கலத்தையொக்க.

380 இருதலை பணிலம் ஆர்ப்ப—முன்னும்பின்னுஞ் சங்கொலிப்ப.

யானைமீண்டாற் பின்னின்றவன் ஊதுதற்குப் பின்னுஞ் சங்குசெல்லும்.

380 - 81. சினம் சிறந்து ‡கோலோர் கொன்று மேலோர் வீசி—சினமிக்குப் §பரிக்கோற்காரரைக்கொன்று பாகரைவீசிப் போட்டு,

382. மெல் பிணி வல் தொடர் பேணாது காழ் சாய்த்து—மெல்லிய பிணிப்பினையுடைய வலிய ?நீர்வாரியென்று காலிற்கட்டுஞ் சங்கிலியை நமக்குக் காவலென்று பேணாதே அதுகட்டின தறியைமுறித்து,

383. கந்து நீத்து உழிதரும் கடாஅ யானையும்—கம்பத்தைக் கைவிட்டுச்சுழலும் கடாத்தையுடைய யானையும்,

சிறந்து (380) கொன்று வீசிச் (381) சாய்த்து (382) நீத்து (383) ஆர்ப்ப (380) உழிதருங்கடாமெனக் கடாத்தின்றொழிலாகவுரைக்க.

காற்றிற்குக் கடாம் உவமிக்கப்படும்பொருள்.

384. ‖அம் கண் மால் விசும்பு புதைய வளி போழ்ந்து—அழகிய இடங்களைத் தன்னிடத்தேயுடைய பெரிய ஆகாயமறையக் காற்றைப்பிளந்து,

தேவருலகமுதலியவற்றைத் தன்னிடத்தேயுடைமையின், அங்கண்மால் விசும்பென்றார்.

385 - 6. ஒள் கதிர் ஞாயிறு ஊறு அளவா திரிதரும் செ கால் அன்னத்து சேவல் அன்ன—ஒள்ளிய கிரணங்களையுடைய ஞாயிற்றைத் தாம்சேர

* பி - ம். பரம்பின்.

† "உள்வளைந் துலாய சின்னை யொண்சுறாப் பனைமீ னாறை, தெள்விளித் திருக்கை தந்தி திமிங்கில மிரிந்து பாய்ந்த" (கந்த. கடல்பாய். 11) இம்மீன், பனைய னென்றும் வழங்கும்; "பனையன்றேனி, யனையிருக்கப்பணி துயின்றான்" (அருணைக்கலம்பகம், 45.)

‡ பி - ம். காலோர்.

§ பரிக்கோல் - குத்துக்கோல்.

‖ "அங்கண்விசும்பின்" (நாலடி. மேன்மக்கள், 1.)

72 - 5. [மாதிரம், விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டில, மிருகோற் குறிநிலை வழுக்காது குடக்கேர், பொருதிறஞ் சாரா வரைநா ளமயத்து :]

மாதிரம் விரி கதிர் பரப்பிய வியல் வாய் மண்டிலம் குடக்கு ஏர்பு — திசைகளிலேவிரிகின்றகிரணங்களைப்பரப்பின அகன்ற இடத்தையுடைய ஞாயிறு மேற்றிசைக்கட் சேறற்கெழுந்து,

இரு கோல் குறிநிலை வழுக்காது ஒரு திறம் சாரா அரைநாள் — இரண்டிடத்துநாட்டின இரண்டுகோலிடத்துஞ் சாயாநிழலால் தாரைபோக ஓடுகின்றநிலையைக் ஆறித்துக்கொள்ளுந்தன்மை தப்பாதபடி தான் ஒருபக்கத்தைச் சாரப்போகாத சித்திரைத்திங்களின் நடுவிற் பத்தினின்ற யாதோர்நாளிற் பதினைந்தாநாழிகையிலே அங்குரார்ப்பணம்பண்ணி,

76. நூல் அறி புலவர் நுண்ணிதின் கயிறு இட்டு — சிற்பநூலையறிந்த தச்சர் கூரிதாக நூலை நேரேபிடித்து,

77. தேஎம் கொண்டு தெய்வம் நோக்கி — திசைகளைக்குறித்துக்கொண்டு அத்திசைகளில் நிற்குந் தெய்வங்களையும் குறைவறப்பார்த்து,

78 - 9. [பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து, ஒருங்கு·] பெரு பெயர் மன்னர்க்கு ஒப்ப ஒருங்கு மனை வகுத்து — பெரிய பெயரினையுடைய அரசர்க்கொப்ப மனைகளையும் வாயில்களையும் மண்டபங்கள் முதலியவற்றையுங் கூறுபடுத்தி.

79. உடன் வளைஇ ஓங்கு நிலை வரைப்பின் — இவ்விடங்களையெல்லாஞ் சேரவளைத்து உயர்ந்த மதிலின் வாயி (88) லென்க.

80. பரு இரும்பு பிணித்து — ஆணிகளும் பட்டங்களுமாகிய பரிய இரும்பாலேகட்டி,

செவ்வரக்கு உரீஇ — சாதிலிங்கம்வழித்து,

81 - 5. [துணைமாண் கதவம் பொருத்தி யிணைமாண்டு, நாளொடும் பெயரிய கோளமை விழுமரத்துப், போதவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்துத், தாழொடு குயின்ற போரமை புணர்ப்பிற், கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதீர்ந்து :]

தாழொடு குயின்ற துணை மாண் கதவம் பொருத்தி — தாழோடே சேரப்பண்ணின இரண்டாய் மாட்சிமைப்பட்ட கதவைச்சேர்த்தி,

இணை மாண்டு புது போது அவிழ் குவளை பிடி கால் அமைத்து — இணைதல் மாட்சிமைபபட்டுப் புதியபோதாய் அவிழ்ந்த குவளைப்பூவோடே பிடிகளையும் தன்னிடத்தேபண்ணி,

என்றது, *நடுவேதிருவும் இரண்டுபுறததும் இரண்டுசெங்கழுநீர்ப்பூவும் இரண்டு பிடியுமாகவகுத்த உத்தரக்கற்கவி.

---

* இரண்டு யானைகளின் இடையே திருமகள் வீற்றிருத்தல், இக்காலத்துங் காணப்படும் சிற்பங்களாலும், கலித்தொகை, 44 - ஆம் செய்யுளாலும் அறியலாகும்.

நாளொடும் பெயரிய விழுமரத்து கோள் அமை நெடுநிலை (86)—உத்தர மென்னும் நாளின்பெயர்பெற்ற உத்தரக்கற்கவியிலே செருகுதல் பொருந்தின நெடுநிலையென்க.

அமைத்தென்னுமெச்சம் பெயரியவென்பதனோடு முடிந்தது.

கை வல் கம்மியன் முடுக்கலின் புரை தீர்ந்து போர் அமை புணர்ப்பின் நெடுநிலை (86)—கைத்தொழில்வல்லதச்சன் கடாவுகையினாலே வெளியற்றுப் பலமரங்களும் தம்மிற்கிட்டு தலைமைந்த கூட்டத்தினையுடைய நெடுநிலையென்க.

86. ஐயவி அப்பிய நெய் அணி நெடு நிலை — வெண்சிறுகடுகு அப்பி வைத்த நெய்யணிந்த நெடியநிலையினையுடைய,

அநிற்றெய்வத்திற்கு வெண்சிறுகடுகும் நெய்யுமணிந்தது.

87. வென்று எழு கொடியொடு வேழம் சென்று புக—வென்றிகொண் டெழும் கொடிகளோடே யானைகள் சென்றுபுகுதும்படி யுயர்ந்த,

88. குன்று குயின்றன்ன ஓங்கு நிலை வாயில்—மலையை நடுவே வெளி யாகத்திறந்தாற்போன்ற கோபுரவாயில்களையும்,

ஓங்கின நிலையையுடைய கோபுரத்தை ஓங்குநிலையென்றார்; ஆகுபெயர்.

வரைப்பின் (79) வாயிலென்க.

கதவுபொருத்திக் கோளமைத்த புணர்ப்பினையுடைய நெடுநிலையினை யுடைய வாயிலென்க.

89 - 92. [திருநிலை பெற்ற தீதுதீர் சிறப்பிற்,* தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து, நெடுமயி ரெகினத் தூநிற வேற்றை, குறுங்கா லன்னமோ டுகளு முன்கடை:]

நெடு மயிர் எகினம் தூ நிறம் ஏற்றை குறு கால் அன்னமொடு உகளும் முன்கடை—நெடிய மயிரினையுடைய கவரிமாவில் தூயநிறத்தையுடைய ஏற்றை குறியகாலினையுடைய அன்னத்தோடே தாவித்திரியும் வாசல்முன்பினையும்.

கடைமுன், முன்கடையென மரூஉமுடிபு. அன்னமும் தாவிப்பறத்தலின், உகளுமென்று கவரிமாவோடே ஒருவினைகூறினார்.

* தரு மணல் ஞெமிரிய திரு நகர் முற்றத்து.

†திரு நிலைபெற்ற தீது தீர் சிறப்பின—திருமகள் நிலைபெற்ற குற்றமற்ற தலைமையினையும்,

வாயிலினையும் முன்கடையினையும் முற்றத்தினையும் சிறப்பினையுமுடைய கோயிலென முடிக்க,

93 - 4. பணை நிலை முனைஇய பல் உளை புரவி புல் உணா தெவிட்டும் புலம்பு விடு குரலொடு—பந்தியிலேநிற்றலைவெறுத்த பலவாகிய ‡கேசரியை யுடைய குதிரைகள் புல்லாகிய உணவைக் குதட்டும் தனிமைதோற்றுவிக்கின்ற குரலோடே.

---

* இந்தப்பாகத்திற்கு உரைகிடைத்திலது; கொண்டுவந்திட்ட மணல் பரந்த அழகிய வீட்டின் முன்னிடத்தையுமென்க.

† முருகு. 70. ‡ கேசரி - குதிரையின் பிடரி மயிர்.

95-7. நிலவு பயன்கொள்ளும் நெடு வெள் முற்றத்து கிம்புரி பகுவாய் அம்பணம் நிறைய கலுழ்ந்து வீழ் அருவி பாடு விறந்து—நிலாவின்பயனை அரசன் நுகரும் நெடிய வெள்ளிய நிலாமுற்றத்திலுள்ள நீர்வந்துவீழும் மகரவாயாகப் பகுத்த வாயினையுடைய பந்நிறைகையினாலே கலங்கிவிழுகின்ற அருவியினோசைசெறிந்து,

97-9. அயல துவலி நெடு பீலி ஒல்க மெல் இயல் கலி மயில் அகவும் *வயிர் மருள் இன் இசை—அதற்கு அயலிடத்தனவாகிய தழைத்த நெடிய பீலி ஒதுங்க மெல்லிய இயல்பினையுடைய செருக்கின மயில் ஆரவாரிக்கும் கொம்பென்று மருளும் இனியவோசை,

100. களி மலை சிலம்பின் சிலம்புங் கோயில்—செறிந்தமலையின் ஆரவாரம் போல ஆரவாரிக்கும் கோயில்,

புலம்புவிடுகுரலோடே அருவிப்பாடும் வயிர்மருளின்னிசையும் விறந்து மலைச்சிலம்பிற் சிலம்புங்கோயிலென முடிக்க.

அருவியும் மயிலும் மலைக்கும் உள்ளனவாகலின், உவமைகொண்டார். புலம்புவிடுகுரல் மழை மெத்தெனமுழங்கினாற் போன்றிருத்தலின், உவமை கொண்டார்.

இனி அவற்றின் எதிரொலியெழுகின்ற கோயிலென்றுமாம்.

101-2. யவனர் இயற்றிய வினை மாண் பாவை கை ஏந்து ஐ அகல் நிறைய நெய் சொரிந்து—சோனகர்பண்ணின தொழில்மாட்சிமைப்பட்டபாவை தன்கையிலே ஏந்தியிருக்கின்ற வியப்பையுடைய தகளிநிறையும்படி நெய்வார்க் கப்பட்டு,

103. பரூஉ திரி கொளீஇய குரூஉ தலை நிமிர் எரி—பருந்திரிகளைப் பந்தங்களிலே கொளுத்திவைத்த நிறத்தையுடைத்தாகிய தலையினையுடைய மேனோக்கியெரிகின்ற விளக்கை.

104. அறு அறு காலை தோறு அமைவர பண்ணி—நெய்வற்றினகாலந் தோறும் ஒளிமழுங்கின காலந்தோறும் நெய்வார்த்துத் தூண்டி,

105. பல் வேறு பள்ளி தொறும் பாய் இருள் நீங்க—பலவாய்வேறுபட்ட இடங்கடோறும் பரந்த இருள் நீங்கும்படி,

106-7. பீடு கெழு சிறப்பின் பெருந்தகை அல்லது ஆடவர் குறுகா அரு கடி வரைப்பின்—பெருமைபொருந்தின தலைமையினையுடைய பாண்டிய னல்லது சிறுகுறுந்தொழில்செய்யும் ஆண்மக்களுஞ் அணுககொண்ணாத அரியகாவலை யுடைய கட்டுக்களின்,

108. வரை கண்டன்ன தோன்றல—மலைகளைக் கண்டாற்போன்ற உயர்ச்சியையுடையவாய்,

108-9. வரை சேர்பு வில் கிடந்தன்ன கொடிய—மலைகளைச்சேர்ந்து இந் திரவிற்கிடந்தாற்போன்ற பலநிறமாய் வீழ்ந்துகிடந்த கொடிகளையுடையவாய்,

இது மேலேகட்டினகொடி.

109. பல் வயின்—பலவிடங்கடோறும்,

---

* வயிரிசை அன்றிலினோசைக்கும் உவமைகூறப்படும்; (குறிஞ்சி. 219.)

110. வெள்ளி அன்ன விளங்கும் சுதை உரீஇ—வெள்ளியையொத்து விளங்குகின்ற சாந்தை வாரி,

111. மணி கண்டன்ன மா திரள் திண் காழ்—நீலமணியைக்கண்டாற் போன்ற கருமையினையும் திரட்சியினையுமுடைய திண்ணிய தூண்களையுடைய வாய்.

112. செம்பு இயன்றன்ன செய்வு உறு நெடு சுவர்—செம்பினாலே பண்ணினாலொத்த தொழில்கள்செய்தலுற்ற நெடியசுவரிலே,

113. உருவம் பல் பூ ஒரு கொடி வளைஇ—வடிவழகினையுடைத்தாகிய பலபூக்களையுடைய வல்லிசாதியாகிய ஒப்பில்லாத கொடியையெழுதி,

114. கருவொடு பெயரிய காண்பு இன் நல் இல்—புதைத்தகருவோடே பெயர்பெற்ற காட்சிக்கினிய நன்றாகிய இல்,

என்றது - கருப்பக்கிருகமெனறவாறு.

திண்காழுடையவாய்ச் (111) செய்வுறுநெடுஞ்சுவரிலே (112) விளங்குஞ் சுதையுரீஇப் (110) பல்வயின் (103) ஒருகொடிவளைஇ (113) வரைகண்டன்ன தோன்றலவாய்க் (108) கொடியவாய்ப் (109) பாயிருணீங்க (105) எரி (103) அனமவரப்பண்ணிக் (104) காட்சிக்கினியவாகிய நல்லில் (114) என முடிக்க.

கோயில் (100) வரைப்பின் (107) காண்பினல்லி (114) லெனமுடிக்க.

115. [தசநான் கெய்திய :] நான்கு தசம் எய்திய—நாற்பதிற்றியாண்டு சென்ற,

பணை மருள் நோன் தாள்—முரசென்றுமருளும் வலியகால்களையும்,

116. [இகன்மீக் கூறு மேந்தெழில் வரிநுதல்:]

ஏந்து எழில் வரி நுதல்—உயர்ந்த அழகினையும் புகர்நிறைந்த மத்தகத்தினையுமுடைய நாகம் (117),

இகல் மீ கூறும் நாகம் (117)—போரில் மேலாகச்சொல்லும் நாகம்,

117. பொருது ஒழி நாகம்—பொருதுபட்ட யானையினுடைய,

117 - 8. [ஒழிஎயி றருசெறிந்து, சீருஞ் செம்மையு மொப்ப :] ஒழி எயிறு சீரும் செம்மையும் ஒப்ப அருகு எறிந்து—தானேவீழ்ந்தகொம்பைக் கனமும் செம்மையுமொப்ப இரண்டுபுறத்தையுஞ்செத்தி,

118 - 9. வல்லோன் கூர் உளி குயின்ற—தச்சன் கூரிய சிற்றுளியாலே பண்ணின,

119. ஈரிலை இடை இடுபு—பெரிய இலைத்தொழிலை இடையேயிட்டு,

120 - 30. [தூங்கியன் மகளிர் வீங்குமுலை கடுப்பப், புடைதிரண் டிருந்த குடத்த இடைதிரண், டுள்ளி நோன்முதல் பொருத்தி யடியமைத்துப், பேரளவெய்திய பெரும்பெயர்ப் பாண்டின், மடைமா ணுண்ணிழை பொலியத் தொடைமாண்டு, முத்துடைச் சாலேக நாற்றிக் குத்துறுத்துப், புலிப்பொறிக் கொண்ட பூங்கேழ்த் தட்டத்துத், ககடுகண் புதையக் கொளீஇத் துகடீர்த், தாட்டுஉ பன்மயிர் விரைஇ வயமான், வேட்டம் பொறித்து வியன்கட் கானத்து, முல்லைப் பல்போ துறழப் பூநிரைத்து :]

ஊட்டுறு பல் மயிர் விரைஇ—பலநிறம்பிடித்த மயிர்களை உள்ளேவைத்து அதன்மேலே,

வயமான் வேட்டம் பொறித்து—சிங்கமுதலியவற்றைவேட்டையாடுகின்ற தொழில்களைப் பொறித்த தகடுகளைவைத்து,

புலிமுதலியவற்றின் வரிகள்தோன்ற உள்ளே மயிர் விரவின.

வியல் கண் கானத்து முல்லை போது உறழ பல் பூ நிரைத்து—அகற்சியை இடத்தேயுடைய காட்டிடத்து முல்லைப்போதுடனே மாறுபடும்படி வேறுபல பூக்களையும் நிரைத்து,

சாலேகம் தகடு குத்துறுத்து—சாளரங்களாகத்திறந்த தகடுகளை ஆணிகளாலே தைத்து,

மடை மாண் பாண்டில்—மூட்டுவாய் மாட்சிமைப்பட்ட வட்டக்கட்டில்,

கொம்மைச்செத்தி உளியாற்குயின்ற இலையை இடையிட்டுப் பொறித்து நிரைத்துச் சாலேகத்தகடுகளைக் குத்துறுத்த மடைமாண்பாண்டிலெனமுடிக்க.

முத்து உடை நுண் இழை பொலிய தாற்றி தொடை மாண்டு பெரு அளவு எய்திய பாண்டில்—முத்தைத் தன்னிடத்தேயுடைய மெல்லியநூல் அழகு பெறும்படி கட்டிலின்கீழே நாலுபுறமும்தாற்றி அதனைத் தன்னிடத்தேகட்டு தல்மாட்சிமைப்பட்டுப் பெரிய எல்லையைப்பெற்ற பாண்டிலெனக்கூட்டுக

என்றதனால், தந்தத்தாற்சமைத்த கட்டிலைச்சூழ முத்துவடந்தாற்றியென்றார்.

புலி பொறி கொண்ட பூ கேழ் தட்டத்து சுண் புதைய கொளீஇ துகள் தீர்ந்து பெரு பெயர் பாண்டில்—புலியினதுவரியைத் தன்னிடத்தேகொண்ட பொலிவுபெற்ற நிறத்தையுடைய கச்சாலே நடுவுவெளியான இடமறையும்படி கோக்கப்பட்டுக் குற்றமற்றுக் கச்சுக்கட்டிலென்னும் பெரிய பெயரையுடைய பாண்டிலெனக்கூட்டுக.

நுங்கு இயல் மகளிர் வீங்கு முலை கடுப்ப புடை திரண்டு இருந்த குடத்த அடி—சூல்முற்றி அசைந்த இயல்பினையுடையராகிய மகளிரது பால்கட்டி வீங்கின முலையையொப்பப் பக்கமுருண்டிருந்த குடத்தையுடையவாயஅடி,

இஃது உருட்சிக்கு உவமைகூறிற்று.

இடை திரண்டு உள்ளிமுதல் கோன் அடி பொருத்தி அமைந்து—குடத்திற்கும் கட்டிற்குநடுவாகியஇடம் ஒழுகமெல்லிதாய்த்திரண்டு உள்ளிமுதல்போலும் வலியினையுடையகால்களைத் தன்னிடத்தேதைத்துச்சமைத்துப் பேரளவெய்தியபாண்டிலென்க.

உள்ளிப்புட்டில்போல்வதனை உள்ளிமுதலென்றார்.

131 - 3. [மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்படத், துணைபுண ரன்னத் தூநிறத் தூவி, யிணை யணை மேம்படப் பாயணை யிட்டு:]

மெல்லிதின் விரிந்த இணை அணை சேக்கை—மெல்லிதாகவிரிந்த இணைதலணைந்த படுக்கையென்க.

மேம்பட துணை புணர் அன்னம் தூ நிறம் தூவி பாய்—அச்சேக்கைக்கு மேலாகத் தம்பேட்டைப்புணர்ந்த அன்னச்சேவலின் தூயநிறத்தையுடைய குட்டாகியமயிர் பரக்கப்பட்டு,

“இறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணம், முறுதூவி · சேக்கையோ ரைந்து.” என்ற ஐந்தினையும்படுத்ததென்பதுதோன்ற இணையணையென்றார். என்புருகி மிக்க அன்போடுபுணர்தலிற் கூட்டிற்கு மென்மைமிகக்குமென்பது தோன்றத் துணைபுண ரன்னத் தூநிறத் தூவி யென்றார். பிறரும், இக்கருத்தே பற்றி *“ஆதாரம் பெருகுகின்ற வன்பினா லன்ன மொத்தும்” என்றார்.

134 - 5. [காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத், தோடமை தூமடி விரித்த சேக்கை·] மேம்பட அணையிட்டு (133) காடி கொண்ட கழுவுறு கலிங கத்து தூ மடி விரித்த தோடு அமை சேக்கை—அத்தூவிக்குமேலாக அணைகளு மிட்டுவைத்துக் கஞ்சியைத் தன்னிடத்தேகொண்ட கழுவுதலுற்றதுகிலின தூய மடித்ததுவிரித்த செஙகழுநீர்முதலியவற்றின் இதழ்கள்பொருந்தின படுக்கை,

இணையணை சேக்கை மேம்படத் தூவியாய் அத்தூவிக்கு மேம்பட அணை யிட்டுத் தூமடிவிரித்த சேக்கையென்க.

136 - 7. ஆரம் தாங்கிய அலர் முலை ஆகத்து பின் அமை நெடு வீழ் தாழ—முன்பு முத்தாற்செய்த கச்சுக்சுமந்த பருத்தமுலையினையுடைய மார்பிடத்தே இப்பொழுது குத்துதலமைந்த நெடிப தாலிநாணொன்றுமே தூங்க,

வீழ்ந்துகிடத்தலின் வீழென்றார் இனிப் பின்னுதலமைந்த நெடியவீழ், மயிரென்பாருமுளர்.

137. துணை துறந்து—அரசன் பிரிகையினாலே,

138 நல் நுதல் †உலறிய சில் மெல் ஓதி—நன்றாகிய நுதலிடத்தே கை செய்யாமல் உலறிக்கிடந்த சிலவாகிய மெத்தென்ற மயிரினையும்

இனித் துணை துறந்துலறிய ஓதியெனக்கூட்டிக் கூடிக்கிடந்த தன்மைநீங்கி உலறிய ஓதியென்றுரைப்பாருமுளர்.

139 - 40. [நெடுநீர் வார்குழை களைந்தெனக் குறுங்கண், வாயுறை யழுத்திய வறிதுவீழ் காதின் :]

நெடு நீர் வார் குழை களைந்தென வறிது வீழ் காதின்—பெரிய ஒளி யொழுகின மகரக்குழையைவாங்கிற்றாகச் சிறிதேதாழ்ந்த காதினையும்,

நீர்மை, ஒளி.

குறு கண் வாயுறை அழுத்திய காது—சிறிய இடத்தையுடைய தாளுருவி அழுத்தியகாது,

வாயுறவென்றுபாடமாயின், கடுக்கனைவாயுறும்படியழுத்தினகாதென்க.

141 - 2. பொலம் தொடி தின்ற மயிர் வார் முன்கை வலம்புரி வளையொடு ‡கடிகைநூல் யாத்து—முன்பு பொன்னாற்செய்த தொடிகிடந்து தழும்பிருந்த மயிர் ஒழுங்குபட்டுக்கிடந்த முன்கையிலே வலம்புரியையறுத்துப்பண்ணின வளையையிட்டுக் காப்புநாணைக்கட்டி,

ஒடு, வேறுவினையொடு.

143 - 4. §வாளை பகு வாய் கடுப்ப வணக்குறுத்து செ விரல் கொளீஇய செ கேழ் விளக்கத்து—வாளையினது பகுத்தவாயையொக்க முடக்கத்தையுண்

* சீவகசிந்தாமணி, 189. † உலறிய: சிறுபாண். 18. ‡ குறுந். 218.
§ “வாளைப்பகுவாய் வணக்குறுமோதிரம்” (சிலப். 6: 95.)

பாசிச் சிவந்த விரலிடத்தேயிட்ட சிவந்தநிறத்தையுடைய முடக்கென்னு மோதிரத்தையும்,

145 - 6. பூ துகில் மரீஇய ஏந்து கோடு அல்குல் அ மாசு ஊர்ந்த அவிர் நூல் கலிங்கமொடு—முன்பு பூத்தொழிலையுடைய *துகில்கிடந்த உயர்ந்த வரிவினையுடையவல்குலில் இக்காலத்துடுத்த அழகிய மாசேறிய விளங்குகின்ற நூலாற்செய்த புடைவையுடனே,

147. [புனையா வோவியங் கடுப்பப் புனைவில்:]

புனையா ஓவியம் கடுப்ப—வண்ணங்களைக்கொண்டெழுதாத வடிவைக் கோட்டின சித்திரத்தையொப்ப.

புனைவில் நல்லடி (151) என மேல்வருவதனைக்கூட்டி, கழுவிச்செப்பஞ் சிட்டுப் பூண்களணியாத நன்றாகிய அடியென்க.

148. தளிர் ஏர் மேனி—மாந்தளிரையொத்த நிறத்தினையும்.

தாய சுணங்கின்—பரந்த சுணங்கினையும்,

149. அம் பணை தடைஇய மெல் தோள்—அழகினையுடைய மூங்கில் போலத்திரண்ட மெல்லியதோளினையும்.

149 - 50. [முகிழ்முலை, வம்புவிசித் [illegible] யாத்த] வம்பு விசித்து யாத்த முகிழ் முலை—ரச்சையை வலித்துக்கட்டின தாமரைமுகைபோலும் முலையினையும்,

150. வாங்கு சாய் நுசுப்பின் வளையும் நுடங்குமிடையினையும்,

151. மெல் இயல் மகளிர் — மெத்தென்ற தன்மையினையுமுடைய சேடியர்,

நல் அடி வருட—துயிலுண்டாகுமோவென்று அடியைத் தடவ,

மேனி (148) முதலியவற்றையுடையமகளிர் (151) புனைவில் (147) நல்லடி வருடவென்க.

152 - 3. நரை விரவுற்ற நறு மெல் கூந்தல் செ முக செவிலியர் கை மிக குழீஇ—நரை கலத்தலுற்ற நறிய மெல்லியமயிரினையுடைய சிவந்தமுகத்தையுடைய செவிலித்தாயர் இவளாற்று வாழுக்கமிகுகையினாலே திரண்டு,

154. குறியவும் நெடியவும் உரை பல பயிற்றி—பொருளொடுபுணராப் பொய்ம்மொழியும் மெய்ம்மொழியுமாகிய உரைகள் பலவற்றையும் பலகாற் சொல்லி,

†"ஒன்றே மற்றுஞ் செவிலிக் குரித்தே" என்பது இலக்கணம்.

155 - 6. இன்னே வருகுவர் இன் துணையோர் என உகத்தவை மொழியவும் ஒல்லாள் மிக கலுழ்ந்து—இப்பொழுதே வருகுவர் நினக்கினிய துணையார் தன்மையையுடையோரென்று அவள்மனத்துக்கு இனியவார்த்தைகளைக்கூறவும் அதற்குப்பொருந்தாளாய் மிகக்கலங்கி,

157 - 8. [நுண்சேறு வழித்த நோனிலைத் திரள்கா. லூறு வறுமுலை கொளீஇய:] ஊறு வறுமுலை கொளீஇய நுண் சேறு வழித்த நோன் நிலை

---

* துகில் - ஆடைவகையுள் உயர்ந்தது; "புடைவீழ்ந்துகில்" (181) என்பர் பின்னும்; "வாழ்வாரே, பட்டுந்துகிலுமுடுத்து" (நாலடி. நன்றியில். 4.)

† தொல்காப்பியம், செய்யுளியல், 176.

திரள் கால்—குடங்களைக் கடைந்திழைத்த சாதிலிங்கம்பூசின வலியமைந்தவிளை யுடைய மேற்கட்டியிற் றிரண்டகால்களை,

158. கால் திருத்தி — கட்டிற்கால்களுக்கு அருகாகநிற்கும்படிபண்ணி அதனிடத்தேகட்டி,

ஊறுவறுமுலை, குடத்திற்கு வெளிப்படை; முலைபோறலின் முலையென்றார்.

159. [புதுவ தியன்ற மெழுகுசெய் படமிசை:] மெழுகு செய் படம் மிசை புதுவது இயன்ற — மெழுகுவழித்த மேற்கட்டியின்மேலே புதிதாக எழுதின,

160 - 61. [திண்ணிலை மருப்பி னாடுதலை யாக விண்ணூர்பு திரிதரும்:] விண் — ஆகாயத்திடத்தே.

திண் நிலை மருப்பின் ஆடு தலையாக ஊர்பு திரிதரும்—திண்ணியநிலையினை யுடைய கொம்பினையுடைய மேடராசிமுதலாக எனை இராசிகளிற் சென்று திரியும்.

161 - 2. வீங்கு செலல் மண்டிலத்து முரண் மிகு சிறப்பின் செல்வனொடு நிலைஇய - மிக்க செலவினையுடைய ஞாயிற்றோடே மாறுபாடுமிகுந்த தலைமையினையுடைய திங்களோடு *திரியாமனின்ற,

163. உரோகிணி நினைவனள் நோக்கி - உரோகிணியைப்போல யாமும் பிரிவின்றியிருத்தலைப் பெற்றிலேமேயென்று நினைத்து அவற்றைப்பார்த்து.

ஞாயிறு, சண்டெழுதிய தன்று; திங்களிற்கு அடைகூறிற்று.

நெடிது உயிரா—நெட்டுயிர்ப்புக்கொண்டு,

164 - 5. [மாயித ழேந்திய மலிந்துவீ ழரிப்பனி, செவ்விரல் கடைக்கண் சேர்த்திச் சிலதெறியா:] மா இதழ் வீழ் கண் கடை மலிந்து எந்திய அரி பனி சில செ விரல் சேர்த்தி தெறியா—நீலப்பூவிரும்பினகண் தன்கடைக்கண்ணிடத்தேவர மிக்குச்சுமந்த ஐதாகிய நீர்ச்சிலவற்றைச் சிவந்த விரலைச்சேர்த்தித் தெறித்து.

என்றது - மிகவுமழாமல் மல்கினநீரைத் தெறித்தென்றார்.

166. புலம்பொடு வதியும் நலம் கிளர் அரிவைக்கு—தனிமையோடு கிடக்கும் அன்பு மிகுகின்ற அரிவைக்கு,

அரசன் பிரிகையினாலே, நெடுவீழ்தாழ (137) நூல்யாதது (142) மாசூர்ந்த கலிங்கத்தோடே (146) ஓதியினையும் (138) காதினையும் (140) விளக்கத்தினையும் உடையளாய் (141) மிசைக்கலங்கி (156) உரோகிணி நினைவனளுேக்கி நெடிதுயிர்த்துத் (163) தெறித்து (165) மகளிர் நல்லடிவருட (151) ஓவியங்கடுப்ப (147) வதியுமரிவைக்கு (166) என வினைமுடிக்க.

166 - 7. அரிவைக்கு இன்னா அரு படர் தீர—அரிவைக்குத் தீதாயிருக்கின்ற ஆற்றுதற்கரிய நினைவு தீரும்படி,

பாசறைத் தொழில் (188) விறல் தந்து (167) இன்னே முடிக தில் (168) - வேந்தன் பாசறையிடத்திருந்து பொருகின்ற போர்த்தொழில் அவனுக்கு வெற்றியைக்கொடுத்து இப்பொழுதே முடிவதாக, இஃது எனக்குவிருப்பம் என முடிக்க.

* பி - ம். தெரியாமனின்ற.

168. அம்ம கேட்பாயாக;

இஃது, இவள்வருத்தமிகுதி தீரவேண்டிக் கொற்றவையைநோக்கிப்பரவு கின்றவள் கூற்றாயிற்று. கேட்பாயாகவென்றது கொற்றவையைநோக்கி. முடிக வென்ற வியங்கோள், வேண்டுகோட் பொருண்மைக்கண் வந்தது. தில், விழைவின்கண் வந்தது

168 - 71. மின் அவிர் ஓடையொடு பொலிந்த வினை நவில் *யானை நீள் திரள் தட கை நிலமிசை புரள களிறு களம் படுத்த பெரு செய் ஆடவர்—ஒளி விளங்குகின்ற பட்டத்தோடே பொலிவுபெற்ற போர்த்தொழிலைப்பயின்ற யானையினுடைய நீண்டதிரண்ட பெருமையினையுடையகை அற்று நிலத்தே புரளும்படி யானையை முன்னர்க்கொன்ற பெரியசெயலையுடைய வீரருடைய,

செயலென்னும் வினைப்பெயர் செய்யென முதனிலையாய் நின்றது.

172. ஒளிறு வாள் விழுப்புண் காணிய புறம் போந்து—விளங்கும் வாளி னாற் போழ்ந்த சீரியபுண்ணைக் கண்டுபரிகரித்தற்குத் தானிருக்கின்ற இடத்திற் குப் புறம்பேபோந்து திரிதரும்வேந்தன் (187) என்க.

173. †வடந்தை தண் வளி—வடதிசைக்கண்ணதாகிய குளிர்ந்தகாற்று, என்றது வாடையை

173 - 5. [தண்வளி யெறிதொறு நுடங்கித், தெற்கேர் பிறைஞ்சிய தலைய நற்பல், பாண்டில் விளக்கிற் பருஉச்சுட ரழல ] நல் பல்பாண்டில் விளக்கில் பருஉ சுடர் தண் வளி எறிதொறும் நுடங்கி தெற்கு ஏர்பு இறைஞ் சிய தலைய அழல—நன்றாகிய பலகால்விளக்கிலெரிகின்ற பருத்தகொழுந்து வாடைக்காற்று அடிக்குந்தோறும் அசைந்து தெற்குநோக்கியெழுந்து சாய்ந்த தலையினையுடையவாய் எரிய.

விளக்கு ஆகுபெயர்.

176 - 7. வேம்பு தலை யாத்த நோன்காழ் எஃகமொடு முன்னோன் முறைமுறை காட்ட—வேப்பந்தாரைத் தலையிலேகட்டின வலிய காம்பினை யுடைய வேலோடே முன்செல்கின்ற சேனாபதி புண்பட்டவீரரை அடைவே அடைவேகாட்ட,

177 - 80. பின்னர் மணி புறத்து இட்ட மா தாள் பிடியொடு பருமம் களையா பாய் பரி கலி மா இரு சேறு தெருவின எறி துளி விதிர்ப்ப—பின்னாக மணிகளைத் தன்னிடத்தேயிட்ட பெருமையையுடைய தாளினையுடைய குசை யோடே பக்கரைவாங்காத பாய்ந்துசெல்லுஞ் செலவினையுடைய செருக்கின குதிரைகள் கரிய சேற்றையுடைய தெருவிலே தம்மேலேவீசும் துளிகளையுதற,

தாளென்றது வாய்க்கருவியிற் கோத்துமுடியும குசையிற்றலையை.

181 புடை வீழ் அம் துகில் இடவயின் தழீஇ—இடத்தோளினின்றும் முவிவீழ்ந்த அழகினையுடைய ‡ஒலியலை இடப்பக்கத்தேயணைத்துக்கொண்டு,

182 - 3. வாள் தோள் கோத்த வன்கண் காளை சுவல் மிசை அமைத்த கையன்—வாளைத்தோளிலேகோத்த தறுகண்மையையுடைய வாளொடுப் பான்றோளிலே வைத்த வலக்கையையுடையனாய்,

* புறநா. 19 : 9 - 11.

† இப்பாட்டிற்கு 'வடந்தைத்தண்வளி" என்னும் இந்தப்பகுதி உயிர் போன்றது. ‡ ஒலியல் - உத்தரீயம்.

183. *முகன் அமர்ந்து—புண்பட்டவீரர்க்கு அகமலர்ச்சிதோன்ற முகம் பொருந்தி,

184. நூல் கால்யாத்த மாலை வெண்குடை—நூலாலே சுட்டத்தைக்கட்டின முத்தமாலையினையுடைய கொற்றக்குடை,

185. தவ்வென்று அசைஇ தா துளி மறைப்ப—தவ்வென்னுமோசைபட்டு அசைந்து பரக்கின்ற துளியைக் காக்க,

தாழ்துளியும்பாடம்.

186 - 7. நள்ளென் யாமத்தும் பள்ளிகொள்ளான் சிலரொடு திரிதரும் வேந்தன்—நள்ளென்னுமோசையையுடைய நடுவியாமத்தும் பள்ளிகொள்ளானாய்ச் சிலவீரரோடே புண்பட்டோரைப் பரிகரித்துத் திரிதலைச்செய்யுமரசன்,

188. பலரொடு முரணிய பாசறை தொழில்—சேரன் செம்பியன்முதலிய †எழுவரோடே மாறுபட்டுப் பொருகின்ற பாசறையிடத்துப் போர்த்தொழில.

புண்காணிய புறம்போந்து (172) சுடரழலக் (175) காட்ட (177) விதிர்ப்பத் (180) தழீஇக் (181) கையனாய் அமர்ந்து (183) மறைப்பப் (185) பள்ளிகொள்ளானாய்த் (186) திரியும்வேந்தன் (187) என்க.

அம்ம (168) வானம் சார்காலத்து மழையைப்பெய்ததாகப் (2) பின்னாகிழ்ந்தபொழுது கூதிர்க்காலமாய் நிலைபெற்றது (72); அக்கூதிர்க்காலத்து நடுவியாமத்தே (12) வாயிலினையும் (88) முனகடையினையும் (92) முற்றத்தினையும் (90) சிறப்பினையுமுடைய (89) கோயில் (100) வரைப்புக்களிற் (107) காண்பினல்லிலிற் (114) பாண்டிலிற் (123) சேக்கையிலே (135) வதியுமரிவைக்குப் (166) படர்தீரும்படி (167) வேந்தன் (187) பலரொடுமுரணிய பாசறைத்தொழில் (188) விறந்து (167) இன்னேமுடிவதாக; இஃது எனக்கு விருப்பம் (168) எனக் கொற்றவையைப்பரவிற்றாக வினைமுடிக்க.

இப்பாட்டுத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மண்ணாசையாற்சென்று பொருதலின், இப்போர் வஞ்சியாகலின், ‡வஞ்சிக்குக்கொற்றவைநிலையுண்மையின், கொற்றவையை வெற்றிப்பொருட்டுப் பரவுதல் கூறினார்; அது பாலைத்திணைக்கேற்றலின்.

பாண்டியன் நெடுஞ்செழியனை மதுரைக்கணக்காயனார்மகனார் நக்கீரனார்பாடிய நெடுநல்வாடைக்கு மதுரைஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்த உரை முற்றிற்று.

---

வெண்பா.

வாடை நலிய வடிக்கண்ணா டோணசைஇ
யோடை மழகளிற்றா னுள்ளான்கொல்—கோடன்
முகையோ டலமர முற்றெரிபோற் பொங்கிப்
பகையோடு பாசறையு ளான்.

---

* திருக்குறள், 84.

† எழுவர்பெயரையும் இப்புத்தகத்தின் 213 - ஆம் பக்கங்களின் கீழ்க்குறிப்புக்களாலுணர்க.

‡ பு - வெ. வஞ்சி. 5.

## எட்டாவது

# *குறிஞ்சிப்பாட்டு.



அன்னாய் வாழிவேண் டன்னை யொண்ணுத
லொலிமென் கூந்தலென் றோழி மேனி
விறலிழை நெகிழ்த்த வீவருங் கடுநோ
யகலு ளாங்க ணறியுநர் வினவும்
பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும்
வேறுபல் லுருவிற் கடவுட் பேணி
நறையும் விரையு மோச்சியு மலவுற்
றெய்யா மையலை நீயும் வருந்துதி
நற்கவின் றொலையவு நறுந்தோ ணெகிழவும்
புட்பிற ரறியவும் புலம்புவந் தலைப்பவு
முட்கரந் துறையு முய்யா வரும்படர்
செப்பல் வன்மையிற் செறித்தியான் கடவலின்
முத்தினு மணியினும் பொன்னினு மத்துணை
நோவருங் குரைய கலங்கெடிற் புணருஞ்
சால்பும் வியப்பு மியல்புங் குன்றின்
மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்த
லாசறு காட்சி யையர்க்கு மந்நிலை
யெளிய வென்னார் தொன்மருங் கறிஞர்
மாதரு மடனு மோராங்குத் தணப்ப
நெடுந்தே ரெந்தை யருங்கடி நீவி

* இது பெருங்குறிஞ்சியெனவும் வழங்கும்; "எருவையென்பது. 'எருவை ........ கருவிளை' எனக் கபிலர்பாடிய பெருங்குறிஞ்சியினும் வந்தது" (பரிபாடல். 19: 77 - பரி. உரை); "கபிலர்பாடிய பெருங்குறிஞ்சியில் வரையின்றிப் பூமயங்கியவாறு காண்க" — (தொல். அகத். சூ - 19 - ந. உரை)

1. அன்னாய்வாழிவேண்டன்னை: ஐங்குறு. 201 - 10; அகநா. 48.

6. வேறுபல்லுருவிற்கடவுள்: (முருகு. 282); பல்வேறுருவின்: (குறிஞ்சி. 103); "மனக்கோ ளினக்கென வடிவுவே றிலையே" (பரி. 4: 56.)

8. எய்யாமையென்னுமுரிச்சொல் அறியாமையென்னுங் குறிப்புணர்த்து மென்பதற்கு இவ்வடி மேற்கோள்; (தொல். உரி. சூ. 44. இள. சேனா. ந; இ - வி. சூ - 290.)

13 - 4. "பொன்னின் குடமுடைந்தாற் பொன்னாகும்" (மூதுரை, 18.)

*யிருவே மாய்ந்த மன்ற லிதுவென*
*நாமறி வுறுவிற் பழியு முண்டோ*
*வாற்றின் வாரா ராயினு மாற்ற*
*வேனையுல கத்து மியைவதா னமக்கென*
*மானமர் நோக்கங் கலங்கிக் கையற்*
*றானச் சிறுமைய ளிவளுந் தேம்பு*
*மிகன்மீக் கடவு மிருபெரு வேந்தர்*
*வினையிடை நின்ற சான்றோர் போல*
*விருபே ரச்சமோ டியானு மாற்றலேன்*
*கொடுப்பினன் குடைமையுங் குடிநிர லுடைமையும்*
*வண்ணமுந் துணையும் பொரீஇ யெண்ணா*
*தெமியேந் துணிந்த வேமஞ்சா லருவினை*
*நிகழ்ந்த வண்ண நீநனி யுணரச்*
*செப்ப லான்றிசிற் சினவா தீமோ*
*நெற்கொ ணெடுவெதிர்க் கணந்த யானை*
*முத்தார் மருப்பி னிறங்குகை கடுப்பத்*
*துய்த்தலை வாங்கிய புனிறுதீர் பெருங்குர*
*னற்கோட் சிறுதினைப் படுபு ளோப்பி*
*யெற்பட வருதிய ரெனநீ விடுத்தலிற்*
*கலிகெழு மரமிசைச் சேணோ னிழைத்த*
*புலியஞ் சிதண மேறி யவண*
*சாரற் சூரற் றகைபெற வலந்த*
*தழலுந் தட்டையுங் குளிரும் பிறவுங்*
*கிளிகடி மரபின வூழூழ் வாங்கி*

---

23. *பா. வாராதாயினும்.*

31. *வண்ணமென்பது இயற்சொ லென்பதற்கு இவ்வடி மேற்கோள்;* (*தொல். புறத். சூ* - 27. *ந. உரை*). *பா. வண்ணமுந் தொடையும்.*

35 - 7. *முத்தார் மருப்பு:* (*முருகு.* 305; *மலைபடு,* 518.) *தினைக்கதிர்க்கு யானைக்கை: "செந்தினை, மடப்பிடித் தடக்கை யன்ன ......... குரல்", "பிடிக்கை யன்ன பெருங்குர லேனல்"* (*குறுந்.* 198, 360); *"ஒருத்த லேந்துகை கடுப்பத், தோடுதலை வாங்கிய நீடுகுரற் பைந்தினை"* (*நற்.* 317.)

40. *பா. மீமிசை.*

43 - 4. *"வெதிர்புனை தட்டையேன்"* (*நற்.* 147); *"தழலுந் தட்டையு முறியுந் தந்து", "படுகிளி கடியுங் கொடிச்சிகைக் குளிரே"* (*குறுந்.* 223. 291;) *"தழலை வாங்கியுந் தட்டை யோச்சியும்"* (*அகநா.* 188); *குளிரும் குளிரியு மொக்குமெனக் கூறி இவற்றை மேற்கோள் காட்டுவர்:* (*கந்தை.* 73 - *உரை*)

யுரவுக்கதிர் தெறூஉ முருப்பவி ரமயத்து
விசும்பாடு பறவை வீழ்பதிப் படர
நிறையிரும் பௌவங் குறைபட முகந்துகொண்
டகலிரு வானத்து வீசுவளி கலாவலின்
முரசதிர்ந் தன்ன வின்குர லேற்றொடு
நிரைசெல னிவப்பிற் கொண்மூ மயங்கி
யின்னிசை முரசிற் சுடர்ப்பூட் சேஎ
யொன்னார்க் கேந்திய விலங்கிலை யெஃகின்
மின்மயங்கு கருவிய கன்மிசைப் பொழிந்தென
வண்ண னெடுங்கோட் டிழிதரு தெண்ணீ
ரவிர்துகில் புரையு மவ்வெள் ளருவித்
தவிர்வில் வேட்கையேந் தண்டா தாடிப்
பளிங்குசொரி வன்ன பாய்சுனை குடைவுழி
நளிபடு சிலம்பிற் பாயம் பாடிப்
பொன்னெறி மணியிற் சிறுபுறந் தாழ்ந்தவெம்
பின்னிருங் கூந்தல் பிழிவனந் துவரி
யுள்ளகஞ் சிவந்த கண்ணேம் வள்ளித
ழொண்செங் காந்த ளாம்ப லனிச்சந்
தண்கயக் குவளை குறிஞ்சி வெட்சி
செங்கொடு வேரி தேமா மணிச்சிகை
யுரிதுநா றவிழ்தொத் துந்தூழ் கூவிள
மெரிபுரை யெறுழஞ் சுள்ளி கூவிரம்
வடவனம் வாகை வான்பூங் குடசம்
மெருவை செருவிளை மணிப்பூங் கருவிளை
பயினி வானி பல்லிணர்க் குரவம்
பசும்பிடி வகுளம் பல்லிணர்க் காயா

---

49. "முரசதிர் பனைபோன் முழங்கிடி பயிற்றி" (பரி. 22).

51 - 3. "செல்வக் கடம்பமர்ந்தான் வேன்மின்னி" (ஐந். 50: 1.) "கண்ணொளி ரெஃகிற் கடிய மின்னி" (பரி. 22: 7.)

57. "சூழ்ந்த பேரொளி துளும்பிய நிலவினீ ரொன்றுத், தாழ்ந்த வந்துமி விடைவயிற் றழீஇயினன் பளிக்கு, போழ்ந்தி யற்றிய நிலனெனப் பூம்புன லிடைப்போய், வீழ்ந்த னன்பெரு வேத்தவை முகிழ்நகை விளைப்ப" (பாகவதம், 10: சிசுபாலனைக்கொன்ற. 118)

68. இலவம், எருவை, மலர்விசேடமென்பதற்கு மேற்கோள்; (பரி. 19: 77 - பரி.)

விரிமல ராவிரை வேரல் சூரல்
குரீஇப் பூளை குறுநறுங் கண்ணி
குருகிலை மருதம் விரிபூங் கோங்கம்
போங்கந் திலகந் தேங்கமழ் பாதிரி
செருந்தி யதிரல் பெருந்தண் சண்பகங்
கரந்தை குளவி கடிகமழ் கலிமாத்
தில்லை பாலை கல்லிவர் முல்லை
குல்லை பிடவஞ் சிறுமா ரோடம்
வாழை வள்ளி நீணறு நெய்த
றாழை தளவ முட்டாட் டாமரை
ஞாழன் மௌவ னறுந்தண் கொகுடி
சேடல் செம்மல் சிறுசெங் குரலி
கோடல் கைதை கொங்குமுதிர் நறுவழை
காஞ்சி மணிக்குலைக் கட்கமழ் நெய்தல்
பாங்கர் மராஅம் பல்பூந் தணக்க
மீங்கை பிலவந் தூங்கிணர்க் கொன்றை
யடும்பம ராத்தி நெடுங்கொடி யவரை
பகன்றை பலாசம் பல்பூம் பிண்டி
வஞ்சி பித்திகஞ் சிந்து வாரந்
தும்பை துழாஅய் சுடர்ப்பூந் தோன்றி
நந்தி நறவ நறும்புன் னாகம்
பாரம் பீரம் பைங்குருக் கத்தி
யாரங் காழ்வை கடியிரும் புன்னை
நரந்த நாக நள்ளிரு ணாறி
மாயிருங் குருந்தும் வேங்கையும் பிறவு
மரக்குவிரித் தன்ன பரேரம் புழகுடன்
மாலங் குடைய மலிவன மறுகி
வான்கண் கழீஇய வகலறைக் குவைஇப்

---

84. "கட்கமழ் நெய்தலூதி" (முருகு. 74.)

87. 'அடும்பு' என்னும்பாடம் நேர்; (கலி. 132; பதிற். 30; திணைமா. 51) பா. அடம்பமர்.

62 - 96. இவ்வடிகளிற் குறிஞ்சிநிலத்திற்கும் கூதிர்க்காலத்திற்கும் யாமத்திற்குமுரியபூக்களேயன்றி வேறுநிலத்திற்கும் வேறுகாலத்திற்குமுரியபூக்கள் மயங்கிவந்தமை "எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்" (தொல். அகத். 14) என்னும் சூத்திரத்தாலமையும்.

புள்ளா ரியத்த விலங்குமலைச் சிலம்பின்
வள்ளுயிர்த் தெள்விளி யிடையிடைப் பயிற்றிக்
கிள்ளை யோப்பியுங் கிளையிதழ் பறியாப்
பைவிரி யல்குற் கொய்தழை தைஇப்
பல்வே றுருவின் வனப்பமை கோதையெம்
மெல்லிரு முச்சிக் கவின்பெறக் கட்டி
யெரியவி ருருவி னங்குழைச் செயலைத்
தாதுபடு தண்ணிழ லிருந்தன மாக
வெண்ணெய் நீவிய சுரிவளர் நறுங்காழ்த்
தண்ணறுந் தகரங் கமழ மண்ணி
யீரம் புலர விரலுளர்ப் பவிழாக்
காழகி லம்புகை கொளீஇ யாழிசை
யணிமிகு வரிமிஞி றார்ப்பத தேங்கலந்து
மணிநிறங் கொண்ட மாயிருங் குஞ்சியின்
மலையவு நிலத்தவுஞ் சினையவுஞ் சுனையவும்
வண்ண வண்ணத்த மலராய்பு விரைஇய
தண்ணறுந் தொடையல் வெண்போழ்க் கண்ணி
நலம்பெறு சென்னி நாமுற மிலைச்சிப்
பைங்காற் பித்திகத் தாயித ழலரி
யந்தொடை யொருகாழ் வளைஇச் செந்நீ
யொண்பூம் பிண்டி யொருகாது செரீஇ
யந்தளிர்க் குவவுமொய்ம் பலைப்பச் சாந்தருந்தி
மைந்திறை கொண்ட மலர்ந்தேந் தகலத்துத்
தொன்றுபடு நறுந்தார் பூணொடு பொலியச்
செம்பொறிக் கேற்ற வீங்கிறைத் தடக்கையின்
வண்ண வரிவில் லேந்தி யம்புதெரிந்து
நுண்வினைக் கச்சைத் தயக்கறக் கட்டி
யியலணிப் பொலிந்தவீகை வான்கழ
றுயல்வருந் தோறுந் திருந்தடிக் கலாவ
முனைபாழ் படுக்குந் துன்னருந் துப்பிற்

---

101. பா. பரியா.

118 - 9. அசோகம்பூவிற்கு நெருப்பு (மதுரை. 700 - 701.) அசோகந் தளிரைக் காதிற்செருகல்; புறநா. 31 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

128. மு. மலைபடு. 59.

பகைபுறங் கண்ட பல்வே லிளைஞரி
னுரவுச்சினஞ் செருக்கித் [illegible]
முளைவா லெயிற்ற வள்ளுகிர் ஞமலி
இளையாக் கண்ணை வளைகுபு நெறிதா
நடுங்குவன மெழுந்து நல்லடி தளர்ந்தியா
மிடும்பைகூர் மனத்தே மருண்டுபுலம் படரா
மாறுபொரு தோட்டிய புகல்வின் வேறுபுலத்
தாகாண் விடையி னணிபெற வந்தெம்
மலமா லாயிடை வெரூஉத லஞ்சி
மெல்லிய வினிய மேவரக் கிளந்தெம்
மைம்பா லாய்கவி னேத்தி யொண்டொடி
யசைமென் சாய லவ்வாங் குந்தி
மடமதர் மழைக்க ணிளையீ ரிறந்த
கெடுதியு முடையே னென்றன னதனெதிர்
சொல்லே மாதலி னல்லாந்து கலங்கிக்
கெடுதியும் விடீஇ ராயி னெம்மொடு
சொல்லலும் பழியோ மெல்லிய லீரென
நைவளம் பழுநிய பாலை வல்லோன்
கைகவர் நரம்பி னிமமென விமிரு
மாதர் வண்டொடு சுரும்புநயந் திறுத்த
தாதவி ழலரித் தாசினை பிளந்து
தாறடு களிற்றின் வீறுபெற வோச்சிக்
கல்லென் சுற்றக் கடுங்குர லவித்தெஞ்
சொல்லற் பாணி நின்றன னாக
விருவி வேய்ந்த குறுங்காற் குரம்பைப்
பிணையேர் நோக்கின் மனையோண் மடுப்பத்
தேம்பிழி தேறன் மாந்தி மகிழ்சிறந்து
சேம மடிந்த பொழுதின் வாய்மடுத்

---

132. பா இளையாச்.

138. "மெல்லிய வினிய மேவரு தகுந, விழைவுமொழி யுரமெனச் சொல் லினும்" (குறுந். 306); "செவ்விய தீவியசொல்லி" (கலி. 19.)

130 - 42 இவ்வடிகள், தலைவன் காய்காத்தலாற்றிற்கு மேற்கோள், (தொல். பொருளியல், சூ. 13. ந.)

146 சிறுபாண். 36.

152. இவ்வடி, [illegible] மேற்கோள், (தொல். இடை. சூ. 32 - ந.)

இரும்புன மிழந்தலிற் சிறுமை நோனு
தாவுற முன்றிலை கொளீஇ நோய்மிக்
குராவுச்சின முன்பா னுடல்சினஞ் செருக்கிக்
கணைவிடு புடையூக் கானங் கல்லென
மடிவிடு வீளையர் வெடிபடுத் தெதிரக்
கார்ப்பெய லுருமிற் பிளிறிச் சீர்த்தக
விரும்பிணர்த் தடக்கை யிருநிலஞ் சேர்த்திச்
சினந்திகழ் கடாஅஞ் செருக்கி மரங்கொல்பு
மையல் வேழ மடங்கலி னெதிர்தர
வுய்விட மறியே மாகி யொய்யெனத்
திருந்துகோ லெல்வளை தெழிப்ப நாணுமறந்து
விதுப்புறு மனத்தேம் விரைந்தவற் பொருந்திச்
சூருறு மஞ்ஞையி னடுங்க வார்கோ
லுடுவுறும் பகழி வாங்கிக் கடுவிசை
யண்ணல் யானை யணிமுகத் தழுத்தலிற்
புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதரப்
புள்ளி வரிநுதல் சிதைய நில்லா
தயர்ந்து புறங்கொடுத்த பின்னர் நெடுவே
ளணங்குறு மகளி ராடுகளங் கடுப்பத்
திணிநிலைக் கடம்பின் றிரளரை வளைஇய
துணையறை மாலையிற் கைபிணி விடேஎ
நுரையுடைக் கலுழி பாய்தலி னுரவுத்திரை
யடுங்கரை வாழையி னடுங்கப் பெருந்தகை
யஞ்சி லோதி யசைபல் யாவது
மஞ்ச லோம்புநின் னணிநல நுகர்கென
மாசறு சுடர்நுத னீவி நீடுநினைந்
தென்முக நோக்கி நக்கன னந்நிலை

---

161. பெரும்பாண். 166 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

162 - 5. யானைமுழக்கிற்கு இடி: பரிபாடல். 8: 17 - 8.

167. பா. வளைதெளிர்ப்ப.

170 - 71. "செந்தொடைப் பகழி வாங்கிச் சினஞ்சிறந்து, கருங்கைக் கானவன் களிற்றுநிறத் தழுத்தலின்" (தொல். செய் சூ. 95 - பேர். மேற்.)

172. பாய்தல், பரத்தலென்னுங் குறிப்புப்பொருண்மையை யுணர்த்து மென்பதற்கு இவ்வடி மேற்கோள்; (தொல். உரிச். சூ. 63. ந; இ - வி. சூ. 281 - உரை.)

176 - 7. "கடம்பு சூடிய கன்னி மாலைபோற், றொடர்ந்து கைவிடாத் தோழி மாரொடும்" (சீவக. 990)

160 - 83. இவ்வடிகள், தலைவன் களிறுகாத்தவாற்றிற்கும் புனலின் எடுத்தவாற்றிற்கும் மேற்கோள்; (தொல். பொருளியல். சூ. 13 - ந. உரை.)

நாணு முட்டு நண்ணுவழி யடைதர
வொய்யெனப் பிரியவும் விடாஅன் கவைஇ
யாக மடைய முயங்கலி னவ்வழிப்
பழுமிள குக்க பாறை நெடுஞ்சுனை
முழுமுதற் கொக்கின் றீங்கனி யுதிர்ந்தெனப்
புள்ளெறி பிரசமொ டீண்டிப் பலவி
னெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்த தேற
னீர்செத் தயின்ற தோகை வியலூர்ச்
சாறுகொ ளாங்கண் விழவுக்கள நந்தி
யரிக்கூட் டின்னியங் கறங்க வாடுமகள்
கயிறூர் பாணியிற் றளருஞ் சாரல்
வரையர மகளிரிற் சாஅய் விழைதக
விண்பொருஞ் சென்னிக் கிளைஇய காந்தட்
டண்கம ழலரி தாஅய் நன்பல
வம்புவிரி களத்திற் கவின்பெறப் பொலிந்த
குன்றுகெழு நாடனெம் விழைதரு பெருவிற
லுள்ளத் தன்மை யுள்ளினன் கொண்டு
சாறயர்ந் தன்ன மிடாஅச் சொன்றி
வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப
மலரத் திறந்த வாயில் பலருணப்
பைங்கிணை மொழுகிய நெய்ம்மலி யடிசில்
வசையில் வான்றிணைப் புரையோர் கடும்பொடு
விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னோ டுண்டலும் புரைவ தென்றாங்
கறம்புணை யாகத் தேற்றிப் பிறங்குமலை
மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழு
தேமுறு வஞ்சினம் வாய்மையிற் றேற்றி
யந்தீந் தெண்ணீர் குடித்தலி னெஞ்சமர்ந்
தருவிட ரமைந்த களிறுதரு புணர்ச்சி
வானூரி யுறையுள் வயங்கியோ ரவாவும்
பூமலி சோலை யப்பகல் கழிப்பி
யெல்லை செல்ல வேழூர் பிறைஞ்சிப்
பல்கதிர் மண்டிலங் கல்சேர்பு மறைய

---

184. குறிஞ்சி. 21 - ஆம் அடியின் உரையைப்பார்க்க.
193 - 4. நளவெண். சுயம், 148.

மான்கண மரமுதற் றெவிட்ட வான்கணங்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதர
வேங்குவயி ரிசைய கொடுவா யன்றி
லோங்கிரும் பெண்ணை யகமட லகவப்
பாம்புமணி யுமிழப் பல்வயிற் கோவல
ராம்பலந் தீங்குழற் றெள்விளி பயிற்ற
வாம்ப லாயிதழ் கூம்புவிட வளமனைப்
பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி
யந்தி யந்தண ரயரக் கானவர்
விண்டோய் பணவை மிசைஞெகிழி பொத்த
வான மாமலை வாய்சூழ்பு கறுப்பக் கானங்
கல்லென் றிரட்டப் புள்ளின மொலிப்பச்
சினைஇய வேந்தன் செல்சமங் கடுப்பத்
துனைஇய மாலை துன்னுதல் காணூஉ
நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மண மயர்கஞ் சின்னாட்
கலங்க லோம்புமி னிலங்கிழை யீரென
வீர நன்மொழி தீரக் கூறித்
துணைபுண ரேற்றி னெம்மொடு வந்து
துஞ்சா முழவின் மூதூர் வாயி
லுண்டுறை நிறுத்துப் பெயர்ந்தன னதற்கொண்
டின்றை யன்ன விருப்போ டென்று

219. வயிரிசை மயிலுக்கு; (நெடுநல். 99.)

221. "நாம நல்லராக் கதிர்பட வுமிழ்ந்த, வாய்மணி விளக்கின்" (அகநா. 72.)

217 - 22. "அன்னாய் வாழிவேண் டன்னை யென்னுங் குறிஞ்சிப்பாட்டி னுள், 'மான்கண மரமுதற் றெவிட்ட ......... தெள்விளி பயிற்ற' என்புழி முல்லைக்குரிய கருப்பொருளாகிய ஆன்கணமும் பாம்பும் கோவலரும் ஆம்பற் குழலும் அதற்குரிய முதற்பொருளாகிய மாலையும் நெய்தற்குரிய கருப்பொரு ளாகிய அன்றிலும் பனையும் வந்தவாறுகண்டுகொள்க" — (நாற். ஒழிபு. சூ. 42 - உரை.)

215 - 30. மாலைவருணனை.

235. "மடநா குடனாகச் செல்லு மழவிடைபோற் செம்மாந்து" (நள வெண். சுயம். 156.)

238. "தலைநா ளன்ன பேணலன்" (நற். 332), "இன்றை யன்ன நட்பின்", "பெருவரை யடுக்கத்துக் கிழவ னென்று, மின்றை யன்ன நட் பினன்" (குறுந். 199, 385), "தண்டாக் காதலுந் தலைநாட் போன்மே" (அகநா. 332), "இன்றே போல்கநும் புணர்ச்சி" (புறநா. 58.)

யிரவரன் மாலைய னேவரு தோறுங்
காவலர் கடுகினுங் கதனாய் குரைப்பினு
நீதுயி லெழினு நிலவுவெளிப் படினும்
வேய்புரை மென்றோ ளின்றுயி லென்றும்
பெறாஅன் பெயரினு முனிய லுறாஅ
னிளமையி னிகந்தன்று மிலனே வளமையிற்
றன்னிலை தீர்ந்தன்று மிலனே கொன்னூர்
மாய வரவி னியல்புநினைஇத் தேற்றி
நீரெறி மலரிற் சாஅ யிதழ்சோரா
ஈரிய கலுழுமிவள் பெருமதர் மழைக்க
ணாகத் தரிப்பனி யுறைப்ப நாளும்
வலைப்படு மஞ்ஞையி னலஞ்செலச் சாஅய்
நினைத்தொறுங் கலுழுமா லிவளே கங்கு
லுளைச்செறி யுழுவையு மாளியு முளியமும்
புழற்கோட் டாமான் புகல்வியுங் களிறும்
வலியிற் றப்பும் வன்கண் வெஞ்சினத்
தருமுஞ் சூரு மிரைதே ரரவமு
மொடுங்கிருங் குட்டத் தருஞ்சுழி வழங்குங்
கொடுந்தாண் முதலையு மிடங்கருங் கராமு
நூழிலு மிழுக்கு மூழடி முட்டமும்
பழுவும் பாந்தளு முளப்படப் பிறவும்
வழுவின் வழாஅ விழுமமவர்
குழுமலை விடரக முடையவா லெனவே.

---

239. மாலை, இயல்பென்னுங்குறிப்பையுணர்த்துமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; (தொல். உரி. சூ. 16 - இளம். சே. ந. உரை; இ - வி. சூ. 290 - உரை.)

231 - 44. உண்மைசெப்பற்கு இவ்வடிகள் மேற்கோள்; (தொல். பொருளியல், சூ. 13 - ந. உரை.)

245. பா. திரிந்தன்றுமிலன்.

251 - 61. இவ்வடிகளுடன், "தலைமகன் இரவுக்குறி நுழைகின்ற நிலைமைக்கண், எம்பெருமான் வரும்வழி, என்றும் வெண்கோட்டியானையும் அரவும் உருமும் புலியும் வரையரமகளிருமுடைத்து; மற்றும் தெய்வங்கள் வெளவும் வண்ணத்தன; ஏதம் நிகழ்வது கொல்லோவென வேறுபடும்' (இறை. சூ. 23 - உரை) என்பது ஒப்பிடற்பாலது.

## இதன்பொருள்.

இதற்குக் குறிஞ்சியென்று பெயர்கூறினர்; இயற்கைப்புணர்ச்சியும் பின்னர் நிகழும் புணர்ச்சிகளுக்குநிமித்தங்களும் கூறுதலின். அன்றியும் முதலானும் கருவானும் குறிஞ்சிக்குரியனவே கூறுதலானும் அப்பெயர் கூறினர். *"அறத்தொடு நிற்குங் காலத் தன்றி. யறத்தியன் மரபில டோழி யென்ப." என்பதனால், தோழி அறத்தொடு நிற்குங்காலம்வந்து செவிலிக்கு அறத்தொடு நின்றவழி அதற்கிலக்கணங்கூறிய †" எளித்த லேத்தல் வேட்கை யுரைத்தல், கூறுத லுசாத லேதீடு தலைப்பா, டுண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ, யவ்வெழு வகைய தென்மனார் புலவர்." என்னுஞ் சூத்திரத்தேழனுள், கூறுதலுசாதலொழிந்த ஆறுங்கூறி அறத்தொடுநிற்கின்றாளென் றுணர்க.

1\. அன்னாய் வாழி— தாயே வாழ்வாயாக

[வேண் டன்னை :] அன்னை வேண்டு — தாயே யான்கூறுகின்றவார்த்தையை விரும்புவாயாக ;

1 - 12. [ஒண்ணுத, லொலிமென் கூந்தலென ரோழி மேனி, விறலிழை நெகிழ்த்த வீவருங் கடுநோ, யகலு ளாங்க ணறியுநர் வினவும், பரவியுந்தொழுதும் விரவுமலர் தூயும், வேறுபல் லுருவிற் கடவுட் பேணி, நறையும் விரையு மோச்சியு மலவுற், றெய்யாமையலை நீயும் வருந்துதி, நற்கவின் றொலையவு நறுந்தோ ணெகிழவும், புட்பிற ரறியவும் புலம்புவந் தலைப்பவு, முட்கரந் துறையு முய்யா வரும்படர், செப்பல் வன்மையிற் செறித்தியான் கடவலின் :]

ஒள் நுதல் ஒலி மெல் கூந்தல் ‡விறல் மேனி என் தோழி உள் கரந்து உறையும் உய்யா அரு படர்— ஒள்ளிய நுதலினையும் தழைக்கும் மெல்லிய மயிரினையும் பிறர் திறத்தினைவென்ற வெற்றியினையுடைய நிறத்தினையுமுடைய என்னுடைய தோழி தன்மனத்துள்ளே மறைத்திருக்கும் தன்னுயிரைத் தான் தாங்கியிராமைக்குக் காரணமாகிய ஆற்றுதற்கரிய நினைவு,

இழை நெகிழ்த்த வீவு அரு கடு நோய் செப்பல் வன்மையின் யான் செறித்து—தானணிந்தகலன்களை நெகிழப்பண்ணின மருந்துகளாற் கெடுத்தற்கரிய கடிய நோய் நினக்குச்சொல்லுதற்கு எளிதன்றி வலியதன்மையையுடைமையினாலே யான் அதனை என்னுள்ளேயடக்கி,

நல் கவின் தொலையவும் நறு §தோள் நெகிழவும் புள் பிறர் அறியவும் புலம்பு வந்து அலைப்பவும் கடவலின்—அவளுடைய நன்றாகிய அழகுகெடவும் நறியதோள் மெலியவும் வளைகழலுதலைப் பிறரறியவும் தனிமை மேன்மேலே வந்து வருத்தவும் நினக்கு அறிவுறாமற் செலுத்துகையினாலே,

---

* தொல்காப்பியம், பொருளியல், சூ. 12.

† „ „ „ 13.

‡ "விறல்வல்" (கலி. 3) என்பதன் உரையைப்பார்க்க.

நீயும் அலவுற்று அகல் உள் ஆங்கண் அறியுநர் வினாய்—நீயும் அலம்வந்து அகன்றஇடத்தையுடைய ஊரிடத்துக் *கட்டினாலும் †கழங்கினாலும் எண்ணி யறிவாரை வினாவி அவர் தெய்வத்தான்வந்த வருத்தமென்றலின்,

வினாயுமென்றவிடத்தும்மையைப் பேணியென்பதன் பின்னே கூட்டுக.

வேறு உருவின் பல் கடவுள் நறையும் விரையும் ஓச்சியும் பரவியும் தொழுதும் விரவு மலர் தூயும் பேணியும்—வேறுபட்ட வடிவினையுடைய பலதெய்வங்களைத் தாட்களும் சந்தனமுதலியனவுங்கொடுத்தும் பரவியும் வணங்கியும் கலந்தபூக்களைச்சிதறியும் வழிபட்டும் அதனால் தீராமையின்,

பேணியுமென்னுமும்மை சிறப்பு ; ஏனைய எண்ணும்மை.

எய்யா மையலை வருந்துதி—இந்நோயையறியாத மயக்கத்தையுடையையாய் வருந்தாநின்றாய் ;

என் தோழி படர்இழைநெகிழ்த்தநோய் நினக்குச் செப்பல்வன்மையின் யான் செறித்துத் தொலையவும் நெகிழவும் அறியவும் அலைப்பவும் கடவலின் நீயும் அலவுற்று வினாய்க் கடவுளைப்பேணியும் எய்யாமையலையாய் வருந்துதி யெனமுடிக்க.

13 - 4. [முத்தினு மணியினும் பொன்னினு மத்துணை, நேர்வருங் குரைய கலங்கெடிற் புணரும் :] அத்துணை முத்தினும் மணியினும் பொன்னினும் நேர் வரும் கலம் கெடின் புணரும்—அவ்வளவாகிய முத்தாலும் மாணிக்கத்தாலும் பொன்னாலும் பொருந்துதல்வரும் பூண் கெட்டதாயிற் பின்னும் வந்துகூடும் ; அதுபோலன்றி,

முத்துமுதலியவற்றிற்குக்கூறிய இலக்கணங்களை அத்துணையென்றார்.

குரைய அசை.

15 - 8. [சால்பும் வியப்பு மியல்புங் குன்றின், மாசறக் கழீஇ வயங்கு புகழ் நிறுத்த, லாசறு காட்சி யையர்க்கு மந்நிலை, யெளிய வென்னார் தொன் மருங் கறிஞர் :]

சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின் மாசு அற கழீஇ வயங்கு புகழ் அந்நிலை நிறுத்தல் — தத்தங்குலத்திற்கேற்ற குணங்களினமைதியும் மேம்பாடும் ஒழுக்கமும் பழையதன்மைகெட்டாற் பிறந்தஅழுக்கைப் போம்படிகழுவி விளங்கும்புகழை முன்புபோலே நிற்கும்படி நிறுத்தல்,

* கட்டு - சிறுமுறத்திற் பரப்பிய நெல்லிற்பார்க்கும் ஒருவகைக்குறி ; இங்ஙனம் குறிபார்ப்பவள், கட்டுவிச்சியெனப் படுவாள் ; இதனைத் திருக்கோவையார், 285 - ஆம் செய்யுளாலும் அதனுரையாலும், " கட்டுவிச்சி கட்டேறிச சோர் களநிற் சிலநெல் பிடித்தெறியா, வேரா விதிர்விதிரா மெய்சிலிராக் கை மோவாய், பேரா யிரமுடையா னென்றாள் " (20 - 22) என்னுஞ் சிறியதிருமடலாலும் உணர்க.

† கழங்கு - கழற்கொடிக்காய்.

தொல் மருங்கு அறிஞர் ஆசு அறு காட்சி ஐயர்க்கும் எளிய என்னுர்—பழைதாகிய நூலையறிவார் குற்றமற்ற அறிவினையுடைய தெய்வ இருடிகளுக்கும் எளியகாரிய மென்ணுர்;

*“ஐயர் பாங்கினு மமரர்ச் சுட்டியும்” என்ருராகலின் ஐயர் தேவராகார்.

19 - 20. [மாதரு மடனு மோராங்குத் தணப்ப, நெடுந்தே ரெந்தை யருங்கடி நீவி :]

நெடு தேர் எந்தை அரு கடி நீவி—நெடியதேரையுடைய என் தந்தையது அரிய காவலைக் கடந்து,

மாதரும் மடனும் ஓராங்கு தணப்ப—†இருமுதுகுரவரும் தமக்கு இயைந்தோர்க்குக் கொடுப்பேமென்றிருக்கின்றகாதலும் எனதுமடனும் சேரப்போக,

21. [இருவே மாய்ந்த மன்ற லிதுவென :] இது இருவேம் ஆய்ந்த மன்றல் என—இந்தமணம் தலைவனும் யானும் ‡பெருமையும் உரனும் அச்சமும் நாணும் நுணுகியகிலையாற்பிறந்த கந்தருவமணமென்று,

22. நாம் அறிவுருலின் பழியும் உண்டோ—நாம் யாய்க்கு அறிவுறுத்தலான் நமக்குப் புகழேயன்றி வருவதோர்பழியுமுண்டோ? அஃதில்லை;

உம்மை எச்சவும்மை. ஓகாரம் எதிர்மறை; §இது மறைநூல் விதித்ததாகலின்.

23. ஆற்றின் வாரார் ஆயினும்—இங்ஙனம் அறத்தொடுநின்றபின் தலைவர்க்கே நம்மை அடை நேர்ந்திலராயினும்.

ஆற்ற—நாம் உயிர்போந்துணையும் இவ்வருத்தத்தைப் பொறுத்திருக்க,

24. [வினை யுலகத்து மியைவ தா னமக்கென :] நமக்கு வினை உலகத்தும் இயைவதால் என—நமக்கு மறுபிறப்பினும் இக்கூட்டம் கூடுவதொன்ருயிருந்ததெனக்கூறி,

25 - 6. [மானமர் நோக்கங் கலங்கிக் கையற், ருனுச் சிறுமைய ளிவளுந் தேம்பும் :] ஆனு சிறுமையள் மான் அமர் நோக்கங்கலங்கி கையற்று இவளும் தேம்பும் — ஆற்றுந்தன்மைத்தல்லாத நோயினையுடையளாய் மான்நோக்கமமர்ந்த நோக்கமின்றி மையனோக்கங்கொண்டு வினையொழிந்து அயர்ந்து இவளும் மெலியும்;

---

* தொல்காப்பியம், கற்பியல் சூ. 5.

† இருமுதுகுரவர் - தாய்தந்தையர்.

‡ பெருமையும் உரனும் தலைவன் குணங்கள்; அச்சமும் நாணும் தலைவியின் குணங்கள்; (தொல். களவு. சூ. 7, 8.)

§ இது வென்றது கந்தருவ மணத்தை; அது மறைநூல்விதியென்றதை, “மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுட். டுறையமை நல்யாழ்த் துணைமையோ ரியல்பே” (தொல். களவு. 1), “அருமறை மன்ற லெட்டினுட், கந்தருவ வழக்கம்” (இறை. 1.) “காந்தர்ப்ப மென்பதுண்டாற் காதலிற்கலந்த சிந்தை, மாந்தர்க்கு மடந்தை மார்க்கு மறைகளே வகுத்த கூட்டம்” (கம்ப. சூர்ப்பணகை. 54.) என்பவற்ருலுணர்க.

இவளும் (26), கைம்மிக் (25) கெடுத்துப் புணரும் (14); அதுபோலன்றிச் சால்பு முதலியனகுன்றின் (15) இறத்தல் (16) எளியவென்னார் (18) ஆகலின், இஃது இருவேமாய்த்தமன்றலென (21) அறிவுறலிற் பழியுமில்லை (22); ஆற்றின்வாராராயினும் ஆற்ற (23) வினைபுலத்தும் இயைவதாலெனக்கூறி (24) மெலியுர் (26) எனமுடிக்க.

*"வரைவிடை வைத்த காலத்து வருந்தினும், வரையா நாளிடை வந் தோன் முட்டினும். முறையெனத் தோழிக் குரைத்தற் கண்ணும், தானேகூறுங் காலமு முளவே" என்பதனுள், 'தானே கூறுங் காலமு முளவே' என்றதனால் உடையளாயெனத் தலைவிகூற்றினைக் கொண்டுகூறினனென்றுணர்க. †"செறிவு நிறையுஞ் செம்மையுஞ் செப்பு, மறிவு மருமையும் பெண்பா லான" என்பதனால் மறை புலப்படுத்தலாகாதென்றாராயினும், ‡"உற்றுழி யல்லது சொல்ல லின்மையி, னப்பொருள் வேட்கை கிழவியி னுணர்ப" என்பதனால் மறைபுலப்படுத்தலுமாமென வழுவமைத்தலின் இங்ஙனம் தலைவிகூறினள்.

இதனால் தோழி §தலைப்பாடுகூறினள்.

27 - 8. இகல் மீ கடவும் இரு பெரு வேந்தர் வினை இடை நின்ற சான்றோர் போல—மாறுபாட்டின்மிகுதியைச்செலுத்தும் இருவராகிய பெரிய அரசரைச் ||சந்துசெய்விக்குந் தொழிலிடத்தேநின்ற அறிவுடையோரைப்போல,

29. இரு பெரு அச்சமோடு யானும் ஆற்றலேன்—நினக்கும் இவள் வருத்தத்திற்குமஞ்சும் இரண்டு பெரிய அச்சத்தாலே யானும் வருந்தாநின்றேன்;

30. கொடுப்பின் நன்கு உடைமையும்—கொடுத்தபின்பு எல்லாவற்றானும் நன்றாகிமுடிதலையும்,

குடி நிரல் உடைமையும்—ஒருகுடியாகாமல் இரண்டுகுடியும் ஒத்தலுடைமையையும்,

31. வண்ணமும்—குணத்தையும்,

துணையும்—சுற்றத்து உதவிகளையும்,

பொரீஇ எண்ணாது—ஒப்பித்துப்பார்த்துப் பின்னரும் பலருடன் உசாவாதே,

¶"சேர்ந்துறை, வண்ணப் பகுதி வரைவின் றாங்கே" என்பதனால் வண்ணம் குணமென்றுணர்க.

---

* தொல்காப்பியம், களவியல், சூ. 21.

† ,, பொருளியல், சூ. 15.

‡ ,, ,, 14.

§ தலைப்பாடு கூறல் - தலைவனும் தலைவியும் தாமே எதிர்ப்பட்டார், யான் அறிந்திலேனெனக்கூறல்.

|| சந்துசெய்வித்தல் - சந்திசெய்வித்தல்.

¶ தொல்காப்பியம், புறத்திணையியல், சூ. 27.

32. எமியேம் துணிந்த ஏமம் சால் அரு வினை—நும்மையின்றித் தமியேமாய் யாங்களே துணிந்த உயிர்க்குப் பாதுகாவலமைந்த செய்தற்கரிய இக்கந்தருவமணம்,

தானும் புணர்ச்சிக்குப்பின் உடம்படுதலின், எமியேந் துணிந்தவென்றாள்.

33. நிகழ்ந்த வண்ணம்—முன்புநடந்தபடியை,

33 - 4. நீ நனி உணர செப்பல் ஆன்றிசின் —நீ மிகவுமறியும்படி சொல்லுதலையமைந்தேன்,

34. சினவாதீமோ—அதுகேட்டுச்சினவாதிருப்பாயாக,

35. நெல் கொள் நெடு வெதிர்க்கு அணந்த யானை—நெல்லைத் தன்னிடத்தேகொண்ட நெடிய மூங்கிலைத்தின்றற்கு மேனோக்கிநின்று வருந்தின யானை அவ்வருத்தந்தீரும்படி,

36. முத்து ஆர் மருப்பின் இறங்கு கை கடுப்ப—முத்துநிறைந்த கொம்பிலே ஏறட்டுநான்ற கையையொப்ப,

37 - 8. துய் தலை வாங்கிய புனிறு தீர் பெரு குரல் நல் கோள் சிறு தினை படு புள் ஓப்பி—துய்யையுடைய தலைவளைந்த ஈன்றணிமைதீர்ந்த பெரிய கதிர்களை நன்றாகத் தன்னிடத்தேகொள்ளுந்தலையுடைய சிறிய தினையிலேவீழ்கின்ற கிளிகளையோட்டி,

துய்—இளந்தானைபருவத்துப் பஞ்சுநுனைபோன்றிருப்பது.

கடுப்ப வளைந்த வென்க.

39. எல் பட வருதியர் என நீ விடுத்தலின்—பகற்பொழுதுகழியாநிற்க நீர்வருவீராகவென்றுகூறி நீ போகவிடுகையினாலே யாங்களும்போய்,

வருதியர், வியங்கோண்முற்று.

40 - 41. கலி கெழு மரம் மிசை சேணோன் இழைத்த புலி அஞ்சு இதணம்—ஆரவாரம் பொருந்தின மரத்தினுச்சியிலே இராக்காலம் ஆகாயத்திருப்போன்பண்ணின புலி அஞ்சுகைக்குக்காரணமான பரண்,

*" சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி " என்றார்பிறரும்.

41 - 2. [ஏறி யவண, சாரற் சூரற் றகைபெற வலந்த:] அவண சாரல் சூரல் தகை பெற வலந்த இதணம் (41) ஏறி—அவ்விடத்தனவாகிய மலைப்பக்கத்துப்பிரம்பாலே அழகுபெறத் †தெற்றின இதணத்தேயேறி,

இனிச் சூரலாலேபிணித்த தழலென்றுமாம் சூரல் - சூரற்கொடியுமாம்.

43. தழலும்—தழலும்,

தழலாவது கையாற்சுற்றினகாலத்துத் தன்னிடத்துப் பிறக்குமோசையாற் கிளிமுதலியவற்றை ஓட்டுங்கருவி; கவணென்பாருமுளர்.

தட்டையும்—தட்டையும்,

* குறுந்தொகை, 150. † தெற்றின - பின்னின,

தட்டையாவது மூங்கிலைக் கண்ணுக்கண் உள்ளாகநறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதோர் கருவி.

குளிரும்—குளிரும்,

குளிராவது இவைபோல்வதோர் கிளிகடி *கருவி,

பிறவும்—ஏனையவும்,

பிறவென்றது கவண்முதலியவற்றை.

44. கிளி கடி மரபின ஊழ் ஊழ் வாங்கி—தழலும் தட்டையும் குளிரும் பிறவுமாகிய கிளியோட்டுமுறைமையினையுடையவற்றை முறையேமுறையே கையிலேவாங்கி ஓட்டி,

45. உரவு கதிர் தெறூஉம் உருப்பு அவிர் அமயத்து—மிகுதலையுடைய ஞாயிற்றின்கிரணங்கள்சுடும் வெம்மைவிளங்குகின்ற பொழுதிலே ஊழூழ்வாங்கி (44) எனக.

46. விசும்பு ஆடு பறவை வீழ் பதி படர—ஆகாயத்தேபறக்கும் பறவைக ளெல்லாம் தாமவிரும்புஞ் †சேக்கைகளிலே செல்லும்படியாக,

47 - 53. [நிறையிரும் பௌவங் குறைபட முகந்துகொண், டகலிரு வானத்து வீசுவளி கலாவலின, முரசதிர்ந் தன்ன வின்குர லேற்றொடு, நிரை செல னிவப்பிற் கொண்மூ மயங்கி, யின்னிசை முரசிற் சுடர்ப்பூட் சேஎ, யொன்னார்க் கேந்திய விலங்கிலை யெஃகின், மின்மயங்கு கருவிய :]

நிறை இரு பௌவம் குறைபட முகந்துகொண்டு முரசு அதிர்ந்தன்ன இன் குரல் ஏற்றொடு நிரை செலல் நிவப்பின் கொண்மூ—நிறைந்த கரியகடலைக் குறையுண்டாம்படிமுகந்துகொண்டு முரசு சிறிதுமுழங்கினாற்போன்ற இனிய குரலையுடைய உருமேற்றோடே நிரைத்துச்செல்லுதலையுடைய ஓக்கத்தினை யுடையமேகம்,

இன் இசை முரசின் சுடர் பூண் சேஎய் ஒன்னார்க்கு ஏந்திய இலங்கு இலை எஃகின் மின் மயங்கு கருவிய—இனிய ஓசையையுடைத்தாகிய முரசினை யும், ஒளியினையுடைத்தாகிய அணிகலங்களையுமுடையமுருகன் அசுரரைக் கொல்லுதற்கெடுத்த விளங்குகின்ற இலைத்தொழிலையுடைய வேல்போல மின னுமயங்குகின்ற தொகுதிகளையுடையவாய்

அகல் இரு வானத்து வீசு வளி கலாவலின் மயங்கி—எல்லாப்பூதங்களை விரிதற்குக்காரணமான கரியஆகாயத்திடத்தே வீசுகின்ற காற்றுத் தன்னிடத் தே கூடுகையினாலே நிரைத்த நிரைபோய்க் கலங்கி,

53. கல் மிசை பொழிந்தென—மலைமேலே பெய்தவாக,

* கிளைப்புனத்திற் கிளியோப்புவோர் மூங்கிலை வீணைபோற் கட்டித் தெறிக்குங் கருவியென்பர்.

† சேக்கை - கூடு; "சேக்கை மரனொழியச் சேணீங்கு புள்" (நாலடி யாக்கை. 10.)

[illegible] (50) அருவியவாய் (53) மயங்கிப் (50) பறவை பதிப்படாப் (46) பொழிலே[illegible]தன (53) என்க.

54 - 6. அண்ணல் நெடு கோடு இழிதரு தெள் நீர் அவிர் துகில் புரையும் அ வெள் அருவி தவிர்வு இல் வேட்கையேம் தண்டாது ஆடி — தலைமையுடைய நெடிய மலைச்சிகரத்தினின்றும் குதிக்கின்ற தெளிந்த நீரையுடைய விளங்குகின்ற வெள்ளிய துகிலையொக்கும் அழகிய வெள்ளிதாகிய அருவியிலே நீங்குதலில்லாத விருப்பையுடையேமாய் அமையாமல் விளையாடி,

அண்ணன்மலையில் அருவியெனவே நிலமொன்றென்றாள்.

57 - 8. [பளிங்குசொரி வன்ன பாய்சுனை குடைவுழி, நளிபடு சிலம்பில்:] நளி படு சிலம்பில் பளிங்கு சொரிவு அன்ன பாய் சுனை குடைவுழி — செறிவுண்டான மலையிடத்துப் பளிங்கைக்கரைத்துச் சொரிந்துவைத்தாற்போன்ற பரந்த சுனையைக் குடைந்துவிளையாடுகின்றவிடத்தே

58. *பாயம் பாடி — எங்கள்மனத்துக்கு விருப்பமானவற்றைப் பாடி,

59 - 60. பொன் எறி மணியின் சிறு புறம் தாழ்ந்த எம் பின் இரு கூந்தல் பிழிவனம் †துவரி - பொன்னிலேயழுத்தின நீலமணிபோலே சிறிய முதுகிடத்தே தாழ்ந்துகிடந்த எம்முடைய பின்னுதலையுடைய கரியகூந்தலை நீரைப் பிழிந்து ஈரத்தைப்புலர்த்தி,

61. உள் அகம் சிவந்த கண்ணேம் — உள்ளாகிய இடமெல்லாஞ் சிவந்த கண்ணேமாய்,

61 - 2. வள் இதழ் ஒள் செங்காந்தள் — பெரிய இதழையுடைய ஒள்ளிய சிவந்த கோடற்பூ,

62. ஆம்பல் அனிச்சம் — ஆம்பற்பூ அனிச்சப்பூ,

63. தண் கயம் குவளை — குளிர்ந்த குளத்திற்பூத்த செங்கழுநீர்ப்பூ,

குறிஞ்சி — குறிஞ்சிப்பூ,

வெட்சி — வெட்சிப்பூ,

64. செங்கொடுவேரி — செங்கொடுவேரிப்பூ,

‡தேமா — தேமாம்பூ,

மணிச்சிகை — செம்மணிப்பூ,

65. உரிது நாறு அவிழ் தொத்து உந்தூழ் — தனக்கு உரித்தாக நாறும் விரிந்த கொத்தினையுடைய பெருமூங்கிற்பூ,

கூவிளம் — §வில்லப்பூ,

---

* பாயம் - மனவிருப்பம் (பெரும்பாண். 342.)

† துவர்தல் - உலர்தல்; "கண்ணும் வாயுந் துவர்ந்து" (திருவாய். 8 5: 2.)

‡ 'தேமா' என்பதுமுதல் 'பெருமூங்கிற்பூ' என்பதிறுதியாகவுள்ளவைகள் தருமபுரவாதீனமடத்திலிருந்துகிடைத்த ஒரு பழைய ஏட்டுப்புத்தகத்தில் மட்டும் இருந்தன.

§ வில்லம் - வில்வம்.

66. எரி புரை எறுழம் — நெருப்பையொத்த எறுழம்பூ,
சுள்ளி — மராமரப்பூ,
கூவிரம் — கூவிரப்பூ,
67. வடவனம் — வடவனப்பூ,
வாகை — வாகைப்பூ,
வால் பூ குடசம் — வெள்ளிய பூவினையுடைய வெட்பாலைப்பூ,
68. எருவை — பஞ்சாய்க்கோரை,
கொறுக்கச்சியுமாம்.
செருவிளை — வெண்காக்கணம்பூ,
மணி பூ கருவிளை — நீலமணிபோலும் பூக்களையுடைய கருவிளம்பூ.
69. பயினி பயினிப்பூ,
வானி — வானிப்பூ,
பல் இணர் குரவம் — பல இதழ்களையுடைய குரவம்பூ,
70. *பசும்பிடி — பச்சிலைப்பூ,
வகுளம் — மகிழம்பூ,
பல் இணர் காயா — பல கொத்துக்களையுடைய காயாம்பூ,
71. விரி மலர் ஆவிரை — விரிந்த பூக்களையுடைய ஆவிரம்பூ,
வேரல் — சிறுமூங்கிற்பூ,
சூரல் — சூரைப்பூ,
72. குரீஇப்பூளை — சிறுபூளை,
குறுநறுங்கண்ணி — குன்றிப்பூ,
73. குருகிலை — முருக்கிலை,
மருதம் — மருதப்பூ,
விரி பூ கோங்கம் — விரிந்த பூக்களையுடைய கோங்கம்பூ,
74. போங்கம் — மஞ்சாடிப்பூ,
திலகம் — மஞ்சாடிமரத்தின்பூ,
தேன் கமழ் பாதிரி — தேனாறும் பாதிரிப்பூ,
75. செருந்தி — செருந்திப்பூ,
அதிரல் — புனலிப்பூ,
பெரு தண் சண்பகம் — பெரிய குளிர்ந்த சண்பகப்பூ,
76. கரந்தை — நாறுகரந்தை.
குளவி — காட்டுமல்லிகைப்பூ,
கடி கமழ் கலி மா — விரைகமழும் தழைத்த மாம்பூ,
77. தில்லை — தில்லைப்பூ,
பாலை — பாலைப்பூ,
கல் இவர் முல்லை — கல்லிலேபடர்ந்த முல்லைப்பூ,

* பரிபாடல், 19 ; 75.

78. *குல்லை—கஞ்சங்குல்லைப்பூ,
பிடவம்—பிடவம்பூ,
சிறுமாரோடம்—செங்கருங்காலிப்பூ,
79. வாழை—வாழைப்பூ,
வள்ளி—வள்ளிப்பூ,
நீள் நறு நெய்தல்—நீண்ட நறிய நெய்தற்பூ.
80. தாழை—தெங்கிற்பாளை,
†தளவம்—செம்முல்லைப்பூ,
முள் தாள் தாமரை—முள்ளையுடைத்தாகிய தாளையுடைய தாமரைப்பூ,
81. ‡ஞாழல்—ஞாழற்பூ,
மௌவல்—மௌவற்பூ.
நறு தண் - §கொகுடி—நறிய குளிர்ந்த கொகுடிப்பூ.
82. சேடல்—பவழக்கால் மல்லிகைப்பூ.
செம்மல்—சாதிப்பூ.
சிறுசெங்குரலி—கருந்தாமக்கொடிப்பூ,
83. கோடல்—வெண்கோடற்பூ,
கைதை—தாழம்பூ,
கொங்கு முதிர் நறு வழை—தாதுமுதிர்ந்த நறிய சுரபுன்னைப்பூ.
84. காஞ்சி—காஞ்சிப்பூ,
மணி குலை கள் கமழ் நெய்தல்—நீலமணிபோலுங் கொத்துக்களையுடைய தேனாறும் கருங்குவளை,
85. பாங்கர்—||ஓமை.
மராஅம்—மரவம்பூ,
பல் பூ தணக்கம்—பல பூக்களையுடைய தணக்கம்பூ.
86. ஈங்கை—இண்டம்பூ.
இலவம்—இலவம்பூ,
தூங்கு இணர் கொன்றை—தூங்குகின்ற பூங்கொத்தினையுடைய கொன்றைப்பூ,
87. அடும்பு—அடும்பம்பூ.
அமர் ஆத்தி—பொருந்தின ஆத்திப்பூ,
நெடு கொடி அவரை—நெடிய கொடியினையுடைய அவரைப்பூ,
88. பகன்றை—பகன்றைப்பூ,

---

* கஞ்சங்குல்லை - கஞ்சா.

† ஐங்குறு. 447; அகநா. 23.

‡ ஞாழல் - புலிநகக்கொன்றை.

§ கொகுடி - ஒருவகைமுல்லை; "கொகுடி முல்லை" (வடதுாங்காடு துறை, ஞான. தே. 1.)

|| ஓமை - ஒருவகைமரம்

இது வெண்டாழை; *“பன்றைப்பூ வுறழ்ந்த பாசிலைத் தாழை” என்புழி வெள்ளிவீட்டில் உரையாசிரியர், இது வெண்டாழையென்றார்.

பலாசம்—பலாசம்பூ,

பல் பூ பிண்டி—பல் பூக்களையுடைய அசோகம்பூ,

89. வஞ்சி—வஞ்சிப்பூ,

பித்திகம்—பிச்சிப்பூ,

சிந்துவாரம்—கருநொச்சிப்பூ,

90. தும்பை—தும்பைப்பூ,

துழாஅய்—திருத்துழாய்ப்பூ,

சுடர் பூ தோன்றி—விளக்குப்போலும பூவினையுடைய தோன்றிப்பூ.

91. நந்தி—நந்தியாவட்டப்பூ,

நறவம்—நறைக்கொடி,

நறு புன்னாகம்—இது புன்னையின்விசேடம்,

92. பாரம்—பருத்திப்பூ,

பீரம—பீர்க்கம்பூ.

பைங்குருக்கத்தி—பசிய குருக்கத்திப்பூ,

93. ஆரம்—சந்தனப்பூ,

காழ்வை—அகிற்பூ,

கடி இரு புன்னை—மணத்தையுடைய பெரிய புன்னைப்பூ.

94. நரந்தம்—நாரத்தம்பூ,

நாகம்—நாகப்பூ,

நள்ளிருணாறி—†இருவாட்சிப்பூ,

95. மா இரு குருந்தும்—கரிய பெரிய குருந்தம்பூவும

வேங்கையும்—வேங்கைப்பூவும்,

95 - 7. [பிறவு. மாசகுவிரித தன்ன பரேரம் ‡புழுகுடன், மாலங்குடைய:] அங்கு மால் உடைய அரக்கு விரித்தன்ன பிறவும் பரேரம்புழுகுடன—அச்சாரவிடத்துத் தம்மில் மயக்கமுடையவாய்ச் சாதிலிங்கத்தைப் பரப்பினாற்போன்ற பிறபூக்களையும் பருத்த அழகினையுடைய மலையெருக்கம்பூவுடனே,

பரேரம்புழுகு - §செம்பூவுமாம; புனமுருங்கையுமென்பர்.

97. மலிவனம் மறுகி—பூக்களிடத்தே மணவேட்கைமிக்குப் பலகாலுந் திரிந்துபறித்து,

98. வான் கண் கழீஇய அகல் அறை குவைஇ—மழை பெய்து தனனிடத்தைக்கழுவித் தூய்தாக்கின அகன்ற பாறையிலே குவித்து,

---

* கலித்தொகை, 73.

† இருள்வாசியென்பது இருவாட்சியென்று வழங்குகின்றதுபோலும்.

‡ “அழகவென்றிப்புழகை” (திருவால. 36: 12.)

§ “செறிவினைப் பொலிந்த செம்பூக் கண்ணியர்” (பரிபாடல், 22: 21.)

(?) இனி *வளைகாமரேரி வணிகாமரேரி யென்றும், சங்கிராமசாமம் வணிக் கிராமகாமமென்றுமுரைப்ப.

40 - 41. புலி பொறி போர் கதவின் திரு துஞ்சும் திண் காப்பின்—†புலியாகிய அடையாளத்தினையும் பலகைகள் தம்மிற்சேருதலையுடைய கத வினையுமுடைய திருமகள்தங்கும் திண்ணிய மதிலினையும்,

42 - 50. [புகழ்நிலைஇய மொழிவளர, வறநிலைஇய வகனட்டிற், சோறு வாக்கிய கொழுங்கஞ்சி. யாறுபோலப் பரந்தொழுகி. யேறுபொரச் சேறாகித், தேரோடத் துகள்கெழுமி, நீறாடிய களிறுபோல, வேறுபட்ட வினையோவத்து. வெண்கோயின் மாசூட்டும் :]

சோறு வாக்கிய கொழு கஞ்சி யாறு போல பரந்து ஒழுகி—சோற்றை வடித்தொழுக்கிய கொழுவியகஞ்சி யாறுகள்போலே எங்கும்பரந்தொழுகி,

ஏறு பொர சேறாகி—இடபங்கள் தம்மிற்பொருகையினாலே பின்பு சேறாய்,

தேர் ஓட துகள் கெழுமி — பலதேர்களும் ஓடுகையினாலே தூளியாய்ப் பொருந்தி,

வேறு பட்ட வினை ஓவத்து வெள் கோயில் — வேறுபட்ட தொழில்களை யுடைய சித்திரங்களையுடைய வெள்ளிய கோயில்களை,

நீறு ஆடிய களிறு போல மாசு ஊட்டும்—புழுதியைமேலேபூசிக்கொண்ட யானையைப்போல அழுக்கேறப்பண்ணும்,

கஞ்சி ஒழுகிச் சேறாகிக் கெழுமிக் கோயிலை மாசூட்டுதற்குக்காரணமாகிய அட்டிலெனக்கூட்டுக.

புகழ் நிலைஇய மொழி வளர அறம் நிலைஇய அகல் அட்டில் — இம்மைக்குப் புகழ் நிலைபெற்றசொல் எங்கும்பரவாநிற்க மறுமைக்கு அறம்நிலைபெற்ற அகன்ற அட்டில்,

இருமையினும் பெறும் பயனுண்டாகச் சோறிடும் சாலையென்றவாறு.

51 - 2. தண் கேணி தகை முற்றத்து பகடு எருத்தின் பல சாலை—குளிர்ந்த சிறியகுளங்களை உள்ளேயடக்கின முற்றத்தினையுடைய பெரிய எருத்திற்கு வைக்கோலிடும் பலசாலையினையும்,

53. தவம் பள்ளி — தவஞ்செய்யும் அமண்பள்ளி பௌத்தப்பள்ளி களையும்,

53 - 8. [தாழ்காவி, னவிர்சடை முனிவ ரங்கி வேட்கு, மாவுதி நறும் புகை முனைஇக் குயிறம், மாயிரும் பெடையோ டிரியல் போகிப், பூதங் காக்கும் புகலருங் கடிநகர்த், தூதுணம் புறவொடு துச்சிற் சேக்கும் :]

---

* பா. இனிக் கவளகாமரேரி இனி வணிகாமரேரி.

† புலியடையாளம் சோழனிலச்சினை ; (பட். 135) ; "கொடுவரியேற்றி" (சிலப். 5 : 98.)

அவிர் சடை முனிவர் அங்கி வேட்கும் ஆவுதி நறு புகை முனைஇ குயில் தம் மா இரு பெடையோடு இரியல் போகி—விளங்குகின்ற சடையினையுடைய இருடிகள் தீயின்கண்ணே வேட்டலைச்செய்யும் நெய்முதலியவற்றின் நறிய புகையைவெறுத்துக் குயில்கள் தம்முடைய கருமையையும் பெருமையையு முடைய பேடைகளுடனே கெடுதலையுடையவாய் நீங்கிப்போய்,

பூதம் காக்கும் புகல் அரு கடி நகர் தூது உண் அம் புறவொடு துச்சில் சேக்கும் தாழ் காவின்—பூதங்கள் வாசலிலேகாத்திருக்கும் புகற்கரிய அச்சத்தை யுடைய காளிகோட்டத்திடத்திற் *கல்லைத்தின்னும் அழகிய புறவுகளுடனே குடியிருப்பாகத்தங்கும் இளமரக்காவினையும்,

முனிவரைத் தன்னிடத்தேகொண்டிருத்தலிற் காக் காரணமாயிற்று.

59 - 77. [முதுமரத்த முரண்களரி, வரிமணலகன் றிட்டை, யிருங்கிளை யினனொக்கற், கருந்தொழிற் கலிமாக்கள். கடலிறவின் சூடுதின்றும். வயலாமைப் புழுக்குண்டும். வறளடும்பின் மலர்மலைந்தும், புனலாம்பற் பூச்சூடியு, நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரு, நாண்மீன் விராய கோண்மீன் போல, மலர்தலை மன்றத்துப் பலருடன் குழீஇக், கையினுங் கலத்தினு மெய்யுறத் தீண்டிப், பெருஞ்சினத்தார் புறக்கொடாஅ, திருஞ்செருவி னிகன்மொய்ம்பி னோர், கல்லெறியுங் கவண்வெரீஇப், புள்ளிரியும் புகர்ப்போந்தைப், பறழ்ப்பன்றிப் பலகோழி, யுறைக்கிணற்றுப் புறச்சேரி, மேழகத் தகரொடு சிவல்விளை யாட:]

புகர் போந்தை புள் வெரீஇ இரியும் கல் எறியும் கவண்—நிறத்தையுடைய †பனையிலிருக்கும பறவைகளஞ்சிக் கெட்டுப்போதற்குக்காரணமான கல்லையெறி யும் கவணையுடைய கலிமாக்கள் (62) என முன்னேகூட்டுக.

இனன் ஒக்கல் கரு தொழில் கலி மாக்கள்—இனச்சுற்றத்தினையும் வலிய தொழிலையுமுடைய செருக்கின ‡பரதவர்பிள்ளைகள்,

கடல் §இறவு இன் சூடு தின்றும் கடலிறக்களின இனிய சுடப்பட்டத னைத்தின்றும்,

வயல் ஆமை புழுக்கு உண்டும் வயலில் ஆமையைப் புழுக்கின இறைச்சி யைத்தின்றும்,

வறள் ‖அடும்பின் மலர் மலைந்தும்—மணலிலேபடர்ந்த அடப்பம்பூவைத் தலையிலேகட்டியும்,

---

* "தாதுணம் புறவெனத் துதைந்தநின் னெழினலம்" (கலி. 56) என் பதனுரையைப்பார்க்க.

† பனையிலிருக்கும்பறவைகள் அன்றில் தூக்கணங்குருவிமுதலியவை.

‡ பரதவர் - நெய்தனிலமாக்களுள் ஒருவகையார்.

§ இறவு - ஒருவகைமீன்; இறாலெனவும் வழங்கும்.

‖ அடப்பு அல்லது அடம்பு நெய்தனிலத்திற்கு உரியதொரு கொடி.

புனல் ஆம்பல் பூ சூடியும்—நீரினின்ற ஆம்பற்பூவைப் பறித்துச்சூடியும்,

நீல் நிறம் விசும்பின் வலன் ஏர்பு திரிதரு நாள் மீன் விராய கோள் மீன் போல—நீலநிறத்தையுடைய ஆகாயத்தே வலமாகவெழுந்து திரியும் *நாள்களாகிய மீன்களோடேகலந்த கோள்களாகிய மீன்கள்போல,

மலர் தலை மன்றத்து மேழகம் தகரொடு சிவல் விளையாட பலர் உடன் குழீஇ—அகன்ற இடத்தையுடைய மன்றிலே †மேழகக்கிடாயோடே சிவலையுங்கொண்டு பொருவித்து விளையாடும்படி பலரும் சேரத்திரண்டு,

மாக்கள் நின்றும் உண்டும் மலைந்தும் சூடியும் விளையாடும்படி மீன்போற் குழீஇயென்க.

இகல் மொய்ம்பினோர் பெரு சினத்தால் வரி மணல் அகல் திட்டை இரு கிளை முது மரத்த முரண் களரி புறக்கொடாது கையினும் கலத்தினும் மெய் உற தீண்டி இரு செருவின் விலங்கு பகை அல்லது (26) கொழு பல் குடி (27) கலங்கு பகை அறியா (26) செழும்பாக்கத்து (27)—அங்ஙனம்பொருவித்தவிற்றேன்றும் மாறுபாடுசெய்யும் வலியினையுடையராய் ஆண்டுப்பிறந்த பெரிய சினத்தாலே அறலினையுடைத்தாகிய மணலினையுடைய அகன்றமேட்டில் பெரிய கிளைத்தலையுடைய பழையமரத்தையுடையவாகிய பொருதற்குச்சமைந்த போர்க்களத்தேசென்று முதுகுகொடாமல் கையாற்குத்தியும் படைக்கலங்களாலே வெட்டியும் ஒருவர்மெய்யோடு ஒருவர்மெய் உறும்படி கலந்துபொரும் பெரிய போரை விலங்குகின்ற பகையல்லது செருக்கினையுடைய பலகுடி ‡கலங்கி எழுந்திருத்தற்குக் காரணமானபகையை அறியாத பாக்கங்களையும்,

பாக்கம் - கடற்கரையிலூர்கள்.

பறழ் பன்றி பல கோழி உறை கிணறு புறம் சேரி—குட்டிகளையுடைய பன்றிகளையும் பலசாதியாகிய கோழிகளையும் உறைவைத்த கிணறுகளையுமுடைய இழிகுலத்தோரிருக்குந்தெருவுகளையும்,

78 - 9. [கிடுகுநிரைத் தெஃகூன்றி, நடுகல்லினரண்போல:] நடு கல்லின் அரண் போல கிடுகு நிரைத்து எஃகு ஊன்றி—§நடுகல்லினிற்கின்ற தெய்வமாயவனும அவனுக்குவைத்த கிடுகும் வேலும்போலக் கிடுகைநிரைத்து வேலையூன்றிப் புறக்கொடாது (71) என முன்னேகூட்டுக.

* நாள்களாகியமீனகள் - இருபத்தேழுநக்ஷத்திரங்கள்; கோள்களாகியமீன்கள் - நவக்கிரகங்கள்முதலியவை.

† மேழகக்கிடாய் - ஆட்டுக்கிடாய்; சிவல் - ஒருவகைப்பறவை; இவற்றின் போர்வென்றி தகர்வென்றியெனவும் சிவல்வென்றியெனவும் கூறப்படும்; (பு - வெ. வென்றிப்பெருந்திணை 7, 10 - ஆம் பாடல்களைப்பார்க்க.)

‡ புறநா. 20: 8 - 11.

§ "கைவண் குரிசில்கற் கைதொழுஉச் செல்பாண. தெய்வமாய் நின்றான் றிசைக்கு" (பு - வெ. பொதுவியற். 13)

ஆரஞர், ஆகுபெயர்.

80 - 93. [நெடுந்தூண்டிலிற் காழ்சேர்த்திய, குறுங்கூரைக் குடிநாப்பண், நிலவடைந்த விருள்போல, வலையுணங்கு மணன்முன்றில், வீழ்த்தாழைத் தாட்டாழ்ந்த, வெண்கூதாளத்துத் தண்பூங் கோதையர். சினைச்சுறவின் கோடுநட்டு, மனைச்சேர்த்திய வல்லணங்கினான், மடற்றாழை மலர்மலைந்தும், பிணர்ப் பெண்ணைப் பிழிமாந்தியும். புன்றலை யிரும்பரதவர், பைந்தழைமா மகளிரொடு, பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லா, துவவுமடிந் துண்டாடியும் :]

புன்றலை இரு பரதவர்— சிவந்த தலையினையுடைய பெரியபரதவர்,

உவவு —உவாநாளாகையினாலே.

பாய் இரு பனி கடல் வேட்டம் செல்லாது மடிந்து—பரந்த கருமையை யுடைய குளிர்ந்த கடலில் மீன்பிடித்தற்குப்போகாது மனவெழுச்சி தவிர்ந்து,

பைந்தழை மா மகளிரொடு—பசிய *தழையினையுடைய கரியநிறத்தினை யுடைய தம்மகளிரோடேகூடி,

நெடு தூண்டிலில் காழ் சேர்த்திய குறு கூரை குடி நாப்பண்—நெடிய தூண் டிலிற்காம்புகள் சார்த்திவைத்த குறிய இறப்பினையுடைய குடியிருப்புநடுவில்,

நிலவு அடைந்த இருள் போல வலை உணங்கு மணல் முன்றில் மனை—நிலவுநடுவேசேர்ந்த இருளைப்போலே வலைகிடந்துலரும் மணலையுடைத் தாகிய முன்றிலினையுடைய மனையிடத்தே,

சினை சுறவின் கோடு நட்டு சேர்த்திய வல் அணங்கினால்—சினையையுடைய சுறவின் கொம்பைநட்டு அதனிடத்தே எற்றிய வலிய தெய்வங்காரணமாக,

வீழ் தாழை தாள் தாழ்ந்த வெண் கூதாளத்து தண் பூ கோதையர்—†விழு தையுடைய தாழையின் அடியிடத்தேநின்ற வெண்டாளியினது தண்ணியபூவாற் செய்த மாலையினையுடையராய்,

மடல் தாழை மலர் மலைந்தும்—மடலையுடைய தாழையினது மலரைச் சூடியும்,

பிணர் பெண்ணை பிழி மாந்தியும்—சருச்சரையையுடைய பனையிற் கள்ளை யுண்டும்,

உண்டு ஆடியும்—நெர்கள்ளையுண்டு விளையாடியும்,

94. புலவு மணல் பூ கானல்—புலானாற்றத்தையுடைய மணலிடத்தே பூக் களையுடைய கடற்கரையிற் குடி (81) என்க.

95. மா மலை அணைந்த கொண்மூ போலவும்—கரியமலையைச்சேர்ந்த செக்கர்மேகம்போலவும்,

இது, கரிய உயர்ந்த திரையின்மீதே சிவந்த யாற்றுநீர் பரந்ததற்கு உவமை.

---

* தழை - தளிர்கள், தழைகள், மலர்கள் இவற்றாலாகிய உடைவிசேடம்; (புறநா. 116, 248 - ஆம் பாடல்களைப்பார்க்க.)

† இதனால், தென்னை, விழுதில்தாழையென்று வழங்கப்படும்.

96. தாய் முலை தழுவிய குழவி போலவும்—தாயுடைய முலையைத்தழுவிய பிள்ளையைப் போலவும்,

இஃது ஒன்றுபடுதற்கு உவமை.

97. தேறு நீர் புணரியொடு யாறு தலைமணக்கும்—தெளிந்த கடலிற் றிரையோடே காவிரி தலைகலக்கும்,

98. [மலியோதத் தொலிகூடல்:] ஓதத்து ஒலி மலி கூடல்—ஓதத்தினால் ஒலிமலிந்த புகார்முகத்தே,

99. தீது நீங்க கடல் ஆடியும்—தீவினைபோகக் கடலாடியும்,

100. மாசு போக புனல் படிந்தும்—உப்புப்போக நீரிலேகுளித்தும்,

101. அலவன் ஆட்டியும்—ஞெண்டுகளை ஆட்டியும்,

உரவு திரை உழக்கியும்—பரக்கின்றதிரையிலே விளையாடியும்,

102. பாவை சூழ்ந்தும்—*பாவைகளைப்பண்ணியும்,

பல் பொறி மருண்டும்—ஐம்பொறிகளால்நுகரும்பொருள்களை நுகர்ந்து மயங்கியும்,

103. அகலா காதலொடு பகல் விளையாடி—நீங்காதவிருப்பத்துடனே பகற்பொழுதெல்லாம் விளையாடி.

பரதவர் (90) உவவுமடிந்து (93) மகளிரோடேகூடிக் (91) குடிநாப்பண் (81) மனையிடத்தேசேர்த்திய அணங்கினாற் (87) கோதையராய் (85) மலைந்தும் (88) மாந்தியும் (89) ஆடியும் (93) பின்னர்க் கூடலிலே (98) தீதுநீங்க ஆடியும் (99) படிந்தும் (100) ஆட்டியும் உழக்கியும் (101) சூழ்ந்தும் மருண்டும் (102) காதலொடு பகல்விளையாடி (103) எனமுடிக்க.

104 - 17. [பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும், பொய்யா மரபிற் பூமலி பெருந்துறைத், துணைப்புணர்ந்த மடமங்கையர், பட்டுநீக்கித் துகிலுடுத்து, மட்டுநீக்கி மதுமகிழ்ந்து, மைந்தர் கண்ணி மகளிர் சூடவு, மகளிர் கோதை மைந்தர் மலையவு, நெடுங்கான்மாடத் தொள்ளெரி நோக்கிக், கொடுந்திமிற் பரதவர் குரூஉச்சுட ரெண்ணவும், பாட லோர்த்து நாடக நயந்தும், வெண்ணிலவின் பயன்றுய்த்துங், கண்ணடைஇய கடைக்கங்குலான், மாஅகாவிரி மணங்கூட்டுந், தூஉவெக்கர்த் துயின்மடிந்து:]

பெறற்கு அரு தொல் சீர் துறக்கம் ஏய்க்கும் நெடு கால் மாடத்து—பெறுதற்கரிய பழைய தலைமையினையுடைய சுவர்க்கத்தையொக்கும் நெடிய கால்களையுடைய மாடத்திடத்தேயிருந்து,

பாடல் ஓர்த்து நாடகம் நயந்தும் வெள் நிலவின் பயன் துய்த்தும்—பாட்டைக்கேட்டு நாடகங்களைவிரும்பிக்கண்டும் வெள்ளிய நிலவிற்பெறும்பயனை நுகர்ந்தும்,

* தண்டான்கோரையாற் செய்யப்பட்ட பாவையை வைத்துக்கொண்டு விளையாடல் நெய்தனிலத்துமகளிர்தொழில்; "பைஞ்சாய்ப் பாவை யீன்றனென் யானே" (ஐங்குறு. 155.)

மட்டு நீக்கி மது மகிழ்ந்தும் — கள்ளுண்டலைக்கைவிட்டுக் காமபானத்தை உண்டுமகிழ்ந்தும்,

பட்டு நீக்கி துகில் உடுத்தும் — பட்டுடுத்தலைநீக்கிப் புணர்ச்சிக்காலத்துக்கு நொய்யவாகிய வெள்ளியவற்றையுடுத்தும்,

துணை புணர்ந்த மடம் மங்கையர் கண் அடைஇய கடை கங்குலான் — கணவரைக்கூடின மடப்பத்தையுடையமகளிர் பின்பு கண் துயின்ற பிற்பட்ட சாமத்தையுடைய இராக்காலத்தே,

மாடத்தேயிருந்து நயந்துய்த்தும் மகிழ்ந்தும் உடுத்தும் துணைப்புணர்ந்தமடமங்கையர் கண்டுயின்ற கங்குலென்று கங்குற்கு அடைகூறினார்.

மைந்தர் கண்ணி மகளிர் சூடவும் மகளிர் கோதை மைந்தர் மலையவும் மாடத்தேயிருந்து நுகர்ந்து *அனந்தர்மிக்கமையாற் கணவர்சூடிய கண்ணியைத் தமதுகோதையாகநினைத்து மகளிர் சூடிக்கொள்ளும்படியாகவும் மகளிர்சூடிய கோதையைத் தமதுகண்ணியாகநினைத்து மைந்தர்சூடிக்கொள்ளும்படியாகவும் கண்டுயின்றகங்குலென இதுவும் கங்குற்கு அடைகூறினார்.

நெடுங்கால் மாடத்து குரூஉ சுடர் ஒள் எரி நோக்கி கொடு திமில் பரதவர் எண்ணவும் கண் அடைஇய கடை கங்குல் — மாடத்திட்ட நிறமிய விளக்குகளில் விடியற்காலத்து அவியாமல் ஒள்ளியவாய் எரிகின்ற அவையிற்றைப் பார்த்து இராக்காலத்தே விளைந்த மீன்கொண்டு கடலிலேபோன பரதவர் எண்ணும்படியாகவும் கண்டுயின்ற கடைக் கங்குலென்றும் கங்குற்கு அடைகூறினார்.

விளக்குக்களிலே எண்ணெயைவார்த்துத் தூண்டுவாரின்றி எல்லாரும் துயில்கோடலிற் சில எரிகின்றவற்றை எண்ணினார்.

பொய்யா மரபின் மா காவிரி பூ மலி பெரு துறை மணம் கூட்டும் தூ எக்கர் துயில் மடிந்து — பொய்யாமல் நீர்வருமுறைமையினையுடைய பெரிய காவிரி பூ மிக்க பெரியதுறைகளிற் பூமணங்களைக் கொண்டுவந்து திரட்டும் தூய இடுமணலிலே துயில்கொண்டுகிடந்து,

பரதவர் (90) பகல்விளையாடி (103) மாடத்திலிருப்பாரெல்லாரும் கண் அடைஇய கடைக்கங்குலிலே (115) தூவெக்கர்த் துயின்மடிந்து (117) மற்றைநாள் மகளிரொடு செறிய (155) எடுக்க விழவரு வியலாவணம் (158) எனக் கூட்டுக.

118 - 41. [வாலிணர் மடற்றாழை. வேலாழி வியன்றெருவி, னல்லிறைவன் பொருள்காக்குந், தொல்லிசைந் தொழின்மாக்கள், காய்சினத்த கதிர்ச்செல்வன். றேர்பூண்ட மாஅபோல, வைகறொறு மசைவின்றி, யுல்குசெயக் குறைபடாது, வான்முகந்தநீர் மலைப்பொழியவு, மலைப்பொழிந்தநீர் கடற்பரப்பவு, மாரி பெய்யும் பருவம் போல, நீரினின்று நிலத்தேற்றவு, நிலத்தினின்று நீர்ப்பரப்பவு, மளந்தறியாப் பலபண்டம், வரம்பறியாமை வந்தீண்டி, யருங்கடிப்

* அனந்தர் - கள்ளின் மயக்கம்.

பெருங்காப்பின், வலியுடை வல்லணங்கினோன், புலிபொறித்துப் புறம்போக்கி, மதிநிறைந்த மலிபண்டம், பொதிமூடைப் போரேறி, மழையாடு சிமைய மால் வரைக் கவாஅன். வரையாடு வருடைத் தோற்றம் போலக், கூருகிர் ஞமலிக் கொடுந்தாளேற்றை. யேழகத் தகரோ டுகளு முன்றில்:]

வான் முகந்த நீர் மலை பொழியவும் மலை பொழிந்த நீர் கடல் பரப்பவும் மாரி பெய்யும் பருவம் போல—மேகம் தான்முகந்தநீரை மலையிடத்தே சொரிதற்காகவும் மலையிற்சொரிந்தநீரை மீண்டு கடலிலே பரப்புதற்காகவும் மாரிக் காலத்தே பெய்கின்ற செவ்விபோல,

வான் எழுவாயாய்ப் பெய்யுமென்னும் பயனிலைகொண்டது.

வால் இணர் மடல் தாழை *வேலாழி வியல் தெருவில் அரு கடி பெரு காப்பின்—வெள்ளிய பூங்கொத்துக்களையும் மடலினையுமுடைய தாழையை யுடையகரையினையுடைத்தாகிய கடலருகின்கணிருக்கும் பரதவருடைய அகன்றதெருவிடத்து †அரிய காவலையுடைய பண்டசாலையின்கண்ணே.

வரம்பு அறியாமை வந்து ஈண்டி நிலத்தினின்றும் நீர் பரப்பவும்—எல்லை யறியாதபடி வந்துதிரண்டு பின்னர் அப்பண்டசாலையிலேநின்றும் கடலிலே ஏற்றுதற்காகவும்,

வல் அணங்கின் நோன் வலி உடை புலி பொறித்து புறம் போக்கி உல்கு செய மதி நிறைந்த மலி பண்டம்—வலிய வருத்துந்தன்மையையுடைய ‡அச்சடையாளமாகிய வலியையுடைய புலியையடையாளமாகஇட்டுப் பண்டசாலைக்குப்புறம்பேபுறப்படவிட்டுச் சுங்கங்கொள்ளுதற்கு மதித்தற்றொழிலிற்குறையற்ற மிக்கபண்டங்களையும்,

நீரினின்று நிலத்து ஏற்றவும் புலி பொறித்து புறம்போக்கி உல்கு செய அளந்து அறியா மதி நிறைந்த பல பண்டம்—கடலினின்றும் பண்டசாலையிலே இறக்குதற்காகவும் புலிபொறித்து மரக்கலத்திற்குப்புறம்பே புறப்படவிட்டுச் சுங்கங்கொள்ளுதற்கு நெஞ்சாலே அளந்தறிந்து மதித்தல் நிறைந்த பலபண்டங்களையும்.

பரப்பவும் ஏற்றவுமென்னுமெச்சங்கள் புலிபொறித்தென்னும் வினையொடு முடிந்தன.

பொதி §மூடை போர் ஏறி—பொதிந்த பொதிகளடுக்கின போரிலேயேறி,

நீர் கடற்பரப்பவுமென்ற உவமைக்கு நிலத்தினின்றுநீர்ப்பரப்பவும், நீர் மலைப்பொழியவுமென்ற உவமைக்கு நீரினின்றுநிலத்தேற்றவும் பொருளாகக் கொள்க.

நல் இறைவன் பொருள் காக்கும் தொல் இசை தொழில் மாக்கள் காய் சினத்த கதிர் செல்வன் தேர் பூண்ட மா போல வைகல் தொறும் அசைவு இன்றி குறை படாது உல்கு செய [illegible]

* "வேலாழி சூழலகில்" (திணைமா. 62.) † பா. அகன்ற.
‡ அச்ச அடையாளம். § மூடை - மூட்டை.

னமற்காக்கும் பழையபுகழினையுடைய சுங்கங்கொள்வோர் எரிகின்ற சினத்தையுடைய கிரணங்களையுடைய பகலவன் தேர்பூண்ட குதிரைகளைப்போல ஒரு பொழுதும் மடிக்கிராது நாடோறும் இளைப்பின்றித் தாழ்வின்றாகச் சுங்கங் கொள்ள,

இதனை *இருவகைப்பண்டங்களுக்குங் கூட்டியுரைக்க.

மழை ஆடு சிமையம் மால் வரை கவாஅன் வரை ஆடு வருடை தோற்றம் போல—மழையுலாவும் சிகரத்தையுடையவாகிய பெரிய மூங்கிலையும் பக்கமலையினையுமுடைய மலையிடத்தேயுலாவும் வருடைமானின் †தோற்றரவுபோல,

கூர் ‡உகிர் ஞமலி கொடு தாள் ஏற்றை ஏழகம் தகரோடு உகளும் முன்றில்—கூரிய உகிரையுடைய நாயில் வளைந்த காலையுடைய ஏறுணவை §மேழகக்கிடாயோடே குதிக்கும் பண்டசாலையின் முற்றத்தினையும்,

ஏற்றை தகரோடே இருவகைப்பண்டங்களையும்பொதிந்த மூடைப்போரேறி உகளுமுற்றமென்க.

142 - 3. குறு தொடை நெடு படிககால் கொடு திண்ணை—அணுகின படிகளையுடைய நெடிய ஏணிகள்சார்த்தின சுற்றுத்திண்ணையினையும்,

143. பல் தகைப்பின்—பலகட்டுக்களையும்

144. புழை—சிறுவாசலையும்,

வாயில்—பெரியவாசலையும்,

போகு இடைகழி—பெரிய ||இடைகழிகளையுமுடைய,

145 - 51. [மழைதோயு முயர்மாடத்துச், சேவடிச் செறிகுறங்கிற், பாசிழைப் பகட்டல்குற். றூசுடைத் துகிர்மேனி, மயிலியன் மானோக்கிற். கிளிமழலை மென்சாயலோர், வளிநுழையும் வாய்பொருந்தி ]

மழை தோயும் உயர் மாடத்து வளி நுழையும் வாய் பொருந்தி—மேகஞ் செறியும் உயர்ந்த மாடத்தில் தென்காற்றுவருஞ் சாளரங்களைச்சேர்ந்து,

சேவடி—சிவந்த அடியினையும்,

செறி குறங்கின்—செறிந்த ¶குறங்கினையும்.

பாசிழை—பசிய பூணினையும்,

பகடு அல்குல்—பெரியவல்குலினையும்.

தூசு உடை—தூசாகிய உடையினையும்,

துகிர் மேனி—பவளம்போலுநிறத்தினையும்

---

* இருவகைப்பண்டங்கள் - பண்டசாலையிலிருந்து கப்பலில் ஏற்றப்படுவனவும் கப்பலிலிருந்து பண்டசாலையில் இறக்கப்படுவனவும்.

† தோற்றரவு - தோன்றுதல்

‡ உகிர் - நகம்.

§ மேழகக்கிடாய் - ஆட்டுக்கிடாய்.

|| இடைகழி 'ரேழி' எனவழங்கும்.

¶ குறங்கு ·

மான் நோக்கின் - மான்போலும் பார்வையினையும்,

கிளி மெல் மழலை — கிளிபோலும் மெல்லிய மழலைவார்த்தையினையும்,

மயில் இயல் சாயலோர் — மயிலினது இயல்போலும் மென்மையினையு முடையமகளிர்,

152 - 4. ஓங்கு வரை மருங்கின் நுண் தாது உறைக்கும் காந்தள் அம் துடுப்பின் கவி குலை அன்ன செறி தொடி முன்கை கூப்பி — உயர்நின்ற மலைப் பக்கத்தே மெல்லிய தேன் துளிக்கும் செங்காந்தளினது அழகிய கண்ணிடத்து இணைந்த குலையையொத்த செறிந்த தொடியினையுடைய முன்கை குவிக்க

கூப்பவெனத்திரிக்க. இரண்டு காந்தண்முகை சேர்ந்தாலொத்த கையென்க. கவிதல் - ஒன்றோடொன்றுசேர்தல்.

154 - 5 [செவ்வேள். வெறியாடு:] வெறி ஆடு செவ்வேள்—வெறியாடுதற்குரிய முருகனுக்கும்.

155 - 60. [மகளிரொடு செறியத் தாஅய்க், குழலகவ யாழ்முரல. முழவதிர முரசியம்ப, விழவரு வியலாவணத்து, மையறு சிறப்பிற் றெய்வஞ் சேர்த்திய, மலரணி வாயிற் பலர்தொழு கொடியும்:]

மை அறு சிறப்பின் சேர்த்திய பலர் தொழு தெய்வம்—பிறப்பறுதற்குக் காரணமான தலைமையையுடைமையாற் கோயில்களிடத்தே உண்டாக்கின பலருந்தொழுந்தெய்வங்களுக்கும்,

மகளிரொடு செறிய தாஅய் குழல் அகவ யாழ் முரல முழவு அதிர முரசு இயம்ப விழவு அரு வியல் ஆவணத்து—பாடுமகளிரோடே பொருந்தப் பரந்து *வங்கியம் இசையையுண்டாக்க யாழ் வாசிக்க முழவு முழங்க முரசு ஒலிப்ப எடுத்த திருநாள் நீங்காத அகன்ற அங்காடித்தெருவினையும்,

மகளிரொடு செறிய எடுத்தவிழவென்க.

சேவடிமுதலியவற்றையுடைய சாயலோர் மாடங்களிற் சாளரங்களிற்பொருந்தி முன்கைகூப்பப் பலருந் தொழும் முருகவேளுக்கும் ஏனைத்தெய்வங்களுக்கு மெடுத்த விழவறா வியலாவணமெனக்கூட்டுக.

மலர் அணி வாயில் கொடியும்— இல்லுறைதெய்வமகிழ மலரணிந்த மனைவாசலிற் கட்டினகொடிகளும்,

161 - 2. [வருபுன றந்த வெண்மணற் கான்யாற், றுருகெழு கரும்பி னொண்பூப் போல:] வரு புனல் தந்த வெள் மணல் கான் யாறு உரு கெழு கரும்பின் ஒள் பூ போல மேல் ஊன்றிய துகில் கொடியும் (168)—வருகின்ற நீர்கொண்டுவந்த வெள்ளியமணலையுடைய காட்டாற்றுக்கரையினின்ற அழகு பொருந்தின கரும்பினது ஒள்ளிய பூவையொக்க மேலூன்றின துகிற்கொடியும்.

---

* வங்கியம் - புல்லாங்குழல்.

காண் - மணமுமாம். கடைத்தெருவின் இரண்டுபுறத்திற்கும் வகுத்த கொடிக்கும் யாற்றங்கரையும் கருப்பம்பூவும் உவமைகூறினர்.

163 - 8. [கூழுடைக் கொழுமஞ்சிகைத், தாழுடைத் தண்பணியத்து, வாலரிசிப் பலிசிதறிப், பாகுகுத்த பசுமெழுக்கிற், காழூன்றிய கவிகிடுகின், மேலூன்றிய துகிற்கொடியும்:]

கூழ் உடை கொழு மஞ்சிகை—நெல்லையும் அரிசியையுமுடைய அழகிய *மஞ்சிகை,

மஞ்சிகை - கொட்டாரமுமாம்.

தாழ் உடை தண் பணியத்து மஞ்சிகை †தாழிடுதலையுடைய தண்ணிய பண்டங்களையுடைய மஞ்சிகை,

நெல்லுப்போல வினைப்பண்டங்கள் சிறந்தன அன்மையிற் ‡றண்ணியபண்டமென்றார். பண்டமெனவே உலகில்விற்கும் பண்டங்களெல்லாம் அடங்கின.

பாகு உகுத்த மஞ்சிகை—பாக்குவெற்றிலை சொரிந்த மஞ்சிகை,

இனி உகுத்தபாகெனமாறிச் சிந்தினபாகினையுடைய மஞ்சிகையென்றலுமாம்.

என்றது, சண்டுசர்க்கரைக் கட்டுப்பாகினை.

இதனைப் பசுமெழுக்கென்பதனோடுகூட்டி ஆப்பியென்பாருமுளர்.

பசு மெழுக்கின் மஞ்சிகை—புதுமெழுக்கினையுடைய மஞ்சிகையிடத்தே,

வால் அரிசி பலி சிதறி—வெள்ளிய அரிசியாகிய பலிகளைத்தூவி,

காழ் ஊன்றிய கவி கிடுகின் மேல் ஊன்றிய துகில் கொடியும்—கால்கள் நட்டுவைத்த கவிந்தசட்டங்களின்மேலே நட்டுவைத்த வெள்ளியதுகிற்கொடிகளும்,

கால்கள் - சட்டங்களைத்தாங்குவன.

சிதறி ஊன்றிய. மஞ்சிகையிற்கவிந்த கிடுகென்க.

169 - 71. பல் கேள்வி துறை போகிய தொல் ஆணை நல் ஆசிரியர் உறழ் குறித்து எடுத்த உரு கெழு கொடியும்—பலவாகிய கேட்டற்றொழிலையுடைய நூற்றிரளை முற்றக்கற்ற பெரிய ஆக்கினையையுடைய நல்ல ஆசிரியர் வாதுசெய்யக்கருதிக்கட்டின அச்சம்பொருந்தின கொடிகளும்,

172. வெளில் இளக்கும் களிறு போல—அசையாத கம்பத்தினை அசைக்கும் யானைபோலசைகின்ற தூங்குநாவாய் (174),

173 - 5. [தீம்புகார்த் திரைமுன்றுறைத், தூங்குநாவாய் துவன்றிருக்கை, மிசைக்கூம்பி னசைக்கொடியும்:]

---

* மஞ்சிகை - ஒருவகைப்பெட்டி; "ஆரியச் செப்பும் யவனமஞ் சிகையும், பொன்செய் பேழையொடு பொறித்தாழ் நீக்கி" (பெருங்கதை, 1: 32 - 74 - 5.)

† தாழ் - தாழ்ப்பாள்.

‡ தண்ணிய - இழிந்த; (சிலப். 2: 54.)

தீ புகார் திரை முன் துறை—கட்கு இனிதாகிய புகாரிடத்துத் திரையினை யுடைய துறையின்முன்னே.

துவன்று இருக்கை தூங்கு நாவாய் மிசை கூம்பின் நசை கொடியும்—நிறைந்த இருப்பினையுடைய அசைகின்ற நாவாயின்மேல்நட்ட பாய்மரத்தின் மேலெடுத்த விரும்புதலையுடைய கொடிகளும்,

176 - 8. [மீன்றடிந்து விடக்கறுத். தூன்பொரிக்கு மொலிமுன்றின. மணற்குவைஇ மலர் சிதறி :]

மணல் குவைஇ மலர் சிதறி—மணலை மிகப்பரப்பிச் செப்பூக்களையுஞ்சிதறி,

மீன் தடிந்து விடக்கு அறுத்து ஊன் பொரிக்கும் ஒலி முன்றில்—மீனை யறுத்துப் பின இறைச்சியையுமறுத்து அவ்விரண்டுதசையினையும் பொரிக்கும் ஆரவாரத்தினையுடைய முற்றத்தினையும்,

179 - 81. [பலர்புகுமனைப் பலிப்புதவி, னறவுநொடைக் கொடியோடு, பிறபிறவு நனிவிரைஇ :]

பலி புதவின்—தெய்வத்திற்குக்கொடுக்கும் பலியினையுடைய வாசலினையு முடைய,

பலர் புகும் மனை நறவு நொடை கொடியோடு பிறபிறவும் நனிவிரைஇ—கள்ளுண்பார்பலருஞ்செல்லும் மனைகளிற் சிறப்புடைக் கள்ளின்விலைக்குக் கட்டின கொடியோடே ஏனையவற்றிற்குக் கட்டினகொடிகளும் மிகக்கலக்கையி னாலே செல்கதிர் நுழையா (183) என்க.

182. பல் வேறு உருவின் பதாகை—பலவாய் வேறுபட்ட வடிவினை யுடைய பெருங்கொடிகளும்,

நீழல்—நறவுநொடைக்கொடியோடே முற்கூறிய கொடிகளும் பிறகொடி களும் பதாகைகளும் விரவுகையினாலே இவற்றினிழலில்,

183. செல் கதிர் நுழையா செழு நகர் வரைப்பின்—செல்கின்ற ஞாயிற் றின்கிரணங்கள் நுழையப்படாத வளவிய ஊரெல்லையிடத்து மறுகு (193) எனக் கூட்டுக.

184. செல்லா நல் இசை அமரர் காப்பின்—கெடாத நல்ல புகழினை யுடைய தேவர்கள் பாதுகாவலினாலே.

185 - 6 [நீரின் வந்த நிமிர் பரிப் புரவியுங், காலின் வந்த கருங்கறி மூடையும் :]

நீரில் காலின் வந்த நிமிர் பரி புரவியும்—கடலிலே காற்றான்வந்த நிமிர்ந்த செலவினையுடைய குதிரைகளும்,

நீரில் காலின் வந்த கரு கறி மூடையும்—கடலிலே காற்றான்வந்த கரிய மிளகுபொதிகளும்,

187. வடமலை பிறந்த மணியும் பொன்னும்—மேருவிலேபிறந்த மாணிக் கமும் *சாம்பூநதமென்னும்பொன்னும்.

---

* சாம்பூநதம் - மேருமலையின்தென்பாலுள்ள நாவல்மரத்தின் கனிச்சாற் றிலிருந்து உண்டாயபொன்.

188. குடமலை பிறந்த ஆரமும் அகிலும்—பொதியின்மலையிலேபிறந்த சந்தனமும் அகிலும்.

புகார்க்குத் தென்மேற்காதலிற் குடமலையென்றார் பொதியின்மலையை; அன்றி மேற்குள்ளமலையென்றுமாம்.

189. தென்கடல் முத்தும்—*தென்றிசைக்கடலிற்பிறந்த முத்தும்.

குணகடல் துகிரும்—கீழ்த்திசைக்கடலிற்பிறந்த பவளமும்,

190. கங்கை வாரியும்—கங்கையாற்றிலுண்டாகிய பொருளும்,

அவை யானையும் மாணிக்கமும் முத்தும் பொன்னுமுதலியனவும் பிறவுமாம்.

190 - 91. †[காவிரிப் பயனு, மீழத் துணவும் :]

191. காழகத்து ஆக்கமும் ‡கடாரத்திலுண்டான நுகரும்பொருள்களும்,

ஆக்கம் - ஆகுபெயர்.

192. அரியவும்—சீனமுதலிய இடங்களினின்றும்வந்த கருப்பூரம் பனிநீர் குங்குமமுதலியனவும்,

பெரியவும்—இவையொழியப் பெரியவையாகிய பலபொருள்களும்.

நெரிய ஈண்டி—நிலத்தின்முதுகு நெளியும்படி திரண்டு,

193 - 5. [வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகி. னீர்நாப் பண்ணு நிலத்தின் மேலு, மேமாப்ப வினிது துஞ்சி :]

ஏமாப்ப நீர் நாப்பணும் நிலத்தின் மேலும் இனிது துஞ்சி—ஏமாப்பினாலே புகாரினடுவிடத்தும் கரையினிடத்தும் அழிவின்றி இனிதாகத் தங்குகையினாலே,

வளந் தலை மயங்கிய நனந்தலை மறுகின்—செல்வம் தலைதெரியாத அகன்ற இடங்களையுடைய தெருவுகளையும்,

செழுநகர்வரைப்பிற் (183) புரவிமுதலியனவீண்டித் (192) துஞ்சி (195) மயங்கிய மறுகு (193) என்க.

இனி, இனிது துஞ்ச மீன்பிறழவும் மா ஈண்டவுமென மேலேகூட்டு வாருமுளர்.

196 - 217. [கிளைகலித்துப் பகைபேணாது, வலைஞர்முன்றின் மீன்பிறழவும், விலைஞர்குரம்பை மாவீண்டவுங். கொலைகடிந்துங் களவுநீக்கியு, மமரர்ப் பேணியு மாவுதி யருத்தியு, நல்லானொடு பகடோம்பியு, நான்மறையோர் புகழ்

---

* தென்றிசைக்கடலென்றது, தாம்பிரபன்னிநதி கலக்கப்பெற்றகடலை; அந்தப்பாகம் கொற்கைத்துறையென்றுவழங்கும்.

† இதற்கு உரைகிடைத்திலது; காவிரியால் உண்டாகியபொருள்களும் சிங்களதேசத்திலிருந்து உண்டாகிய நுகர்பொருள்களுமென்க.

‡ கடாரம் - பர்மா.

பரப்பியும் பண்ணியம் மட்டியும் பசும்பதக் கொடுத்தும் புண்ணிய முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக், கொடுமேழி நசையுழவர், நெடுநுகத்துப் பகல்போல, நடுவுநின்ற நன்னெஞ்சினோர். வடுவஞ்சி வாய்மொழிந்து, தமவும் பிறவு மொப்ப நாடிக், கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைகொடாது, பல்பண்டம் பகர்ந்துவீசுந், தொல்கொண்டித் துவன்றிருக்கைப், பல்லாயமொடு பதிபழகி, வேறுவே றுயர்ந்த முதுவா யொக்கற், சாறயர் மூதூர் சென்றுதொக் காங்கு, மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப் புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும் :]

பழி தீர் தேஎத்து முது வாய் ஒக்கல் சாறு அயர் மூதூர் சென்று தொக்காங்கு—குற்றமற்ற பிறதேசங்களிலே அறிவுவாய்த்த சுற்றத்தினையுடைய விழாச்சிறப்பினைநிகழ்த்தின பழைய ஊரிலுள்ளார் ஈண்டுவந்து குடியேறினாற்போல,

*"செலவினும் வரவினும்" என்னுஞ்சூத்திரத்தாற் சென்றென்பது வந்தென்னும்பொருடந்தது.

வேறு வேறு உயர்ந்த புலம் பெயர் மாக்கள்—பலபலசாதிகளாயுயர்ந்த தத்தநிலத்தைக் கைவிட்டுப்போந்த மாக்கள்,

பல்மொழி பெருகிய மாக்கள்—பலபாடைமிக்க மாக்கள்.

மாக்களென்றார் †ஐயறிவேயுடையராதலின்; என்றது சோனகர் சீனர் முதலியோரை,

மாக்கள் பல் ஆயமொடு பதி பழகி கலந்து இனிது உறையும் மறுகின் (193)—இம்மாக்கள் பலதிரளோடே இவ்வூரிடத்தேபழகி ஈண்டை நன்மக்களோடே கூடி நன்றாக இருக்கும் மறுகெனமுன்னேகூட்டுக

இவர்களிருந்தலின, வளந்தலைமயங்கிய மறுகுகளாயின.

கிளை கலித்து பகை பேணாது வலைஞர் முன்றில் மீன் பிறழவும் விலைஞர் குரம்பை மா ஈண்டவும் கொலை கடிந்தும் களவு நீக்கியும்—மீன்திரளும் விலங்கின்திரளும் பெருகி வலையாற்பிடிப்பாரையும் கொன்று இறைச்சிவிற்பாரையும் தமக்குப் பகையாகக்கருதியஞ்சாதே வலைஞர்முற்றத்தே அம்மீன்பிறழ்ந்து திரியும்படியாகவும் விலைஞர்குடிலிலே அவ்விலங்குகள் கிடக்கும்படியாகவும் முற்படக் கொலைத்தொழிலை அவர்களிடத்தினின்றும் போக்கியும் பின்னர்க் களவுகாண்பாரிடத்துக் களவுத்தொழிலைப்போக்கியும்,

அமரர் பேணியும்—தேவர்களை வழிபட்டும்,

ஆவுதி அருத்தியும்—யாகங்களைப்பண்ணி அவற்றான் ஆவுதிகளை அவரை நுகரப்பண்ணியும்,

நல் ஆனொடு பகடு ஓம்பியும்—நல்ல பசுக்களோடு எருதுகளைப் பரிகரித்தும,

* தொல்காப்பியம். கிளவியாக்கம் சூ. 28.

† ஐயறிவு - ஐம்பொறியுணர்வு; மாக்கள், மனவுணர்வின்றி ஐம்பொறியுணர்வையேயுடைய விலங்குபோல்வார்; இதனை, "மாவு மாக்களு மையறி வினவே", "மக்க டாமே யாறறி வுயிரே" என்னும் தொல்காப்பிய மரபியற் சூத்திரங்களானுணர்க.

*"வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை". †"மெய்தெரி வகையி னெண்வகை யுணவின் - செய்தியும் வரையா ரப்பா லான" ‡என்பவற்றால், வாணிகர்க்கு உழவுத்தொழிலுரித்தாகலிற் பகடோம்பியுமென்றார். யாகத்திற் குப் பசுவை ஓம்பியுமென்றார்.

நான்மறையோர் புகழ் பரப்பியும்—அந்தணர்க்குண்டாம் புகழ்களைத் தாங்கள் அவர்க்கு நிலைபெறுத்தியும்,

புண்ணியம் பண்ணி அட்டியும்—பெரிதாகிய புண்ணியங்களைத் தாங்கள் பண்ணி அவற்றைச் செய்யமாட்டாதார்க்குத் தானம்பண்ணியும்,

அம், அசை.

பண்ணியமட்டியுமென்றதற்குச் சோற்றை ஆக்கியிட்டுமென்பாருமுளர்.

பசு பதம் கொடுத்தும்—விளைந்தநெல்லையும் பறிக்கும்§கமுகையும் உணவாகக்கொடுத்தும்,

இதற்கு அரிசியும் கறியுங் கொடுத்துமென்பாருமுளர்.

மூட்டா தண் நிழல் வாழ்க்கை—இங்ஙனஞ்செய்யும் அறத்தொழில்கள் மூட்டுப்படாத குளிர்ந்த அருளுடனேவாழும் இல்வாழ்க்கையையுடைய நன்னெஞ்சினோர் (207) என்க.

கொடு மேழி நசை உழவர் நெடு நுகத்து பகல் போல நடுவுநின்ற நல்நெஞ்சினோர் — வளைந்தமேழியால் உழவுத்தொழிலை நச்சுதலையுடைய உழவரது நெடிய ||நுகத்திற்றைத்த பகலாணிபோல நடுவுநிலையென்னுங்குணம் நிலைபெற்ற நன்றாகிய நெஞ்சினையுடையோர்,

என்றது, ஆண்டுறையும் வேதவாணிகரை.

தம பல் பண்டமும் பிற பல் பண்டமும் ஒப்ப நாடி—தம்முடையவாகிய பலசரக்குக்களையும் பிறவாகிய பலசரக்குக்களையும் பொருளொப்ப ஆராய்ந்து,

வடு அஞ்சி வாய் மொழிந்து—தம்குடிக்கு வடுவாமென்றஞ்சி மெய்யே சொல்லி,

கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது—தாம் கொள்ளுஞ் சரக்கையும் தாம்கொடுக்கும்பொருட்கு மிகையாகக்கொள்ளாது தாம் கொடுக்குஞ் சரக்கையும் தாம்வாங்கும்பொருட்குக் குறையக்கொடாமல்,

பகர்ந்து வீசும்—இலாபத்தை வெளியாகச்சொல்லிக் கொடுக்கும்.

தொல் கொண்டி—பழையதாகிய கொள்ளையினையும்,

கொள்ளையென்றார், இந்நெறியை நடத்தினரிடத்தல்லது பொருட்டிரள் உண்டாகாதென்றற்கு.

---

* தொல்காப்பியம், மரபியல். சூ. 77.

† ,, ,, ,, 78.

‡ பி - ம். என்பதனால்.

§ கமுகு - பாக்கு.

|| நுகம் - நுகத்தடி; பகலாணி - அதன் நடுவேதைத்த ஆணி, "நுகத்துப் பகலாணிபோன்று" (பழ. 95); "பகலன்ன வாய்மொழி" (பு - வெ. வாகை, 3); "நுகத்திற் பகலனையாய்" (தஞ்சை. 48.)

தன்னிழல் வாழ்க்கையினையும் (204) தொன்மைக்கணையினையும் (212) உடைய நன்னெஞ்சினேனே (207) சென்க.

துவன்று இருக்கை—நெருங்கின குடியிருப்பினையும்,

காவிரி (6) புனல்பரந்து பொன்கொழிக்கும் (7) பல்லூர் நெடுஞ்சோணாட்டிற் (28) கழிசூழ்படப்பையினையும் (32) தண்டலையினையும் (33) பொய்கைகளையும் (38) ஏரிகளையும் (39) இன்காப்பினையும் (41) கோயிலைமாறுகூட்டுதற்குக்காரணமான (50) அட்டிலினையும் (43) சாலையினையும் (52) பள்ளியினையும் (53) குயில் (55) துச்சிற்சேக்கைக்குக்காரணமான (58) தாழ்காவினையும் (53) பாக்கங்களையும் (27) புறச்சேரியினையும் (76) முன்றிலினையும் (141) விழவறா ஆவணத்தையும் (158) மாக்கள் கலந்து இனிதுறையும் (217) வளர்தலையமங்கிய மறுகுகளையும் (193) நன்னெஞ்சினேனே (2(7) துவன்றிருக்கை (212) யினையுமுடைய பட்டின (218) மெனவினைமுடிக்க

218. முட்டா சிறப்பின் *பட்டினம் பெறினும்—குறைவுபடாத தலைமையினையுடைய பட்டினத்தை எனக்கு உரித்தாகப் பெறுவேனாயினும்,

219. வார் இரு கூந்தல் வயங்கு இழை ஒழிய—நீண்ட கரிய கூந்தலையுடைய விளங்குகின்ற பூணினையுடையாள் ஈண்டுப் பிரிந்திருப்ப,

220. வாரேன் வாழிய நெஞ்சே—யான் நின்னோடுகூடவாரேன்; நெஞ்சே, போய்வாழ்வாயாக ;

†"அளிநிலை பொறாஅது" என்னும் அகப்பாட்டால் போக்கிற்கு ஒருப்படாமல்நிற்குங் குறிப்புணர்க.

220 - 21. கூர் உகிர் கொடுவரி குருளை கூட்டுள் வளர்ந்தாங்கு—கூரிய உகிரினையும் வளைந்தவரிகளையுமுடைய புலிக்குட்டி கூட்டிடத்தே அடையுண்டிருந்து வளர்ந்தாற்போல,

222. பிறர் பிணி அகத்து இருந்து பீடு காழ் முற்றி—பகைவர்காவலிடத்தேயிருந்து தனக்குப்பெருமை வயிரமாகமுற்றி,

223 - 5. [அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று, பெருங்கை யானை பிடிபுக் காங்கு, நுண்ணிதி னுணர நாடி :]

நுண்ணிதின் உணர நாடி—தன்னுணர்வு கூரிதாகவுணரும்படி இதுவே காரியமென்றாராய்ந்து,

பெரு கை யானை அரு கரை கவிய குத்தி குழி கொன்று பிடி புக்காங்கு—பெரிய கையினையுடைய யானை தான் அகப்படப்பண்ணின குழியில் ஏறுதற்கு அரியகரைகளை இடியும்படி கோட்டாலேகுத்திக் குழியைத்தூர்த்துப் பிடியிடத்தே சென்றாற்போல,

225 - 6. [நண்ணார், செறிவுடைத் திண்காப் பேறி வாள்கழித்து :] நண்ணார் செறிவு உடை திண் காப்பு வாள் கழித்து ஏறி—அப்பகைவருடைய நெருங்கின திண்ணியகாவலாகிய வாட்படையை ஓட்டி அவ்விடத்தினின்றும் போந்து,

* பட்டினம் - காவிரிப்பூம்பட்டினம். † அகநானூறு,

இனித் தின்னாப்பிடத்தே வாளை உலறகழித்து வெட்டிப்போக்கேன்றவாம்.

227. உரு கெழு தாயம் ஊழின் எய்தி—அச்சம்பொருந்தின தன்னரசுரிமையை முறையாலேபெற்று,

228. பெற்றவை மகிழ்தல் செய்யான்—தான் இறையாகப்பெற்ற அரசுரிமையால் மகிழ்ச்சிபொருந்துதல் செய்யானாய் மேலும் ஆசைமிக்கு,

228 - 38. [செற்றோர், கடியரண் டொலைத்த கதவுகொல் மருப்பின், முடியுடைக் கருந்தலை புரட்டு முன்றா, ளுகிருடை யடிய வோங்கெழில் யானை, வடிமணிப் புரவியொடு வயவர் வீழப், பெருநல் வானத்துப் பருந்துலாய் நடப்பத், தூறிவர் துறுகற் போலப் போர்வேட்டு வேறுபல் பூளையொ டுழிஞை சூடிப், பேய்க்க ணன்ன பிளிறுகடி முரச மாக்க ணகலறை யதிர்வன முழங்க, முனை கெடச் சென்று முன்சம முருக்கி ]

முடியுடை கரு தலை புரட்டும் முன தாள் உகிர் உடை அடிய—முடியையுடைய கரியதலைகளையுருட்டும முன்காலின உகிருடைய அடிகளையுடையவாய்,

தூறு இவர் துறு கல் போல உழிஞை சூடி செற்றோர் கடி அரண் தொலைத்த யானையொடு—தூறுபடர்ந்த நெருங்கின மலைகள்போல உழிஞையைச்சூடித் தம்மரசரிற் பகைபெற்றாருடைய காவலையுடைய அரணகளையிடித்த யானைகளோடும்,

கதவு கொல் மருப்பின் ஓங்கு எழில் யானை—கதவைமுறிக்கும் கொம்பினையும் உயர்ந்த அழகினையுமுடைய யானையெனக

வடி மணி புரவியொடு—வடித்த மணிகட்டின குதிரைகளோடும்,

போர் வேட்டு - போரைவிரும்பி

பேய் கண் அன்ன பிளிறு கடி முரசம் மா கண் அகலறை அதிர்வன முழங்க—பேயின்கண்ணையொத்துமுழங்குகின்ற காவலையுடையமுரசம் பெருமையை உடைத்தாகிய இடத்தையுடைய பாசறையிலே நடுங்குவனவாய் முழங்க,

அகலறை - மலைப்பக்கமுமாம

முனை கெட சென்று—பகைப்புலம் கெடும்படி சென்று,

பெரு நல் வானத்து பருந்து உலாய நடப்ப வயவர் வீழ முன் சமம் முருக்கி—பெரிய நல்லவானிடத்தே பருந்து உலாவித்திரியும்படியாக வீரர் படும்படி மூற்பட்டதூசியைக்கெடுத்து,

யானைகளோடும் புரவிகளோடும் போர்வேட்டு முரசமுழங்கச்சென்று பருந்துலாய்நடப்ப வயவர்வீழ முருக்கியென்க

239. தலை தவ சென்று - அப்பகைவரிடத்தே மிகநடந்து,

239 - 42. [தண்பணை யெடுப்பி, வெண்பூக் கரும்பொடு செந்நெ னீடி, மாயிதழ்க் குவளையொடு நெய்தலு மயங்கிக், கராஅங் கலித்த கண்ணகன் பொய்கை :] வெள் பூ கரும்பொடு செந்நெல் நீடி குவளையொடு மா இதழ் நெய்தலும் மயங்கி கராம் கலித்த கண் அகல பொய்கை தண் பணை எடுப்பி—வெள்ளிய பூக்களையுடையகரும்புகளுடனே செந்நெல்லும்வளர்ந்து குவளையோடே பெருமையையுடைய இதழ்களையுடைய நெய்தலுமயக்கப்பட்டு முதலைகள் செரு

க்கித்திரிந்த இடமகன்ற பொய்கைகளையுடைய மருதநிலத்துள்ள ஊர்களை யோட்டி,

243 - 4. [கொழுங்காற் புதவமொடு செருந்தி நீடிச், செறுவும் வாவியு மயங்கி நீர்ந்று·] செறுவும் வாவியும் நீர்நிறு மயங்கி வேறு பல் பூளை (235) யொடு கொழு கால் புதவமொடு செருந்தி நீடி—செய்களும் வாவிகளும் நீர்நிறுத தம்மிலொன்றாய் இருவகைப்பட்ட பலவாகிய பூளைகளோடே கொழுவிய தண்டுகளையுடைய அறுகோடே கோரைகளும் வளரப்பட்டு,

வேறுபல்பூளை. இங்கேகூட்டிற்று சிறுபூளையும் பெரும்பூளையுமுண்மை யின் வேறுபல்பூளையென்றார்.

245. அறு கோடு இரலையொடு மான்பிணை உகளவும்—அறல்பட்ட கொம்பினையுடைய புல்வாய்க்கலையோடு மான்பிணை துள்ளிவிளையாடும்படி யாகவும்.

தலைதவச்சென்று தண்பணையெடுப்பி (239) நீடி (240) உகளவும் (245) என்க

246 - 9 [கொண்டி மகளி ருண்டுறை மூழ்கி, யந்தி மாட்டிய நந்தா விளக்கின், மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ, வம்பலர் சேக்குங் கந்துடைப பொதியில்·]

கொண்டி மகளிர் உண் துறை மூழ்கி மெழுக்கம் அந்தி மாட்டிய நந்தா விளக்கின் மலர் அணி கந்து உடை பொதியில் பகைவர்மனையோராய்ப் பிடித்துவந்த மகளிர்பலரும் நீருண்ணுந்துறையிலே சென்றுமுழுகி மெழுகும்மெழுகத்தினையும் அவர்கள் அந்திக்காலத்தேகொளுத்தின அவியாத விளக்கினையு முடைய பூக்களைச்சூட்டின தறியினையுடைய அம்பலம்,

கந்து - தெய்வமுறையுந்தறி.

வம்பலர் பலா ஏறி தொழ சேக்கும் பொதியில் - புதியவர்கள் பலருமேறித் தொழுதற்குத்தங்கும் பொதியில்,

பொதியிலைமெழுகி விளக்குமிட்டிருக்க வம்பமகளிரைவைத்தார், அதனாலே தமக்குப் புகழுளதாமென்றுகருதி.

250 - 51. பரு நிலை நெடு தூண் ஒல்க தீண்டி பெரு நல் யானையொடு பிடி புணர்ந்து உறையவும் - அத்தெய்வமுறையும் அம்பலத்தினின்ற பருத்த நிலைமையினையுடைய நெடியதூண் சாயும்படி தம்முடம்பு உரிஞ்சிப் பெரிய நல்ல களிறுகளுடனே பிடிகள்கூடித்தங்கும்படியாகவும்,

252 - 5 [அருவிலை நறும்பூத் தூஉய்த் தெருவின், முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த, திரிபுரி நரம்பின் தீந்தொடை யோர்க்கும், பெருவிழாக் கழிந்த பேஎமுதிர் மன்றத்து·] தெருவில் அரு விலை நறு பூ தூஉய் முது வாய் கோடியர் முழவொடு புணர்ந்த திரி புரி நரம்பின் தீ தொடை ஓர்க்கும் பெரு விழா கழிந்த பேஎ முதிர் மன்றத்து—ஊண்டுள்ளதெருவின்கண்ணே விலைகூறுதற்கரிய நறியபூக்களைச்சிதறி அறிவுவாய்த்தலையுடைய கூத்தருடைய மத்தளத்திற்றாளத்தோடேகூடின முறுக்குத்தப்புரித்த நரம்பின் இனிதாகிய கட்

புலையுடைய யாழைக்கேட்கும் பெரிய திருவானின்றாகிய அம்பலமிருந்த மன்றத்திடத்தே,

தூவி ஒக்குமென்க. தொடை, ஆகுபெயர்.

256 - 7. *[சிறுபூ நெருஞ்சியோ டறுகை பம்பி. யழல்வா யோரி யஞ்சுவரக் கதிர்ப்பவும்:]

258. அழு குரல் கூகையோடு ஆண்டலை விளிப்பவும்—இசைக்கு வருந்திக்கூப்பிடுகின்ற குரலையுடைய கூகைகளுடனே கூடி ஆண்டலைப்புள்ளுங் கூப்பிடும்படியாகவும்,

259 - 60. கணம் கொள் கூளியொடு கதுப்பு இகுத்து அசைஇ பிணம் தின் யாக்கை பேய்மகள் துவன்றவும்—திரட்சிகொண்ட ஆண்பேய்களுடனே மயிரைத்தாழ்த்து இளைத்துப் பிணத்தைத்தின்னும் வடிவையுடைய பேய்மகள் நெருங்கும்படியாகவும்,

261. கொடு கால்—வளைந்த கால்களையுடைய பேய்மகளென முன்னே கூட்டுக.

261 - 2. விருந்து மாடத்து நெடு கடை துவன்றி உண்டு ஆறு பெரு சோறு அட்டில்—விருந்தினர் மாடத்திடத்து நெடிய தலைவாசலிலே முற்பட நெருங்கியிருந்து பின்பு உள்ளேசென்று உண்டு மிக்குக்கிடக்கின்ற பெரிய சோற்றையுடைய அடுக்களை,

263 - 4 ஒள் சுவர் நல் இல் உயர் திணை இருந்து பைங்கிளி மிழற்றும் பாலார் செழுநகர்—சாந்திட்ட சுவர்களையுடைய நன்றாகிய அகங்களின் உயர்ந்த திண்ணைகளிலேயிருந்து பசியகிளி வார்த்தைசொல்லுதற்குக் காரணமாகிய பால்நிறைந்த வளவியவூர்,

திண்ணை, விகாரம். இனி, உயர்திணை - உயர்ந்த மேனிலமென் றுமாம்.

265 - 7 [தொடுதோ லடியர் துடிபடக் குழீஇக், கொடுவி லெயினர் கொள்ளை யுண்ட, வுணவில் வறுங்கூட் டுள்ளகத் திருந்து:] கொடு வில் எயினர் தொடுதோல் அடியர் துடி பட குழீஇ கொள்ளை உண்ட உணவு இல் வறு கூடு உள்ளகத்து இருந்து — கொடிய வில்லினையுடைய வேடர் செருப்புத் தொட்ட அடியினையுடையராய்த் துடியொலிப்பத் திரண்டு கொள்ளையாகக் கொண்டுண்ட நெல் பின் இல்லையான வறுவிய கூட்டினுடைய உள்ளாகிய இடத்தேயிருந்து,

268. வளை வாய் கூகை நல் பகல் குழறவும்—வளைந்த வாயினையுடைய கூகை அடியொத்தகாலத்தே கூப்பிடும்படியாகவும்,

செழுநக (264) ரட்டிலிடத்துக் (262) கூட்டினுள்ளேயிருந்து (267) கூகைகுழறவும் (268) என்க.

269 - 70. [அருங்கடி வரைப்பி னூர்கவி னழியப், பெரும்பாழ் செய்து மமையா னருங்கற:] அரு கடி வரைப்பின் ஊர் கவின் அழிய மருங்கு அற பெரு பாழ் செய்தும் அமையான்—அரிய காவலையுடைய மதிலையுடைய பகை

* இதற்கு உரை கிடைக்கவில்லை.

ஏய்வடையிருள் அழகிய அமர்க்களத்திலிருந்துப் பெரியபாழாகப்பண்ணிய நாடும் செற்றம் ஆறாய்,

பெற்றவை மகிழ்தல்செய்யாளுய் (228) மேறுமாவைமிக்கு யானைகளோடும் (231) புரவிகளோடும் (232) போர்வேட்டு (234) மூசச (236) முழுங் க (237) சென்று முன்சமமுருக்கித் (238) தலைதவச்சென்று எடுப்பி (239) உகளவும (245) உறையவும் (251) கதிர்ப்பவும் (257) விளிப்பவும் (258) குழறவும் (268) துவன்றவும் (260) பாழ்செய்தும் (270) வார்கவினழியப் (269) பாழ் செய்தும் அமையாளுய் (270) என வினைமுடிக்க.

பாழ்செய்தலை இரண்டிடத்துங்கூட்டுக.

271 - 2. மலை அகழ்க்குவனே கடல் தூர்க்குவனே வான் வீழ்க்குவனே வளி மாற்றுவன் என — இவன் தெய்வத்தன்மையுடையனாதலின் இம்மலைகளை யெல்லாம் அகழ்தலைச்செய்வன், கடல்களையெல்லாம் தூர்த்தலைச்செய்வன், தேவருலகைக் கீழ்வீழ்த்தலைச்செய்வன்; காற்றை இயங்காமல்விலக்குவனென்று உலகத்தார் மேற்கூறும்படியாகத் துறைபோகவினென்க

பெரும்பாழ்செய்தும் அமையாளுய், இங்ஙனம் பாழ்செய்தவன் மேல் இவையுஞ்செய்வனென்று கூறும்படியாகத் துறைபோனனென்றவாறு.

273. தான் முன்னிய துறை போகலின — தான்கருதிய போர்த்துறைக ளெல்லாம் பொருதுமுடித்தானாகலின்,

274. பல் ஒளியர் பணிபு ஒடுங்க — பலராகிய ஒளிநாட்டார் தாழ்ந்து தம் வீரங்குறைய,

ஒளியராவார் மற்றை மண்டலத்திற்கு அரசராதற்குரிய வேளாளர்.

275. தொல் அருவாளர் தொழில் கேட்ப — பழைய அருவாளநாட்டிலர சருந் தாங்கள்செய்யுந்தொழிலை வந்துகேட்ப.

276 வடவர் வாட — அதற்கு வடக்குநாட்டிலுள்ள அரசர் குறைய,

குடவர் கூம்ப — குடநாட்டிலுள்ளார் மனவெழுச்சி குறைய,

277 - 91. [தென்னவன் திறல்கெடச் சீறி மன்னர், மன்னெயில் கதுவு மதனுடை நோன்றாள், மாத்தானை மறமொய்ம்பிற், செங்கண்ணாற் செயிர்த்து நோக்கிப், புன்பொதுவர் வழிபொன்ற, இருங்கோவேள் மருங்குசாயக், காடு கொன்று நாடாக்கிக், குளந்தொட்டு வளம்பெருக்கிப், பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கிக், கோயிலொடு குடிநிறீஇ, வாயிலொடு புழையமைத்து, ஞாயிறெறாம் புதைநிறீஇப், பொருவேமெனப் பெயர்கொடுத், தொருவேமெனப் புறக் கொடாது, திருநிலைஇய பெருமன்னெயில்:]

புல் பொதுவர் வழி பொன்ற — புல்லிய இடையராய் அரசர்க்ளோர் கிளை முழுதுங் கெட்டுப்போக,

இருங்கோவேள் மருங்கு சாய — *ஐம்பெருவேளிர் குலமுழுதுங் குறைய,

காடு கொன்று — சோழமண்டலத்திற் காடாகிய இடங்களை வெட்டிப்போ க்கி,

நாடு ஆக்கி — பண்டுபோலக் குடியிருந்து விளையப்பண்ணி;

---

* இப்புத்தகம் 253 - ஆம் பக்கம் (*) குறிப்பைப்பார்க்க.

குளம் தொட்டு —நீர்க்குக் குளங்களைக் கல்லி,

வளம் பெருக்கி—நாட்டிற்குச் செல்வத்தைமிகுத்து,

பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி—பெரிய நிலைகளையுடைய மாடங்களையுடைய உறந்தையென்னும் தன்னூரைப்போக்கி,

கோயிலொடு குடி நிறீஇ —கோயில்களோடே பழையகுடிகளையும் பண்டு போல நிலைநிறுத்தி,

திரு நிலைஇய பெரு மன் எயில்—திருமகள் நிலைபெற்ற பெரியஆக்கத்தையுடைய உறந்தையின் மதிலிடத்தே.

வாயிலொடு புழை அமைத்து—பெரிய வாசல்களோடே சிறியவாசல்களையுமுண்டாக்கி,

ஞாயில் தொறும் புதை நிறீஇ—அதன்றலையில் எய்துமறையும் சூட்டுத் தோறும் அம்புக்கட்டுக்களையும் கட்டிவைத்து,

ஒருவேம் என புறம் கொடாது பொருவேம் என பெயர்கொடுத்து மன்னர் மன் எயில் கதுவும் மதன் உடை நோன் தாள் மா தானை மறம் மொய்ம்பின் தென்னவன் திறல் கெட செ கண்ணால் செயிர்த்து நோக்கி சீறி—யாம் தமியேமென்றுகருதிப் பலவரசர்கள்வந்தால் முதுகிடாது அவர்களுடனும் பொரக்கடவேமென வஞ்சினத்தைச்சொல்லி அரசருடைய பெரியஅரண்களைக் கோபித்துத் தழுவுஞ் செருக்கினையுடைய வலிய முயற்சியினையும் பெருமையினையுடைய நாற்படையினையும் மறத்தையுடைத்தாகிய வலியினையுமுடைய பாண்டியனது வலிகெடும்படி தன் செய்யகண்ணாலே குற்றத்தைச்செய்துபார்த்துக்கோபித்துப் பெற்றவை மகிழ்தல் செய்யா (228) னென முன்னே கூட்டுக.

*"கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக், குடிபழி தூற்றுங் கோலே னாகுக" என்றுகூறும் வஞ்சினத்தால் தனக்கு ஓர் பெயர்பெறுதலின் வஞ்சினத்தைப் பெயரென்றார்.

292 - 4. [மின்னொளி யெறிப்பத் தம்மொளி மழுங்கி, விசிபிணி முழவின் வேந்தர் சூடிய, பசுமணி பொருத பரேரெறுழ்க் கழற்கால்:]

விசி பிணி முழவின் வேந்தர் தம் ஒளி மழுங்கி மின் ஒளி எறிப்ப சூடிய கழல் கால்—இறுகவலித்த வார்க்கட்டினையுடைய முரசங்களையுடைய வழிபாடில்லாத வேந்தர் தம் அரசிழத்தலின் தமக்கு முன்புள்ள விளக்கங்கெட்டுப் பின்பு அவ்விளங்குகின்ற விளக்கம் தோன்றும்படியாகத் தம் முடிமேலேசூடின வீரக்கழலையுடைய காலினையும்,

பசு மணி பொருத பரு ஏர் எறுழ் கழல் —பசிய மணிகளோடே மாறுபட்ட பெரிய அழகிய வலியினையுடைய கழலென்க.

295 - 7. பொன் தொடி புதல்வர் ஓடி ஆடவும் முற்று இழை மகளிர் முகிழ் முலை திளைப்பவும் செ சாந்து சிதைந்த மார்பின்—பொன்னாற்செய்த தொடியினையுடைய பிள்ளைகள் ஓடிவந்து ஏறி விளையாடுகையினாலும் மெய்ம் முழுதுமணிந்த அணிகலங்களையுடைய மகளிருடைய தாமரைமுகைபோலும் முலைகள் புணர்தலாலும் சிவந்தசாந்தமழிந்த மார்பினையும்.

* புறநானூறு, 72.

## பத்தாவது

# மலைபடுகடாம்.*

திருமழை தலைஇய விருணிற விசும்பின்
விண்ணதி ரிமிழிசை கடுப்பப் பண்ணமைத்துத்
திண்வார் விசித்த முழவொ டாகுளி
நுண்ணுருக் குற்ற விளங்கடர்ப் பாண்டில்
மின்னிரும் பீலி யணிதழைக் கோட்டொடு
கண்ணிடை விடுத்த களிற்றுயிர்த் தூம்பின்

---

*இந்நூல் கூத்தராற்றுப்படை யெனவும் வழங்கும், (தொல். எச்ச. 66, சே. ந; தொல். புறத். . . - ந; தொல். செய். சூ. 157 - ந; ... 227 - இளம்; இ - வி. 300); பாக்தொடரியாப்பின் அடிகள் நிரம்பிவந்த செய்யுளுக்கு இது மேற்கோள்; (தொல். செய். சூ. 227-இளம்).

1. இருணிறவிசும்பு: "நீனிறவிசும்பு" (முருகு. 116, பெரும்பாண். 135); "இருணிறவிசும்பு" (சீகாளத்தி. தென்கயி. 62); இவ்வடி ஆசிரியம் அளவடியான் வந்ததற்கும், முடுகு வந்ததற்கும் மேற்கோள்; (தொல். செய். சூ. 32, 67 - பேர். ந.)

2. 'கடுப்ப' என்பது மெய்யுவமத்திற்குரியசொல்லென்பதற்கும் (தொல். உவம. சூ. 15 - இளம்), சிறுபான்மை பயனுவமத்திற்கு வருமென்பதற்கும் (தொல். உவம. சூ. 14 - பேர்) மேற்கோள்.

1 - 2. மதுரை 560.

3. 'முழ' உகரம் பெறாமல் வந்ததற்கு மேற்கோள், (தொல். குற்றியலுகர. 78 - ந).

1 - 3. மலைபடு. 532.

2 - 3. "பண்ணமை முழவு" (பதிற். 41.)

5. "தாழ்பீலிப் பல்லியம்" (பு - வெ. கரந்தை. 3.)

6. மலைபடு. 533, "கண்ணறுத் தியற்றிய களிற்றுயிர்த் தூம்பு" (பதிற். 41); "கண்விடு தூம்பிற் களிற்றுயிர் தொடுமின்" (புறநா. 152)

னிளிப்பயி ரிமிருங் குறும்பரந் தூம்பொடு
விளிப்பது கவருந் தீங்குழ றுதைஇ
நடுவுநின் றிசைக்கு மரிக்குரற் றட்டை
கடிகவர் பொலிக்கும் வல்வா யெல்லரி
நொடிதரு பாணிய பதலையும் பிறவுங்
கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப
நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்
கடுக்கலித் தெழுந்த கண்ணகன் சிலம்பிற்
படுத்துவைத் தன்ன பாறை மருங்கி
னெடுத்துநிறுத் தன்ன விட்டருஞ் சிறுநெறி
தொடுத்த வாளியர் துணைபுணர் கானவ
ரிடுக்கண் செய்யா தியங்குந ரியக்கு
மடுக்கன் மீமிசை யருப்பம் பேணா
திடிச்சுர நிவப்பி னியவுக்கொண் டொழுகித்
தொடித்திரி வன்ன தொண்டுபடு திவவிற்
கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக்
குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பி

---

7 நன். 350 - மயிலை ரா மேற்.

9. "தேமா, தட்டை மறையிற் கறங்கு நாடா" (குறுந் 193).

2 - 11. புறநா. 152.

11 - 2. மலைபடு 142 - 4.

13 மலைபடு. 365, 'காவினெம் கலனே சுருக்கினெம் கலப்பை" (புறநா. 206.)

3 - 13. பதிற். 41 : 1 - 5, புறநா 103, 139.

16. "விசும் பிழியுக் கேணி நெறியா வாய் வெம்மெ றி" (திருச்சிற். 149) "செவ்வர் மனத்து நேருகி ...அரங்குநெறி" (சீவக 1416) என்பதற்கு இவ்வடி மேற்கோள்.

15 - 6. தொல் களவி. 55 - சே, இ வ். 321 - மேற்.

17 - 8. பெரும்பாண். 39 - 41.

21. பொருந 14 - 5; பெரும்பாண். 13.

22. பொருந. 16 - 8 பா. கேள்விப்போகாது.

23. "வீணைச் சுகிர்புரி நரம்பு" (சீவக. 728)

21 - 3. சீவக. 559 - மேற்.

னரலை தீர வுரீஇ வரகின்
குரல்வார்ந் தன்ன நுண்டுளை யிரீஇச்
சிலம்பமை பத்தல் பசையொடு சேர்த்தி
யிலங்குதுளை செறிய வாணி முடுக்கிப்
புதுவது புனைந்த வெண்கை யாப்பமைத்துப்
புதுவது போர்த்த பொன்போற் பச்சை
வதுவை நாறும் வண்டுகமழ் ஐம்பான்
மடந்தை மாண்ட நுடங்கெழி லாகத்
தடங்குமயி ரொழுகிய வவ்வாய் கடுப்ப
வகடுசேர்பு பொருந்தி யளவினிற் றிரியாது
கவடுபடக் கவைஇய சென்றுவாங் குந்தி
நுணங்கர நுவறிய நுண்ணீர் மாமைக்
களங்கனி யன்ன கதழ்ந்துகிள ருருவின்
வணர்ந்தேந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியாழ்
முமைவரப் பண்ணி யருநெறி திரியா
இசைபெறு திருவின் வேத்தவை யேற்பத்
துறைபல முற்றிய பைதீர் பாணரொ
டுயர்ந்தோங்கு பெருமலை யூறின் றேறலின்

24. இசையா, வணர்த்தற்கு இவ்வடி மேற்கோள் (தொல். சொல். 219 பேர்.)

24 - 5. பெரும்பாண். 7 - 8.

27. பொருந. 10.

28. இவ்வடி, வினையெச்சம் அகரமாகப் பிறந்தவாற்றுக்கு முடிக்குஞ் சொல்லை விசேடித்து வந்ததற்குக் காட்டிய மேற்கோள், (தொல். வினை. சூ. 31 - ந.)

30. பொருந. 19 - 20. ''நாறு அகுகளின் நீழகழுப்படப்பாக்க ; விழவொலி கூந்தல்'' (ஐங்குறு 306.), ''வதுவை மகளிர் கூந்தல் கமழு கொள'' (அகநா. 378).

33. இன்னுருபு வருமிடத்து இன்சாரியை வந்ததற்கு இவ்வடி மேற்கோள், (தொல். புணரியல், சூ. 29 - ந.)

31 - 3. பொருந. 6 - 8.

37. பொருந. 13.

36 - 7. மலைபடு. 531, ''களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்'' (புறநா. 127, 145.)

மதந்தபு ஞமலி நாவி னன்ன
துளங்கியன் மெலிந்த கல்பொரு சீறடிக்
கணங்கொ டோகையிற் கதுப்பிகுத் தசைஇ
விலங்குமலைத் தமர்ந்த சேயரி நாட்டத்
திலங்குவளை விறலியர் நிற்புறஞ் சுற்றக்
கயம்புக் கன்ன பயம்படு தண்ணிழற்
புனல்கால் கழீஇய மணலவார் புறவிற்
புலம்புவிட் டிருந்த புனிறில் காட்சிக்
கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ
தூமலர் துவன்றிய கரைபொரு நிவப்பின
மீமிசை நல்யாறு கடற்படர்ந் தாஅங்
கியாமவ ணின்றும் வருதும் நீயிரும்
கனிபொழி கானங் கிளையொ டுணீஇய
துனைபறை நிவக்கும் புள்ளின மானப்
புனைதார்ப் பொலிந்த வண்டுபடு மார்பின்

---

42 - 3. பொருந. 12 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

44. சிறுபாண். 14 - 5 ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப் பார்க்க; நா வெண். சுயம். 25.

41 - 6. புறநா 135.

44 - 6. இவ்வடிகளைப் பொருள்கோள் நதம் (யாப். வி. ஒழிபு)

45 - 6. சிறுபாண். 31.

47. "பொய்கையும் போன்றதே ஈசனெந்தை யிணையடி நீழலே" (தே. திருநா. மாசில்வீணை) சீவக. 872, "வெவ்வர மெய்யைக் குளிர்ப்பு வெயிலியங்கா வகையியக்கும் வீறுஞ் சோலை" (கம்ப. நாடவிட். 22)

48. பெரும்பாண். 380.

50. தொல். புள்ளிமய. சூ. 17 - ந. மேற்.

53. சிறுபாண். 143, பெரும்பாண். 28.

51 - 3 பெரும்பாண் 427, "மலையி னிழிந்து மாக்கட னோக்கி, நிலவரை யிழிதரும் பல்யாறு போலப், புலவ ரெல்லா நின்னோக் கினரே" (புறநா. 12) "கடுவரை நீரிற் கடுத்துவர" (பு - வெ. வெட்சி, 11) "பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம்போய், மொய்கொள் வேலைவாய் முடுகுமாறுபோல்" (கம்ப. கையடை. 15.)

54 - 5. பொருந. 64 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப் பார்க்க; "வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி" (புறநா. 47.)

பலர்புறங் கண்டவ ரருங்கலந் தரீஇப்
புலவோர்க்குச் சுரக்குமவ னீகை மாரியு
மிகழுநர்ப் பிணிக்கு மாற்றலும் புகழுநர்க்
கரசுமுழுது கொடுப்பினு மமரா நோக்கமொடு
தூத்துளி பொழிந்த பொய்யா வானின்
வீயாது சுரக்குமவ னாண்மகி ழிருக்கையு
நல்லோர் குழீஇய நாநவி லவையத்து
வல்லா ராயினும் புறமறைத்துச் சென்றோரைச்
சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி
நல்லிதி னியக்குமவன் சுற்றத் தொழுக்கமு
நீரகம் பனிக்கு மஞ்சுவரு கடுந்திறற்
பேரிசை நவிர மேஎ யுறையுங்
காரி யுண்டிக் கடவுள தியற்கையும்
பாயிரு ணீங்கப் பகல்செய்யா வெழுதரு
ஞாயி றன்னவவன் வசையில் சிறப்பு

பொருட், டென்றுமிசைக் கிருப்புக, முற்றவை நீர்கழிந் தாகாஞர், குடநிமிர் மேற்குடை வேந்திர்காள்" (சூளா. சீயவதை. 204, அரசியல். 226.)

72. மலைபடு 75 - 6, 580.

71 - 2. சிறுபாண். 247 8-ஆம் அடிகளின் குறிப்புரையைப் பார்க்க; மதுரை. 145 6, "பகைவர் பிணித்து ....நகலம் பரிமாறு கொள்கு, பெருவிறல் யானைப் புலவர் ... குதவி", "அமர்கடந்து பெற்ற அரிய வெள்ளொளி தோமறு வீச", "வெற்றிகொண்டு தரீஇய வேந்தர் புலத் திறுத்து" (பதிற். 2 - பதி, 44, 53), "அவ்வெயிற் கொண்ட செய்யுறு நன்கலம், பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கி" (புறநா. 6), "குரிசில் வென்ற நன்கலக் கொண்டு கூட்டெல்லாம், பரிசிலர் முகந்தன பார்" (பு - வெ வஞ்சி. 16.)

73 - 4. மதுரை. 131, 139 - 10, "நட்டோரை யாக்கிய பகைகடிந்து" (சிறுபஞ்ச. 18, பழ. 398.)

75 - 6. "ஆகமழை யொழிந்த தளிசொரிந் தாஅங்கு, குழுவ ராரா மேவா பாடுவன் முடிந்து, நகைவ ராரா நன்கலஞ் சிதறி" (பதிற். 13.)

77 - 80. முருகு. 282 - 6.

82. மேவலைப் பற்றி நசையியையினும் குறிப்பை யுணர்த்துமென்பதற்கு மேற்கோள் ; (தொல். உரி. சூ. 32 - இளம். சே. ந.; இ - வி. சூ. 281.)

84 - 5. "பாயிரு ணீங்கப் பாகத்தா பரப்பி, ஞாயிறு குணமுதற் றோன்றியாஅங்கு"; "மாயிரு விசும்பிற் பனிமீன் விளங்க, ஞாயிறு தோன்றி யாங்கு மாறுரு, குழுமுரண் சுவைத்தல் மறுவின்றேன்" (பதிற். 59, 64).

மிகந்தன வாயினுந் தெவ்வர் தேஎ
நுகம்படக் கடந்து நூழி லாட்டிப்
புரைத்தோல் வரைப்பின் வேணிழற் புலவோர்க்குக்
கொடைக்கட னிறுத்தவவன் றொல்லோர் வரவு
மிரைதேர்ந் திவருங் கொடுங்காண் முதலையொடு
திரைபடக் குழிந்த கல்லகழ் கிடங்கின்
வரைபுரை நிவப்பின் வான்றோ யிஞ்சி
யுரைசெல வெறுத்தவவன் மூதூர் மாலையுங்
கேளினி வேளைநீ முன்னிய திசையே
மிருவளம் பழுநிய யாணர் வைப்பிற்
புதுவது வந்தன் றிதுவதன் பண்பே
வானமின்னு வசிவு பொழிய வானா
திட்ட வெல்லாம் பெட்டாங்கு விளையப்
பெயலொடு வைகிய வியன்கண் ணிருப்புனத்
தகலிரு விசும்பி னாஅல் போல
வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை
நீலத் தன்ன விதைப்புன மருங்கின்
மகுளி பாயாது மலிதுளி தழாலி
னகளத் தன்ன நிறைசுனைப் புறவிற்
கௌவை போகிய கருங்காய்ப் பிடியேழ்

89 பெரும்பாண். 446 - ஆம் அடியின் முதற்குறிப்பைப் பார்க்க.

90. கொடுந்தாண் முதலை (குறிஞ்சி. 257).

91 கல்லகழ் கிடங்கு (மதுரை. 730), '[illegible] இயற்றிய வலனு வாய்படு'' (அகநா. 79.)

92. "கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி'' (பதிற். 16.)

97 - 8. மதுரை. 10 - 11

100. அகலிரு விசும்பு: மலைபடு. 575; பெரும்பாண். 1.

99 - 101. இவற்றை வண்ணத்தால் வந்த ஆசிரியவடியென்பர் (யா - வி. ஒழிபு.)

100 - 101, மதுரை. 280 - 81, 'ஆரம் ஆகலின் றுவந்த இடைக் குறைக்கு இவ்வடிகளை மேற்கோள்; (யா - வி. ஒழிபு. 2, யா - கா. ஒழிபு. 8 - உரை.)

102. மதுரை, 279.

105. மதுரை. 271

நெய்கொள வொழுகின பல்கவ ரீரெண்
பொய்பொரு கயமுனி முயங்குகை கடுப்பக்
கொய்பத முற்றன குலவுக்குர லேனல்
விளைதயிர்ப் பிதிர்வின் வீயுக் கிருவிதொறுங்
குளிர்புரை கொடுங்காய் கொண்டன வவரை
மேதி யன்ன கல்பிறங் கியவின்
வாதிகை யன்ன கவைக்கதி ரிறைஞ்சி
யிரும்புகவர் வுற்றன பெரும்புன வரகே
பால்வார்பு கெழீஇப் பல்கவர் வளிபோழ்பு
வாலிதின் விளைந்தன வைவனம் வெண்ணெல்
வேலீண்டு தொழுதி யிரிவுற் றென்னக்
காலுறு துளைப்பிற கவிழ்க்கனைத் திறைஞ்சிக்
குறையறை வாரா நிவப்பி னறையுற்
றாலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே
புயற்புனிறு போகிய பூமலி புறவி
னவற்பதங் கொண்டன வம்பொதித் தோரை
தொய்யாது வித்திய துளர்படு துடவை
யையவி யமன்ற வெண்காற் செறுவின்
மையென விரிந்தன நீணறு நெய்தல்
செய்யாப் பாவை வளர்ந்துகவின் முற்றிக்
காயங் கொண்டன விஞ்சி மாவிருந்து

---

105 - 6. ஐகார ஔகாரக் குறுக்கமும் நேரசையென்பதற்குக் காட்டிய மேற்கோள்களுள் இவ்வடிகளும் ஒன்று, (யா - வி. அசை. சூ. 2.)

108. பா. குலவுக்குரலேனல்.

107 - 8. குறிஞ்சிப். 35 - 7 ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப்பார்க்க; "உறங்கு பிடித்தடக்கை யொருங்குநிரைத் தவைபோ, லிறங்குகுர லிறடி" (பெருங்கதை, குறிஞ்சி.)

111. "எருமை யன்னகருங்கல்" (புறநா. 5.)

112. வடசொல் சிதைந்து வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; (தொல். எச்ச. சூ. 6 - ந, இ - வி. சூ. 175.)

113. "இரும்பு கவர்கொண்ட ஏனற் பெருங்குரல்" (நற். 194.)

124. மதுரை. 282 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப் பார்க்க; "மை விரிந்தன்ன நீலமும்" (சூளா. நாடு. 11.)

125 - 6. "பாவை யிஞ்சி" (பெருங்கதை, நருமதை கடந்தது.)

வயவுப்பிடி முழந்தாள் கடுப்பக் குழிதொறும்
விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலை
காழ்மண் டெஃகின் களிறுமுகம் பாய்ந்தென
வூழ்மல ரொழிமுகை யுயர்முகந் தோயத்
துறுகல் சுற்றிய சோலை வாழை
யிறுகுகுலை முறுகப் பழுத்த பயம்புக்
கூழுற் றலமரு முந்தூ ழகலறைக்
கால மன்றியு மரம்பயன் கொடுத்தலிற்
காலி னுதிர்ந்தன கருங்கனி நாவன்
மாறுகொள வொழுகின வூறுநீ ருயவை
நூறொடு குழீஇயின கூவை சேறுசிறந்
துண்ணுநர்த் தடுத்தன தேமாப் புண்ணரித்
தரலை யுக்கன நெடுந்தா ளாசினி
விரலூன்று படுக ணாகுளி கடுப்பக்
குடிஞை யிரட்டு நெடுமலை யடுக்கத்துக்
கீழு மேலுங் கார்வாய்த் தெதிரிச்
சுரஞ்செல் கோடியர் முழவிற் றூங்கி
முரஞ்சுகொண் டிறைஞ்சின வலங்குசினைப் பலவே
தீயி னன்ன வொண்செங் காந்தட்
டூவற் கலித்த புதுமுகை யூன்செத்

129. "காழ்வேல", "காழ்நெடுவேல" (அகநா. 119, 369.)

134. "கால மன்றியு மரம்பயம் பகரும், யாண ரறாஅ வியன்மலை" (புறநா. 116); "காலமின்றியுங் கனிதருங்கனி" (கம்ப. வனம்புகு. 44); "தீங்கனி, காலமின்றிக் கனிவது காண்டிரால" (ஷை. நாடவிட. 18.)

137. "கூவை நூறுங் கொழுங்கொடிக் கவலையும்" (சிலப். 25: 42); "பாவையிஞ்சியுங் கூவைச் சுண்ணமும்" (பெருங்கதை, நருமதைகடத்தது.)

140 - 41. பொருந. 210 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப் பார்க்க

143. மலைபடு. 511.

145. மலைபடு. 149; "கார்த்திகை.............விளக்கிற் பூத்தன தோன்றி" (கார். 26); "தோன்றி வில்விளக்கே பூக்கும்" (நள. கலிதொடர். 27); ஈகாரவீறு வேற்றுமைக்கண் இன்பெற்று வந்ததற்கும், இரண்டாம் வேற்றுமையுருபு அன்னவென்பதையுங் கொண்டு முடியுமென்பதற்கும் இவ்வடி மேற்கோள்; (தொல். குற்றியலுகர. சூ. 78; ஷை எச்ச. சூ. 18 - ந.)

145 - 6. தொல். உவம. சூ. 16 - பேர். மேற்

தறியா தெடுத்த புன்புறச் சேவ
லூஉ னன்மையி னுண்ணா துகுத்தென
நெருப்பி னன்ன பல்விதழ் தாஅய்
வெறிக்களங் கடுக்கும் வியலறை தோறு
மணவில் கமழு மாமலைச் சாரற்
றேனினர் கிழங்கின ரூனர் வட்டியர்
சிறுகட் பன்றிப் பழுதுளி போக்கிப்
பொருதுதொலை யானைக் கோடுசீ ராகத்
தூவொடு மலிந்த காய கானவர்
செழும்பல் யாணர்ச் சிறுகுடிப் படினே
யிரும்பே ரொக்கலொடு பதமிகப் பெறுகுவி
ரன்றவ ணசைஇ யற்சேர்ந் தல்கிக்
கன்றெரி யொள்ளிணர் கடும்பொடு மலைந்து
சேந்த செயலைச் செப்பம் போகி
யலங்குகழை நரலு மாரிப் படுகர்ச்
சிலம்படைந் திருந்த பாக்க மெய்தி
நோனாச் செருவின் வலம்படு நோன்றாண்
மான விறல்வேள் வயிரிய மெனினே
நும்மில் போல நில்லாது புக்குக்

---

149 - 50. மதுரை. 279 - 84, “பூம்போது சிதைய வீழ்ந்தெனக் கூத்தர், ஆடுகளங் கடுக்கும்” (புறநா. 28)

145 - 50. பரிசிற்பொருளாக்கத்திற்கு இவ்வடிகளை மேற்கோள் காட்டுவர்; (யா - வி. ஒழிபு.)

152. ‘வேட்டுவன் மான்றசை சொரிந்த வட்டியும்” (புறநா. 33.)

150 - 157. ஆற்றுப்படையுள் ஒருமைச்சொல் பன்மையோடு முடிவதற்கு, ‘கலம்பெறு கண்ணுள ரொக்கற்றலைவ ..............இரும்பே ரொக்கலொடு பதமிகப்பெறுகுவிர்’ என்னும்பகுதி மேற்கோள்; (தொல். எச்ச. சூ. 66 - இளம். சே. ந; இ - வி. சூ. 300.)

158. மலைபடு. 256.

159. “எரியவி ருருவி னங்குழைச் செயலை”, “செந்தீ யொண்பூம் பிண்டி” (குறிஞ்சி. 105; 118 - 9)

164. மதுரை. 344.

165. மலைபடு. 491; “எங்கோ னிருந்த கம்பலை மூதூ, ருடையோர் போல விடையின்று குறுகி” (புறநா. 45.)

கிழவிர் போலக் கேளாது கெழீஇச்
சேட்புலம் பகல இனிய கூறிப்
பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு
குரூஉக்க ணிறடிப் பொம்மல் பெறுகுவிர்
சேறித் தரூஉ மிலங்குமலைத் தாரமொடு
வேய்ப்பெயல் விளையுட் டேக்கட் டேறல்
குறைவின்று பருகி நறவுமகிழ்ந்து வைகறைப்
பழஞ்செருக் குற்றநும மனந்த றீர
வருவி தந்த பழஞ்சிதை வெண்காழ்
வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை
முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை
பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ
வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழனி
னின்புளிக் கலந்து மாமோ ராகக்
கழைவளர் நெல்லி னரியலை யாழ்ந்தது
வழையமை சாரல் கமழத் துழைஇ
நறுமல ரணிந்த நாறிரு முச்சிக்

---

164 - 9. பெரும்பாண் 103 - 5.

169. 'தரூ' என்னும் அளபெடைச்சொல் ஈற்றலகையுணர்த்தி நின்று வருவதற்கு இவ்வடி மேற்கோள், (தொல். உரி. சூ. 5 - ந.)

171. முருகு. 195 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பையும், "ஏறுபெற்ற நிலை மாந்தி" (குறிஞ்சி. 155) என்பதையும் பார்க்க.

173. பொருந. 94 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பையும், மதுரை. 669-ஆம் அடியையும் பார்க்க.

174 மலைபடு. 337 - 8, "ஆசினி முதுசுளை கலாவ .......... இழிதரு மருவி" (முருகு. 301 - 16.)

176. "முளவுமா வல்சி" (ஐங்குறு. 364), "முளவுமாத் தொலைச்சிய முழுச்சொ லாடவர்" (புறநா. 325.)

176 - 7. தொல். குற்றியலுகர. சூ. 78 - இளம். ந, சூ - வி. சூ. 90 - மேற்.

177. மலைபடு. 563.

179. இன்புளி. "தீம்புளி" (மதுரை. 318.)

181. "காழ்நெடுவழி": (சிறுபாண். 88), 'வழைஅமை மலையயல் காடு" (பதிற். 41.)

றொழூஉகிர் கழியி னல்லது வறிது
நும்மியர் தொடுத்த வோம்புமின் மயங்குதுளி
மாரி தலையுமவன் மல்லல் வெற்பே
யலகை யன்ன வெள்வேர்ப் பீலிக்
கலவ மஞ்ஞை கட்சியிற் றளரினுங்
கடும்பறைக் கோடியர் மகாஅ ரன்ன
நெடுங்கழைக் கொம்பர்க் கடுவ னுகளினு
நேர்கொ ணெடுவரை நேமியிற் றொடுத்த
சூர்புக லடுக்கத்துப் பிரசங் காணினு
ஞெரேரெ னோக்க லோம்புமி னுரித்தன்று
நிரைசெலன் மெல்லடி நெறிமாறு படுகுவிர்
வரைசேர் வகுந்திற் கானத்துப் படினே
கழுதிற் சேணோ னேவொடு போகி
யிழுதி னன்ன வானிணஞ் செருக்கி
நிறப்புண் கூர்ந்த நிலந்தின் மருப்பி
னெறிக்கெடக் கிடந்த விரும்பிண மெருத்தி
னிருடுணிந் தன்ன வேனங் காணின்
முளிகழை யிழைந்த காடுபடு தீயி
னளிபுகை கமழா திறாயினிர் மிசைந்து
துகளறத் துணிந்த மணிமரு டெண்ணீர்க்

231. பா. தொழூஉகிர்கழியி ..

236 - 7. சிறுபாண். 56; "குரங்கன்னபுன் குறுங்கூளியர்" (புறநா. 136).

239. "வருடையும் பாயாச் சூருடை யடுக்கம்" (நற். 359); "சூருறை குன்றின் றடவரை" (பரி. 19.)

238 - 9. மலைபடு. 521 - 5; முருகு. 299 - 300.

240. ஞெரேரென : மலைபடு. 579. பா. ஞெரேரெனவை.

242. வகுந்து வழியென்பதற்கு இவ்வடி மேற்கோள்; (சிலப். 15: 17 - அடியார்.)

243. குறிஞ்சி. 40 - 41.

244. "பருத்திப் பெண்டின் பனுவ லன்னநிணம்' (புறநா. 125.):

247. கம்ப. நாடு. 17; தொல். மரபியல், சூ. 1 - பேர். மேற்.

249. தொல். கிளவி. சூ. 46 - ந. மேற்.

250. சிறுபாண். 152; மதுரை. 351.

குவளையம் பைஞ்சுனை யசைவிடப் பருகி
மிகுத்துப் பதங்கொண்ட பரூஉக்கட் பொதியினிர்
புட்கை போகிய புன்றலை மகாரோ
டற்கிடை கழித லோம்பி யாற்றநு
மில்புக் கன்ன கல்லளை வதிமி
னல்சேர்ந் தல்கி யசைத லோம்பி
வான்கண் விரிந்த விடிய லேற்றெழுந்து
கானகப் பட்ட செந்நெறிக் கொண்மின்
கயங்கண் டன்ன வகன்பை யங்கண்
மைந்துமலி சினத்த களிறுமத னழிக்குந்
துஞ்சுமரங் கடுக்கு மாசுணம் விலங்கி
யிகந்துசேட் கமழும் பூவு முண்டோர்
மறந்தமை கல்லாப் பழனு மூழிறந்து
பெரும்பயங் கழியினு மாந்தர் துன்று
ரிருங்கால் வீயும் பெருமரக் குழாமு
மிடனும் வலனு நினையினிர் நோக்கிக்
குறியறிந் தவையவை குறுகாது கழிமின்
கோடுபல முரஞ்சிய கோளி யாலத்துக்
கூடியத் தன்ன குரல்புணர் புள்ளி
னாடுகா ணனந்தலை மென்மெல வகன்மின்
மாநிழற் பட்ட மரம்பயி லிறும்பின்

251. "குவளைப் பைஞ்சுனை பருகி" (புறநா. 132.)

253. மலைபடு. 217, இவ்வடி, புல்லென்பது புன்மையென்னும் பொருளில் வரு மென்பதற்கு மேற்கோள் (சீவக. 2591.)

260 - 61. "களிறு [illegible]" (நற். 11); "யானைவிளிபடத் துழவுமகலவாய்ப் பாந்தள்" (அகநா 68), "பரியகளிறலற யாவுமுழங்கி மழுங்க" (தே. திருக்கைலாய. திருநேரிசை), "அரா ......வாயினாய் .. ...கரிபுகும்" (கம்ப. தாடகை. 11.)

262. முல்லை. 25.

265. பா. இருங்கோல.

268. "கோளியாலத்துக் கொழுநிழல்" (புறநா. 58); முரஞ்சல் முதிர் வாகிய குறிப்புணர்த்தற்கு இவ்வடி மேற்கோள் (தொல். உரி. சூ. 85 - இளம். ந.)

270. "நாடுகாணெடுவரை" (பதிற். 85.)

ஞாயிறு தெறாஅ மாக நனந்தலைத்
தேஎ மருளு மமைய மாயினு
மிறாஅவன் சிலையர் மாதேர்பு கொட்குங்
குறவரு மருளுங் குன்றத்துப் படினே
யகன்கட் பாறைத் துவன்றிக் கல்லென
வியங்க லோம்பிநும் மியங்க டொடுமின்
பாடி னருவிப் பயங்கெழு மீமிசைக்
காடுகாத் துறையுங் கானவ ருளரே
நிலைத்துறை வழீஇய மதனழி மாக்கள்
புனற்படு பூசலின் விரைந்துவல் லெய்தி
யுண்டற் கினிய பழனுங் கண்டோர்
மலைதற் கினிய பூவுங் காட்டி
யூறு நிரம்பிய வாறவர் முந்துற
நும்மி னெஞ்சத் தவலம் வீட
விம்மென் கடும்போ டினியி ராகுவி
ரறிஞர் கூறிய மாதிரங் கைக்கொள்பு
குறியவு நெடியவு மூழிழிபு புதுவோர்
நோக்கினும் பனிக்கு நோய்கூ ரடுக்கத்
தலர்தாய வரிநிழ லசையினி ரிருப்பிற்
பலதிறம் பெயர்பவை கேட்குவிர் மாதோ
கலைதொடு பெரும்பழம் புண்கூர்ந் தூறலின்
மலைமுழுதுங் கமழு மாதிரந் தோறு

---

274. பெரும்பாண். 269 - 70; "பூட்டுசிலை யிறவு" (சீவக. 1783.)

275. "புலிஞரு மருளும் போக்கருஞ் சுரம்" (தணிகையாறு. 167); "குறவரும்மருள் குன்றமொன்று" (குசேலோ. குசேலர்மேல். 39); இவ்வடி, உம்மை உயர்வு சிறப்புப் பொருளில் வந்ததற்கு மேற்கோள் (தொல். இடை சூ. 7 - இளம். சே. ந; நன். சூ. 271, 424 - மயிலை; நன். சூ 425 - விருத்தி; இ - வி. சூ. 256.)

278. "பாடின்னருவிப்பயங்கெழுமாமலை" (சீவக. 2112.)

288 - 9. "குறியவு நெடியவுங் குன்று" (சிலப். 27: 153; மணி. சக்கர. 58.)

290. பொருந. 51; சிறுபாண். 12.

292. மலைபடு. 138 - 9; "பலாஅம் பழுத்த பசும்புண் ணரியல்" (பதிற். 61); "அள்ளிலைப் பலவி னளிந்துவீழ் சுளையும்" (சீவக. 2109).

மருவி நுகரும் வானர மகளிர்
வருவிசை தவிராது வாங்குபு குடைதொறுந்
தெரியிமிழ் கொண்டநும் மியம்போ லின்னிசை
யிலங்கேந்து மருப்பி னினம்பிரி யொருத்தல்
விலங்கன் மீமிசைப் பணவைக் கானவர்
புலம்புக் குண்ணும் புரிவளைப் பூசல்
சேயளைப் பள்ளி யெஃகுறு முள்ளி
னெய்தெற விழுக்கிய கானவ ரழுகை
கொடுவரி பாய்ந்தெனக் கொழுநர் மார்பி
னெடுவசி விழுப்புண் டணிமார் காப்பென
வறல்வாழ் கூந்தற் கொடிச்சியர் பாட
றலைநாட் பூத்த பொன்னிணர் வேங்கை
மலைமா ரிடூஉ மேமப் பூசல்
கன்றரைப் பட்ட கயந்தலை மடப்பிடி
வலிக்குவரம் பாகிய கணவ னோம்பலி
னொண்கேழ் வயப்புலி பாய்ந்தெனக் கிளையொடு
நெடுவரை யியம்பு மிடியுமிழ் தழங்குகுரல்
கைக்கோ ளொழிந்த கருவிரன் மந்தி
யருவிடர் வீழ்ந்ததன் கல்லாப் பார்ப்பிறகு
முறிமே யாக்கைக் கிளையொடு துவன்றிச்

294. “அராவாடியர் துயிலியா யடங்க நம்” (கம்ப. இலங்கை 8.) பா. நுகக்கும்

295 - 6 மதுரை 363 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

301. “மொய்த்த முட்டா துடற்றலை துளைபடமூழ்கிக், கைத்தரை திணிமிரக்கடித்து நாறி விசிறும், மைத்த மெய்ப்பெரிய கேழலை” (கம்ப விராதன். 33); “மெய்யுறவிய வெயு முனை முரிர்லை, மெய்யுதிர்ள” (சீகாளத்தி. கண்ணப். 86.)

303 - 4. “காஞ்சிபாடி... காக்கம் வம்மோ காதலந் தோழி... ... நெடுந்தகை புண்ணே” (புறநா. 281)

305 - 6. மதுரை. 296 - 7 ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

311 - 2. “கருவிரன் மந்திக் கல்லா வன்பறழ்” (ஐங்குறு. 272); காஞ்சிப்புராணம், இருபத்தெண்டளி. 26 - ஆம் பாடலைப் பார்க்க.

313. முறி: தொல். மரபு. சூ. 87 - பேர். மேற்.

சிறுமை யுற்ற களையாப் பூசல்
கலைகை யற்ற காண்பின் னெடுவரை
நிலைபெய் திட்ட மால்புநெறி யாகப்
பெரும்பயன் றொகுத்த தேங்கொள் கொள்ளை
யருங்குறும் பெறிந்த கானவ ருவகை
திருந்துவே லண்ணற்கு விருந்திறை சான்மென
நறவுநாட் செய்த குறவர்தம் பெண்டிரொடு
மான்றோற் சிறுபறை கறங்கக் கல்லென
வான்றோய் மீமிசை யயருங் குரவை
நல்லெழி னெடுந்தே ரியவுவந் தன்ன
கல்யா றொலிக்கும் விடர்முழங் கிரங்கிசை
நெடுஞ்சுழிப் பட்ட கடுங்கண் வேழத்
துரவுச்சினந் தணித்துப் பெருவெளிற் பிணிமார்
விரவுமொழி பயிற்றும் பாக ரோதை
யொலிகழைத் தட்டை புடையுநர் புனந்தொறுங்
கிளிகடி மகளிர் விளிபடு பூச
லினத்திற் றீர்ந்த துளங்கிமி னல்லேறு
மலைத்தலை வந்த மரையான் கதழ்விடை
மாறு மைந்தி னூறுபடத் தாக்கிக்
கோவலர் குறவரோ டொருங்கியைந் தார்ப்ப
வள்ளிதழ்க் குளவியுங் குறிஞ்சியுங் குழைய
நல்லேறு பொருஉங் கல்லென் கம்பலை

---

313 - 4. பொருளானந்தத்திற்கு இவ்வடிகளை மேற்கோள்காட்டினர் (யா - வி. ஒழிபு.)

315. முருகு. 4: - 3 ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

316. பா. நிலைபுணர்ந்திட்ட.

315 - 6. " மால்புடை நெடுவரைக் கோடு " (புறநா. 105.)

319. மலைபடு. 467.

320 - 22 சிலப். குன்றக்குரவை பார்க்க.

326. பா. பருஉ வெளில்.

325 - 7. முல்லை. 35 - 6; சீவக. 1834.

328 - 9. குறிஞ்சி. 443; கம்ப. சித்திரகூட. 22

331. மலைபடு. 406.

காந்தட் டுடுப்பிற் கமழ்மட லோச்சி
வண்கோட் பலவின் சுளைவிளை தீம்பழ
முண்டுபடு மிச்சிற் காழ்பயன் கொண்மார்
கன்று கடாஅ வுறுக்கு மகாஅ ரோதை
மழைகண் டன்ன வாலைதொறு ஞெரேரெனக்
கழைகண் ணுடைக்குங் கரும்பி னேத்தமுந்
தினைகுறு மகளி ரிசைபடு வள்ளையுஞ்
சேம்பு மஞ்சளு மோம்பினர் காப்போர்
பன்றிப் பறையுங் குன்றகச் சிலம்பு
மென்றிவ் வனைத்து மியைந்தொருங் கீண்டி
யவலவு மிசையவுந் துவன்றிப் பலவுட
னலகைத் தவிர்த்த வெண்ணருந் திறத்த
மலைபடு கடாஅ மாதிரத் தியம்பக்
குரூஉக்கட் பிணையற் கோதை மகளிர்
முழவுத்துயி லறியா வியலு ளாங்கண்
விழவி னற்றவன் வியன்கண் வெறுப்ப
கண்ணண் டண்ணெனக் கண்டுங் கேட்டு
முண்டற் கினிய பலபா ராட்டியு
மின்னும் வருவ தாக நமக்கெனத்
தொன்முறை மரபினி ராகிப் பன்மாண்
செருமிக்குப் புகலுந் திருவார் மார்ப
னுருமுரறு கருவிய பெருமலை பிற்பட

---

337. கோளி மெகாதது காயுளாதவற்றை பலாவாகு இலைமறு மேற் கோளா, (தஞ்சை. 85 - உரை.)

340. பெரும்பாண். 261, நைடதம், நாடு. 16; "சுறவு பாகடு புகையமைவுசூழ் கருமுகிற் குலமொடு" (சீகாளத். நக்கீர. 14.) பா. ஞெரேரெனவாக.

342 "வெதிர்நெற் குறுவனாய், வெண்ணையகவுமெம்மா" (கலி. 42.)

350. "முழவங் கண்டுயி லாதமு தூர்கள்" (சீவக. 856.)

352. தொல். மொழி. சூ. 7 - ந, செய். சூ. 17 - இளம்; செய். சூ. 18 - பேர்; செய் செய். சூ. 220 - பேர். ந; யா - வி. எழுத்து. சூ. 8; யா - கா. ஒழிபு, 1, 8 - உரை; நன். சூ. 37 - மயிலை, இ - வி. சூ. 20 - மேற்.

357. "உருமுரறு கருவிய பெருமழை தலைஇ" (அகநா. 158.)

விறும்பூது கஞலிய வின்குரல் விறலியர்
நறுங்கா ரடுக்கத்துக் குறிஞ்சி பாடிக்
கைதொழூஉப் பரவிப் பழிச்சினிர் சழிமின்
மைபடு மாமலைப் பனுவலிற் பொங்கிக்
கைதோய் வன்ன கார்மழைத் தொழுதி
தூஉ யன்ன துவலை துவற்றலிற்
றேஎந் தேருக் கடும்பரிக் கடும்பொடு
காஅய்க் கொண்டநும் மியந்தொய் படாமற்
கூவ லன்ன விடரகம் புகுமி
னிருங்க விருப்பத் திறுவரை சேராது
குன்றிடம் பட்ட வாரிட ரழுவத்து
நின்று நோக்கினுங் கண்வாள் வெளவு
மண்கனை முழவின் றலைக்கோல் கொண்டு
தண்டு காலாகத் தளர்த லோம்பி
யூன்றினிர் கழிமி னூறுதவப் பலவே
யயில்காய்ந் தன்ன கூர்ங்கற் பாறை
வெயில்புறந் தரூஉ மின்ன லியக்கத்துக்
கதிர்சினந் தணிந்த வமயத்துக் கழிமி
னுரைசெல வெறுத்தவவ னீங்காச் சுற்றமொடு
புரைதவ வுயரிய மழைமருள் பஃறேர்

358. இன்குரல விறலியர் : (மலைபடு. 536.)

359. முருகு. 239.

361 - 2. நெடுநல். 19 ; " எழிலி, யெஃகுறுபஞ்சிற்றுகி ..ஆடும்', "பஞ்சுவலபோலக் கணங்கொள, வாடுமழை தவழும்" (நற். 247, 353), " பொங்கலாடி விண்டுச் சேர்ந்த வெண்மழை ' (பதிற். 55), " வில்லெறி பஞ்சியின் வெண்மழை தவழும்", " பொங்கல வெண்மழை, யெஃகுறு பஞ்சிற்றுய்பட் டன்ன, துவலை " (அகநா. 133, 217.)

363 - 4. " பெயலகாலை மறைத்தலின் விசும்புகாணலரே, நீரபரந் தொழுகலி னிலங்காணலரே " (குறுந். 355)

373. சிறுபாண். 7 - 8 ஆம் அடிகளின் கீழ்க்குறிப்பைப் பார்க்க. பா. கூன்கட்பாறை.

374. இன்னலெனபது இன்னாமையென்னும் குறிப்புணர்த்துதற்கு இவ்வடி மேற்கோள் ; (தொல். உரி. சூ. 6 - இளம். சே. ந.)

377. "மழையென மருளு மாயிரும் பஃறேருல" (பதிற். 62); " மழை யுருவின தோல ", " மழையென மருளும் பஃறேருல " (புறநா. 16, 17.)

லரசுநிலை தளர்க்கு மருப்பமு முடைய
பின்னி யன்ன பிணங்கரி னுழைதொறு
முன்னோன் வாங்கிய கடுவிசைக் கணைக்கோ
லின்னிசை நல்யாழ்ப் பத்தரும் விசிபிணி
மண்ணார் முழவின் கண்ணு மோம்பிக்
கைபிணி விடாஅது பைபயக் கழிமின்
களிறு மலைந்தன்ன கண்கூடு துறுகற்
றளிபொழி கானந் தலைதவப் பலவே
யொன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்தென
நல்வழிக் கொடுத்த நாணுடை மறவர்
செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட
கல்லேசு கவலை யெண்ணுமிகப் பலவே
யின்புறு முரற்கைநும் பாட்டுவிருப் பாகத்
தொன்றொழுகு மரபினும் மருப்பிகுத்துத் துனைமின்
பண்டுநற் கறியாப் புலம்பெயர் புதுவிர்
சந்து நீவிப் புன்முடிந் திடுமின்
செல்லுந் தேஎத்துப் பெயர்மருங் கறிமார்
கல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த
கடவு ளோங்கிய காடேசு கவலை
யொட்டா தகன்ற வொன்னாத் தெவ்வர்
சுட்டினும் பனிக்குஞ் சுரந்தவப் பலவே

384. மலைபடு. 572, "வேழந் துறுகல் பிடிசெத்துத் தழூஉம்" (ஐங்குறு 239), "மலையொடு மலைந்த தேபோற், கொலைவேழ மொட்டற்றன குஞ்சரமே" (சூளா. அரசியல். 104), "யானை மலையென மலைவ" (கம்ப. மிதிலை. 3)

386. மலைபடு. 397, (பெரும்பாண். 419), "உடன்று மேல்வந்த வம்ப மன்னரை..... அழுந்தப்பற்றி யகல் விசும்பார்ப்பெழக், கவிழ்ந்து நிலஞ்சேர வட்டதை" (புறநா. 77.)

388 - 9. "ஆடவர், பெயரும் பீடு மெழுதி யதர்தொறும், பீலிசூட்டிய பிறங்குநிலை நடுகல்" (அகநா. 131), "மகிழ்வில் நல்லிசை சூடி நடுகலாயினன் புரவலன்", "பெயர்பொறித் தினிநட் டனரே கல்லும்" (புறநா. 221, 264.)

398. "எரிசுடாக கடவுளும் கருதின் வேமுள்ளுமம", "நினையு மனஞ்சுடுஞ் சுடுவதோ சுரம" (கம்ப. தாடகை. 5, வனம்புகு. 38.)

தேம்பாய் கண்ணித் தேர்வீசு கவிகை
யோம்பா வள்ளற் படர்ந்திகு மெனினே
மேம்பட வெறுத்தவவன் றொன்றிணை மூதூ
ராங்கன மற்றே நம்ம னோர்க்கே
யசைவுழி யசைஇ யஞ்சாது கழிமின்
புலியுற வெறுத்ததன் வீழ்பிணை யுள்ளிக்
கலைநின்று விளிக்குங் கான மூழிறந்து
சிலையொலி வெரீஇய செங்கண் மரைவிடை
தலையிறும்பு கதழு நாறுகொடிப் புறவின்
வேறுபுலம் படர்ந்த வேறுடை யினத்த
வளையான் றீம்பான் மிளைசூழ் கோவலர்
வளையோ ருவப்பத் தருவனர் சொரிதலிற்
பலம்பெறு நசையொடு பதிவயிற் றீர்ந்தநும்
புலம்புசே ணகலப் புதுவி ராகுவிர்
பகர்விரவு நெல்லின் பலவரி யன்ன
தகர்விரவு துருவை வெள்ளையொடு விரைஇக்
கல்லென் கடத்திடைக் கடலி னிரைக்கும்
பல்யாட் டினநிரை யெல்லினிர் புகினே
பாலு மிதவையும் பண்ணாது பெறுகுவிர்
துய்ம்மயி ரடக்கிய சேக்கை யன்ன
மெய்யுரித் தியற்றிய மிதியதட் பள்ளித்
தீத்துணை யாகச் சேந்தனிர் கழிமின்
கூப்பிடு கடக்குங் கூர்நல் லம்பிற்
கொடுவிற் கூளியர் கூவை காணிற்
படியோர்த் தேய்த்த பணிவி லாண்மைக்

399. "தேர்வீசிருக்கை" (புறநா. 114.)

400. ஓம்பாவள்ளல்: "ஓம்பாவீகையின்" (பதிற். 42); "வரையாவீகைக் குடவர்கோவே' (புறநா. 17); படர்ந்திகு மெனினே: (மலைபடு. 421)

403. அசைவுழியசைஇ: பெரும்பாண். 44 - 5.

417. பா. விதவையும்.

423. "படியோர்த் தேய்த்த வாண்மை" (பதிற். 79); "படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை" (அகநா. 22.)

கொடியோள் கணவற் படர்ந்திகு மெனினே
தடியுங் கிழங்குந் தண்டினர் தரீஇ
யோம்புந ரல்ல துடற்றுந ரில்லை
யாங்குவியங் கொண்மி னதுவதன் பண்பே
தேம்பட மலர்ந்த மராஅ மெல்லிணரு
மும்ப லகைத்த வொண்முறி யாவுந்
தளிரொடு மிடைந்த காமர் கண்ணி
திரங்குமர னாரிற் பொலியச் சூடி
முரம்பு கண்ணுடைந்த நடவை தண்ணென
வுண்டனி ராடிக் கொண்டனிர் கழிமின்
செவ்வீ வேங்கைப் பூவி னன்ன
வேய்கொ ளரிசி மிதவை சொரிந்த
சுவல்விளை நெல்லி னவரையம் புளிங்கூ
ழுறுவிடை யுழந்தநும் வருத்தம் வீட
வகலு ளாங்கட் கழிமிடைந் தியற்றிய
புல்வேய் குரம்பைக் குடிதொறும் பெறுகுவிர்
பொன்னறைந் தன்ன நுண்ணே ரரிசி
வெண்ணெறிந் தியற்றிய மாக்க ணமலை
தண்ணெ னுண்ணிழு துள்ளீ டாக
வசையினிர் சேப்பி னல்கலும் பெறுகுவிர்
விசையங் கொழித்த பூழி யன்ன
வுண்ணுநர்த் தடுத்த நுண்ணிடி நுவணை
நொய்ம்மர விறகின் ஞெகிழி மாட்டிப்
பனிசே ணீங்க வினிதுடன் றுஞ்சிப்

424. மலைபடு. 58

429. 'வேழம் மென்சினை யாஅம் பொளிக்கும்', "யானை யொடித்த வுயவ லொடுசிய யாஅ', "கரி [illegible], யாஅத் தொல்பசி குறைஇ" (குறுந். 37, 232, 307)

430 - 31. "மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணி" (புறநா. 264)

435. பா. விதவை.

434 - 6. பெரும்பாண். 194 - 5.

441. பா. எள்ளெறிந்து.

445. பா. இடிநுண்ணுவணை

புலரி விடியற் புள்ளோர்த்துக் கழிமின்
புல்லரைக் காஞ்சிப் புனல்பொரு புதவின்
மெல்லவ லிருந்த வூர்தொறு நல்லியாழ்ப்
பண்ணுப்பெயர்த் தன்ன காவும் பள்ளியும்
பன்னா ணிற்பினுஞ் சேர்ந்தனிர் செலினு
நன்பல வுடைத்தவன் றண்பணை நாடே
கண்புமலி பழனங் கமழத் துழைஇ
வலையோர் தந்த விருஞ்சுவல் வாளை
நிலையோ ரிட்ட நெடுநாண் டூண்டிற்
பிடிக்கை யன்ன செங்கண் வராஅற்
றுடிக்க ணன்ன குறையொடு விரைஇப்
பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்
ஞெண்டாடு செறுவிற் றராய்க்கண் வைத்த
விலங்க லன்ன போர்முதற் றொலைஇ
வளஞ்செய் வினைஞர் வல்சி நல்கத்
துளங்குதசும்பு வாக்கிய பசும்பொதித் தேற
லிளங்கதிர் ஞாயிற்றுக் களங்கடொறும் பெறுகுவிர்
முள்ளரித் தியற்றிய வெள்ளரி வெண்சோறு
வண்டுபடக் கமழுந் தேம்பாய் கண்ணித்

---

448. பெரும்பாண் 155.

452. "பலநா ள் பயின்று பலரொடு செல்லினும்" (புறநா. 101,

450 - 51. "பண்ணுப் பெயர்த்தாங்கு" (பதிற். 65.)

454. பா. சண்புமலிபழனம் ; காண்புமலி,

457 - 8. "மோட்டிரு வராஅற் றுடிக்கட் கொழுங்குறை" (அகநா 196.)

459. "பகன்றைப் பாங்குடைத் தெரியல" (பதிற் 76.)

461. "தெரிந்திடு போர்கள்... ..மேரு வாயவே" (கந்த. நாடு. 22), "நெடுங்களத் தம்பொற்குன்ற நிகரெனப் பெரும்போர் செயதார' (திரு விளை. நாடு. 27) ; "வரைக ளொப்பன போர்" (சீகாளத்தி. நக்கீர. 14)

463. துளங்கு தசும்பு : "தசும்பு துளங் கிருக்கைத் தீஞ்சேறு விளைந்த மணிநிற மட்டம்" (பதிற். 42.)

463 - 4. "நாட்க ளுண்டு" (புறநா. 123.)

திண்டேர் நன்னற்கு மயினி சான்மெனக்
கண்டோர் மருளக் கடும்புட னருந்தி
யெருதெறி களம ரோதையொடு நல்யாழ்
மருதம் பண்ணி யசைஇனிர் கழிமின்
வெண்ணெ லரிநர் தண்ணுமை வெரீஇச்
செங்க ணெருமை யினம்பிரி யொருத்தல்
கணைசெலன் முன்பொடு கதழ்ந்துவரல் போற்றி
வனைகலத் திகிரியிற் குமிழி சுழலுந்
துனைசெலற் றலைவா யோவிறந்து வரிக்குங்
காணுநர் வயாஅங் கட்கின் சேயாற்றின்
யாணர் ஒருகரைக் கொண்டனிர் கழிமி
னிதியந் துஞ்சு நிவந்தோங்கு வரைப்பிற
பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇ
வியலிடம் பெறாஅ விழுப்பெரு நியமத்
தியாறெனக் கிடந்த தெருவிற் சாறென
விகழுநர் வெரூஉங் கவலை மறுகிற
கடலெனக் காரென வொலிக்குஞ் சும்மையொடு

---

467. மலைபடு. 319.

468 பொருந. 97.

469 - 70. மலைபடு. 534 மதுரை. 658.

471 மு: "வெண்ணெ லரிநர் தண்ணுமை வெரீஇ' (நற். 350; புறநா. 348), "வெண்ணெ லரிநர் பின்றைத் ததும்பும், தண்ணுமை வெரீஇய தடந்தா ளாரை", "வெண்ணெ லரிநர் மடிவாய்த் தண்ணுமை... ... பசிபு சோரபும்" (அகநா. 40, 204)

475. பா. இறந்து பனிக்கும்.

476. கட்கின் சேயாறு. (மலைபடு. 555.)

478. மு: அகநா 378, மலைபடு. 575, "துஞ்சு நிதியத்து சாமை" (சூளா. நாடு. 1), வடசொல் சிதைந்து வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; (தொல். எச்ச. சூ. 6 - இளம்.)

479. "பதியெழுவறியாப் பழங்குடி கெழீஇய" (சிலப். மங்கல.)

481. மதுரை. 359 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப் பார்க்க. பா. யாறுகிடந்த.

483. சீவக. 42.

மலையென மழையென மாட மோங்கித்
துனிதீர் காதலி னினிதமர்ந் துறையும்
பனிவார் காவிற் பல்வண் டிமிரு
நனிசேய்த் தன்றவன் பழவிறன் மூதூர்
பொருந்தாத் தெவ்வ ரிருந்தலை துமியப்
பருந்துபடக் கடக்கு மொள்வாண் மறவர்
கருங்கடை யெஃகஞ் சாத்திய புதவி
னருங்கடி வாயி லயிராது புகுமின்
மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர்
வெல்போர்ச் சேஎய் பெருவிற லுள்ளி
வந்தோர் மன்ற வளியர் தாமெனக்
கண்டோ ரெல்லா மமர்ந்தினிது நோக்கி
விருந்திறை யவரவ ரெதிர்கொளக் குறுகிப்
பரிபுலம் பலைத்தநும் வருத்தம் வீட
வெரிகான் றன்ன பூஞ்சினை மராஅத்துத்
தொழுதி போக வலிந்தகப் படட
மடநடை யாமான் கயமுனிக் குழவி
யூமை யெண்கின் குடாவடிக் குருளை
மீமிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள்
வரைவாழ் வருடை வன்றலை மாத்தக
ரரவுக்குறும் பெறிந்த சிறுகட் டீர்வை
யளைச்செறி யுழுவை கோளுற வெறுத்த
மடக்கண் மரையான் பெருஞ்செவிக் குழவி

---

484. பொருந. 84.

491. "உடையோர் போல விடையின்று குறுகி" (புறநா. 54), "தடைஇய வாயி னடையாது நுழைந்து" (தணிகையாறு. 231.)

492. "வயிரியமாக்கள் மன்ற நண்ணி" (பதிற். 29); "மன்றுபடு பரிசிலர்" (புறநா. 135)

492 - 4. "தன்றெறல் வாழ்க்கை" என்பதன் விசேட உரைக்கு இவ் வடிகள் மேற்கோள்; (சிலப். 15 : 195 - அடியார்.)

493 - 4. முருகு. 284 - 5.

497. "பரிபுலம் பினரென" (சிலப். 10: 226); "பரிபுலம் பினனிவன்" (மணி. 16 : 57.)

498. பா. மராஅத்த.

யரக்குவிரித் தன்ன செந்நில மருங்கிற்
பரற்றவ ழுடும்பின் கொடுந்தா ளேற்றை
வரைப்பொலிந் தியலு மடக்கண் மஞ்ஞை
கானக் கோழிக் கவர்குரற் சேவல்
கானப் பலவின் முழவுமருள் பெரும்பழ
மிடிக்கலப் பன்ன நறுவடி மாவின்
வடிச்சேறு விளைந்த தீம்பழத் தாரந்
தூவற் கலித்த விவர்நனை வளர்கொடி
காஅய்க் கொண்ட நுகம்ப டுறாறை
பருஉப்பளிங் குதிர்த்த பலவுறு திருமணி
குருஉப்புலி பொருத புண்கூர் யானை
முத்துடை மருப்பின் முழுவலி மிகுதிரள்
வளையுடைந் தன்ன வள்ளிதழ்க் காந்த
ளுகந் திலக நறுங்கா ழாரங்
கருங்கொடி மிளகின் காய்த்துணர்ப் பசுங்கறி
திருந்தமை விளைந்த தேக்கட் டேறல்
கானிலை யெருமைக் கழைபெய் தீந்தயிர்
நீனிற வோரி பாய்ந்தென நெடுவரை
நேமியிற் செல்லு நெய்க்க ணிறாஅ
லுடம்புணர்பு தழீஇய வாசினி யனைத்துங்
குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி

507. பொருந. 43 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப் பார்க்க; "அரக்கத் தன்ன நுண்மணற் கோடு" (பதிற். 30)

511. மலைபடு. 143 - 4.

517. "புலியொடு பொருது சினஞ்சிறந்து வலியோ, டுரவுக் களிறு ஓங்கிய மருங்கு", "குயவரி இரும்போத்துப் பொருத புண்கூர், துயங்கு பிடி தழீஇய மதனழி யானை" (அகநா. 291, 398); "வரிவயம் பொருத வயக்களிறு" (புறநா. 100.)

517 - 8. யானைமுத்துடைமருப்பு: (முருகு. 304 - 5. குறிஞ்சி. 35 - 6); "முத்துடைமருப்பின் மழகளிறு" (பதிற். 32.)

519. "கோடல் வீயுகு பவைப்பா, [illegible]" (கலி. 7) "உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்" (புறநா. 90.)

524 - 5. முருகு. 299 - 300. "அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து.........தேன் சொரியும்" (புறநா. 109.)

527. பட். 6.

கடன்மண் டுழுவத்துக் கயவாய் கடுப்ப
ஞோஞுச் செருவி னெடுங்கடைத் துவன்றி
வானத் தன்ன வளமலி யானைத்
தாதெருத் ததைந்த முற்ற முன்னி
மழையெதிர் படுகண் முழவுக ணிகுப்பக்
கழைவளர் தூம்பின் கண்ணிட மிமிர
மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்
நரம்புமீ திறவா துடன்புணர்ந் தொன்றிக்
கடவ தறிந்த வின்குரல் விறலியர்
தொன்றொழுகு மரபிற் றம்மியல்பு வழாஅ
தருந்திறற் கடவுட் பழிச்சிய பின்றை
விருந்திற் பாணி கழிப்பி நீண்மொழிக்
குன்றா நல்லிசைச் சென்றோ ரும்பல
வின்றிவட் செல்லா துலகமொடு நிற்ப
விடைத்தெரிந் துணரும் பெரியோர் மாய்ந்தெனக்
கொடைக்கட னிறுத்த செம்மலோயென

526 - 9. மதுரை. 695 - 7.

530. மலைபடு. 377; "காள மேகமு நாகமுந் தெரிகில" (கம்ப. சித்திரகூட. 2.)

530 - 31. "தாதெரு மறுகிற் பாசறை" (புறநா. 33.)

534. மருதம்பண்ணி: மலைபடு. 470. கருங்கோட்டுச்சீறியாழ்: புறநா. 127, 145.

534 - 6. முருகு. 212; "நரம்பொடு வீணை நாவி னியன்றதோ", "சுகிர்புரி நரம்பு சும்பி, யூழமணிமிடறு மொன்றாய்ப் பணிசெய்தவாறு" (சீவக. 658, 728.)

538. அருந்திறற்கடவுள்: மணி. 6 : 60; பொருந. 52; "கடவுட் பழிச்ச" (பதிற். 41.)

542. பெரும்பாண். 445.

543. பெரும்பாண். 446; "பெய்ம்மழை யென்னக் கொடைக்கட னிறுகலு மிக்குவாகு" (கூர்ம. சூரியவம்மரபு. 8.)

541 - 3. "கெடாஅ நல்லிசை நிலைஇ" (பதிற். 14); "மன்னு வுலகத்து மன்னுதல் குறித்தோர், தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே" (புறநா. 165); "ஏன்று நிற்கு மிருமபுகழ" (குளா. அரசியல. 226.)

வென்றிப் பல்புகழ் விறலோ டேத்திச்
சென்றது நொடியவும் விடாஅ னசைதர
வந்தது சாலும் வருத்தமும் பெரிதெனப்
பொருமுர ணெதிரிய வயவரொடு பொலிந்து
திருநகர் முற்ற மணுகல் வேண்டிக்
கல்லெ னொக்க னல்வலத் திரீஇ
யுயர்ந்த கட்டி லுரும்பில் சுற்றத்
தகன்ற தாயத் தஃகிய நுட்பத்
திலமென மலர்ந்த கைய ராகித்
தம்பெயர் தம்மொடு கொண்டனர் மாய்ந்தோர்
நெடுவரை யிழிதரு நீத்தஞ்சா லருவிக்
கடுவரற் கலுழிக் கட்கின் சேயாற்று
வடுவா ழெக்கர் மணலினும் பலரே
அதனால், புகழொடுங் கழிகநம் வரைந்த நாளெனப்
பரந்திடங் கொடுக்கும் விசும்புதோ யுள்ளமொடு
நயந்தனிர் சென்ற நும்மினுந் தான்பெரி
துவந்த வுள்ளமோ டமர்ந்தினிது நோக்கி
யிழைமருங் கறியா நுழைநூற் கலிங்க
மெள்ளறு சிறப்பின் வெள்ளரைக் கொளீஇ
முடுவ றந்த பைந்நிணத் தடியொடு
நெடுவெ ணெல்லி னரிசி முட்டாது

---

544. "மறம்வீங்கு பல்புகழ" (பதிற். 12, திருவாசகம், பொற்சுண்ணம், 18; பெரிய. திருநீலகண்டயாழ். 5; திருவால. 56: 9.)

549. பெரும்பாண். 21.

550. பெரும்பாண். 417.

553. "மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே" (புறநா. 27); மலைபடு. 70 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

559 - 60. "யாந்தன் னறியுந மாகத் தான்பெரி, தன்புடை மையி னெம்பிரி வஞ்சி" (புறநா. 381.)

561. பொருந. 82 - 3, "கோசுகுநுழை கலலாச செய்ய வணங்கா விழுமியன்ன பட்டாடை" (வாயு. கிரியா. 18.)

563. மலைபடு. 177.

தலைநா ளன்ன புகலொடு வழிசிறந்து
பலநா ணிற்பினும் பெறுகுவி ரல்லது
செல்வேந் தில்லெந் தொல்பதிப் பெயர்ந்தென
மெல்லெனக் கூறி விடுப்பி னும்முட்
டலைவன் றாமரை மலைய விறலியர்
சீர்கெழு சிறப்பின் விளங்கிழை யணிய
நீரியக் கன்ன நிரைசெல னெடுந்தேர்
வாரிக் கொள்ளா வரைமருள் வேழங்
கறங்குமணி துவைக்கு மேறுடைப் பெருநிரை
பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நிலந்தினக் கிடந்த நிதியமோ டனைத்து
மிலம்படு புலவ ரேற்றகைந் நிறையக்
கலம்பெயக் கவிழ்ந்த கழறொடித் தடக்கையின்
வளம்பிழைப் பறியாது வாய்வளம் பழுநிக்
கழைவளர் நவிரத்து மீமிசை ஞெரேரெனா
மழைசுரந் தன்ன வீகை நல்கித்

---

565. குறிஞ்சி. 238 - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப்பார்க்க, "தலைநா ளிழைவொடு" (வி - பாரத. குருகுல. 79.)

565 - 6. "பலநாள் பயின்று பலரொடு செல்லினுந், தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ" (புறநா. 101); நாலடி. மேன்மக்கள், 9-பார்க்க.

567 - 8. பொருந. 121 - 2.

569 - 70. பொருந. 161 - 2; பதிற். 12; புறநா. 11, 364.

571 - 2. மதுரை. 224.

574. "பொலம்படைக் கலிமா", "பொலம்படையமா" (புறநா. 116, 359); "புனையும் பொலம்படைப் பொங்குளைமான்" (பு - வெ. பக்கம், 126.); பொன்னென்பது பொலமெனத் திரிந்து வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; (தொல். புள்ளி. சூ. 61 - இளம். ந.)

575. "நிலந்தினக் கிடந்த நெடுநிதிச் செல்வம்" (தணிகையாறு. 25.)

576. ஏற்றகை: நாலடி. 98: தொல். புள்ளி. சூ. 41 - இளம். ந; சொல். உரி. சூ. 62 - இளம். சே. ந. மேற்.

576 - 7. "இலம்படு புலவ ரேற்றகை ஞெமரப், பொலஞ் சொரிவழுதி" (பரி. 10.)

569 - 80. பொருந. 159 - 73.

தலைநாள் விடுக்கும் பரிசின் மலைநீர்
வென்றெழு கொடியிற் றோன்றுங்
குன்றுசூ ழிருக்கை நாடுகிழ வோனே.

## இதன் பொருள்.

1 - 2. திரு மழை தலைஇய இருள் நிற விசும்பின் விண் அதிர் இமிழ் இசை கடுப்ப—*செல்வத்தையுண்டாக்கும் மழையைப்பெய்த இருண்ட நிறத்தையுடைய மேகத்தினாலே ஆகாயத்திடத்திலே நின்று முழங்கும் ஓசையையொப்ப,

கடுக்கங்கூறவே மிக்கவொலியென்றாயிற்று.

2 - 3. பண் அமைத்து திண் வார் விசித்த முழவொடு—பண்களைத் தன் † கண்களிலே உண்டாக்கப்பட்டுத் திண்ணிய வாராலே இறுகவலித்த மத்தளத்தோடே,

‡ "இடக்க ணினியா வலக்கண் குரலா - நடப்பது தோலியற் கருவி யாகும்" என்பதனாற் பண்ணமைத்தென்றார்.

3. ஆகுளி—சிறுபறையும்,

4. நுண் உருக்குற்ற விளங்கு அடர் பாண்டில்—கரைய உருக்குதலுற்ற விளங்கின தகடாகத்தட்டின § கஞ்சதாளமும்,

5. மின் இரு பீலி அணி தழை கோட்டொடு—விளங்குகின்ற கரிய || பீலியாகிய அழகினையுடைய தழையைக்கட்டின கொம்போடே,

6. கண் இடை விடுத்த களிறு உயிர் தூம்பின்—¶ கண்களினூடே வெளியாகத் திறந்த யானையின் கைபோலும் நெடுவங்கியத்தோடே,

** உயிர், ஆகுபெயர். இனி யானை நெட்டுயிர்ப்புக் கொண்டாற் போலும் ஓசையை யுடைய தென்றுமாம்.

---

581 - 2. முல்லை. 91; மதுரை. 366 - 74; குறிஞ்சி. 54 - 5; "வரையிழி யருவியி னொளிறு கொடி நுடங்க", 'வரைமிசை யிழிதரு மருவியின் மாடத்து......கொடி நுடங்கு தெரு", "வான்றோய் வெல்கொடி, வரைமிசை யருவியி......னுடங்க" (பதிற். 25, 47, 69; அகநா. 358.)
583. முருகு 317 - ஆம்அடியின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

* "எடுப்பதூஉ மெல்லாமழை" (குறள் 15.) † கண் - அடிக்கும்பக்கம்.

‡ சீவக. பக்கம், 207, 749. § கஞ்சம் - வெண்கலம்.

|| பீலி - மயிற்றோகை; ஒருவகை வாச்சியமுமாம். ¶ கண் - கணு.

** உயிர்த்தலையுடைய மூக்காதலின், துதிக்கை இங்கே உயிரெனப் பட்டது; "நெடுமூக்கிற் கரியினுரி மூடிக்கொண்டார்" (தே. தனித்திருத் தாண்டகம்); "கமழ்கந்தங் கையான் மோக்குமண்ணு" (திருவானைக் காப்புராணம், கடவுள் வாழ்த்து.)

7. இளி பயிர் இமிரும் குறும் பரம் தூம்பொடு — இளியென்னும் நரம்பினுடைய ஓசையைத் தானொலிக்கும் குறிய மேலாகிய தூம்போடே,

இது குறுந்தூம்பு. பயிர் - அழைத்தல்.

8. * விளிப்பது கவரும் தீ குழல் துதைஇ — பாட்டைச் சுருதி குன்றாமற் கைக்கொண்டு நிற்கும் இனிய குழலும் நெருங்கப்பட்டு,

9. நடுவு நின்று இசைக்கும் அரி குரல் தட்டை — கண்களுக்குநடுவே நின்றொலிக்கும் நரம்பின் ஓசையையுடைய †கரடிகையும்,

இனித் தாளமானத்திடையே நின்றொலிக்கும் அரித்தெழுகின்ற ஓசையையுடையவென்றுமாம்

10. கடி கவர்பு ஒலிக்கும் வல் வாய் எல்லரி — விளக்கத்தையுடைத்தாகிய தாளத்தைக் கைக்கொண்டு ஒலிக்கும் வலிய வாயையுடைய சல்லியும்,

11. நொடி தரு பாணிய பதலையும் — மாத்திரையைச் சொல்லும் தாளத்தையுடைய ‡ ஒருகண் மாக்கிணையும்,

பிறவும் — கூறாத வாச்சியங்களும்,

12. கார்கோள் பலவின் காய் துணர் கடுப்ப — கார்காலத்தாலே பழுத்தலையுடைய பலாவினது காயை மிகவுடைய தொத்தை யொப்ப,

13. நேர் சீர் சுருக்கி காய § கலம் பையிர் — தம்மிலொத்த கனத்தையுடையவாகக் கட்டிக் காவின வாச்சிய முட்டுக்களையுடைய பையையுடையிராய்,

முழவோடே ஆகுளியும் (3) பாண்டிலும் (4) கோட்டொடு (5) தூம்பொடும் (6) குறுந்தூம்பொடும் (7) தட்டையும் (9) எல்லரியும் (10) பதலையும் பிறவும் (11) தீங்குழலும் நெருங்கப்பட்டு (8) அவற்றைச் சுருக்கிக் காய கலப்பையிர் (13) என்க.

14. கடு கலித்து எழுந்த கண் அகல் சிலம்பில் — கடுமரம் மிக்குவளர்ந்த இடமகன்ற பக்கமலையில்,

15. படுத்து வைத்தன்ன பாறை மருங்கில் — படுத்துவைத்தாற் போன்ற ஒத்தநிலமாகிய கற்பாறையின் பக்கத்தில்,

---

* விளிப்பது - பாடுவது; திரி. 11; மணி. 4 : 13.

† கரடிகை - கரடிகத்தினற்போலும் ஓசையையுடைய வாச்சியம்; (சிலப். 3 : 27. அடியார்.)

‡ "பதலையொருகண் பையென வியக்குமின்" (புறநா. 152.)

§ சீவக. 864.

16. எடுத்து நிறுத்தன்ன இட்டரு சிறு நெறி - நிலத்தே கிடக்கின்றவழியை எடுத்து நிறுத்தினாற்போன்ற இட்டிய அரிய சிறியவழியை,

17. தொடுத்த வாளியர் துணை புணர் கானவர்—தொடுத்த அம்பினையுடையராய்த் தம்மனைவியரோடு கூடியிருக்கின்ற கானவர்,

18. [இடுக்கண் செய்யா தியங்குந ரியக்கும்:] இயங்குநர் இடுக்கண் செய்யாது இயக்கும்—வழிபோவாரை வருத்துதலைச் செய்யாமல் வழி போக்கும்,

19 - 20. [அடுக்கல் மீமிசை யருப்பம் பேணா, திடிச்சுர நிவப்பி னியவுக்கொண் டொழுகி:] அடுக்கல் மீமிசை இடி சுரம் நிவப்பின் இயவு அருப்பம் பேணாது கொண்டு ஒழுகி—மலையிடத்து மிக்க உயர்ச்சியிற் கல்லையிடித்த அருநிலத்தில் உயர்ந்த வழியைப் போதற்கு அரிதாகக் கருதாதே போதக்கடவேமென்று நெஞ்சாலே கொண்டுநடந்து,

கல்லையிடித்து ஆக்கிய வழி.

சிலம்பிற் பாறைமருங்கிற் சிறுநெறியைக் கானவர் போக்கும சுரத்தில் இயவுக்கொண்டொழுகியென்க.

21. தொடி திரிவு அன்ன தொண்டு படு திவவின்—தொடியினது உறழ்ச்சியையொத்த உறழ்ச்சியையுடைய ஒன்பதென்னுமெண் உண்டான வார்க்கட்டினையும்,

வலித்தல் மெலித்தல் செய்யவேண்டுதலின், உறழ்ச்சிகூறினர்.

22 - 4. [கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக், குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பி, னரலை தீர வுரீஇ:]

கேள்வி அனைத்தும் போகா—நூற்கேள்வி அடைய முற்றப்பெற்று,

†கடிப்பகை அனைத்தும் அரலை தீர உரீஇ - வெண்சிறுகடுகளவும் ‡கொடும்பு இல்லையாம்படி §தீற்றி,

முடங்கிப் பாற்றன்மையாயிருத்தலிற் கொடும்பை அரலையென்றார்.

அரலை - குற்றமுமாம். இனி, வெண்சிறுகடுகளவும் கேள்விதப்பா தென்பாருமுளர்; அது வடிவிற்கு உவமையாதலிற் பொருந்தாது.

குரல் ஓர்த்து தொடுத்த சுகிர் புரி நரம்பின—ஓசையை ஓர்த்துப்பார்த்துக் கட்டின வடித்து முறுக்கின நரம்பினையும்,

கேள்விபோகா, உரீஇத தொடுத்த நரம்பென்க.

* அருப்பம் - அருமை.

† பேய்க்குப் பகையாதலின் வெண்சிறுகடுகைக் கடிப்பகை யென்றார்.

‡ கொடும்பு - கொடுமுறுக்கு; (கொடி முறுக்கு.)

§ தீற்றி - உருவி.

24 - 5. வாளின் குரல் வார்ந்தன்ன நுண் துளை இரீஇ—வாளின்கதிர் ஒழுகின தன்மைத்தாக நெருங்கின நுண்ணிய துளைகளையிருத்தி,

இது, * பொல்லம்பொத்துமிடத்திற்றுளை. †"பரியரைக் கமுகின் பாளையம் பசும்பூக், கருவிருந் தன்ன கண்கூடு செறிதுளை" என்றார் பிறரும்.

26 - 9. [சிலம்பமை பத்தல் பசையொடு சேர்த்தி, யிலங்குதுளை செறிய வாணி முடுக்கிப், புதுவது புனைந்த வெண்கை யாப்பமைத்துப், புதுவது போர்த்த பொன்போற் பச்சை:]

இலங்கு துளை செறிய ஆணி முடுக்கி—விளங்குகின்ற துளைகள் நிரம்பும்படி சுள்ளாணிகளை இறுகத் தைத்து,

புதுவது வெண்கை புனைந்த யாப்பு அமைத்து—புதிதாக யானைக் கொம்பாற் செய்த யாப்பை அமையப்பண்ணி,

யாப்பு - பத்தலிற் குறுக்கே வலிபெற ஓட்டுவது.

சிலம்பு அமை பத்தல் பசையொடு சேர்த்தி புதுவது போர்த்த பொன் போல் பச்சை—ஒலித்தலமைந்த பத்தலிலே ‡பற்றோடே கூட்டிப் புதிதாகப் போர்த்த பொன்னிறம்போலும் நிறத்தையுடைய தோலினையும்,

இரீஇ முடுக்கி அமைத்துச் சிலம்புதலமைந்த பத்தலிலே போர்த்த பச்சையென்க.

30 - 31. [வதுவை நாறும் வண்டுகம ழைம்பால், மடந்தை:]

வண்டு வதுவை நாறும் ஐம்பால் மடந்தை—தன்னிடத்திருந்த வண்டு கலியாணஞ்செய்தமகளுடைய நாற்றத்தை நாறுதற்குக் காரணமான மயிரினையுடைய மடந்தை,

வதுவைக்கு எல்லாமணமும் உளவாதல்பற்றி வதுவைநாறுமென்றார். கமழ் ஐம்பால் - §இயல்பான மணத்தையுடைய ஐம்பால்,

31 - 2. [மாண்ட னுடங்கெழி லாகத், தடங்குமயி ரொழுகிய வவ் வாய் கடுப்ப:] எழில் நுடங்கு மடந்தை மாண்ட ஆகத்து அடங்கு மயிர் ஒழுகிய அவ் வாய் கடுப்ப— ||அழகு கட்புலனாகின்றதையும் மடந்தையது மாட்சிமைப்பட்ட மார்பிடத்தே சென்று பின்பு இல்லையான மயிர் ஒழுங்கு பட்டுக்கிடக்கின்ற அழகிய வயிற்றிடத்தையொக்க,

---

* பொல்லம்பொத்தல - இரண்டுதலைப்பையும் கூட்டித்தைத்தல.

† பெரும்பாணாற்றுப்படை, 7 - 8.

‡ பற்று - பிசின்.

§ இயல்பானமணம் - இயற்கைமணம்.

|| இவ்வழகு இலாவணியமெனப்படும்.

33 - 4. அகடு சேர்பு பொருந்தி அளவினில் திரியாது கவடு பட கவைஇய சென்று வாங்கு உந்தி—பொலலம்பொத்துதல் கடுவேசேரப் பட்டுக் கட்டு இனிதாய்த் தனக்குக் கூறுகின்ற அளவிலே வேறுபடாமற் பகுத்தலுண்டாக அகத்திட்டஉயர்ந்து வளைந்த உந்தியினையும்,

உந்தி - யாழுறுத்து ஒருறுப்பு.

35 - 7. நுணங்கு அரம் நுவறிய நுண் நீர் மாமை களங்கனி அன்ன கதழ்க்கு இளர் உருவின் வணர்ந்து ஏந்து மருப்பின் வள் *உயிர் பேரியாழ்—நுண்ணிய அரத்தாலே அராவின நுண்ணியநீர்மையினையுடைய கரியநிறத்தாலே களம்பழத்தின் நிறத்தை ஒத்தனவாய்க் கடுத்தோன்றுகின்ற நிறத்தையுடைய வளைந்தேந்தின கோட்டினையுமுடைய பெரிய இசையினையுடைய பேரியாழ்,

திவவினையும் (21) நரம்பினையும் (23) பச்சையினையும் (29) உந்தியினையும் (34) மருப்பினையுமுடைய பேரியாழ (37) எனக.

38. [அமைவரப் பண்ணி யருணெறி திரியாது :] பேரியாழ் (37) †அருள் நெறி திரியாது அமைவர பண்ணி—பேரியாழைத் தனக்கு நூலிற் கூறிய வழிகளைத் தப்பாதபடி பொருந்துதலவரச் சமைத்து,

39 40. இசை பெறு திருவின் வேந்து அவை ஏற்ப துறை பல முற்றிய—இசையை, எக்காலமும் கேட்கின்ற செல்வத்தினையுடைய அரசர்களுடைய அவைக்களத்தே அவர்கள் செவிகொள்ளும்படி தாம்வாசிக்குற ‡துறைகள் பலவற்றையும் வாசித்துமுடித்த,

40. பை தீர் பாணரொடு— பசுமையற்ற பாணரோடே,

என்றது, கல்வி முதிர்ந்தமையின், இளமையற்ற பாணரென்றவாறு.

41. உயர்ந்து ஓங்கு பெரு மலை ஊறு இன்று ஏறலின்—உயர்ந்து வளர்ந்த கற்கள் தம்மிற்றொடரும் பெரியமலைகள் வேறோரிடையூறின்றாக ஏறி வருகையினாலே,

42 - 3. [மதந்தபு ஞமலி நாவி னன்ன, துளங்கியன் மெலிந்த கல் பொருசீறடி:] துளங்கு இயல மெலிந்த மதம் தபு ஞமலி நாவின் அன்ன கல பொரு சிறு அடி—அசைகின்ற இயலபினுன் இளைத்த வலிகெட்ட நாயினது நாவினையொத்த கல்லுப்பொருகின்ற சிறிய அடியினையும்,

* உயிர் - ஒலி ; "வள்ளுயிர்த தெள்விளி" (குறிஞ்சி. 100.)

† அருளுதல் - கூறுதல்.

‡ துறைபலவென்றது, வலிவு மெலிவு சமமென்னும் மூன்று தானத்திலும் ஒவ்வொன்றில் ஏழுதானமுடித்தபடியாம் இருபத்தொரு பாடற்றுறைகளை; "மூவேழ் துறையு முறைபுளிக கழிப்பி" (புறநா. 152) என்பதனும் அதனுரையாலுமுணர்க.

மறலின் மெலிந்த அடியென்க.

44 - 6. [கணங்கொ டோகையிற் கதுப்பிகுத் தசைஇ, விலங்குமலைத் தமர்ந்த சேயரி நாட்டத், திலங்குவளை விறலியர் நிற்புறஞ் சுற்ற:]

விலங்கு மலைத்து அமர்ந்த சேயரி நாட்டத்து—மார்ேறாடு மாறுபட்டுப் பொருந்தின செவ்வரியையுடைய கண்ணிணையும்,

இலங்கு வளை விறலியர்—விளங்குகின்ற வளையினையுமுடைய விறலி படப்பாடியாடுவார்,

*கணம் கொள் தோகையின் கதுப்பு இருத்து அசைஇ நின் புறம் சுற்ற—திரட்சியைக்கொண்ட மயிலபோலே மயிரைத்தாழ்த்து இளைத்து நின்னைப் புறத்தே சூழ,

அடியினையும் (43) நாட்டத்தினையும், (45) வளையினையுமுடைய விறலியா (46) கதுப்பிகுத்து அசைஇச் (44) சுற்ற (46) என்க

47 - 8. [கயம்புக் கன்ன பயம்படு தணணிழற், புனல்கால கழீஇய மணலவார் புறவில:]

புனல் கால் கழீஇய மணல வார் புறவில—பெருகுநீர் †துராலை வாரிக் கொணடுபோன மணலொழுங்குபட்ட சிறுகாட்டிடத்தில,

‡கயம் புக்கன்ன பயம் படு தண நிழல—குளத்திலே புகுந்தாலொத்த பயனைத்தருகின்ற குளிர்ந்த நிழலிலே,

49 - 50. [புலம்புவிட் டிருந்த புனிறில காட்சிக், கலம்பெறு கணணுள ரொக்கற் றலைவ:]

புலம்பு விட்டிருந்த காட்சி கலம் பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ—வழிவந்த வருத்தத்தைக்கைவிட்டிருந்த அறிவினையுடைய பேரணிகலங்களைப பெறுங் கூத்தருடைய சுற்றத்திற்குத் தலைவனே,

புனிறு இல ஒக்கல்—ஈன்றணிமையில்லாத சுற்றம்.

என்றது, பிள்ளையைப்பெற்றவர்கள் பிள்ளையைக்கொணடு கூடவந்திலா கொென்றவாறு.

கலப்பையிராய் (13) இயவுக்கொண்டொழுகி (20) பாணுழுப் (37) பணனித (38) துறைபலமுற்றிய பாணரோடு (40) விறலியர் புறஞ்சுற்றத் (46) தண்ணிழலிலே (47) இருந்த (49) கண்ணுளரொக்கற்றலைவனே (50) என விணைமுடிக்க.

---

* "கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் தசைஇ" (பட். 259.)

† துராலை - குப்பை.

‡ "கடங்கண்டன்ன ..பெருமரக்குழாமும்" என்பர் பின்னும்; 259 - 65.

கலப்பையிரென்னும் பன்மை தலைவனென்னுமொருமையோடு முடிந்தது; *"ஒருமை சுட்டிய" என்னுஞ் சூத்திரத்தால்.

51 - 3. தூ மலர் துவன்றிய கரை பொரு நிவப்பின் மீமிசை நல் யாறு கடல் படர்ந்தாஅங்கு யாம் அவணின்றும் வருதும்—தூய பூக்கள் நெருங்கின கரையைப்பொருகின்ற ஓக்கத்தினையுடைய மலையுச்சியினின்றுமிழிந்த நல்லயாறு கடலைநோக்கிப்போனாற்போல யாம் அவனைநோக்கிச் சென்று சில பெற்றுவருகின்றேம்;

இனி, மலையிற்பொருள்களை வாரிக்கொண்டு யாறு கடலைநோக்கிப்போனாற்போல அவ்விடத்துள்ள பொருள்களை வாரிக்கொண்டு வருகின்றேமென்றுமாம்.

53 - 5. [நீயிரும், கனிபொழி கானங் கிளையொ டுணீஇய, துனைபறை நிவக்கும் புள்ளின மான :]

கனி பொழி கானம் கிளையொடு உணீஇய துனை பறை நிவக்கும் புள் இனம் மான—பழங்களைச்சொரிகின்ற காட்டிற் பழங்களைச் சுற்றத்தோடே சென்றுதின்றற்கு விரைந்த பறத்தற்றொழிலிலேயோங்கும் பறவைத்திரளையொக்க,

நீயிருமென்பது மேலே (65) கூட்டுதும்.

56. புனை †தார் பொலிந்த வண்டு படு மார்பின்—கைசெய்த மாலையாற் பொலிவுபெற்ற வண்டுகளை உண்டாக்குகின்ற மார்பினையுடைய கணவன் (58) என்க,

57. வனை புனை எழில் முலை—ஓவியங்களிலே முலையாகப்பண்ணின கைசெய்த அழகைத் தன்னிடத்தேயுடைய முலையினையும்,

வாங்கு அமை திரள் தோள்—வளைந்த மூங்கிலையொத்த திரண்டதோளினையும்,

58. மலர் போல் மழை கண் ‡மங்கையர் கணவன்—பூப்போலும் குளிர்ச்சியையுடைய கண்ணினையுமுடைய கற்புடைமகளிர்க்குக் கணவன்,

59. முனை பாழ் படுக்கும் துன் அரு துப்பின்—பகைப்புலத்தைப் பாழுண்டாக்கும் கிட்டுதற்கரிய வலியினையும்,

* தொல்காப்பியம், எச்சவியல், சூ 65.

† தார் - மார்பின்மாலை; "மார்பிற் றுறுங் கொன்றை" (புறநா 1.)

‡ மக்களுட் பெண்பாலாரைப் பாடுதல் சிறப்பின்மையின், இவ்வாறு கணவரோடு சேர்த்துப்பாடுதன்மரபென்பர்; (தொல்.புறத்திணை. சூ. 26.ந.)

60. [இசைசேறுழவர்க்கு:] நாவல் இசை வித்தின் நசை ஏர் உழவர்க்கு—தாம் பிறரைக்கூறும் புகழாகிய விதையாலே பிறர்பொருள்களை நச்சுதலாகிய ஏருழவினையுடைய பரிசிலர்க்கு,

என்றது, புகழைவித்திப் பொருளையெடுப்பரென்றவாறு.

61. புது நிறை வந்த புனல் அம் சாயல்—புதுப்பெருக்காய்வந்த நீர் போலும் அழகையுடைய மென்மையினையும்,

என்றது, தண்ணீர் அரியகாலத்தேவந்து பயன் தருமாறுபோல இவனும் பயன்றருவனென்றவாறு.

62. மதி மாறு ஓரா நன்று உணர் சூழ்ச்சி—தனதறிவு ஆக்கத்திற்கு மாறாகிய கேட்டைநினையாது ஆக்கத்தினையேயுணரும் நினைவினையும்,

63. வில் நவில் தடக்கை—விற்றொழிலிலேபயின்ற பெரிய கையினையும்,

மேவரும் பெரும்பூண்—பொருந்துதல் வரும் பேரணிகலங்களையுமுடைய,

64. நன்னன் சேய் நன்னன் படர்ந்த கொள்கையொடு—நன்னன் மகனாகிய நன்னனை நினைத்த கோட்பாட்டுடனே,

துப்பினையும் (59) சாயலினையும் (61) சூழ்ச்சியினையும் (62) கையினையும் பூணினையு (63) முடைய நன்னனென்க.

65. உள்ளினிர் சேறிராயின்—அவன் தரும் பரிசில்களிவையென்று அப் பரிசில்களை *உள்ளினிராய் நீயிரும் (53) செல்கிராயின்,

65 - 6. [பொழுதெதிர்ந்த, புள்ளினிர் மன்ற வெற்றாக் குறுதலின்:] என் தாக்குறுதலின் எதிர்ந்த பொழுது புள்ளினிர் மன்ற—என்னை எதிர்ப் படுகையினாலே நீர் புறப்படுகின்றபொழுது நுமக்குவரும் ஆக்கத்தை எதிர் கொண்டுநின்ற நன்றாகூறத்தக்கதோடே நன்னிமித்தத்தையும் உடையிராயிருந்தீர்; அறுதியாக,

67. ஆற்றின் அளவும்—வழியினது நன்மையினது அளவும் தீமையினதளவும்,

அசையும் நல் புலமும்—நீர் தங்கும் நன்றாகிய இடங்களும்,

68. வீறு வளம் சுரக்கும் அவன் நாடு படு வல்சியும்—பிறர்நாட்டிற்கு இல்லாத செல்வத்தை மாறாமற்கொடுக்கும் அவன் நாடுவிளைகின்ற உணவுகளும்,

நாடெனவே மலைநாடும் காட்டுநாடும் தண்டலைநாடுங்கூறினார்; அது மேற்காண்க.

---

* உள்ளுதல் - நினைத்தல்.

69. மலையும்—அவனாட்டின் மலைகளின் தன்மையும்,

சோலையும்—அவனாட்டிற் சோலைகளின் தன்மையும்,

மா புகல் கானமும்—விலங்குகள் விரும்பித்திரியுங் காட்டின் தன்மையும்.

ஆற்றினதளவு முதலிய ஐந்தினையும் இக்கூறியமுறையே கூறாமல் மயங்கக் கூறுவர்; கூறும்வழிக்கண் ஆண்டுள்ளனவே கூறவேண்டுதலின்.

70 - 72. தொலையா நல் இசை உலகமொடு நிற்ப பலர் புறம் கண்டு அவர் அருங்கலம் புலவோர்க்கு தரீஇ சுரக்கும் அவன் ஈகை மாரியும்—கெடாத நல்லபுகழ் உலகமுள்ளளவும் நிற்கும்படியாகப் பகைவர்பலரையும் முதுகுகண்டு அவர் திறையாகத்தந்த பெறுதற்கரிய பேரணிகலங்களை நூற்பட அறிவுடையோர்க்குக் கொடுத்துப் பின் அவர்க்குச்சொரியும் அவன் பொன்மழையும்,

73. இகழுநர் பிணிக்கும் ஆற்றலும்—தன்னை இகழ்ந்திருக்கும் பகைவரை அரசுகொடாமற் சுருக்கும் அறிவின்வலியும்,

73 - 6. புகழுநர்க்கு அரசு முழுது கொடுப்பினும் அமரா நோக்கமொடு தூ துளி பொழிந்த பொய்யா வானின் வீயாது சுரக்கும் அவன் நாள் மகிழ் இருக்கையும்—*சூதர் மாகதர் பாணர் கூத்தர் முதலியோர்க்குத் தான் புறங்கண்ட பகைவரரசை முற்றக்கொடுப்பினும் அமைதியுறவாத அறிவுடனே தூய துளியைப் பெருகச்சொரிந்த பருவம்பொய்யாத மேகம் பின்னரும் பெய்யுமாறுபோலப் பின்னரும் மாறாமற்சொரியும் அவனுடைய நாளோலக்கமும்,

நோக்கு - †நோக்கனோக்கம். "வீயாவீண்டும்" என வீயாமை அகற்சி மேற்று.

77 - 80 [நல்லோர் குழீஇய நாநவி லவையத்து, வல்லா ராயினும்புறமறைத்துச் சென்றோரைச், சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி, நல்லிதி னியக்குமவன் சுற்றத் தொழுக்கமும்] நா நவில் ‡நல்லோர் குழீஇய

* சூதர் - நின்றேத்துவார்; மாகதர் - இருந்தேத்துவார், இப்புத்தகம், 306 - ஆம் பக்கம் பார்க்க.

† நோக்கு அல் நோக்கம் - கண்ணால் நோக்கும் நோக்கமன்றி மனத்தால் நோக்குநோக்கம்; அஃதாவது கருதுதல்.

‡ நல்லோர்குழீஇய அவை - நல்லவையும் நிறையவையும்; "புகழ்ந் தருமநெறி நின்றோர்பொய் காம, மிகழுஞ் சினஞ்செற்ற மில்லோர்—திகழ் கலைக, ளெல்லா முணர்ந்தோ ரிருந்த விடமன்றே, நல்லா யவைக்கு நலம்", "நலனடக்கஞ் செம்மை நடுவுநிலை ஞானங், குலமென் றிவையுடையோர் கோதில் - புலனில்லோர், சென்று மொழிந்தனவுங் கேட்போர் செறிந்த விட, மன்றே நிறைந்த வவை" (வெண்பாப்பாட். பொது. 9 - 10); "ஆறுட்

அவையத்துச் சென்றோரை வல்லாராயினும் புறம் மறைத்துச் சொல்லிக் காட்டி சோர்வு இன்றி விளக்கி நல்லிதின் இயக்கும் அவன் சுற்றத்து ஒழுக்கமும் —தாம் கற்றவை கல்விடத்தே பயின்ற நல்ல அறிவினையுடையோர் திரண்ட தன் அவைக்களத்திடத்தே சென்ற அறிவுடையோரைத் தாம் கற்றவற்றை மனங்கொள்ளக் கூறமாட்டாராயினும் மாட்டாமையை மறைத்துத் தாம் பொருளைச்சொல்லிக்காட்டி அதனைத் தப்பின்றாக எல்லார் மனமுங்கொள்ளும்படி அறிவித்து நன்றாகநடத்தும் அவனுடைய சுற்றத்தாருடைய பேரொழுக்கமும்.

கவிலுதல - கூறியபடிப்படுதல். சுற்றம் - கல்வியுடையோர்.

81 - 3. நீர் அகம் பனிக்கும் அஞ்சு வரு கடு திறல பெரு இசை நவிரம் மேஎய் உறையும் காரி உண்டி கடவுளது இயற்கையும்—கடல்சூழ்ந்த உலகுநடுங்கும் அஞ்சுதகுமென்றுங் கடியவலியையுடைய பெரிய புகழினையுடைய *நவிரமென்னுமலையைப் பொருந்தியிருக்கும் நஞ்சை உணவாகவுடைய இறைவனது இயல்பும்,

பனிக்குங்காரி ; திறலினையுடையகாரி.

84 - 5. பாய் இருள் நீங்க பகல் செய்யா எழுதரும் ஞாயிறு அன்ன அவன் வசை இல சிறப்பும்—பரந்த இருள்நீங்கும்படி பகற்பொழுதைச் செய்து தோன்றும் ஞாயிற்றை யொத்த அவனுடைய பகையாகிய இருளைக் கடிந்த குற்றமில்லாத தலைமையும்,

86 - 9. [இகந்தன வாயினுந் தெவ்வர் தேஎ, நுகம்படக் கடந்து நூழி லாட்டிப், புதைத்தோல் வரைப்பின் வேனிழற் புலவோர்க்குக், கொடைக்கட னிறுத்தவவன் றொல்லோர் வரவும்:] தெவ்வர் தேம் இகந்தன ஆயினும் நூழி லாட்டி நுகம் பட கடந்து புரை தோல வரைப்பின் வேல நிழல் புலவோர்க்கு கொடை கடன் இறுத்த அவன் தொல்லோர் வரவும் பகைவர்தேயம் சேணிகந்தனவாயினும் ஆண்டுச்சென்று †தூசிப்படையைக் கொன்றுகுவித்து வலியுண்டாகவென்று பின்னர் உயர்ச்சியையுடைய யானை

---

பகைசெற் றருங்கலை யார்ந்து, பாரிற் கீர்த்தி படைத்தோர் வைகுதல், நல்லவை யடக்கம் வாய்மை நடுநிலை, சொலனு நன்மை யுடையோர் தொகைஇ, வல்லார் மொழியினும் வலனு நாக்கிக், கேட்போ ருறையவை நிறையவை யாகும்'' (இ - வி. சூ. 936)

* நவிரமென்னும் மலை இக்காலத்துத் திரிசூலகிரி யென்றும் பர்வத மலை யென்றும் வழங்கப்படுகின்றது ; இதில் காரியுண்டிக் கடவுளுடைய திருக்கோயில் இருக்கின்றது ; இக்காலத்து வழங்கும் அவரது திருநாமம் ஸ்ரீ காளகண்டேசுவரரென்பது. இம்மலை திருவண்ணாமலையின் வாயு திக்கில் உள்ளது.

† தூசிப்படை - முற்படை.

அணித்தாகின்ற அணியிலே சென்றுபொருத வேந்தரின் வலியைக் கெடுத்தலை யுடைய அறிவுடையோர்க்குக் கொடுத்தற்குரிய காடும் ஊருமாகிய வற்றைக் கொடுத்த அவனுடைய குடியிலுள்ளோர் தோற்றரவும்,

காஞ்சிசான்ற வயவராதலின், அவரைப் புலவரென்றார்.*

90 - 91. இலை தேர்ந்து இவரும் கொடி தாள் முதலொடு நிரை பட குழீஇய கல் அகழ் இடங்கில்—இலையைத் தேடிப்படரும் வள்ளிக்கிழங்கினை யுடைய முதல்களோடே நிரையுண்டாக ஆழ்ந்த கல்லையகழ்ந்த இடங் கினையும்,

92. வரை புரை நிவப்பின் வான் தோய் இஞ்சி—மலையையொத்த உயர்ச்சியையுடைய வானைத்தீண்டும் மதிலினையுமுடைய,

93 - 4. உரை செல வெறுத்த அவன் மூதூர் மாலையும் கேள்—புகழ் எங்கும் பரக்கும்படி செறிந்த அவனுடைய பழைய ஊரின் இயல்பும் இருக் கும்படி கேட்பாயாக;

ஆற்றினதளவு முதலியவற்றையெண்ணி இன்னதும் இன்னதும் இருக் கும்படி கேட்பாயாகவென முடிக்க.

94. [இனி வேண்டுநீ முன்னிய திசையே:] இனி நீ வேண்டு முன்னிய திசையே கேள்—அவற்றில் இப்பொழுது நீ மன்னனைக் கருதிச்செல்கின்ற திசையைக் கேள்;

திசை, ஆற்றினளவையுணர்த்திநிற்றலின் ஆகுபெயராயிற்று; ஏகாரம் பிரிநிலை.

95 - 6. மிகு வளம் பழுநிய யாணர் வைப்பின் புதுவது வந்தன்று—மிகுகின்ற செல்வம் முற்றுப்பெற்ற புதுவருவாயையுடைய ஊர்களாலே புதிதாகிய தன்மை வந்தது;

96. [இதுவதன் பண்பே:] அதன் பண்பு இது—அவ்வழியின் செய்தி இத்தன்மைத்து;

97 - 8. [வானமின்னு வசிவு பொழிய ஆனாது, இட்டவெல்லாம் பெட் டாங்கு விளைய:] ஆனாது இட்ட எல்லாம் பெட்டாங்கு விளைய வானம் மின்னு வசிவு பொழிய—அமையாதே நிலத்தேயிட்ட விதைகளெல்லாம் இன்னவாறே விளையவேண்டுமென்று ஆண்டுள்ளார் விரும்பினாற்போலே விளையும்படியாக மேகம் மின்னுகின்ற பிளத்தலைப்படுத்தலோடே பெய்கை யினாலே,

99. பெயலொடு வைகிய வியன் கண் இரும் புனத்து—அம்மழையோ டேதங்கின அகன்ற இடங்களையுடைய பெரிய கொல்லைகளிலே.

---

* "காஞ்சி சான்ற வயவர் பெரும" (பதிற். 65, 90.)

100 . 101. [அகலிரு விசும்பி னாஅல் போல, வாலிதின் விரிந்த புன் கொடி முசுண்டை:] புல் கொடி முசுண்டை அகல் இரு விசும்பின் ஆல் போல வாலிதின் விரிந்த—புல்லிய கொடியினையுடைய முசுண்டை ஏனைப் பூதங்கள் தோன்றுதற்குக்காரணமான பெரிய ஆகாயத்திற் கார்த்திகையா கிய மீன்போல வெள்ளிதாக மலர்ந்தன;

* ஆரல், ஆலெனவிகாரம்.

102 - -6. [நீலத் தன்ன விதைப்புன மருங்கின், மகுளிபா யாது மலிதுளி தழாலி, னகளத் தன்ன நிறைசுனைப் புறவிற், கௌவை போகிய கருங்காய் பிடியேழ், நெய்கொளா வொழுகின பல்கவ ரீரெண்:] பல் கவர் ஈர் எண் நீலத்து அன்ன விதை புனம் மருங்கின் அகளத்து அன்ன நிறை சுனை புறவின் மகுளி பாயாது மலி துளி தழாலின் கௌவை போகிய கரு காய் பிடி ஏழ் நெய் கொள ஒழுகின—பலவாகக் கிளைத்த பசிய எள்ளுத் தோடுகளெல் லாம் நீலமணியையொத்த நிறத்தையுடையவாயெழும்படி அவற்றை விதை த்த கொல்லையின்பக்கத்தில் நீர்ச்சாலையொத்த நிறைந்த சுனைகளையுடைய காட்டிடத்தே அரக்குப்பாயாமல் மிக்கதுளிதழுவுகையினாலே இளங்காயா கிய தன்மைபோன கரியகாய் ஒருபிடியிலே ஏழ்காயாக நெய் உள்ளேகொள் ளும்படியாக வளர்ந்தன ;

107 - 8. [பொய்பொரு கயமுனி முயங்குகை கடுப்பக், கொய்பத முற்றன குலவுக்குர லேனல்:] பொய் பொரு கயமுனி முயங்கு கை கடுப்ப குலவு குரல் ஏனல் கொய் பதம் உற்றன—தம்மில் விளையாடிப்பொருகின்ற யானைக்கன்றுகளின் ஒன்றோடொன்றுசேர்ந்த கைகளையொப்பத் தம்மிற் பிணையுங்கதிர்களையுடைய தினை அறுக்குஞ் செவ்வியாகமுற்றின ;

109 - 10. [விளைதயிர்ப் பிதிர்வின் வீயுக் கிருவிதொறுங், குளிர்புரை கொடுங்காய் கொண்டன வவரை:] அவரை இருவிதொறும் விளை தயிர் பிதிர்வின் வீ உக்கு குளிர் புரை கொடு காய் கொண்டன—அவரைகள் தினையரி தாடோறும் முற்றினதயிரினது பிதிர்ச்சிபோலும் பூக்களுதிர்ந்து அடியிலே புரிவாளையொக்கும் வளைந்த காயைக்கொண்டன ;

குளிர் - கிளிகடிகருவியுமென்ப.

111 - 3. [மேதி யன்ன கல்பிறங் கியவின், வாதிகை யன்ன † கவைக் கதி ரிறைஞ்சி, யிரும்பு கவர்வுற்றன பெரும்புன வரகே:] பெரு புனம் வரகு மேதி அன்ன கல பிறங்கு இயவின் வாதி கை அன்ன கவை கதிர் இறைஞ்சி இரும்பு கவர்வுற்றன—பெரியபுனத்தில் வரகுகள் எருமைகிடந்தாற்போன்ற

* "வடவயின் விளங்கா லுறையெழு மகளிருட், கடவு ளொருமீன் சாலினி" என்பதும், 'ஆரலென்னும் பெயர் ஆலெனக் குறைந்து நின்றது' என்னுமதனுரையும் இங்கே அறியற்பாலன ; (பரிபாடல், 5 : 43.)

† "கவைக்கதிர் வரகுங் சாய்ப்பயி லெள்ளும்" (பெருங்கதை, முல்லை நிலங்கடந்தது.)

கற்பெருந்த வழியிடத்திலே தருக்கங்கூறுகின்றவன் கையிடத்து இணைந்த விரல்களையொத்த இரட்டித்த கதிர்கள் முற்றி வளைந்து அரிவாளாலே அரிதலுற்றன;

114 - 44. [பால்வார்பு கெழீஇப் பல்கவர் வளிபோழ்பு, வாலிதின் விளைந்தன வையவன் ம வெண்ணெல், வேலீண்டு தொழுதி யிரிவுற் றென்னக், காலுறு துவைப்பிற் கவிழ்க்கனைத் திறைஞ்சிக், குறையறை வாரா நிவப்பி னறையுற், றாலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே, புயற்புனிறு போகிய பூமலி புறவி, னவற்பதங் கொண்டன வம்பொதித் தோரை, தொய்யாது வித்திய துளர்படு துடவை, யையவி யமன்ற வெண்காற் செறுவின், மையென விரிந்தன நீணறு நெய்தல், செய்யாப் பாவை வளர்ந்து கவின்முற்றிக், காயங் கொண்டன விஞ்சி மாவிருந்து, வயவுப்பிடி முழந்தாள் கடுப்பக் குழிதொறும், விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலை, காழ்மண் டெஃகங் களிறு முகம் பாய்ந்தென, ஆழ்மல ரொழிமுகை யுயர்முகந் தோயத், துறுகல் சுற்றிய சோலை வாழை, யிறுகுலை முறுகப் பழுத்த பயம்புக், கூழுற் றலமரு முந்தூ ழகலறைக், கால மன்றியு மரம்பயன் கொடுத்தலிற், காலி னுதிர்ந்தன கருங்கனி நாவன், மாறுகொ ளொழுகையி னூறுநீ ருயவை, நூறொடு குழீஇயின கூவை சேறுசிறந், துண்ணுநர்த் தடுத்தன தேமாப் புண்ணரிக், தரலையுக்கன நெடுந்தா ளாசினி, விரலூன்று படுக ணாகுளி கடுப்பக், குடிஞை யிரட்டு நெடுமலை யடுக்கத்துக், கீழு மேலுங் கார்வாய்த் தெதிரிச், சுரஞ்செல் கோடியர் முழவிற் றூங்கி, முரஞ்சுகொண் டிறைஞ்சின வலங்கு சினைப் பலவே:]

பூமலி புறவில் புயல் புனிறு போகிய அம் *பொதி †தோரை அவல் பதம் கொண்டன—பூமிக்க காட்டிடத்தே மழையால் ஈன்றணிமை தீர்ந்து முற்றிய அழகிய குலையினையுடைய ‡மூங்கிலெல் அவலிடிக்கும் செவ்வியைக்கொண்டன;

இது மூங்கில்.

ஐயவி தொய்யாது §துளர் படு துடவை வித்திய அமன்ற—வெண்சிறு கடுகு உழாதே களைக்கொட்டால் அடிவரைந்து கொத்தும் தோட்டங்களிலே விதைக்கப்பட்டனவாய் நெருங்கி விளைந்தன;

இஞ்சி செய்யா பாவை வளர்ந்து கவின் முற்றி ||காயம் கொண்டன—

---

* பொதி - பொதிந்த குலை.

† தோரை - ஒருவகை நெல்லும் மூங்கினெல்லும்; (மதுரை. 287 - உரை.)

‡ இதனை, "அவலவலென்கின்றன நெல்." (தொல். எச். சூ. 26 - சே. ந.) என்பது விளங்கச் செய்கின்றது.

§ துளர்படுதுடவை: (பெரும்பாண். 201).

|| காயம் - உறைப்பு; "உப்பொடு நெய்பா றயிர் காயம் பெய்தடினும்" (நாலடி. மெய்ம்மை, 6.)

இஞ்சிமுதல் ஒருவராற் பண்ணப்படாத பாவைகள் வளரப்பட்டு அழகு முதிர்ந்து *காழ்ப்பைக்கொண்டன;

இஞ்சிக்கிழங்கைப் பாவையென்றல் மரபு.

கொழுகொடி கவலை குழிதொறும் வயவுப்பிடி முழந்தாள் கடுப்ப விழுமிதின் வீழ்ந்தன—கொழுவிய கொடியினையுடைய கவலை குழிகடோறும் வலியபிடியின் மடித்த முழந்தாளையொக்கும்படி சிறிதாகக் கீழே வளர்ந்தன;

மா இருந்து வீழ்ந்தன—முற்றி மாவாந்தன்மை தம்மிடத்தேயுளவாய் †வீழ்ந்தன;

காழ் மண்டு எஃகம் களிறு முகம் பாய்ந்தென—காம்பிலேதைத்த வேல் யானையைக் குத்திற்றென்னும்படியாக,

ஊழ் மலர் ஒழி முகை உயர் முகம் தோய துறு கல் சுற்றிய சோலை வாழை—முறைப்பட மலர்தலையொழிந்த முகைகளினுடைய உயர்ந்தமுகங்கள் சென்றுதீண்டும்படியாக நெருங்கின மலைகளைச் சூழ்ந்துநின்ற சோலையாகிய வாழை,

வேல் யானையைக்குத்தினாற்போல வாழைப்பூ மலையைத்தீண்டி நின்றதென்றுணர்க ; வாழைப்பூ உதிர்ந்து பின்பு உலராதுநிற்றல் இயல்பு.

இறுகு குலை முறுக பழுத்த—காய்நெருங்கின குலை மிகவுநெகிழும்படி பழுத்தன ;

‡உந்தூழ் ஊழுற்று பயம் புக்கு அலமரும்—பெருமூங்கில்நெல்லு முற்றுதலுற்றுப் பயன்படுந்தன்மையிலேபுகுந்து அசையாநிற்கும் ;

மரம் காலம் அன்றியும் பயன் கொடுத்தலின்—ஆண்டுள்ளமரங்கடாம் காலமன்றியும் நிலவிசேடத்தாற் பயனைக்கொடுத்தலின்,

நாவல் காலின் கரு கனி அகல் அறை உதிர்ந்தன—நாவல் காற்றாலே கரியபழம் அகன்ற பாறையிலே உதிர்ந்தன ;

இது சினைவினை முதலொடுமுடிந்தது.

நீர் ஊறு உயவை மாறு கொளா ஒழுகின—விடாய்த்தகாலத்தில் வாய நீருறுதற்குக்காரணமான உய்வைக்கொடி நீரோடே மாறுபாடுகொள்ளும்படி படர்ந்தன ;

என்றது, தண்ணீர் தேடவேண்டாவென்றவாறு.

---

* காழ்ப்பு - உறைப்பு.

† கிழங்குவளர்தலை வீழ்த லென்பர் ; "வள்ளிகீழ்வீழா" (கலி. 39), "கொழுங்கொடிவள்ளிக் கிழங்கு வீழ்க் கும்மே" (புறநா 109.)

‡ "உந்தூழ்கூவிளம்" குறிஞ்சி. 65. பா. மூங்கில்.

கூவை *நூறொடு குழீஇயின—கூவைக்கிழங்கு நீறுந்தன்மையோடே முற்றித்திரண்டன;

தேமா சேறு சிறந்து †உண்ணுநர் தடுத்தன—பழமாக்கள் சாறு மிக்கு உண்பாரை வேறொன்றிற் செல்லவொட்டாமல் தடுத்துக்கொண்டன;

நெடு தாள் ஆசினி புன் புரிந்து அரலை உக்கன—நெடிய அடியையுடைய ஆசினிப்பலாப் புண்ணும்படி வெடித்து உள்ளுள்ள விதைகள் சிந்தின;

விரல் ஊன்று படு கண் ஆகுளி கடுப்ப குடிஞை இரட்டும் நெடு மலை அடுக்கத்து—விரல்தீண்டுகின்ற முழங்குங்கண்ணையுடைய சிறுபறையை யொக்கப் போர்த்தை பேடுஞ்சேவலும் மாறிக்கூப்பிடும் நெடிய மலைப் பக்கத்தே,

அலங்கு சினை பலவு கார் வாய்த்து எதிரி சுரம் செல் கோடியர் முழவின் கீழும் மேலும் தூங்கி ‡முரஞ்சு கொண்டு இறைஞ்சின—அசைகின்ற கொம்பினையுடைய பலாக்கள் மழைமிகப்பெய்யப்பட்டு அதனைத் தாம் ஏற்றுக்கொண்டு வழிபோகின்ற கூத்தருடைய மத்தளங்கள்போலே கீழும் மேலுந்தூங்கி முற்றுதல்கொண்டு தாழ்ந்தன,

வெண் கால் செறுவில—வெள்ளிய அரிதாள்களையுடைய செய்யிலே,

§ஐவனம் வெண்ணெல் பால வார்பு கெழீஇ பல கவர் வளி போழ்பு வாலிதின் விளைந்தன—ஐவனநெல்லும் வெண்ணெல்லும் பால்கட்டிச் சிறிது முற்றிப் பலவாய்க் கவர்த்த காற்று ஊடறுக்கப்பட்டு நன்றாக விளைந்தன;

வார்தல்-ஒழுகுதலாதலிற் கட்டுதலையுணர்த்திற்று. கெழுமுதல் ஈண்டு முற்றுதலை யுணர்த்திற்று. பல்கவர்வளியெனவே நாலுகாற்றுமடித்து முற்றுதல்கூறினார்.

தீ ||கழை கரும்பு கவிழ் கனைத்து—இனிய கோலாகியகரும்பு தோடு கவிழுதலோடே தண்டு திரண்டு,

அறை குறைவாரா நிவப்பு அ—பாத்தி குறைபடுதலுண்டாகாத வளர்ச்சியோடே,

---

* நூறு - நீறு; இது கூவை நீறு; கூவைச்சுண்ணமெனவும் வழங்கும்; (சிலப். 25 : 42.)

† "உண்ணுநர்த் தடுத்த சாரற்பலவின் சுளையொடு" (அகநா. 2.)

‡ "முரஞ்சன் முதிர்வே" (தொல். உரி. 35.)

§ ஐவனம் - தினையோடுசேர்த்துவிளைவிக்கப்படும் ஒருவகை நெல். (புறநா. 159.)

|| கழைக்கரும்பு ஒருவகைக்கரும்பென்பாருமுளர்.

இரண்டுமெருங்கின் மாடமுக் தெருவும் யாறும் கரையும் போன்ற வென்றார்.

நிதியம் துஞ்சும் அவன் பழ விறல் மூதூர் னர் கனி சேய்த்து அன்று—காவிலேயும் மதிலிலேயும் நியமத்திலேயும் மறுகிலேயும் தெருவிலேயுமுடைய பொருட்டிரள் தங்கும் அவன் பழைய வெற்றியையுடைய மூதூர் மிகவும் தூரிதன்றென்க.

இது மூதூர்மாலை (93) கூறிற்று.

488 - 9. பொருந்தா தெவ்வர் இரு தலை துமிய பருந்து பட கடக்கும் ஒள் வாள் மறவர் - நின்னோடுப் பொருந்தாத பகைவருடைய கரிய தலைகள் துணியப் பருந்துகள் படியப் போரைவெல்லும் ஒள்ளிய வாளையுடைய மறவர்,

490 - 91. கரு கடை எஃகம் சாத்திய புதவின் அரு கடி வாயில் அயிராது புகுமின் - தம்முடைய கரிய காம்பினையுடைய வேலைச் சாத்தினைத்துக் காத்திருக்கின்ற டல் தெற்றுவாசல்களையுமுடைய அரிய கோபுரவாயிலை ஐயுறுமற் புகுவிர்;

492 - 5. [மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர், வெல்போர்ச் சேஎய்ப் பெருவிறலுள்ளி, வந்தோர் மன்ற வளியர் தாமெனக், கண்டோ ரெல்லா மமர்ந்தினி திரேக்கி :]

மன்றில் வதியுநர் சேண் புலம் பரிசிலர் கண்டோர் எல்லாம்—அம்பலங்களிலே தங்குவாராகிய அரிய நிலங்களினின்றும் வந்த கூத்தர் முதலியோராய நும்மைக் கண்டோரெல்லாம்,

அளியர் தாம் வெல் போர் சேஎய் பெருவிறல் மன்ற உள்ளி வந்தோர் என அமர்ந்து இனிதின் நோக்கி—இவ்வளிக்கத் தக்கவர்தாம் வெல்லும் போரைவல்ல முருகனைப்போலும் நன்னனைப் பரிசிலர்க்குத் தெற்றமாக நினைத்து வந்தோரென்றுகருதி முகம்பொருந்தி இனிதாகப்பார்த்து,

496 - 7. [விருந்திறை யவரவ ரெதிர்கொளக் குறுகிப், பரிபுலம் பலைத்தநும் வருத்தம்வீட:] பரி புலம்பு அலைத்த வருத்தம் வீட அவர் விருந்து நும் இறை எதிர்கொள அவர் குறுகி—தரித்தலாற்றுமையான தனிமை வருத்தினவருத்தம் போம்படி அவ்விடத்தோர் விருந்தாய் நீங்கள் தங்குதலை எதிரேற்றுக் கொள்கையாலே அவர்களைச் சேர்ந்திருந்து,

498 - 500. [எரிகான் றன்ன பூஞ்சினை மராஅத்துத், தொழுதி போகவலித்தகப் பட்ட, மடநடை யாமான் கயமுனிக் குழவி:]

எரி கான்றன்ன பூ சினை மராஅத்து தொழுதி போக வலிந்து அகப்பட்ட மடம் நடை ஆமான் குழவி—நெருப்பைக் கான்றாலொத்த பூங்கொம்புகளையுடைய மராமரத்திடத்தே கிடந்த இனமெல்லாங் கெட்டுப்போகப் போக

மாட்டாது அகப்பட்ட மடப்பத்தையுடைய நடையையுடைய ஆமானினது குழவி,

கயம் முனி குழவி—யானைக்கன்றினையது,

501. [ஊமை யெண்கின் குடாவடிக் குருளை:] எண்கின் குடாவடி ஊமை குருளை—கரடியின் வளைந்த அடியினையுடைய வாய்திறவாத குட்டி,

502 - 3. மீமிசை கொண்ட கவர் பரி கொடு தாள் *வரை வாழ் வருடை வல் தலை மா தகர்—முதுகிடத்தே கொண்ட நிலத்தைக்கைக்கொள்ளும் செலவினையுடைய வளைந்தகாலையுடைய வரையிடத்தேவாழும் † எண்கால்வருடையில் வலிய தலையினையுடைய பெரியகிடாய்,

இனி வருடையும் தகருமென வேறாகக் கூறினுமாம்,

504. அரவு குறும்பு எறிந்த சிறு கண் தீர்வை—பாம்பினது வலிகளை யழித்த சிறிய கண்ணினையுடைய கீரி,

505 - 6. அளை செறி உழுவை கோள் உற வெறுத்த மடம் கண் மரை யான் பெரு செவி குழவி—முழையிலே செறிந்திருந்தபுலி பாய்தலுறுகையினாலே தன் உடலைவெறுத்த மடப்பத்தையுடையகண்ணினையுடைய மரையானினது பெரிய செவியினையுடைய குழவி,

507 - 8. அரக்கு விரித்தன்ன செ நிலம் மருங்கின் பரல தவழ் உடும்பின் கொடு தாள் ஏற்றை—அரக்கைப் பரப்பினாலொத்த சிவந்தநிலத்திடத்திற சுக்கான்கல்லிலேதவழும் உடும்பினது வளைந்தகாலையுடைய ஏறு.

509. வரை பொலிந்து இயலும் மடம் கண் மஞ்ஞை—மலையிடத்தே அழகுபெற்று ஆடும் மடப்பத்தையுடைய கண்ணினையுடைய மயில,

510. கானம் கோழி கவர் குரல் சேவல்—கானத்திடத்துக் கோழியினது பெடையை யழைக்கின்ற குரலையுடைய சேவல்,

511. ‡ கானம் பலவின் முழவு மருள் பெரு பழம்—காட்டிடத்துப் பலாவினுடைய முழவென்றுமருளும் பெரியபழம்.

512 - 3. [இடிக்கலப் பன்ன நறுவடி மாவின், வடிச்சேறு விளைந்த தீம்பழத் தாரம்:] நறு வடி மாவின் இடி கலப்பன்ன வடி சேறு விளைந்த தீ பழம் தாரம்—நறிய வடுக்களையுடைய மாவினது பொடிச்செய்த § கண்டின் கலப்பையொத்த பிழியப்படும் சாறு முற்றின இனிய பழமாகிய பண்டம்,

---

* "வரைவாழ வருடைக் கோடுமுற் றிளந்தகர்" (அகநா: 378. 6-7.)

† எண் கால் வருடை - ஒருவகை விலங்கு; "மாவுமாக்களும்" (தொல். மர. சூ. 32. பேர்.) என்பதன் விசேடவுரையைப் பார்க்க

‡ மலைபடு. 143 - 4. § கண்டு - கற்கண்டு.

514. தூவல் கலித்த இவர் நனை வளர் கொடி—மழையாற்செருக்கின பரந்தனைத் அரும்புகளையுடைய மணம்வளருகின்ற *நறைக்கொடி;

515. †காஅய் கொண்ட நுகம் மருள் நூறை—காவிக்கொண்டுவைத்த நுகமென்றுமருளும் ‡நூறைக்கிழங்கு,

நூறை - §மலங்கென்பாருமுளர்.

516. [பருஉப்பளிங் குதிர்த்த:] உதிர்த்த பருஉ பளிங்கு—மரத்தினின்றும் சிதறியுதிர்த்த பருத்த கிகரமாகிய || கருப்பூரம்,

பல உறு திரு மணி - பலவிலைபெற்ற அழகிய மாணிக்கம்,

517 - 8. [குரூஉப்புலி பொருத புண்கூர் யானை,முத்துடை மருப்பின் முழுவலி மிகுதிரள்:] குரூஉ புலி பொருத புண் கூர் முழு வலி ¶ யானை முத்துடை மருப்பின் மிகு திரள்—நிறத்தையுடைய புலிபொரப்பட்ட புண்மிக்க குறைவில்லா வலியையுடைய யானைகளினுடைய முத்துடைய கொம்புகளினுடைய மிக்கதிரள்,

519. **வளை உடைத்தன்ன வள் இதழ் காந்தள்—வளையுடைத்தாற் போன்ற வளவிய இதழையுடைய காந்தட்பூ,

520. நாகம்—புன்னைப்பூ,

திலகம்—திலகப்பூ,

நறு காழ் ஆரம்—நறிய வயிரத்தையுடைய சந்தனம்,

521. [கருங்கொடி மிளகின் காய்த்துணர்ப் பசுங்கறி:] மிளகின் கரு கொடி காய் துணர் பசு கறி—மிளகினதுகரிய கொடிகள் காய்த்த கொத்திற் பசியமிளகு.

முன்னர் மிளகென்றது முதலை; கறி, சினை.

522. திருந்து அமை விளைந்த தேன் கள் தேறல்—நன்றாகிய மூங்கிற் குழாயிலே முற்றிய தேனாற்செய்த கட்டெளிவு,

---

*நறைக்கொடி-ஒருவகைக்கொடி; "தண்கமழ் நறைக்கொடி கொண்டு" (ஐங்குறு. 276.) † காஅய், காவி - தோளிற்சுமந்து.

‡ பி - ம். நூற்றைறக்கிழங்கு. § மலங்கு - ஒருவகைமீன்.

|| கருப்பூரம் - ஒருவகைமரம்; "இமயச்சாரற் கருப்புரக்கன்று" (சீவக. 1267.)

¶ யானைக்கொம்புளில் முத்திருத்தல்: (முருகு. 304 - 5; குறிஞ்சி 35 - 6.)

** "அலங்கிதழ்க் கோடல் வீயுகு பவைபோ, லிலங்கேரெல்வளை யிறைஞ்சு ரும்மே" (கலித். 7.); "உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்" (புறநா. 90.)

523. கான் நிலை எருமை கழை பெய் தீ தயிர்—காட்டிடத்து நிலைமையினையுடைய எருமையினது மூங்கிற்குழாயிலேதோய்த்த இனிய தயிர்,

524. நீல் நிறம் ஓரி பாய்ந்தென—முற்றுகையினாலே நீலநிறத்தையுடைய ஓரிநிறம்பரந்ததாக,

524 - 5. நெடு வரை நேமியின் செல்லும் நெய் கண் இறால்—நெடிய வரையில் இறாலிடத்தை விட்டுப்பாயுந் தேனைத் தன்னிடத்தேயுடைய இறால்கள்,

526 - 9. [உடம்புணர்பு தழீஇய வாசினி யனைத்துங், குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி, கடன்மண் டழுவத்துக் கயவாய் கடுப்ப,நோனாச் செருவி னெடுங்கடைத் துவன்றி:]

தழீஇய ஆசினி—நன்றென்று கூட்டிக்கொண்ட ஆசினிப்பலா,

குடமலை பிறந்த தண் பெரு காவிரி கடல் மண்டு அழுவத்து கயவாய் கடுப்ப—குடகமலையிற்பிறந்த குளிர்ந்த பெரியகாவிரி கடலிலே மிக்குச்செல்கின்ற ஆழத்தையுடைய புகார்முகத்தையொப்ப,

நோனா செருவின் நெடு கடை—பகைவர் பொறுத்தலாற்றாத போரினையுடைய தலைவாசலிலே,

*அனைத்தும் உடம்புணர்பு துவன்றி,

530 - 31. * [வானத் தன்ன வளமலி யானைத், தாதெருத் ததைந்த முற்ற முன்னி:]

532. மழை எதிர் படு கண் முழவு கண் இகுப்ப— †மழைமுழக்கத்திற்கு எதிராகமுழங்கும் கண்ணையுடைய முழவின் கண்கள் ஒலியாநிற்க,

533. கழை வளர் தூம்பின் கண் இடம் இமிர—மூங்கிலாகிய இசைவளரும் பெருவங்கியத்தினது திறந்தகண்ணிடம் ஒலியாநிற்க,

534 - 6. [மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ், நரம்புமீ திறவா துடன்புணர்ந் தொன்றிக், கடவ தறிந்த வின்குரல் விறலியர்:]

மருதம் பண்ணிய கரு கோடு சிறு யாழ் நரம்பு மீது இறவாது உடன் புணர்ந்து ஒன்றி இன் குரல் விறலியர்—மருதத்தை வாசித்த கரிய தண்டினையுடைய சிறிய யாழினரம்பினோசைக்கு மேற்போகாது அவ்வோசையுடனேகூடி ஓரோசையாய் இனிதாகிய பாட்டினையுடைய விறலபட ஆடு மகளிர்,

கடவது அறிந்த விறலியர்—தலைவனைக் கண்டாற் செய்யக்கடவ தொழிலை யறிந்த விறலியர்,

---

* இவற்றிற்கு உரைகிடைத்திலது.

† மலைபடு. 2 - 3.

537. தொன்று ஒழுகு மரபின் தம் இயல்பு வழாஅது—பழைதாய் நடக்கின்ற முறைமையினையுடைய தம் இலக்கணத்தில் தப்பாமல்,

538. அரு திறல் கடவுள் பழிச்சிய பின்றை—* பொறுத்தற்கு அரிய வலியையுடைய கடவுளை முதலில் வாழ்த்தின பின்பு,

முற்றத்தையினுமி (531) இருப்ப (532) விறலியர் (536) தேவபாணியைப் பாடினபின்பு (538) என்க.

539. விருந்தின் பாணி கழிப்பி—சென்றாற் புதிதாகப்பாடும் பாட்டுக்களைப் பாடி,

539 - 40. நீண்மொழி குன்றா நல் இசை சென்றோர் உம்பல்—மேல் கிழற் புலவோர்க்குக் (88) கொடுத்தவற்றை வாங்காதபடி தாம் கூறிய வஞ்சினங்களிற் குறையாத நல்ல புகழிலே நடந்தோருடைய வழியில்வந்தவன்,

இதனாற் கொடைக்கடனிறுத்த அவன் தொல்லோர்வரவு (89) கூறினர்.

541 - 3. [இன்றிவட் செலலா துலகமொடு நிற்ப, இடைத்தெரிந் துணரும் பெரியோர் மாய்ந்தெனக், கொடைக்கட னிறுத்த செம்மலோயென:]

இடைதெரிந்து உணரும் பெரியோர் மாய்ந்தென—நன்று இது தீது இஃதென்று ஆராயும் பெரிய உபகாரிகள் இறந்தாராக,

இன்று இவண் செலலாது உலகமொடு நிற்ப கொடை கடன் இறுத்த செம்மலோய் என—நின்பேர் இக்காலத்து இவ்வுலகிலே நடந்துவிடாதே உலகுமுள்ளளவும் நிற்கும்படி கொடையாகிய கடனை முடித்த தலைமையையுடையோயென்றுகூறி,

544. † வென்றி பல புகழ் விறலோடு ஏத்தி—வெற்றியாலுண்டாகிய பலபுகழ்களை ஐம்பொறிகளைத் தன்வசமாக்கின வெற்றியோடே புகழ்ந்து,

545. சென்றது நொடியவும் விடாஅன்—நும்மனத்திற்சென்ற எனைப் புகழ்களை முற்றக்கூறவும் அமையானாய்,

545 - 6. நசை தர வந்தது சாலும் வருத்தமும் பெரிது என—என் மேலுள்ள நசை கொண்டுவருகையினாலே என்னிடத்துவந்ததே அமையும் வழிவந்த வருத்தமும் பெரிதென முகமன்கூறி,

---

* "நலம் பொறுக்கலாத பிண்டி நான்முகன்" (சீவக. 402.)

† "அயன்றலை கொண்டுசெண் டாடல பாடி யருக்க னெயிறு பறித்தல் பாடிக், கயந்தனைக் கொன்றுரி போர்த்தல பாடிக் காலனைக் காலா லுதைத்தல் பாடி, இயைந்தன முப்புர மெய்தல பாடி யேழை யடியோமை யாண்டு கொண்ட, நயந்தனைப் பாடிநின் றாடி யாடி நாதற்குச் சுண்ண மிடித்து நாமே." (திருவாசகம், திருப்பொற்சுண்ணம், 18.)

547 - 8. பொருநர் தார்ந்த ஒன்னார் எதிரிய வயவரொடு பொலிந்து திரு நகர் முற்றம் அணுகல் வேண்டி—பொருகின்ற மாறுபாட்டினை எதிர்கொண்டிருக்கும் படைத்தலைவரோடே பொலிவுபெற்றுச் செல்வத்தையுடைய தன்மனையின் முற்றத்தை நீங்கள் செல்லுதலை விரும்பி,

பொலிந்தென்னுமெச்சத்தை உடையவென்பதனோடு முடிக்க.

549. கல்லென் ஒக்கல் நல் வலத்து இரீஇ—கல்லென்னும் ஆரவாரத்தையுடைய சான்றோரிருக்கின்ற நன்றாகிய * சமயத்திருக்கு மண்டபத்தேயிருந்து,

வலம் - இடம்.

இதனால் நல்லிதினியக்குமவன் சுற்றத்தொழுக்கமும் (80) அவன் நாண்மகிழிருக்கையும் (76) கூறினர்.

550 - 52. உயர்ந்த கட்டில் உரும்பு இல் சுற்றத்து அகன்ற தாயத்து அஃகிய நுட்பத்து இலம் என மலர்ந்த கையர் ஆகி—உயர்ந்த அரசவுரிமையினையும், கொடுமையில்லாத அமைச்சர் முதலியோரையும், அகன்ற நாட்டினையும், சுருங்கின அறிவினையுமுடையராய் இரந்துவந்தோர்க்கு யாம் இல்லேமென்று கூறி இல்லையென்று மறித்த கையினையுமுடையராய்,

கட்டில் - சிங்காதனமுமாம். தாயம் - உரிமைகளெல்லாவற்றையும் கூறிற்றுமாம்.

553. தம் பெயர் தம்மொடு கொண்டனர் மாய்ந்தோர்—தம்பெயரை உலகில் நிறுத்தாமல் தம்முடனேகொண்டு பொன்றக்கெட்டுப்போன அரசர்.

554 - 6. நெடு வரை இழிதரு நீத்தம் சால் அருவி கடு வரல் கலுழி கட்கு இன் † சேயாறு வடு வாழ் எக்கர் மணலினும் பலரே—நெடிய மலையினின்றுங் குதிக்கும் பெருக்கு நிறைந்த அருவியினது கடியவரத்தினையுடைத்தாகிய பெருக்கினையுடைய கண்ணுக்கு இனிய சேயாற்றின் அறல் வீற்றிருந்த இடுமணலாகிய மணலினும்பலர்;

557. [அதனால், புகழொடுங் கழிகநம் வரைந்த நாளென :] அதனால் நம் வரைந்தநாள் புகழொடும் கழிக என—ஆகையினாலே நமக்குத் தெய்வம் இத்துணைக்காலமிருவென எல்லையிட்டுவிட்ட நாள் புகழோடே கழிந்துபோவதாகவென்றுகருதி,

558. [பரந்திடங் கொடுக்கும் விசும்புதோ யுள்ளமொடு:]

பரந்து இடம் கொடுக்கும் உள்ளமொடு—கொடுத்தற்றொழிலிலே விரிந்து அதற்கே இடங்கொடுக்கும் நெஞ்சுடனே,

---

* சமயத்திருக்குமண்டபம் - யாவரும் காணுதற்கு எளியனாகி வீற்றிருக்குமண்டபம்; "சமயமண்டப நிறைந்திருந்தநிரி சங்கும்மைந்தன்" (அரிச்சந்திர. வேட்டஞ்செய். 16.) சீவக. 2370 - உரை.

† பன்மைக்கு ஆற்றுமணல்: (புறநா. 9, 43; சிலப். 28 : 126.)

விசும்பு தோய் உள்ளம்—ஆகாயத்தையொத்த பெரிய உள்ளம்,

559-60. [நயந்தனிர் சென்ற நும்மினுந் தான்பெரி, துவந்த வுள்ள மோ டமர்ந்தினி து நோக்கி:] நயந்தனிர் உவந்த உள்ளமோடு சென்ற நும்மினும் தான் பெரிது அமர்ந்து இனிது நோக்கி—பரிசில்பெறுதற்கு விரும்பி மகிழ்ந்த நெஞ்சத்தோடே சென்ற நும்மினுங்காட்டில் தான் பெரிதும் முகனமர்ந்து இனிதாகப்பார்த்து,

561 - 2. [இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம், எள்ளறு சிறப்பின் வெள்ளரைக் கொளீஇ:] எள் அறு சிறப்பின் இழை மருங்கு அறியா நுழை நூல் கலிங்கம் வெள் அரை கொளீஇ - இகழ்ச்சியற்ற தலைமையினையுடைய இழைபோனவிடமறியாத நுண்ணிய நூலாற்செய்த புடைவைகளை அழுக்கேறினசீலைகள் கிடத்தலின் வெள்ளிதாகிய அரையிலே உடுத்தி,

563-6. [முடுவ றந்த பைந்நிணத் தடியொடு, நெடுவெண்ணெல்லி னரிசி முட்டாது, தலைநா ளன்ன புகலொடு வழிசிறந்து, பலநா ணிற்பினும் பெறுகுவிர்:]

வழி சிறந்து பல நாள் நிற்பினும்—அவ்விடம் நும் நெஞ்சிற்குச் சிறப் பெய்திப் பலநாள் நின்றீராயினும்,

முடுவல் தந்த பைந்நிணம் தடியொடு—பெண்ணாய் கடித்துக்கொண்டு வந்த பசிய நிணத்தையுடைய தசைகளோடே,

நெடு வெள் நெல்லின் அரிசி முட்டாது—நெடிய வெள்ளிய நெல்லினரிசியும் முட்டுப்படாமல்,

தலைநாள் அன்ன புகலொடு பெறுகுவிர்—முதல் நாட்போன்ற விருப்பத்தோடே பெறுகுவிர்;

566-8. [நில்லாது, செல்வேந் தில்லவெந் தொல்பதிப் பெயர்ந்தென, மெல்லெனக் கூறி விடுப்பின்:] நில்லாது எம் தொல் பதி பெயர்ந்து செல்வேம் தில்ல என மெல்லென கூறி விடுப்பின்—அவ்விடத்து நில்லாதே எம்முடைய பழையவூரே மீண்டு போவேம்; இஃது எங்களுக்கு விருப்பமென்று அவன் பொறுக்கச்சொல்லி அவனைக் கைவிடின்,

568-9. நும்முள் தலைவன் தாமரை மலைய—நுங்களில் தலைவனாயுள்ளவன் பொற்றாமரையைச் சூட,

569-70. விறலியர் சீர் கெழு சிறப்பின் விளங்கு இழை அணிய—விறல்பட ஆடுமகளிர் அழகுபொருந்தின தலைமையினையுடைய விளங்குகின்ற பேரணிகலங்களைப் பூண,

571. நீர் இயக்கு அன்ன நிரை செலல் நெடு தேர்—நீரின் செலவினையொத்த நிரைத்துச்செல்கின்ற செலவினையுடைய நெடிய தேர்கள்,

572. * வாரி கொள்ளா வரை மருள் வேழம்—யானைபடுகின்றவிடத்திற் பிடித்துக் கொள்ளாத மலையென்று மயங்கும் யானைகள்,

* வாரி-யானையையகப்படுத்தும் இடம்; கம்ப. நாடு. 32.

என்றது, பகைவர் திறைதந்த யானைகளை.

573. கறங்கு மணி துவைக்கும் ஏறு உடை பெரு நிரை—ஒலிக்கு மணிகள் ஆரவாரிக்கும் ஏறுகளையுடைய பெரிய பசுத்திரள்கள்,

574. பொலம் படை பொலிந்த கொய் சுவல் புரவி— பொன்னாற் செய்த * கலனை முதலியவற்றாற் பொலிவுபெற்ற மனச்செருக்கால் மயிரைப் பலகாலுங் கொய்யும் கழுத்தினையுடைய குதிரைகள்,

575. நிலம் தின கிடந்த நிதியமோடு—மண் தின்னும்படி பழைதாய்க்கிடந்த பொருட்டிரளோடே,

அனைத்தும்—எல்லாவற்றையும்,

576-7. இலம் படு புலவர் ஏற்ற கை நிறைய கலம் பெய கவிழ்ந்த கழல் தொடி தட கையின்—இல்லாமையுண்டான புலவர் ஏற்ற கைந்நிறையும்படி பேரணிகலங்களைச் சொரிகையினாலே கீழ்நோக்கின உழலுந்தொடியணிந்த பெரிய கையினிடத்துண்டாகிய,

இதனாற் புலவோர்க்குச்சுரக்கும் அவன் ஈகைமாரி (72) கூறினார்.

578. வளம் பிழைப்பு அறியாது—தான்கொடுத்தசெல்வம் கெடுதலையறியாதபடி,

578-9. வாய் வளம் பழுநி கழை வளர் நவிரத்து மீமிசை—வாய்த்த வளப்பம் முற்றுப்பெற்று மூங்கில்வளர்ந்த நவிரமென்னும் பெயரையுடைய மலையிடத்துச்சியிலே,

579-80. ஞெமிரோன மழை சுரந்தன்ன ஈகை—பரந்த மழைசொரிந்தாற்போன்ற கொடையாலே,

580-81. [கல்லெனத், தலைநாள் விடுக்கும் பரிசில:] தலைநாள் பரிசில கல்லென விடுக்கும்—முதனாளிலே பரிசில்தந்து போகச்சொல்லும்;

581-3. மலை நீர் வென்று எழு கொடியில் தோன்றும் † குன்று சூழ் இருக்கை நாடு கிழவோனே—மலையினின்றும் வீழ்கின்ற அருவிகள் வென்றுயர்கின்ற கொடிகள்போலத்தோன்றும் மலைகள்சூழ்ந்த பரப்பினையுடைய நாட்டிற்கு உரிமையையுடையோன்.

விடுப்பித்த (568) சென்றோரும்பல (540) நாடுகிழவோன் (583) தன் கையிடத்துண்டாகிய (577) மழைசுரந்தன்ன இயல்பாகிய கொடைத்தொழிலாலே (580) வளம்பிழைப்பறியாதபடி (578) நிதியத்தோடே (575) தேர்

---

* கலனை—சேணம்

† குன்று சூழிருக்கை நாடென்றது, பல்குன்றக்கோட்டத்தை; இது தொண்டைமண்டலத்துள்ள 24 கோட்டங்களுள் ஒன்று.

(571) வேழம் (572) கிளை (573) புரவி (574) இவையனைத்தும் (575) உயர்த்தவன் தாமரை மலைய விறலியர் (569) இழையணியத் (570) தலை நாளிலே பரிசிலாக (581) நல்கி (580) விடுக்கும் (581) எனமுடிக்க.

இதனால், வீயாதசுரக்குமவன் வியன்மகிழிருக்கை (76) கூறிற்று.

கலைப்பையிராய் (13) ஒழுகிச் (20) சுற்ற (46) இருந்த (49) தலைவ (50), யாறு கடற்படர்ந்தாங்கு (52) யாம் அவனைக்கருதிச்சென்று பரிசில் பெற்று வருகின்றேம்; நீயிரும் (53) நன்னற்படர்ந்த கொள்கையொடு (64) சேறிராயின் (65) எற்றுக்குறுதலின் (66) எதிர்ந்தபொழுதையும் (65) புள்ளையும் உடையிராயிருந்தனிர் (66); இனி யாற்றினதளவும் புலமும் (67) வல்சியும் (68) மலையும் சோலையும் கானமும் (69) ஈகைமாரியும் (72) ஆற்றலும் (73) இருக்கையும் (76) சுற்றத்தொழுக்கமும் (80) கடவுளியற்கையும் (83) அவன் சிறப்பும் (85) தொல்லோர்வரவும் (89) மூதூர்மாலையும் (93) இருக்கும்படி கேட்பாயாக; அவற்றுள் இனி வேலை நீ முன்னியதிசையைக்கேள் (94); பெட்டாங்குவிளைய (98) வானம் பொழிகையினாலே (97) முசுண்டை (101) முதலாகப் பல (144) ஈறாகவெண்ணிய இம் மிகுவளம் பழகியவைப்பாலே (95) புதுவதுவந்தன்று; அவ்வழியின்பண்பு இத்தன்மைத்து (96); அவற்றைக்கண்டு கானவர் (155) சிறுகுடிப்படின் (156) ஒக்கலொடும் பதமிகப்பெறுகுவிர் (157); அசைஇ அன்று அற்சேர்ந்து அவண் அல்கிப் (158) போகிப் (160) பாக்கமெய்தி (162) விறல்வேள் வயிரியமெனிற் (164) பொம்மல் பெறுகுவிர் (169); அவன்மலையிசைகாடு அணையதன்று (188); ஆண்டுத் தேக்கட்டேறலைப் (171) பருகி *தலைமகிழ்ந்து (172) அனந்தல் தீர (173) மகமுறைதடுப்ப மனைதொறும் (185) தாரத்தோடே (170) வல்சியைப் (183) பெறுகுவிர் (185); பெற்றால் பரிசின் மறப்ப நீடலுமுரியிர் (187); அங்ஙனநீட்டிப்பிற் பனித்தலுமுரியிர் (191); ஆதலால் பலகாணில்லாது நாடுபடர்மின் (192); படரும்பொழுது அவ்வாறு (195) அரும்பொறி (194) யுடையவாகையினாலே கள்ளிருள் (195) வைகினிர் விரிந்தவிடியல்கழிமின் (196); கழிந்து செப்பந்துணியின் (197) வலஞ் செயாக்கழிமின் (202); கழிந்து குறவர் (203) ஏறித் (204) தளர்க்குங்கல் (206) கூற்றத்தன்ன (209); அவைதாம் இரியத் (208) தத்தி (207) விளை தவிராது வரும்; அதற்கு மரமறையாக்கழிமின் (210); கழிந்து கான்யாற்றுகடலை (214) வழூஉமருங்குடைய (215); அவ்விடத்திற்கு வளைந்த பருஉக் கொடிமதலைபற்றி (216) வழாலோம்பி (215) ஒருவிரொருவிரோம்பினிர் கழிமின் (218); கழிந்து நுண்ணீர்ப்பாசிவழும்பு (221) அடிநிலை தளர்க்கு மருப்பமுமுடைய (222); அதற்கு வேரலோடு (223) மென்கோல் பற்றினிர்கழிமின் (224); கழிந்து கடவுட்கானின் (230) வெற்பு மாரிதலையு (233) மாதலின், நும்மியந்தொடுதலோம்புமின் (232); ஓம்பி மஞ்ஞைநனரினும் (235) கடுவன் உகளினும் (237) பிரசங்காணினும் (239) ஞெரேரென நோக்கலுரித்தன்று (240); நெறிமாறுபடுகுவிர் (241); அவ்வளவும் செறி

மீர்முப்படைமேற்போய்க் கானத்துப்படின் (242) ஏனங்காணின் (247) யிசைந்து (249) பருகிப் (251) பொதியினிராய் (252) மகாரோடே (253) கழிந்த லோம்பி அற்குக் (254) கல்லளைவதியின் (255); வதிந்து விடியலெழுந்து (257) செந்நெறிக்கொண்மின் (258); கொண்டு விலங்கி (261) நோக்கிக் (266) குறுகாதுகழிமின் (267); கழிந்து நாடுகாணனந்தலை மென்மெல அகன்மின் (270); அகன்று குன்றத்துப்படின் (275) இயந்தொடுமின் (277); தொட்டால் கானவருளர் (276); அவரெய்திக் (281) காட்டி (283) மூக்குற (284) இனியிராகுவிர் (286); அங்ஙனமினியிராய் அவர் கூறிய மாதிரங்கைக்கொண்டு (287) இழிந்து (288) இருப்பின் (290) மலைபடுகடாம் (348) பலதிறம்பெயர்பவை கேட்குவிர் (291); கேட்டபின் அவன்வெற்பு விழவினற்று (351); ஆண்டுத் தொன்முறை மரபினிராகிப் (355) பாடிப் (359) பழிச்சி (360) மலைபிற்படக் (357) கழிமின் (360); கழிந்து துவலைதுவற்றலின் (363) விடரகம்புகுமின் (366); புகுந்து குன்றில் ஆரிடரூவத்து (368) ஊறு தவப்பல (372); அவற்றைக் கோல் கொண்டு (370) ஊன்றினிர்கழிமின் (372); கழிந்து இன்னவியக்கத்து (374) அமயத்துக்கழிமின் (375); கழிந்து அவ்விடம் அருப்பமுமுடைய (378); அவ்வரண்களிற் போயின் நுழைதொறும் (379) கைபிணிவிடாதுகழிமின் (383); கழிந்தாற் கானம்பல (385); கல் நட்ட (388) கவலைகள்பல (389); அக்கல்லிற்கு மருப்பிகுத்துத்துனைமின் (391); அப்பொழுது புதுவிர் (392) புன்முடிக்கிடுமின் (393); இட்டுப்போனாற் சுரந்தவப்பல (398); ஓம் பாவன்னாற் படர்ந்திகுமெனின் (400) நம்மனோர்க்கு ஆங்கனம் (402) மூதூர் (401) அற்று (402); அசைவுழியசைஇ அஞ்சாதுகழிமின் (403); அக்கானத்தையிறந்து (405) கோவலர் பாலைச் (409) சொரிகையினாலே (410) அவர்க்கு விருந்தாவிர் (412); அங்ஙனம்விருந்தாய் ஆட்டினிரையிலேபுகிற் (416) பாலும் மிதவையும் பெறுகுவிர் (417); அவற்றைப்பெற்று அதட்பள்ளியிலே (419) சேர்ந்தனிர்கழிமின் (420); கழிந்து கூளியர்கூவைகாணிற் (424) படர்ந்திகுமெனின் (424) தடியுங்கிழங்குந் தரீஇ (425) ஓம்புநரல்லது உடற்றுநரில்லை (426); அவற்றையருந்தி வியங்கொண்மின்; அதன்பண்பு அஃது (427); அப்பண்பைக்கண்டு கண்ணியைச் (430) சூடித் (431) தண்ணென (432) உண்டனிர்ஆடிக் கொண்டனிர்கழிமின் (433); கழிந்தாற் புளிங்கூழை (436) அற்குக் (437) குடிதொறும் பெறுகுவிர் (439); பெற்று அசையினிர் சேப்பின் (443) துவலையோடு (445) அமலையை (441) இழுதின்வீடாக (442) அல்கலும் பெறுகுவிர் (443); அவற்றைப்பெற்று ஞெகிழிமாட்டித் (446) அஞ்சிப் (447) புள்ளோர்த்துக் கழிமின் (448); கழிந்தால் அவன் தண்பணைநாடு நன்பலவுடைத்து (458); அதனையடைந்தால் வினைஞர் வல்சி நல்குப் (462) பழையர்மகளிர் (459) விரைஇத் (458) தேறலை (463) நல்க (462) அவற்றைப்பெறுகுவிர் (464); அவற்றைப் பெற்றபின்பு அவையிட்ட வெண்சோற்றை (465) அருந்தி (468) மருதம்பண்ணிக் கழிமின் (470)

கழிந்து எருமையெர்ருத்தல் (472) நுழைந்து வரல்போற்றிச் (473) சேயாத்தின் (476) ஒருகரைக்கொண்டனிர்கழிமின் (477); கழிந்தால் அவன்றூர் சேய்த்தன்று (487) ; அவ்வூரிற்சென்றால் அருங்கடிவாயிலை அயிராது புகுமின் (491); புக்காற்பரிசிலர் (492) கண்டோரெல்லாம் (495) எதிர்கொளக் குறுகிப் (496) பின்னர்முற்றமுன்னிக் (531) கடவுள் வாழ்த்திய பின்னர் (538) விருந்திற்பாணிகழிப்பிச் (539) செம்மலோயெனக் கூறி (543) எத்திச் (544) சென்றதுநொடியவும் விடானாய் (545) வருத்தமும்பெரிதெனக் கூறி (546) அணுகல்வேண்டி (548) நல்வலத்திரீஇ (549) மாய்க்தேர் (553) மணலினும்பலர் (556); அதனால் நம்வரைந்தகாள் புகழொடு கழிகவென்றுகருதிப் (557) பரந்திடங்கொடுக்கு முள்ளத்தோடே (558) அமர்ந்து நோக்கிக் (560) கலிங்கம் (561) வெள்ளரைக் கொளீஇப் (562) பலகாள் நிற்பினும் (566) தடியொடு (563) அரிசிமுட்டாது (564) தலைநாளன்ன புகலொடு (565) தரப்பெறுகுவிர்; நில்லாது (566) செலவேமெ எ (567) விடுப்பின் (568) சென்றேரும்பல (540); நாடுகிழவோன் (583), அவன் தன் கையிடத் துண்டாகிய (577) மழைசுரந்தன்ன இயல்பாகிய கொடைத்தொழிலாலே (580) வளம்பிழைப் பறியாதபடி (578) நிதியத்தோடே (575) தேர் (571) வேழம் (572) நிரை (573) புரவி (574) இவைபனைத்தையும் (575) தலைவன்றுமரைமலைய விறலியர் (569) இழையணியத் (570) தலைநாளிலே பரிசிலாக (581) நல்கி (580) விடுக்கும் (581); ஆதலால், அவன்பாற் றுழாமற் கடிதாகச்சென்று பரிசில்பெறுவிராக வெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பல்குன்றக்கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன்சேய் நன்னனைப் பாடிய மலைபடுகடாத்திற்கு மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்த உரை முற்றிற்று.



வெண்பா.

தூஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்ததுகொல்
பாஅய்ப் பகல்செய்வான் பாம்பின்வாய்ப் பட்டான்கொன்

---

"தூஉத்தீம்புகை" என்பதில் தூஉ என்பது நான்கு மாத்திரை பெற்று நின்றதாதலின், இது செப்பலோசை பிழையாது வந்ததென்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர் முதலியோர்; (தொல். நான். சூ. 6 - ந; யா - வி. எழுத். சூ. 4; இ - வி. சூ. 743); பேராசிரியர் வேறு கூறுவர் (தொல். செய். சூ. 62.); பி - ம். தூஉய்த்தீம்புகையத்தொல்விசும்பிற்,

## பத்துப்பாட்டு.

மிளையான்கோ னன்னை னிருந்தனார்
மை மெல்லாம் பசப்பு.

### வெண்பா.

முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து.

---

## பத்துப்பாட்டு

நச்சினார்க்கினியருரை

முற்றுப்பெற்றது.

# பத்துப்பாட்டின்

## மூல அரும்பதவிளக்க அகராதி

குறி—குறிஞ்சிப்பாட்டு.
சிறு—சிறுபாணாற்றுப்படை.
திரு—திருமுருகாற்றுப்படை.
நெ—நெடுநல்வாடை.
ப—பட்டினப்பாலை.
பெரு - பெரும்பாணாற்றுப்படை.
பொரு—பொருநராற்றுப்படை.
மது —மதுரைக்காஞ்சி.
மலை—மலைபடுகடாம்.
மு—முல்லைப்பாட்டு.

[இதிலுள்ள பதங்கட்கு எழுதிய பொருள்கள் அவ்வவ்விடங்களில் நச்சினார்க்கினியரெழுதியவையே. எண் அடியெண்.]

### அ.

அகடு - உண்ணடு : மது, 149.
அகல் - சட்டி: பெரு, 377.
அகலறை - பாசறை ; மலைப்பக்கமுமாம்: ப, 237.
அகவ - ஒலியாநிற்க: திரு, 122.
அகவர் - சூதர்=அழைத்துப்புகழ்வோர் [அகவல் - அழைத்தல]: மது, 322; நாட்டில் வாழ்வோர்: பொரு, 220.
அகனம் - நீர்ச்சால: மலை, 104; பத்தர், தாழிபோலப் படைபட்டிருத்தலின்: சிறு, 224.
அகைத்த - முறித்த: மலை, 429.
அகைத்தன்ன - தழைத்தாலொத்த : பொரு, 159.
அகைய - தழைக்க: மது, 92.
அங்காடி - கடை: மது, 430, 544.
அசைஇ - இருந்து: பெரு, 316; இளைத்து: ப, 250; இளைப்பாறி : சிறு, 12; பெரு, 390; வருத்தி: சிறு,17.
அசைஇய - ஓய்ந்த: சிறு, 32.
அசைஇயது - கிடந்தது: திரு, 109.
அசைத்த - கட்டிய: மு, 14.
அசைதல - இருத்தல: திரு, 176.
அஞர் - வருத்தம்: பொரு, 88.
அட்டி - இட்டு: திரு, 28; மிகவிட்டு: பெரு, 195.
அட்டில - அடுக்களை: சிறு, 132.
அடர் - தகடு: மலை, 4.
அடுக்கம் - பக்கமலை: திரு, 42; பெரு, 257; மலைப்பக்கம்: மலை 141, 359.
அடும்பு-அடும்பம்பூ: கு, 87. [ரு, 278.
அடை - முளை; நெலலடையுமாம் :பெ
அடைச்சி - உடுத்து: மது, 588.
அண்ணல - தலைமை: சிறு, 200.
அணங்கு - உவணக்கு: பொரு, 12.
அணங்கிய - பின்னிய: மலை, 223.
அணங்கு - தெய்வம்: பெரு, 494, பேய்மகள்: பெரு, 459; வருத்தம்: திரு, 289; வருத்துந்தெய்வம்; மது, 682. [18.
ணத்தல் - தலைபெறுதல்: பெரு

அணைந்த - பிடிக்கின்ற வருந்
திலை : கு, 35. [பெரு, 138.
அண்ணல் - கழுத்து: பெரு, 205; தாடி:
அணிந்து - அழகுபெற்று: மது, 278.
அணுகுபு - அண்ணிதாகின்ற :
பொரு, 149
அத்தம் - வழி: பெரு, 39.[மது, 94.
அதரிகொள்ளுதல் - கடாவிடுதல் :
அதள் - தோல் : பெரு, 151.
அதிகன் - ஒருவள்ளல்; இவன் தனக்
குக் கிடைத்த அமிழ்து விளையும்
கருநெல்லிக் கனியைத் தானுண்டு
உடம்பு பெறுதே ஔவைக்குக்
கொடுத்தோன்: சிறு, 103. [கு, 75.
அதிரல் - புனலி: மு, 51; புனலிப்பூ:
அந்தணர் - அந்தத்தையணுவார்,
என்றது வேதாந்தத்தையே நோக்
குவாரென்றவாறு: திரு, 96; மது,
அமர்ந்து - பொருந்தி: திரு, 93.[474.
அமலுதல் - நெருங்குதல்: மலை, 219.
அமலை - கட்டி: சிறு, 194; பெரு,
224; சோற்றுத்திரடி: மலை, 441.
அமன்ற - நெருங்கின: மது, 710.
அமைதல் - நெருங்குதல்: மலை, 181.
அமையாமல் - ஆற்றன்: ப, 270.
அயிர் - நுண்மணல்: மு, 92.
அயிராது - ஐயுறுமல: மலை, 491.
அயினி - உணவு: மலை, 467.
அரக்கு - சாதிலிங்கம்: சிறு, 74,
256; பெரு, 293; பொரு, 43.
அரக்கத - மனக்கலக்கச்சி: மது, 166.
அரலை - கொடும்பு; குற்றமுமாம்:
மலை, 24; விதை: மலை, 139.
அரி - அழகு: திரு, 76; வண்டு;
மென்மையுமாம்: மது, 252. [471.
அரிஞர் - அறுப்பார்: மது, 110; மலை,
அரிமா - சிங்கவேறு: ப, 298.
அரில் - பிறகாடு: மலை, 579; பிணக்
கம்: பொரு, 161; மது, 288.

அருகா - கெடாத: பொரு, 77, 149.
அருப்பம் - அரண்: மது, 67; மலை,
378; மு, 26; அரிது: மலை, 19;
அருமை: மலை, 222. [ப, 275.
அருவாளர் - அருவாளநாட்டரசர்:
அரை - வயிறு: மலை, 307.
அல்கி - தங்கி: பெரு, 176; பொரு,
49; மலை, 158.
அல்லாந்து - மகிழ்ந்து: கு, 143.
அலகு - பலகறை: மலை, 234.
அலங்கல் - அசைதல்: திரு, 298;
பெரு, 83; மலை, 161. [திரு, 271.
அலந்தோர் - இடுக்கட்பட்டோர்:
அலமரும் - அசையும்: மலை, 119,
அலரி - பூ: கு, 197. [219.
அலவுற்று - அலமந்து: கு, 7.
அலை-அலைத்தல: நெ, 6.
அலைக்கும் - வருத்தும்: திரு, 50.
அலைப்ப - வருத்த: கு, 10.
அவ்ல் - விளைநிலம்: மலை, 450. [38
அவலம் - கேடு: மலை, 285; மிடி: பெரு,
அவிழ் - சோறு: மலை, 183.
அவைத்தல - குற்றுதல: சிறு, 194.
அவையம் - திரள்: மது, 492.
அவையல் - குத்தலரிசி: பொரு, 16.
அழலுதல் - எரிதல்: பொரு, 5.[234.
அழன்ற - வெம்மைசெய்த: சிறு,
அழுந்துபட்டிருத்தல் - நெடுங்காலம்
அடிப்பட்டிருத்தல்: மது, 342.
அழும்பில் - மானவிறல்வேளென்னுங்
குறுநிலமன்னனூர்: மது, 345.
அழுவம் - ஆழம்: மலை, 528; குழி:
மலை, 368; பரப்பு: பெரு, 350.
அளகு - கோழிப்பெடை: பெரு, 256.
அளவை - தன்மை: பொரு, 92.[284.
அளியன் - அளிக்கத்தக்கான்: திரு.
அளை - முழை: பெரு, 208; பொரு,
9; மலை, 300; முழைஞ்சு: கு, 252;

இமைத்தல் - கண்களின் இதழ்க ளிரண்டினையுங்குவித்தல்: திரு, 3.
இமைப்பு - விளக்கம்: திரு, 85.
இயக்கம் - வழி: மலை, 374.
இயக்கி - ஒலிப்பித்து: திரு, 246.
இயக்கு - செலவு: மலை, 571.
இயங்குநர் - வழிபோவார்: மலை, 18.
இயல்பு - ஒழுக்கம்: கு, 15.
இயல - அசைய: திரு, 215.
இயலி - உலாவி: பெரு, 331.
இயவர் - வாச்சியக்காரர்: மது, 304.
இயவு - வழி: பெரு, 82; மலை, 111, 323. [திரு, 274.
இயவுள் - தலைவன்; கடவுளுமாம்:
இரட்ட - ஒலிப்ப: மது, 606; மாறி யொலிப்ப: மது, 299. [80.
இரட்டுதல் - மாறியொலித்தல்: திரு,
இரவலன் - இரத்தற்றொழில்வல் லோன்: பெரு, 45.
இரியல் - கெடுதல்: பெரு, 202.
இரீஇ - இருத்தி: பொரு, 76; இருந் து: மலை, 549. [பொரு, 169.
இருக்கை - குடியிருப்பு: பெரு, 242;
இருபிறப்பாளர் - உபநயனத்திற்கு முன்பு ஒருபிறப்பும் பின்பு ஒரு பிறப்புமாகிய இருபிறப்பினையு முடையவர்: திரு, 182.
இருமை - கருமை: திரு, 111.
இருவி - தினையரிந்ததாள்: கு, 153; மலை, 109.
இருள் - கருமை: மது, 634. [228.
இலஞ்சி - மடு: மது, 248; மலை,
இலம் - இல்லாமை: மலை, 576.
இலிற்றும் - துளிக்கும்: சிறு, 227.
இவர்தல - படர்தல்: ப, 234; பொரு, 195; பரத்தல்: மலை, 514.
இவரும் - உலாவும்: மலை, 90.
இழுக்கு - வழுக்குநிலம்: கு, 258. [442
இழுது - நெய்விழுது: மலை, 244,
இழை - பேரணிகலம்: மது, 704.
இளக்கும் - அசைக்கும்: ப, 172, 130
இளக - அசைந்துவிழும்படி: பெ
இளி - இளியென்னுநரம்பு: மலை,
இளையோன் - இளஞ்சேட்சென்னி இவன் கரிகாற்பெருவளவன் தை: பொரு, 130.
இறடி - தினை: மலை, 169.
இறவு - இறாமீன்: பொரு, 204.
இறுவுதல் - வக்கி மயிர்போகச்சீ தல்: மலை, 249.
இறுத்த - முடித்த: பெரு, 446.
இறுப்ப - கிடக்க, பொரு, 225.
இறும்பு - இளமரக்காடு: பெரு 495; குறுங்காடு: மலை, 205, 27
இறும்பூது - அதிசயம்: மலை, 358.
இறை - இறப்பு: பெரு, 265.
இறைகூடி - அரசாண்டு: பொரு, 7
இறைகொண்ட - தங்குதலகொண்ட மது, 253.
இன்பம் - இனிமை: மது, 16.
இனம் - திரட்சி: மது, 214.
இனி - இப்பொழுது: மலை, 94.

ஈ.

ஈகை - பொன்: மலை, 72.
ஈங்கை - இண்டம்பூ: கு, 86.
ஈர்ந்து - இழுக்கப்பட்டு: சிறு, 16.
ஈரிய - ஈரத்தையுடைய: கு, 248.

உ.

உக்கம் - மருங்கு: திரு, 108.
உகந்து - உயர்ந்து: மது, 334. [148
உகுத்தென - போகட்டதாக: மலை
உகைப்ப - எழுப்ப: மது, 184.
உட்க - அஞ்ச: திரு, 243.
உட்கு - அச்சம்: கு, 184.
உடம்பிடி - வேல்: பெரு, 76.
உடன் - அடைய: சிறு, 139.
உடன்று - கோபித்து: பெரு, 418.

உடுஞ்ஞு - உடுத்து: சிறு, 236; உடுத்து: திரு, 184, 204. [கு, 170.
உடுமு - அம்பில் காம்புக்கொள்ளுமிடம்:
உடைப்பூட - உடைக்கு: மது, 305.
உதள் - விடாய்: பெரு, 151.
உந்தல் - காம்புகளைத்தெறித்தல்: பொரு, 23.
உந்தி - யாழகத்தோருறுப்பு: மலை, 34; யாற்றிடைக்குறை: மது, 245.
உந்தூழ் - பெருமூங்கில்: கு, 65.
உம்பல் - வழிவந்தோன்: மது, 61; மலை, 540 [சிறு, 60.
உமட்டியர் - உப்புவாணிகத்தியர்:
உமணர் - உப்புவாணிகர்: சிறு, 55; பெரு, 65. [மு, 15.
உய்த்தர - செலுத்துதலைச்செய்ய:
உய்ப்மார் - செலுத்துதற்கு: மது, 322. [கு, 11.
உய்யாமை - உயிரைத்தாங்கியிராமை:
உயர்நிலை - தெய்வத்தன்மை: திரு, [289.
உயரி - எடுத்து: மு, 91.
உயவும் - வருந்தும்: பொரு, 38.
உயவை - உயவைக்கொடி: மலை, 136.
உயிர் - ஓசை: கு, 100.
உரவு - பரத்தல்: பெரு, 153; மிகுதி: கு, 45; வலிமை: மலை, 326.
உரறுதல் - முழங்குதல்: மலை, 357.
உரன் - அறிவு: சிறு, 115.
உராஅய் - பரந்துசென்று: மது, 125.
உராலின் - ஓடுதலினால்: மது, 387.
உரிஞிய - உரைத்த: திரு, 33.
உரீஇ - நீற்றி: மலை, 24.
உரு - அச்சம்: மது, 100.[திரு, 244.
உருகெழு - அச்சம்பொருந்தின:
உருத்த - தோற்றின: பொரு, 35.
உருப்பு - வெப்பம்: சிறு, 8, 174.
உருவம் - சிவந்தநிறம்; திரு, 241.
உருளி - உருளை: பெரு, 47.
உரை - புகழ்: மது, 236.
உரைஇ - உலாவி: மது, 378.
உல்கு - சுங்கம்: ப, 125; பெரு, 81.
உலகம் - சிலான்மாக்கள்: திரு, 1; நன்மக்கள், திரு, 124.
உலறிய - உலறிக்கிடக்க: நெ, 138; காய்ந்த: திரு, 47.
உவலை - தழை: மது, 311; மு, 29.
உழக்க - கொன்றுதிரிய: மது, 46.
உழக்கி - வென்று: மது, 128.
உழந்த - வருந்திய: சிறு, 185, பொரு, 44. [பெரு, 197.
உழவர் - உழவுத்தொழிலுடையோர்:
உளர்தல - அசைத்தல; பொரு, 17; அசைதல: சிறு, 60
உளர்ப்பு - அலைத்தல்: திரு, 198.
உளர - வாசிக்க: திரு, 142.
உளை - கழுத்தின்மயிர்: பெரு, 488; கேசரி: நெ, 93; தலையாட்டம்: சிறு, 92; பெரு, 27, பொரு, 164; தாய்: திரு, 28.
உறந்தை - உறையூர்: சிறு, 83.
உறழ்குறித்தல - மாதுசெய்யக்கருதுதல்: ட 171.
உறழ்சசி - மாறுபாடு: சிறு, 112.
உறழுதல - மாறுபடல்: திரு, 5; வீணையில் ஒருநரம்பைவிட்டு ஒருநரம்பைத்தெறித்தல்: பொரு, 23.
உறுகண் - வருத்தம்: பெரு, 43.
உறுநர் - சேர்ந்தவர்: திரு, 4.
உறை - துளி: திரு, 8; பெரு, 291.
உறைப்ப - மிகவிழ: பெரு, 379.

ஊ.

ஊக்கலர் முயற்சியையுடையார்: மது, 743.
ஊக்குதல் - தப்புதல்; மது, 647.
ஊகம் - ஊகம்புல்; பெரு, 122; கரிய குரங்கு: சிறு, 221.

இமைத்தல் - கண்களின் இதழ்க ளிரண்டினையுங்குவித்தல்: திரு, 3.
இமைப்பு - விளக்கம்: திரு, 85.
இயக்கம் - வழி: மலை, 374.
இயக்கி - ஒலிப்பித்து: திரு, 246.
இயக்கு - செலவு: மலை, 571.
இயங்குநர் - வழிபோவார்: மலை, 18.
இயல்பு - ஒழுக்கம்: கு, 15.
இயல - அசைய: திரு, 215.
இயலி - உலாவி: பெரு, 331.
இயவர் - வாச்சியக்காரர்: மது, 304.
இயவு - வழி: பெரு, 82; மலை, 111, 323. [திரு, 274.
இயவுள் - தலைவன்; கடவுளுமாம்:
இரட்ட - ஒலிப்ப: மது, 606; மாறி யொலிப்ப: மது, 299. [80.
இரட்டுதல் - மாறியொலித்தல்: திரு,
இரவலன் - இரத்தற்றொழிலிலவன் லோன்: பெரு, 45.
இரியல் - கெடுதல்: பெரு, 202.
இரீஇ - இருத்தி: பொரு, 76; இருந் து: மலை, 549. [பொரு, 169.
இருக்கை - குடியிருப்பு: பெரு, 242;
இருபிறப்பாளர் - உபநயனத்திற்கு முன்பு ஒருபிறப்பும் பின்பு ஒரு பிறப்புமாகிய இருபிறப்பினையு முடையவர்: திரு, 182.
இருமை - கருமை: திரு, 111.
இருவி - தினையரிந்ததாள்: கு, 153; மலை, 109.
இருள் - கருமை: மது, 634. [228.
இலஞ்சி - மடு: மது, 248; மலை,
இலம் - இல்லாமை: மலை, 576.
இலிற்றும் - துளிக்கும்: சிறு, 227.
இவர்தல - படர்தல்: ப, 234; பொரு, 195; பரத்தல்: மலை, 514.
இவரும் - உலாவும்: மலை, 90.
இழுகக்கு - வழுககுகிலம்:கு, 258. [442
இழுது - நெய்விழுது: மலை, 444.
இழை + போணிகலம்: மது, 704.
இளக்கும் - அசைக்கும்:ப, 178. [366
இளக - அசைந்துவிழும்படி: பெரு,
இளி - இளியென்னுநரம்பு: மலை, 7.
இளையோன் - இளஞ்சேட்சென்னி; இவன் கரிகாற்பெருவளவன் தந் தை: பொரு, 130.
இறடி - தினை: மலை, 169.
இறவு - இறாமீன்: பொரு, 204.
இறவுதல் - வக்கி மயிர்போகச்சிவு தல: மலை, 249.
இறந்த - முடிந்த: பெரு, 446.
இறப்ப - கிடக்க, பொரு, 225.
இறும்பு - இளமரக்காடு: பெரு, 495; குறுங்காடு: மலை, 205, 271.
இறும்பூது - அதிசயம்: மலை, 358.
இறை - இறப்பு: பெரு, 265.
இறைகூடி - அரசாண்டு: பொரு, 79.
இறைகொண்ட - தங்குதலகொண்ட மது, 253.
இன்பம் - இனிமை: மது, 16.
இனம் - திரட்சி: மது, 214.
இனி - இப்பொழுது: மலை, 94.

ஈ.

ஈகை - பொன்: மலை, 72.
ஈங்கை - இண்டம்பூ: கு, 86.
ஈர்ந்து - இழுக்கப்பட்டு: சிறு, 16.
ஈரிய - ஈரத்தையுடைய: கு, 248.

உ.

உக்கம் - மருங்கு: திரு, 108.
உகந்து - உயர்ந்து: மது, 334. [148.
உகுத்தென - போகட்டதாக: மலை,
உகைப்ப - எழுப்ப: மது, 184.
உட்க - அஞ்ச: திரு, 243.
உட்கு - அச்சம்: கு, 184.
உடம்பிடி - வேல்: பெரு, 76.
உடன் - அடையா: சிறு, 139.
உடன்று - கோபித்து: பெரு, 418.

உஞற்றி - உடுத்தி: சிறு, 236; உடுத்து: திரு, 184, 204. [கு, 170.
உடு - அம்பில் நாணைக்கொள்ளுமிடம்:
உடைபூ - உடைத்து: மது, 305.
உதன் - [illegible]: பெரு, 151.
உத்தல் - காம்புகளைத்தெறித்தல்: பொரு, 23.
உத்தி - யாழகத்தோருறுப்பு: மலை, 34; யார்திரைக்குறை: மது, 215.
உத்தூழ் - பெருமூங்கில்: கு, 65.
உம்பல் - வழிவந்தோன்: மது, 61; மலை, 540 [சிறு, 60.
உமட்டியர் - உப்புவாணிகத்தியர்:
உமணர் - உப்புவாணிகர்: சிறு, 55; பெரு, 65. [மு, 15.
உய்த்தர - செலுத்துதலைச்செய்ய:
உய்ம்மார் - செலுத்துதற்கு: மது, 322. [கு, 11.
உய்யாமை - உயிரைத்தாங்கியிராமை:
உயர்நிலை - தெய்வத்தன்மை: திரு, [289.
உயரி - எடுத்து: மு, 91.
உயவும் - வருந்தும்: பொரு, 38.
உயவை - உயவைக்கொடி: மலை, 136.
உயிர் - ஓசை: கு, 100.
உரவு - பரத்தல்: பெரு, 153; மிகுதி: கு, 45; வலிமை: மலை, 326.
உரறுதல் - முழங்குதல்: மலை, 357.
உரன் - அறிவு: சிறு, 115.
உராஅய் - பரந்துசென்று: மது, 125.
உராலின் - ஓடுதலினால்: மது, 387.
உரிஞ்சிய - உரைத்த: திரு, 33.
உரீஇ - நீத்தி: மலை, 24.
உரு - அச்சம்: மது, 100. [திரு, 244.
உருகெழு - அச்சம்பொருந்தின:
உருத்த - தோற்றின: பொரு, 35.
உருப்பு - வெப்பம்: சிறு, 8, 174.
உருவம் - சிவந்தநிறம்; திரு, 241.
உருளி - உருளை: பெரு, 47.
உரை - புகழ்: மது, 236.
உரைஇ - உலாவி: மது, 378.
உல்கு - சுங்கம்: ப, 125; பெரு, 81.
உலகம் - சிவான்மாக்கள்: திரு, 1; நன்மக்கள், திரு, 124.
உலறிய - உலறிக்கெட்ட: நெ, 180; காய்ந்த: திரு, 47.
உவலை - தழை: மது, 311; மு, 29.
உழக்க - கொன்றுதிரிய: மது, 48.
உழகி - வென்று: மது, 128.
உழந்த - வருந்திய: சிறு, 185, பொரு, 44. [பெரு, 197.
உழவர் - உழவுத்தொழிலுடையோர்:
உளர்தல் - அசைத்தல்; பொரு, 17; அசைதல்: சிறு, 60
உளர்ப்பு - அலைத்தல்: திரு, 198.
உளர - வாசிக்க: திரு, 142.
உளை - கழுத்தின்மயிர்: பெரு, 488; கேசரி; நெ, 93; தலையாட்டம்: சிறு, 92; பெரு, 27; பொரு, 164; துய்: திரு, 28.
உறந்தை - உறையூர்: சிறு, 83
உறழ்குறித்தல - வாதுசெய்யக்கருதுதல்: ப 171.
உறழ்சசி - மாறுபாடு: சிறு, 112.
உறழ்தல - மாறுபாடல்: திரு, 5; வீணையில் ஒருநரம்பைவிட்டு ஒருநரம்பைத்தெறித்தல்: பொரு, 23.
உறுகண் - வருத்தம்: பெரு, 43.
உறுநர் - சேர்ந்தவர்: திரு, 4.
உறை - துளி: திரு, 8; பெரு, 291.
உறைப்ப - மிகவிழ: பெரு, 379.

## ஊ.

ஊக்கலர் - முயற்சியையுடையார்: மது, 743.
ஊக்குதல் - தப்புதல்; மது, 647.
ஊகம் - ஊகம்புல்: பெரு, 122; கருங்குரங்கு: சிறு, 221.

கலி - களிப்பு: மது, 662; வண்டல்: நெ, 16. [பெரு, 213.
கனாஞர் கனைகளைப்பதிப்பார் :
கற்சிறை - கல்லணை: மது, 725.
கறங்க - ஒலிக்க: திரு, 240.
கறி - மிளகு: திரு, 309.
கன்னல் - கரகம்: நெ, 65.
கனை - செறிதல்: மது, 235.
கனைத்து - திரண்டு: மலை, 117.

கா.

காஞ்சி - காஞ்சிப்பூ: கு, 84; காஞ்சி மரம்: சிறு, 179.
காட்சி - அறிவு: திரு, 135.
காடி - ஊறுகறி: பெரு, 310; கஞ்சி: நெ, 134; கழுத்து; புளிங்கறியு மாம்: பொரு, 115; புளியங்காய் நெல்லிக்காய் முதலியன ஊற விட்டுவைத்தது ; நெய்யென்பாரு முளர்: பெரு, 57.
காமர் - அழகு: திரு, 36, 250.
காண்மார் - காண்டற்கு: மது, 443.
காத்து - பரிகரித்து: மது, 497.
காமர் - விருப்பம்: சிறு, 77, திரு, 75; மது, 282. [சிறு, 77.
காமரம் - சீகாமரமென்னும்பண் :
காய - காவின: மலை, 13.
காயம் - காழ்ப்பு: மலை, 126.
கார்கோள் - கடல்; காரால் முகக்கபப டுதலிற் கார்கோளென்று பெயர் பெற்றது; ஆகுபெயர்: திரு, 7.
காரி - ஒருவள்ளல்; இவன் இரவலாக் கு நாட்டைக் கொடுத்தோன்: சிறு, 95; ஒரு வீரன்; அவன் குதிரை: சிறு, 110; கரியகுதிரை: சிறு, 110; நஞ்சு: மலை, 83.
காரேறு - கரியகடா: பெரு, 210
கால் - காம்பு: கு, 117.
கால்யாத்த - நெருங்கின: பெரு, 399.
காலோர் - காலாட்கள்: மது, 441.
காவிதிமாக்கள் - காவிதிப்பட்டங் கட்டின அமைச்சர்: மது, 499.
காழ் - இருப்புகாராசம்: பொரு, 105; கருமை: கு, 107; சிறு, 6; கழி: சிறு, 133; காம்பு: நெ, 176; குத் துக்கோல்: மு, 44; தறி: பெரு, 244; தூண்: நெ, 111; வடம்: திரு, 204; மது, 681 ; விதை: பெரு, 130; மலை, 174.
காழ்வை - அகிற்பூ: கு, 93.
காழகம் - கலிங்கம்: திரு, 184.
காழோர் - பரிக்காரர்: மது, 658; பரிக்கோலையுடையோர்: பெரு, 393.
காளாம்பி - காளான்: சிறு, 134.
கானல - கடற்கரை: ப, 94; கரை : மது, 114. [பொரு, 220.
கானவர் - முல்லைநிலத்துவாழ்வார் :

கி.

கிடங்கில் நல்லியக்கோடனூர்:
கிடுகு - சட்டம்: ப, 167. [சிறு, 160.
கிண்கிணி - சிறுசதங்கை: திரு, 18.
கிணைமகள் - கிணைவலுடைய மகள் : சிறு, 136.
கிலுகிலி - கிலுகிலுப்பை: சிறு, 61.
கிழவிர் - கிழமையுடையீர்: மலை, 166.
கிழவோன் - உரித்தாகுதன்மையை யுடையோன்: பொரு, 248; உரிமை யையுடையோன்: திரு, 317; பெரு, 500; மலை, 583.
கிழார் - பூட்டைப்பொறி: மது, 98.
கிளர்தல - எழுதல்: திரு, 82.
கிளைஇய - கிளைத்த: கு, 196,
கிளையாமை - இமையாமை: கு, 132.
கின்னரம் - கின்னரப்பறவை: பெரு, 494.

கு.

குட்டம் - ஆழம்: சிறு, 180. [105.
குடபுலவர் - குட்டநாட்டார்: மது

குட்டுவன் - குட்டநாட்டையுடையோன்: சிறு, ௪9.
குடசம் - வெட்பாலைப்பூ: கு, 67.
குடக்தம்பட்டு - வழிபட்டு; வணக்கம் பட்டு என்றுமாம்; குட என்பது தடவென்பதுபோல வளைவையுணர்த்துவதோர்உரிச்சொல்லாதலின் அதனடியாகப் பிறந்த பெயருமாம்: திரு, 229. [276.
குடவர் - குடநாட்டிலுள்ளார்: ப,
குடாவடி - வளைந்த அடியையுடையது: மலை, 501.
குடி - குடிமக்கள்: பொரு, 182.
குடிஞை - பேராந்தை: பொரு, 210; மலை, 141.
குண்டு - ஆழம்: திரு, 199; மது, 64.
குத்த - தின்ன: பொரு, 222.
குத்தி - ஊன்றி: மு, 41.
குந்தம் - எறிகோல: மு, 41. [244
குப்பை - பொலி: பெரு, 240; பொரு,
குமரி - அழியாத்தன்மை: பெரு, 247.
குய் - தாளிப்பு: மது, 757.
குயம் - அரிவாள்: பொரு, 242.
குயினர் - துளையிடுவார்: மது, 511.
குரம்பை - குடில்: சிறு, 174; ப, 198; பெரு, 88; மது, 310.
குரல் - குரலென்னுநரம்பு: மது, 605; கொத்து: பெரு, 192; மிடறு:
குரவம் - குரவம்பூ: கு, 69. [திரு, 212.
குரவை - ஒருகூத்து: திரு, 197.
குரிசில - தலைவன்: திரு, 276.
குரீஇப்பூளை - சிறுபூளை: கு, 72.
குருகிலை - முருக்கிலை: கு, 73.
குருகு - குருக்கத்தி: பெரு, 376; குருகென்னும் பறவை: மது, 268.
குரும்பி - புற்றாம்பழஞ்சோறு: பெரு,
குருளை - [காடிக்] குட்டி. மலை, 501.
குரை - ஆரவாரம்: பொரு, 240. [277.
குல்லை - கஞ்சங்குல்லை: திரு, 201; பொரு, 234; கஞ்சங்குல்லைப்பூ: கு.
குலை - பூங்கொத்து: பெரு, 371. [78.
குவவீஇ - குவிக்கையினாலே: பெரு, 104; குவித்து: கு, 98; பரப்பி: ப, 178.
குவைஇய - திரட்டின: பொரு, 244.
குழல் - குழன்மீன்: சிறு, 163.
குழிசி - பானை: பெரு, 366.
குழும்பு - குழி: மது, 241, 273; திரள்: மது, 24.
குழும - முழங்க: மது, 677.
குளவி - காட்டுமல்லிகை: சிறு, 46, திரு, 191; காட்டுமல்லிகைப்பூ: கு,
குளித்தல் - மறைதல்: சிறு, 16. [76.
குளிர் - அரிவாள்; கிளிகடிகருவியுமாம்: மலை. 110; கிளிகடிகருவி: கு, 43. [252.
குறடு - அசசுகோக்குமிடம்: சிறு,
குறமகள் - குறச்சாதியாகியமகள்: தி
குறள் - சிறுமை: பெரு, 193. [ரு, 242.
குறிஞ்சி - ஒருபண்: திரு, 239; குறிஞ்சிப்பண்: பெரு, 182; மலை, 359.
குறுநர் - பறிப்பார்: பெரு, 295. [72.
குறுநறுங்கண்ணி - குன்றிப்பூ: கு,
குறும்பு - அரண்: பெரு, 129; வலி: மலை, 504. [213.
குறும்பொறி - உதரபந்தம்: திரு,
குறை - தசை: பெரு, 472; பொரு,
குறைஇய - அறுத்த: மது, 320. [217.
குறைவில - இந்திரவில்: பெரு, 292

கூ.

கூட்டு - கொள்ளை: மது, 762.
கூட்டுண்ணும் - கொள்ளைகொண்டுண்ணும்: பெரு, 116.
கூடல் - புகார்முகம்: ப, 98.
கூடு - நெற்கூடு: பொரு, 182. [276.
கூம்ப - மனவெழுச்சிகுறைய: ப,

சிற்றினம் - அறிவுமொழுக்கமுமில்லாத மாக்கள் திரள் : சிறு, 207.
சிறத்தல் - மிகுதல்: மது, 244.
சிறப்பு - தலைமை: மது, 59, 762.
சிறுகுடி - சிறிய ஊர்: திரு, 196.
சிறுகுழை - தாளுருவி: பெரு, 161.
சிறுசெங்குரலி - கருந்தாமக்கொடிப்பூ: கு, 82.
சிறுபசுமஞ்சள் - மஞ்சளில் ஒருசாதி விசேடம்: திரு, 235. [கு, 78.
சிறுமாரோடம் - செங்கருங்காலிப்பூ:
சிறை - வரம்பு: பொரு, 246.
சினம் கோபத்தின்பின்னுகச் சிறிது பொழுதிருப்பது: திரு, 135.
சினை - கொம்பு: திரு, 298; சிறிய கொம்பு: சிறு, 178.

சீ.

சீக்கும் - தராவலாரும்: பெரு, 497.
சீப்ப - பெருக்கிப்போகட: மது, 685.
சீர் - அழகு: திரு, 126; மலை, 570; கனம்: மலை, 13; காவுமரம்: மலை, 154; தலைமை: திரு, 220; ப, 104, மது, 87; தாளம்: பெரு, 493; தாளவறுதி: மது, 160; புகழ்: பெரு, 388.
சீவும் - திருத்தும்: மது, 269.

சு.

சுடர் - ஒளி: மது, 702; நெருப்பு: திரு, 34.
சுடுமண் - செங்கல்: பெரு, 405.
சுண்ணம் - சுண்ணப்பொடி, இது நவமணிகளும் பொன்னும் சந்தனமும் கருப்பூரமுதலியனவும் புழுகிலும் பனிநீரிலும் நனையவைத்திடிக்கப்படுவது: மது, 399.
சும்மை - ஓசை: பொரு, 65.
சுமடு - சும்மாடு: பெரு, 159.
சுமந்து - மேற்கொண்டு: திரு, 296.
சுரக்கும் - மாறுமற்கொடுக்கும். மலை, 68. [மது, 58.
சுரம் - அருநிலம்: மலை, 20, 398; காடு:
சுரிகை - பத்திரம்: பெரு, 73.
சுவல் - தோட்கட்டு: பெரு, 171; மேட்டுநிலம்: பெரு, 131; மலை, 486.
சுள்ளி - மராமரப்பூ: கு, 66.
சுற - சுறுமீன்: பொரு, 203.
சுறவுவாய் - மகரவாயாகிய தலைக்கோலம்: பெரு, 385.

சூ.

சூட்டு - உருளையின் விளிம்பில்வைத்த வளைந்தமரம் பெரு, 46.
சூடு - சுடப்பட்டது : ப, 68; நெற்சூடு: பொரு, 243.
சூதர் - நின்றேத்துவார்: மது, 670.
சூர் - கொடுந்தெய்வம்: கு, 255; கொடுமை: திரு, 41; தெய்வம்: கு, 169; மலை, 239.
சூர்ப்பு - கொடுந்தொழில்: மது, 33.
சூர்முதல - சூரபன்மாவாகிய தலைவன்: திரு, 46.
சூரல் - சூரைப்பூ: கு, 71; பிரம்பு; சூரற்கொடியுமாம்: கு, 42.
சூழ்கோடை - சுழல்காற்று: மது, 308. [228.
சூழி - முகபடாம்: மது, 43; மலை,

செ.

செவில் - தோள்: பொரு, 138. [62.
செங்காந்தள் - செங்கோடற்பூ: கு,
செங்கொடுவேரி - செங்கொடுவேரிப்பூ: கு, 64
செச்சை - வெட்சி: திரு, 208[மலை, 146.
செத்து - ஒத்து: பெரு, 473; கருதி:
செதுக்கு - வாடல்: பெரு, 338.
செப்பம் - செவ்வியவழி: மலை, 160; சேப்பு: சிறு, 53; வழி: மலை, 197.

# பிழையும் திருத்தமும்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 72 | 19 | (11) | (10) |
| 74 | 19 | மரற்பழுத் | மரல் பழுத |
| 75 | 25 | போல செல்வ | போல.- செல்வ |
| 89 | 31 | கதிபரப்பி | கதிர்பரப்பி - |
| 110 | 27 | முறிஇன்ற | முரிஇன்ற |
| 111 | 24 | குத்திரத்தாற் | சூத்திரத்தாற் |
| 117 | 7 | இது நிகழ்கால | தம் நிகழ்கால |
| 128 | 24 | ஓய்மாகாடு | ஓய்மாநாடு |
| ,, | 33 | | |
| ,, | 34 | | |
| 131 | 34 | 39 - 44 | 39 - 41 |
| 138 | 23 | பைபஞ்சாய் | பைஞ்சாய் |
| ,, | 36 | பைஞ்சாய் | பஞ்சாய் |
| 141 | 25 | கோள்வல் | கொலைவல் |
| 146 | 25 | சீ றூர் | சீறூர் |
| 157 | 5 | கழுதை பிளஇனது | கழுதை - பிளஇனது |
| 159 | 8 | குழைஇ தெய்வங் | குழைஇ - தெய்வங் |
| 166 | 14 | வினை | வினை |
| 168 | 28 | சண்பின் | கண்பின் |
| 175 | 20 | சே ப்பின் | சேப்பின் |
| 181 | 31 | கண் கள் | கண் - கள் |
| 218 | 26 | வாஅ ழாமையின் | வாழா மையின் |
| 219 | 4 | முருகுறழத் தலை | முருகுறழப்பகைத்தலை |
| 222 | 10 | அரிப்பறை | அரிபறை |
| 224 | 20 | வலைப் | வலை |
| 227 | 6 | வீங்கு கோன் | வீங்குபிணிநோன் |
| 235 | ,, | விபலி | வியலி |
| 240 | 16 | சூட்டு | சுட்டு |
| 255 | 26 | குரிசில் | குருசில |
| ,, | 27 | வெல்லுபோர் | வெல்லும்போர் |
| 261 | 17 | விருப்பாமைத | விருப்பமையாத |
| 276 | 21 | கொடியொடு | கொடியொடு |

## பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 278 | 4 | புரவி | புரவி |
| ,, | 28 | பொரக்க | யொரக்க |
| 293 | 36 | சேர பிள்ளர் | சேர - பிள்ளர் |
| 299 | 2 | புண்டெ | புண்டு · |
| 302 | 21 | கழுது, பேயில் | கழுது - பேயில் |
| 314 | 32 | சூட்டு | சுட்டு |
| 330 | 4 | தூக் | தூக் |
| 341 | 27 | ஆற்று ஒாழுக்க | ஆற்றுவொழுக்க |
| 344 | 4 | ச்டடத்தைக் | சட்டத்தே |
| 351 | ,, | உடலினுஞ் | உடற்சினுஞ் |
| ,, | 22 | விடே | விடேள |
| ,, | 24 | யருங்கரை | யடுக்கரை |
| 365 | 14 | யொட்டுஞ் | யோட்டுஞ் |
| 371 | 4 | போலெ | போலே |
| 372 | 18 | இவன் | இவள் |
| 379 | 17 | ஓட்டி | ஓட்டி |
| 395 | 2 | சோழநாடு | சோழனுடு |
| ,, | 35-6 | உவமம்...மையாயிற்று | உவமையாயிற்று |
| 396 | 18 | ளிறு | களிறு |
| 402 | 36 | செய நல்ல | செய - நல்ல |
| 407 | 33 | பன்னிகதி | பன்னிரதி |
| 414 | 5 | முழங் ச் | முழங்கச் |
| 415 | 21 | சூற்றத்தை | சூற்றத்தை |
| 423 | 16 | 1 0 | 100 |
| 434 | 32 | குறிஞ்சி. 443 | குறிஞ்சி. 43 |
| 438 | 25 | பனிவி | பணிவி |
| 440 | 8 | கண்புமலி | கண்பமல் |
| 442 | 11 | சேஎய் | சேஎய்ப் |
| 544 | 34 | இரணிய முட்டம்,500 | இரணியமுட்டம், 503 |
| 552 | 35 | பவழ் | பவளம், 407 |
| ,, | 36 | நீர், 24 | இழ்நீர், 24 |



PRINTED AT THE COMMERCIAL PRESS, TRIPLICANE, MADRAS. S E